

# सिद्धान्तलयसारः

# ஸித்தாந்த த்ரயஸாரம்

என்கிற

## शारीरकभाष्यलयसारसङ्ग्रहः

*Mahamahopadhyaya*

**Dr. R. Krishnamurthi Sastrigal**

# நூல் விவரம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | - | ஸித்தாந்தத்ரயஸாரம் |
| ஆசிரியர் | - | மஹோமஹோபாத்யாய முல்லைவாசல் Dr. R. கிருஷ்ணமூர்த்தி சாஸ்த்ரிகள் |
| முதற் பதிப்பு | - | May 2019 |
| பதிப்புரிமை | - | ஆசிரியருக்கே |
| பக்கங்கள் | - | 527 |
| எழுத்து | - | 14 புள்ளிகள் |
| தாள் | - | 80 GSM Maplitho |
| வெளியீடு | - | HERITAGE INDIA EDUCATIONAL TRUST, MYLAPORE, CHENNAI. |
| தர்ம ப்ரச்சார விலை | - | Rs. 300/- |
| அச்சிட்டோர் | - | ஹைடெக் ஆப்செட் பி. லிட் 11, ஸ்ரீநிவாச நகர் மெயின் ரோடு கோயம்பேடு, சென்னை - 600 107 |



श्री चन्द्रशेखर - जयेन्द्र- शङ्करेत्या-कृतित्रितयभृत् त्रयीव यः |
कामकोटिपदभूषणो गुरुः भाष्यकृत् कुवलयं पुनातु सः ॥

Website : www.kamakoti.org.
email : kanchimutt@gmail.com

உ

☎ : 044-27222115
Acts : 044-27224236
Fax : 044-27224305



|| Sri Chandramouleeswaraya Nama: ||
Sri Sankara Bhaghavadpadacharya Paramparagatha Moolamnaya Sarvajnapeeta
His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi
JAGADGURU SRI SANKARACHARYA SWAMIGAL
Srimatam Samsthanam
No. 1, Salai Street, KANCHEEPURAM - 631 502.

Date : ..................................



अद्वैताम्बुधिकौस्तुभं हरिमणिं रामानुजीयाम्बुधेः
माध्वाम्भोनिधिमौक्तिकं च कलयन् तन्वन् स्रजं सुन्दरीम्।
श्रुत्यम्बागलभूषणाय महितां श्रीकृष्णमूर्तिस्सुधीः
श्रीमच्चन्द्रिरमौलिवीक्षणचयैः भद्रं सदा प्राप्नुयात्॥

பிறவியில்லாமல் செய்துகொள்வதுதான் பிறவியின் பயன். அதற்காகத்தான் இத்துணை சாஸ்த்ரங்களும் ஏற்பட்டிருக்கின்றன. துன்பம் பிறவியால் உண்டாவதால் துன்பத்தை முழுவதும் நீக்கும் உபாயம் பிறவியில்லாமல் ஆவதுதான். அத்தகைய உபாயத்தை அடையும் முறையை வைதிக மார்க்கமாகப் பல மஹான்கள் உருவாக்கித் தந்தார்கள். தாங்கள் உணர்ந்த விதத்தில் ஈடுபட்டு மக்களும் உய்வுறும் வண்ணம் ஆசார்யர்கள் வேதாந்த மதத்தை ப்ரசாரம் செய்து அதன் மூலம் பக்தர்களும் சிஷ்யர்களும் உய்வுறும் வண்ணம் பாதையைக் காட்டியருளினார்கள். அத்தகைய நூல்கள் இன்றளவும் வழிகாட்டிவருகின்றன. இத்தகைய ஸித்தாந்தங்களை ஒன்றுக்கொன்று பொருத்திப் பார்க்கும்போது பார்வை இன்னும் விசாலமாகிறது. ஒவ்வொரு வேதாந்தமார்க்கமும் மற்றைய வேதாந்த மார்க்கத்தை அதற்கான ஸோபானமாகக் கருதுவதுண்டு. இத்தகைய மார்க்கங்களை ஒப்பிட்டுப் பார்ப்பதன் மூலம் இறுதியான உண்மையை அறியும் வழி துலங்கும். வெல்லங்கொண்ட ஸ்ரீ ராமராயகவி, ஸ்ரீவேதாந்த தேசிகர் மற்றும் ஸ்ரீ வாதிராஜர் ஒரே ஹயக்ரீவரை உபாஸித்து அத்வைதம், விசிஷ்டாத்வைதம் மற்றும் த்வைதத்திற்கான ஸித்தாந்தங்களை இயற்றினார்கள். இப்படி ஒரே தைவானுக்ரஹத்தால் தத்தம் ஸித்தாந்தங்களை அவர்கள் உணர்ந்தது மார்க்கங்களின் மேன்மையைக் காட்டுகிறது. அதற்காகத்தான் ஸ்ரீமத் அப்பைய தீக்ஷிதேந்த்ரர்களும் சதுர்மதஸாமரஸ்யமாக நூல்களை எழுதினார்கள். இதனைப் போலவே நம்முடைய ப்ரியசிஷ்யரான ப்ரஹ்மஸ்ரீ க்ருஷ்ணமூர்த்தி சாஸ்த்ரிகள் சாரீரிக மீமாம்ஸையின் மதத்ரய ஸங்க்ரஹத்தைத் தமிழ் அனுவாதத்துடன் வெளியிட இருப்பதை அறிந்து மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தோம். சாஸ்த்ரஜ்ஞர்களும் ஸாமான்யரும் கூட புரிந்து கொள்ளும்வகையில் த்ரிமதங்களையும் அறியவைக்கும் இந்த முயற்சி பாராட்டத்தக்கது. ஸ்ரீமஹாத்ரிபுரஸுந்தரீ ஸமேத ஸ்ரீசந்த்ரமௌளீச்வர ஸ்வாமியின் பரமானுக்ரஹத்தால் இந்த் நூல் நல்லமுறையில் வெளிவரட்டும் என்றும் படிப்பவர்களும் வேதாந்த மார்க்கத்தை அறிந்து உய்வடையட்டும் என்றும் ஆசீர்வதிக்கிறோம்.

நாராயணஸ்ம்ருதி:

ஸ்ரீவிலம்ப-பால்குன-க்ருஷ்ண-நவமீ

காஞ்சிபுரம்
29.03.2019

H.H. Sri Vishveshatirtha Swamiji
Sri Pejavara Adhokshaja Matha
Jagadguru Sri Madhwacharya Maha Samsthana
Udupi-576101, Karnataka
Ph. : 0820-2526598



श्रीश्री विश्वेशतीर्थश्रीपादाः
श्रीपेजावराधोक्षजमठः
जगद्गुरु श्रीमध्वाचार्यमहासंस्थानम्
उडुपि-५७६१०१, कर्णाटक

Date : 6.4.2019

# अनुग्रहसन्देशः

म.म. श्रीकृष्णमूर्तिशास्त्रिभिः प्रणीतः 'शारीरकमीमांसामतत्रयसारसङ्ग्रहः' स्थालीपुलाकन्यायेनावलोकितः । काञ्चीपरमाचार्याणाम् आदेशं हृदि निधाय ब्रह्मसूत्रार्थसारसङ्ग्राहकमतत्रयग्रन्थानवलोक्यायं निबन्धः तमिळुभाषायां सज्जीकृतः । माध्वसिद्धान्तानुसारेण श्रीमद्राघवेन्द्रतीर्थश्रीमच्चरणप्रणीतन्यायमुक्तावल्याः सारोऽप्यत्र प्रदत्तः ।

यद्यपि भाष्य-टीका-टिप्पण्याद्यध्ययनेन तत्तन्मताचार्यसम्मतः सम्प्रदायसिद्धः प्रमाणशुद्धश्च कश्चनार्थविशेषः तत्तन्मतीयरहस्यार्थाभिज्ञोपदेशेनैवावगन्तुं शक्यः । न केवलं व्युत्पत्तिबलेन । तथाऽपि स्वार्थं परार्थं च तत्तद्दर्शनाचार्यसूत्रव्याख्यान-पद्धत्यवगमः समेषां सुजनानां बोधनप्रयत्नश्च श्लाघ्यतम इति विभावयामः ।

विद्वद्धौरेयाः श्रीकृष्णमूर्तिशास्त्रिणः द्रविडभाषाभिज्ञानां लौकिकानामुपकारार्थं महान्तं श्रमं स्वीकृतवन्तः । खण्डनमण्डनादिकं विहाय तत्तन्मतप्रक्रियाप्रमेयावगमायायं प्रबन्धः महत उपकाराय कल्पत इति विश्वसिमः ।

जिज्ञासवः, ग्रन्थस्यास्याध्ययनेन तत्तन्मतविचारप्रणालीं विज्ञाय त्रिभिरप्याचार्यैः सम्पूजिते सकलजगज्जन्मादिकारणे भगवति श्रीकृष्णे निर्मलां भक्तिं कुर्वन्त्विति आशास्महे । श्रीकृष्णमूर्तिशास्त्रिमहाभागान् अस्मदाराध्यः श्रीकृष्णः आयुरारोग्य-भाग्यप्रदानेन समनुगृह्णात्विति प्रार्थयामहे ।

*इति नारायणस्मरणानि*
**श्रीविश्वेशतीर्थश्रीपादाः**
श्रीपेजावर-अधोक्षजमठः, उडुपि

Poornaprajna Vidyapeetha, Katriguppa Main Road, Bangalore-560028
Ph.: 080-26791738, E-mail. : info@vishveshavani.com



॥ श्रीविद्या पातु मां सदा ॥



# श्रीजगद्गुरु-बदरी-शङ्कराचार्य-संस्थानम्

## श्रीविद्यापीठम् - श्रीक्षेत्रशकटपुरम्





स्वस्ति! श्रीमदखिलजगद्विद्योतमानहयानवद्यायविद्याधृतिखद्योतीकृतभेदविद्यानां प्रणवमनुस्मरणार्हणाप्रणव-प्रीणित-स्मरहरण-भवतरण-नतशरण-जितकरण-शर्वाणीरमण-रमणीयचरण-श्रीपर्णानां सर्वसर्वसहासञ्चरण-देवपरिचरण-विद्याचरण-स्तवकरण-भक्तचिद्धरण-समेधितसदाधारसनातनधर्मधाम्नां पाषण्डमतषण्ड-खण्डनोद्दण्डप्रकाण्डपाण्डितीसम्मण्डिताशामण्डलानाम् आर्यवर्यपाराशर्य-वचःकार्यभाष्य-सपर्यापर्याय-मोदितार्यधुर्याणाम् अभिरूपवल्लभसम्भावकसभासम्भावित-कलासम्भृताभोभयभूभार्मिनीभ्रूभङ्गाभिमानसम्भेदकानां विगतनीतिवसुमतीपतिसुनीतिबोधनाधीनीकृतयशोधनानां निखिलविपुलातल-सञ्चलनसञ्चालित-दाशबल-कोलाहल-बलावलेपविदलनविलास-कलितवेदान्तगतमतल्लिका-समुल्लसितोपलब्धिमल्लिकानां महामोहग्राह-निर्हरण-हरिप्रहरणायमानानां दनीध्वस्तसमस्त-नास्तिकस्तोम-विस्तृतयशोविसराणां श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य-सद्यर्भगवदाचार्य-जगद्गुरु-श्रीशङ्करभगवत्पूज्यपादानां सच्छिष्यवर्य-श्रीमज्जगद्गुरूत्तराम्नाय-ज्योतिर्पीठाधीश्वर-श्रीमदाचार्य-श्रीतोटकभगवत्पादप्रवर्तित-श्रीमद्वेदान्तसद्गुरुपरम्परा-विभ्राजमानयोगिराज-श्रीश्रीसत्यतीर्थमहामुनीन्द्रसत्सम्प्रदायविलसित-तुङ्गभद्रातीरनिवास-श्रीशकटपादाख्य-महर्षिपरिपावितामश्रम-श्रीक्षेत्र-शकटपुरवराधीश्वर-श्रीसद्गुरुदत्तात्रेय-श्रीचन्द्रमौलीश्वर-श्रीविद्याविद्येश्वर-श्रीविद्याम्बिका-श्रीमद्राजराजेश्वरीदेव्यम्बा-श्रीसन्तानवेणुगोपालकृष्ण-दिव्यपादपद्माराधकश्रीविद्यापीठाधीश्वर-श्रीजगद्गुरुश्रीश्रीरामचन्द्रानन्दतीर्थमहास्वामिगुरुकरकमलानुग्रहसञ्जात-

### जगद्गुरुश्रीविद्याभिनवश्रीकृष्णानन्दतीर्थस्वामिभिः

अस्मदन्तेवसतां श्रीकृष्णमूर्तिशास्त्रिणां विषये

श्रीदेवताराधनसमये कालत्रयविरचिताः शुभंयुतराः आशीःपरम्पराः समुल्लसन्तुतराम् ॥

आसुप्तेरामृतेः कालं नयेद्वेदान्तचिन्तया इत्यभियुक्तोक्तिमनुसृत्य वेदान्तशास्त्राध्ययनाध्यापनप्रवचनादिकर्मणि सदा सर्वदा निरता भवन्तः मतत्रयसिद्धान्तसाराख्यं ग्रन्थमेकं व्यलिखन्निति विश्रुत्य महान् प्रमोदः समजायत। षड्दर्शनेष्वन्यतमं वेदान्तदर्शनं प्रधानभूतं श्रुतिसम्मतं दर्शनमित्यत्र न काऽपि विप्रतिपत्तिर्विलसति। परमकारुणिकाः व्यासमहर्षयः इति विश्रुताः भगवन्नारायणपरावतारभूताः बादरायणाः भवाम्बुधौ निमग्नान् मानवान् उद्दिधीर्षवः श्रुतिशिरःसिद्धान्तप्रतिपादक-वेदान्तदर्शनप्रवर्तनाय ब्रह्मसूत्राणि ग्रथयामासुः। ब्रह्मसूत्राणामर्थविवरणार्थं जगद्गुरवः श्रीशङ्करभगवत्पादाचार्याः भुवनभूष्यं वैदुष्यपूर्णं प्रसन्नगम्भीरं भाष्यं रचयामासुरिति विज्ञैर्विज्ञायत एव। भाष्यमिदमद्वैततत्त्वं युक्तिप्रमाणपुरःसरं सम्यक्प्रतिपादयति।

एवमेवान्ये मताचार्याः रामानुजमध्ववल्लभनिम्बार्कनीलकण्ठप्रभृतयः स्वस्वमतानुसारं ब्रह्मसूत्रभाष्यं व्यलिखन्। तत्तद्भाष्यतात्पर्यावबोधाय नैके प्रबन्धाः प्रकरणग्रन्थाश्च गैर्वाण्यां वाण्यां प्रादेशिकभाषासु च विरचिता विलसन्ति। साम्प्रतमस्मदास्थानविद्वांसः सम्प्रतिपन्नपण्डितप्रवराः शास्त्ररत्नाकर-महामहोपाध्याय-प्रभृतिविविधविरुदराजिविराजिताः मैलापुरसंस्कृतकलाशालानिवृत्तप्राचार्याः कृष्णमूर्तिशास्त्रिणः शाङ्कररामानुजीयमाध्वमतसिद्धान्तसारनिरूपकं मतत्रयसिद्धान्तसारनामकं ग्रन्थरत्नमेकं विलिख्य प्रकटीकुर्वन्तीति नितान्तं सन्तुष्यत्यस्मच्चेतः।

ग्रन्थेऽस्मिन् श्रीशङ्करभगवत्पादाभिमताद्वैतसिद्धान्तसारनिरूपणार्थं श्रीविद्यारण्यमुनिप्रणीतवैयासिकन्यायमालाविस्तराख्यप्रबन्धस्य द्राविडभाषानुवादो विहितोऽस्ति। एवमेव रामानुजीयमतसारप्रतिपादकस्य कपिस्थलं देशिकाचार्यविरचितस्य शारीरकाधिकरणन्यायावल्याख्यस्य प्रकरणस्यानुवादो द्राविडभाषायां दत्तोऽस्ति। माध्वमतसारनिरूपणाय राघवेन्द्रस्वामिप्रणीत-न्यायमुक्तावली द्राविडभाषयानूदिताऽत्र परिदृश्यते। एते च त्रयोऽपि ग्रन्थाः स्वकीयमताशयं सम्यगवगमयन्ति।

मतत्रयसारसर्वस्वजिज्ञासूनां जनानां कृते कृष्णमूर्तिशास्त्रिप्रणीता कृतिरियं महत उपकाराय कल्पत इत्यत्र न काऽपि संशीतिः। शास्त्रिवर्याणां परिश्रमः सर्वथा श्लाघनीय एव। अस्मन्मठीयाराध्यदेवतायाः श्रीविद्याम्बिकाश्रीराजराजेश्वर्याः परमानुग्रहेण ग्रन्थप्रणेतॄणां कृष्णमूर्तिशास्त्रिणामायुरारोग्याभिवृद्धिर्भूयादिति वयमाशास्महे। श्रीविद्याकुङ्कुमप्रसादमन्त्राक्षताश्च इतः प्रहीयन्ते।

विकारिसंवत्सरस्य
चैत्रपूर्णिमायां भार्गववासरे
१९-०४-२०१९ दिनाङ्के



इति नारायणस्मृतयः

SRI CHAKRA MAHAMERU PEETAM
Village Kamardih, PO Sargon, Thasil Pataria, Saket Parsia Road,
Near Maniyari River, Bilaspur, Mungeli, Chattisgarh - 495 224
Phone : + 91 99070 99231 E mail : mahamerupeedam@gmail.com
Website : www.mahamerupeedam.org



ஸ்ரீபரமேச்வரரின் ஸாக்ஷாத் அவதாரமான, ஸ்ரீ மஹாபெரியவாள் அவர்களின் திவ்ய கடாக்ஷத்திற்கும் அருளுக்கும் பாத்திரமான வேதஶாஸ்த்ரபாரங்கத, வேதபாஷ்யரத்னம் ஶாஸ்த்ர ரத்னாகரரான முல்லைவாசல் ப்ரஹ்மஸ்ரீ R. கிருஷ்ணமூர்த்தி ஶாஸ்த்ரிகள் நமது ஸ்ரீசக்ரமஹாமேரு பீடத்தில் பாஷ்ய ப்ரவசனம் செய்தும், வெகுகாலமாக தொடர்போடும், ப்ரியபாத்திரராக உள்ளார்.

இவர் ஸ்ரீ மஹாபெரியவாளின் ஆக்ஞைப்படி ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்ரயத்தின் - ஸ்ரீ சங்கரர் - ஸ்ரீ ராமானுஜர் - ஸ்ரீ மத்வாசார்யர் என்பவர்கள் அருளிய அத்வைத, விஶிஷ்டாத்வைத, த்வைத ஸித்தாந்தங்களின் ஸாரத்தை தமிழில் சுருக்கமாக எளியநடையில் ஸாமான்ய ஜனங்களுக்கும் புரியுமாறு எழுதிய இந்த "ஸித்தாந்தத்ரயஸாரம்" என்ற நூலைப் பார்த்து ஸந்தோஷம் அடைந்தோம். இந்த அரிய நூல் இவரது ஸ்ரீ மஹாபெரியவாளின் அனுக்ரஹவிஶேஷத்தைப் பிரதிபலிக்கிற-படியால் யாவரும் போற்றுமாறு அமைந்துள்ளது. "வேதவேதாந்தபாஷ்ய பிதாமஹரான" இவர், மேன்மேலும் ஶ்ரேயஸ்ஸுகள் அடைந்து இம்மாதிரியான நற்பணிகள் அதிகம் செய்ய ஆசீர்வதிக்கிறோம்.

ஓம்

ஸ்ரீகுருப்யோ நம:

# Swami Omkarananda

தேனி, வேதபுரீ
ஸ்ரீவிளம்பி வருஷம்
பங்குனி 27, புதன்கிழமை
வஸந்த பஞ்சமீ புண்ய தினம்
(10-04-2019)

## அருளாசியுரை

பரமபுருஷார்த்தமாகிய மோக்ஷ ஸ்வரூபத்தையும், அதற்குரிய ஸாதனங்களையும் ப்ரஸ்தாந த்ரயம் எனப்படும் சாஸ்த்ர ப்ரமாணத்தினால் அறிந்துகொள்கிறோம்.

உபநிஷத்துக்கள் (ச்ருதி ப்ரஸ்தாநம்), பகவத்கீதை (ஸ்ம்ருதி ப்ரஸ்தாநம்), ப்ரஹ்ம ஸூத்ரம் (ந்யாய ப்ரஸ்தாநம்) ஆகிய மூன்றும் ப்ரஸ்தாந த்ரயம் (முக்தியைப் பற்றியும் முக்தி மார்கத்தைப் பற்றியும் அறிவதற்கான மூன்று முக்கிய நூல்கள்) என்று அழைக்கப்படும்.

இந்த சாஸ்த்ரங்களின் பரம தாத்பர்யத்தை அறிவதில், மதாசார்யர்களுள் அபிப்ராய பேதங்கள் காணப்படுகின்றன.

முக்கியமாக, உபநிஷத்துக்களின் பரம தாத்பர்யத்தை மீமாம்ஸா ந்யாயபூர்வமாக வேதவ்யாஸர் என்கிற பகவான் பாதராயணர், ஸூத்ரங்களாக உபதேசித்து அருளினார்.

இந்த ஸூத்ரங்களுக்கு ஆதிசங்கர பகவத்பாதர் அத்வைதபரமாகவும், ஸ்ரீராமாநுஜாசார்யர் விஶிஷ்டாத்வைதபரமாகவும், ஸ்ரீமத்வாசார்யர் த்வைதபரமாகவும் பாஷ்யங்களை அருளியுள்ளார்கள்.

முமுக்ஷுக்களின் மனனத்திற்காக, அவற்றையெல்லாம் ஒரே புஸ்தகத்தில் ஒப்பிட்டுப் பார்க்கும் வகையில், நமது பேரன்பிற்குரிய மஹாமஹோபாத்யாய வேதபாஷ்ய ரத்நம் வேதாந்த விபூஷணம் ப்ரஹ்மஸ்ரீ ஆர். க்ருஷ்ணமூர்த்தி சாஸ்த்ரிகள் பரிஶ்ரமப்பட்டு தொகுத்திருக்கிறார்கள்.

மநநம் செய்ய விரும்பும் முமுக்ஷுக்களுக்கு இந்த க்ரந்தம் மிகவும் உபயோகமாக இருக்கும் என்பது நிஶ்சயம்.

இந்த க்ரந்தத்திற்கு அதிகாரியானவர்கள், இதனை நன்றாக அடிக்கடி மநநம் செய்து, ஸந்தேஹங்களை நன்றாக நீக்கி, அவரவர்கள் மனம் ஒப்புகின்ற, ஏற்றுக்கொள்ள இயலுகின்ற விஷயங்களை க்ரஹித்துக்கொண்டு, அதற்குத் தகுந்த வகையில் குரு-ஈஶ்வர-ஶாஸ்த்ர அநுக்ரஹத்துடன் அவைகளை அநுஷ்டித்து, க்ருதார்த்தர்களாக வேண்டும் என்று ஸத்குருநாதருடைய திவ்ய சரணாரவிந்தங்களை நமஸ்கரித்து, ப்ரார்த்தனை செய்து, ஆசீர்வதிக்கிறேன்.

यैरिमे गुरुभिः पूर्वं पदवाक्यप्रमाणतः।
व्याख्याताः सर्ववेदान्ताः तां नित्यं प्रणतोऽस्म्यहम्॥

ஓம் நமோ நாராயணாய!

பேரன்புடன்

स्वामी ओङ्कारानन्दः

Acharya : Adiguru Sri Prajna Dakshinamurti Vidya Pitham, Theni. & Sri Bhuvaneswari Avadhuta Vidya Pitham, Pudukkottai.

Founder & Managing Trustee : Vedanta Sasthra Prachara Trust & Sri Dakshinamurti Seva Samiti, Theni.



SRI SWAMI CHIDBHAVANANDA ASHRAMAM, P.B. 23, Vedapuri, Chatrapatti Road, Theni - 625 531.
☎ 04546-253908 E-mail : swamiomkarananda@yahoo.com / gmail.com www.vedaneri.com
SRI SRI JUDGE SWAMIGAL ADHISTANAM, East 7th Street, Pudukkottai - 622 001. Ph : 04322-221440



|| श्री ||



HH 46th Jeer



|| श्रीमते श्रीलक्ष्मीनृसिंह परब्रह्मणे नमः ||

|| श्रीमते श्रीलक्ष्मीनृसिंह दिव्य पादुका सेवक श्रीवण्शठकोप श्री नारायण यतीन्द्र महादेशिकाय नमः ||

# SRI AHOBILA MATH

శ్రీ అహోబిల మఠం　　श्रीमदहोबिल मठम्　　Sri Ahobila Math

SRI AHOBILA MATH
8-A, Aarathi Nagar,
(Behind Selaiyur Police Station)
East Tambaram, Chennai-600 059

## श्रीमुखम्

सन्तु श्रेयांसि भूयांसि

ஶாஸ்த்ரரத்னாகர, மஹாமஹோபாத்யாய ப்ரஹ்மஶ்ரீ முல்லைவாசல் கிருஷ்ணமூர்த்தி ஶாஸ்த்ரிகள், ஶாரீரகமீமாம்ஸா மதத்ரயஸாரஸங்க்ரஹ: என்ற ஒரு புஸ்தகத்தை எழுதியிருக்கிறார். இவரைப்பற்றி பண்டித லௌகீக உலகில் தெரியாதவர்கள் இருக்கமுடியாது. அப்படி பிரசித்தமானவர். மிகவும் பழக சுலபமானவர். யார் எந்த விஷயம் பற்றிக் கேட்டாலும் அதை அவர்களுக்கு எப்படி நன்கு புரியுமோ அதேபோல் விளக்கிச் சொல்லக்கூடியவர். இவர் விஶிஷ்டாத்வைத, அத்வைத, த்வைத மதங்களில் உள்ள வேதாந்த ஸாரத்தை நன்கு பிழிந்தெடுத்து எல்லோருக்கும் புரியும்படியான தமிழில் எழுதியிருப்பது மிகவும் போற்றப்படவேண்டிய விஷயம். இதை ஆத்யந்தம் வரை பார்த்ததில் இவரின் புலமையை நன்கு வெளிப்படுத்தியிருப்பது நன்றாக உள்ளது. நம் ஹிந்து மதத்திற்கு இதேபோல் எழுதி உபகரித்திருப்பது இவரால்தான் முடியும். இவரை நமக்கு சுமார் 45 வருடங்களாகத் தெரியும். இவருடைய தகப்பனார் பெரிய பண்டிதர். உபன்யாஸகர். கொஞ்சம்கூட தர்மத்திலிருந்து விலகாமல் வாழ்க்கை வாழ்ந்து காட்டியவர். அதேபோல், தன் குமாரரையும் செய்து பண்டித உலகத்திற்கு உபகரித்த இவர் தந்தை மிகவும் போற்றக் கூடியவர். இவரும் தனது குமாரனைத் தயார் செய்துள்ளார். இவர் க்ருஹிணியும் நல்ல பண்டிதையாவாள். இவர் கபிஸ்தலம்ஸ்வாமி என்று சொல்லக்கூடிய தேசிகாச்சாரியார் ஸ்வாமியின் "ஶாரீரக அதிகரண ரத்னாவளி" என்கிற க்ரந்தத்தை நன்கு பரிசீலனை பண்ணி விஶிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை எழுதியிருப்பது மிகவும் கடினமானதாகும். அதை மிகவும் சுலபமாகப் புரியும்படி எழுதி எல்லோரும் நன்கு அனுபவிக்கச் செய்துள்ளார். ஒவ்வொரு அதிகரணத்திலும் அந்தந்த மதத்தின் ஸாரத்தை மிகவும் சுருக்கியும், அழகாகவும் புரியும்படி செய்திருக்கிறார். எதை எடுத்து அனுவாதம் செய்யலாம் என்றால் எல்லாமே எடுத்துச் சொல்லலாம் போன்றுள்ளது.

ஸ்ரீ கிருஷ்ணஶாஸ்திரிகளிடம் நாம் சுமார் 40 வருஷங்களுக்கு முன்பு காவ்யபாடங்கள் வாசித்துள்ளோம். பழக மிகவும் சுலபர். இதைப்போன்று இன்னும் பல க்ரந்தங்கள் செய்து பண்டித, பாமர உலகத்திற்கு உபகாரம் செய்ய இவருக்கு அரோக த்ருடகாத்ரத்தையும், ஆயுளையும் கொடுக்க வேணுமாய், நமது ஆராத்ய தைவமான ஸ்ரீ மாலோலனைப் பிரார்த்தித்து, அநேக மங்களாஶாஸனம் செய்கிறோம்.

முகாம் : புள்ளம்பூதங்குடி
6-04-2019





Srimathe Sri Varaha Mahadesikaya Nama:

Srimathe Sri Rangaramanuja Mahadesikaya Nama:
Srimathe Sri Vedhanta Ramanuja Mahadesikaya Nama:
Srimathe Nigamantha Mahadesikaya Nama:
Sri Ranganayika Sametha Sri Ranganatha Parabrahmane Nama:

Srimathe Srinivasa Ramanuja Mahadesikaya Nama:
Srimathe Srinivasa Mahadesikaya Nama:
Srimathe Bhagavate Bhashyakaraya Mahadesikaya Nama:
Sri Ranganatha Divyamani Padukabhyam Nama:

---

**SRIRANGAM**
**SRIMAD ANDAVAN ASHRAMAM**

H.Qrs. Melur Road, Tiruchirappalli-620 006
Phone : 0431 2432379

Date : 15-04-2019

பரம காருணிகரான பகவான் பாதராயணர் லோகத்தை உஜ்ஜீவிப்பதற்காக உபநிஷத்ஸாரமாக ப்ரஹ்மஸூத்திரங்களை அருளிச்செய்தார். அவற்றிற்கு எண்ணற்ற பாஷ்யங்களும் அனுவ்யாக்யானங்களும் ஆவிர்பவித்தன. அவற்றில் மூன்று பாஷ்யங்களே உலகில் சிறந்து விளங்குகின்றன. ஸ்ரீ சங்கரபகவத்பாதாள் அபேதபரமாகவும் ஸ்ரீ ஆனந்ததீர்த்த பகவத்பாதாள் பேதபரமாகவும் ஸ்ரீ பகவத் ராமானுஜர் விசிஷ்டாத்வைதபரமாகவும் பாஷ்யங்களை அருளிச்செய்தனர்.

ப்ரஹ்மஸூத்திரங்கள் அதிகம்பீரமானது. அவற்றின் ஆழ்ந்த கருத்துக்களை யாரால் அறிய முடியும்? ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் அதிகரண ஸாராவளியில் "गम्भीरे ब्रह्मभागे गणयितुमखिलं कः प्रवीणः प्रमेयम्" என்று அருளிச்செய்தார்.

அப்படிப்பட்ட ஸூத்திரங்களுக்கு எளிமையாக தூய தமிழில் அனைவரும் புரியும்படியாக ப்ரஹ்மஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி ஶாஸ்த்ரிகள் மும்மதத்திற்கும் விரோதமில்லாமல் உரை எழுதியுள்ளார். அந்தந்த மதங்களின் ஸூத்ரார்த்தங்களை தூய தமிழில் தெள்ளத்தெளிவாக எழுதப்பட்டதைப் பார்த்து மிகவும் நாம் மகிழ்ச்சியடைந்தோம்.

இவ்வாறே பல நூல்கள் இவர்மூலமாக ஸனாதன தர்மம் ஓங்கிவளர வரவேண்டுமென்று ஸ்ரீரங்கா திவ்ய தம்பதிகள் பூர்வாசார்யர்கள் பாதுகைகளைப் ப்ரார்த்தித்து நாராயணஸ்மரண பூர்வகம் மங்களாசாசனம் செய்கிறோம்.

நாராயண நாராயண நாராயண

श्रीवराहयतिः

Sri Hari :



# From the Desk Of His Holiness

ப்ரும்மஸ்ரீ முல்லைவாசல் Dr.R. க்ருஷ்ணமூர்த்தி ஶாஸ்த்ரிகள் நமக்கு மிகவும் ஆப்தர். அவருடன் பல வருடங்களாக நமக்கு பரிச்சயம் உண்டு. அவருடைய தகப்பனார் ஆதிஶங்கர பகவத்பாதாள் மீது அபாரமான பக்திகொண்டவர். அவர், தன்னிடம் உள்ள வேதநிதியை தன்னுடைய குழந்தைகளுக்கும், படிக்க வந்த வித்யார்த்திகளுக்கும் விதரணம் செய்தார். அவர் மஹாபெரியவாளிடமும் ஆழ்ந்த பக்தியுடையவர். மேட்டூரில் வருடாவருடம் ஸ்ரீஶங்கர ஜயந்தி விழாவை மிகவும் விமரிசையாகக் கொண்டாடிவந்தார்; அதை இவரும் தொடர்கிறார்.

முல்லைவாசல் ஸ்ரீ க்ருஷ்ணமூர்த்தி ஶாஸ்த்ரிகள் பழகுவதற்கு மிகவும் ஸுலபர். மஹாவித்வானாக இருந்தபோதும்கூட பழகுவதற்கு மிகவும் இனிமையானவர். அவருடன் பழகிவந்த காலத்தில், நாம் அவரிடம் கண்டது, ஓய்வில்லாத உழைப்பு; அவர் கர்மயோகி; எப்பொழுதும் வேதம் சொல்லிக்கொண்டும், பாஷ்யம் சொல்லிக்கொண்டும், வேதாந்தம் சொல்லிக்கொடுத்துக்கொண்டும், ப்ரவசனங்கள் செய்துகொண்டும், சளைக்காமல் என்றும் லோக உபகாரத்திற்காக, "स्वाध्यायप्रवचनाभ्यां न प्रमदितव्यम्" என்ற ஶ்ருதியின் ஆதேஶத்தை ஒட்டியே வாழ்ந்துவருபவர். ஸம்ஸ்க்ருத கல்லூரியில் முதல்வராக இருந்தார்; பல பிருதுகளை பல மஹான்களிடமிருந்தும், பல பெரிய ஸம்ஸ்தானங்களிலிருந்து பெற்றவர். இந்த விருதுகளை வைத்துக்கொள்ள அவருக்கு ஒரு க்ருஹமே போதாது! அவ்வளவு ஸன்மானங்கள் அவரிடம் குவிந்தவண்ணம் உள்ளன.

இவை அனைத்திற்கும் மேலாக இவர், காஞ்சி ஸ்ரீ மஹாபெரியவாளின் பூரணமான அனுக்ரஹத்திற்கு பாத்திரமானவர். ஸமீபத்தில், "மஹா-மஹோபாத்யாயர்" என்ற - இருப்பதிலேயே மிக உயர்ந்த பிருது அவருக்கு அளிக்கப்பட்டது. இவ்வளவு இருந்தும், மூன்று மதஸ்தர்களிடமும் ஸரளமாகப் பழக்கக்கூடியவர். அது அவர் பழகும் அழகிற்கு ஒரு எடுத்துக்காட்டு.



*Sri Hari :*

*From the Desk Of His Holiness*

அவர் நம்மிடம் பேசிக்கொண்டிருக்கும்போது, அடிக்கடி "மஹாபெரியவாள், அத்வைதம், விஶிஷ்டாத்வைதம், த்வைதம் என்ற மூன்று ஸித்தாந்தங்களின் ஸாரத்தை சுருக்கி ஒரு புத்தகம் எழுதவேண்டும் என்று பணித்தார்" என்பதை பலமுறைகள் சொல்லிவந்தார். நாமும் சந்தர்ப்பம் கிடைக்கும்போதெல்லாம் "பெரியவா சொல்லியிருக்கிறாரே! அதை செய்துவிடலாமே!" என்று சொல்லிவந்தோம்.

எல்லாவற்றிக்கும் ஒரு தகுந்தகாலம் வரவேண்டியிருக்கிறது. மஹாபெரியவா இப்போதுதான் ஸங்கல்பித்திருக்கிறார் போலிருக்கிறது. ஸனாதனமதத்தின் - வேதமதத்தின் மூன்று ஸ்தம்பங்களாக இருக்கக்கூடிய அத்வைத, விஶிஷ்டாத்வைத, த்வைத ஸித்தாந்தங்கள் என்ன சொல்கின்றன என்பதை "மதத்ரயஸாரம்" என்ற இந்தப் புத்தகம் ப்ரும்மஸூத்ர பாஷ்யங்களைக் கொண்டு காட்டுகின்றது. மூன்று ஸித்தாந்தங்களைப்பற்றி இந்தப் புத்தகத்தைப் படித்தாலே ஒருவர் நன்றாக புரிந்துகொள்ளலாம்.

இவர் தீர்க்காயுளுடன் ஆரோக்யமாக இருந்து, மேலும் தன்னிடம் இருக்கும் ப்ரும்மவித்யையை பலருக்கும் கொடுத்து சிரஞ்சிவியாக இருக்கவேண்டும் என்று க்ருஷ்ண பரமாத்மாவை ப்ரார்த்தித்துக் கொள்ளுகிறோம்.

மதுராபுரி ஆஸ்ரமம்
20-04-2019

ராதே ராதே
மஹாரண்யம் ஸ்ரீ முரளீதர ஸ்வாமிஜி

ஸ்ரீ குருப்யோ நம:

**கூடலூர் ராமச்சந்த்ர சாஸ்த்ரி**
**ஸ்ரீமத் பகவத்பாத கைங்கர்ய ரூபஸ்ரீ காஞ்சி காமகோடிபீட ஆஸ்தான வித்வான்**
**43- அ, கல்யாணராமன் தெரு, கும்பகோணம்.**

कल्लोलायित कारुण्यरसेन परिपूरितः ।
गुरोः कटाक्षो यस्यस्यात् स एव भुवि भाग्यवान् ॥

**பொங்கித் ததும்பும் கருணாப்ரவாஹத்துடன் விளங்கும் ஸ்ரீ குருவின் கடாக்ஷம் பெற்றவரே இவ்வுலகில் பாக்யவான். அத்தகைய பரம கருணையுடன் அனுக்ரஹம் செய்தருளும் நமது காஞ்சி பரமாசார்யாளையும், ப்ரஹ்ம வித்யோபதேசகர்களான, அடியேனது வேதாந்தப் பேராசிரியப் பெருந்தகைகளையும், ஸநாதனமான நமது வேதவேதாந்த மார்கத்தை அவலம்பித்துக்கொண்டு, விளங்கச் செய்துவருபவர்களான த்ரிமதங்களையும் சேர்ந்த குருபீடங்களில் ப்ரகாசித்துக்கொண்டு நமக்கெல்லாம் அனுக்ரஹம் செய்து வரும் ஸ்ரீ ஸ்ரீ ஆசார்ய மூர்த்திகளையும், ஸவிநயம் வந்தனம் செய்து போற்றி வணங்குகிறேன்.**

"अन्तः प्रविष्टं कर्तारमेतम्" **என்று தைத்திரீய ஆரண்யகம் பகரும். "** योऽन्तः प्रविश्य" **என்று ஆரம்பிக்கிறது ஸ்ரீ மத் பாகவத ப்ரார்த்தனா ச்லோகம். அப்படி அந்தர்யாமியான ஸர்வேச்வரன் இக்கட்டுரை எழுத விழைபவனான அடியேனுக்கு, ப்ரஹ்லாத சரித்ரத்தை நினைவூட்டி அருள்கிறான். பரம பாகவத ச்ரேஷ்டனான ஸ்ரீ ப்ரஹ்லாதன் என்றாலே "த்ருடபக்தி, பகவத் ஸாக்ஷாத்காரம், ஸ்ரீ ந்ருஸிம்மாவதாரம்", பரம பாகவத ச்ரேஷ்டரான எனது பூஜ்ய ஸ்ரீ பிதா கூடலூர் ராமக்ருஷ்ண சாஸ்த்ரிகள் போன்ற மஹான்கள் தமது தர்மதத்வ ப்ரவசனங்களில் இவ்வாறு கூறுவார்கள்.**

**ஹிரண்யகசிபு** "कस्मात् स्तम्भे न" **என்று கேட்டுக் கொண்டிருக்கும் போதே** "दृश्यते" **என்று ஸ்ரீ ப்ரஹலாதன் பதிலளிக்கிறான். உடனே, பகவான், ந்ருஸிம்மாவதாரமாக** प्रह्लादखेद परिहार कृतावतार**னாக ஆவிர்பவித்து, தனது உத்தம பக்தனின் வாக்கை மெய்ப்பித்தார். என்பதாக. 'இந்தத் தூணிலும் உளன், துரும்பிலும் உளன்' என்பதை பறைசாற்றினான். இதையே சற்று வேதாந்த நோக்கில் கண்டோமேயானால்,**

अस्ति भाति प्रियं किंचित् नामचेत्यम्शपञ्चकम् ।
आद्यत्रयं ब्रह्मनिष्टं जगद्रूपं ततोव्ययम् ।।

என்னும் வேதாந்த காரிகை கூற்றுப்படி எந்த ஒரு பொருளிலும் உள்ள 'அஸ்தி பாதி, ப்ரியம்' என்பதாக இருக்கிறது, ப்ரகாசிக்கிறது, நன்றாக இருக்கிறது எனும் மூன்று அம்சங்களும் ப்ரஹ்மத்தைச் சேர்ந்தவையே. மற்றவைகளான கிஞ்சித், நாமா என்ற இரண்டும் அதாவது 'அளவுகள் மற்றும் ரூபங்கள்' ஜகத்தைச் சேர்ந்தவை. ஆகவே அவனன்றி ஓரணுவும் அசையாது. तेनविना तृणमपि न चलति, அவன் அனைத்திலும் உளன் - त्विह सर्वं प्रतिष्ठितम् பரப்ருமம் அன்றி வேறெதுவும் இல்லை - ब्रह्मणा नास्ति विघन - எனும் பகவானின் ஸர்வ வ்யாபகத்வம் பறைசாற்றப்படுகிறது.

अणोरणीयान्महतो महीयानात्मा गुहायान्निहितोऽस्य जन्तोः ।
तमक्रतुं पश्यति वीतशोको धातुः प्रसादान्महिमानमीशम् ।।

மந்த்ரத்ரஷ்டாக்களான நமது மஹரிஷிகள் ஆச்ரயித்து உபதேசித்தருளியுள்ள ஸநாதனமான வேத மார்கத்தில் சிகரமாகத் திகழும் உபநிஷத்துக்களால் ப்ரதிபாதனம் செய்யப்படும், ஸாக்ஷாத் பரப்ரும்ஹ ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்வதற்கான 'ஆத்மவித்யை' எனப்படும் வேதாந்த ஞான போதனையை பகவான் ஸ்ரீ வேத வ்யாஸாசார்யாள் ப்ருஹ்மஸூத்ரங்களாக அருளினார்கள். இந்த ப்ருஹ்ம ஸூத்ரங்ளுக்கும் தச உபநிஷத்துக்கள் மற்றும் ஸ்ரீமத் பகவத் கீதைக்கும் பாஷ்யங்கள் எனப்படும் விரிவுரைகளை முதலாவதாக நமது ஜகத்குருவான ஸ்ரீமத் சங்கர பகவத்-பாதர்களும், ஸ்ரீமத் ராமானுஜாசார்யாளும், பின்னர் ஸ்ரீ மத்வாசார்யாளும், ப்ரஸ்தானத்ரய பாஷ்யம் எனும் தொகுப்பாக வழங்கியருளி, இந்த ஆத்ம வித்யையை விளங்கவைக்க அருந்தொண்டு ஆற்றியுள்ளார்கள். இவை முறையே அத்வைதம், விஶிஷ்டாத்வைதம், த்வைதம் எனும் மூன்று ஸித்தாந்தங்களாக பரிமளிக்கின்றன. அஞ்ஞானம் நீங்கப்பெற்று ஸம்ஸார ஸாகரத்திலிருந்து மீண்டு ஞானவான்களாக மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை முக்திநிலையை அல்லது கைவல்யத்தை நாம் அனைவரும் அடைய வேண்டுமென்பதே இந்த ஆசார்யஸத்புருஷர்களின் மூன்று ஸித்தாந்தங்களின் நோக்கமும் ஆகும். அத்தகைய குருவர்யர்களின் நிர்வ்யாஜமான பரம கருணையைப் போற்றி, அவர்களையே சரணமடைவோம்.

இத்தகைய பெருங்கருணையுடனேயே நமது பூஜ்ய ஸ்ரீ காஞ்சி பரமாசார்யாள் ஆஸ்திக ஜனங்கள் எல்லாருமே நமது த்ரி-மதங்களின் ஆசார்யார்கள் அருளியுள்ள பாஷ்யங்களை அவரவர்கள் கூற்றுப்படி முடிந்த அளவு புரிந்து

தெரிந்துகொள்ளவேண்டுமென்ற தமது ஆசையைத் தெரிவித்து உள்ளார்கள். ஸ்ரீ குருவர்யர்களின் இந்த மேலான விருப்பத்தை அவர்களின் ஆக்ஞையாகவே ஏற்று, மனத்தில் வைத்துக்கொண்டு அதை நிறைவேற்றிவிடவேண்டும் என்று தீவிர முயற்சியுடன் ப்ரஹ்மஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி ஶாஸ்த்ரிகள் இந்த கடினமான பணியை மேற்கொண்டு நிறைவேற்றி உள்ளார்.

ஸ்ரீ பெரியவாளின் பக்தரான இவர், இம்மூன்று ஆசார்யர்களின் பாஷ்யங்களையும் அந்தந்த பாஷ்யங்களின் சிறப்புரையாளர்களின் விளக்கங்களை நன்கு எடுத்துக்கொண்டு ஜனங்கள் அனைவருக்கும் புரியும்படியாக தமிழ்மொழியில் எளிமையாக வழங்கியிருப்பது மிகவும் ஶ்லாகிக்கத் தக்கது.

நமது வேத மதத்திலும் பூஜ்யஸ்ரீ பெரியவாளிடத்திலும் மிகுந்த பக்தி கொண்ட மஹான் ப்ரஹ்மஸ்ரீ முல்லைவாசல் ராஜகோபால கனபாடிகள் அவர்கள் ஸத்தர்மானுஷ்டானங்கள், தர்மதத்வ ப்ரவசனங்களுடன் மேட்டூர் ஸ்ரீ ஶங்கர குருகுலத்தில் வேத வித்யையை வளர்த்து, ஸ்ரீ ஶங்கர ஜயந்தி மஹோத்ஸவத்தை ஶ்ரத்தா பக்தியுடன் பல வருடங்கள் நடத்தி வந்தார்கள். அவ்வாறே தனது பூஜ்யபிதா அவர்களைப் பின்பற்றி அவர் செயலைப் போற்றும் விதமாக ஸௌபாக்யவதி, சிரஞ்சீவி கிருஷ்ணமூர்த்தி ஶாஸ்த்ரிகள் தம்பதிகள், மிகுந்த ச்ரத்தா பக்தியுடன் பாஷ்ய பாராயணம், வேதாந்த வித்யையை உபன்யாஸங்களுடன் இன்னும் விமரிசையாக ஸ்ரீ ஶங்கர ஜயந்தி மஹோத்ஸவத்தை நடத்தி வருவது போற்றுதலுக்குரியது. இவர்கள் பாக்யவான்களே. சிரஞ்சீவி ஶாஸ்த்ரிகள் பூர்ணமான வேதாத்யயனம் ஶாஸ்த்ரங்கள், வேதபாஷ்யம், வேதாந்தம், இவற்றை மிகுந்த முயற்சியுடன் க்ரமமாக உத்தம குருமுகமாக நன்கு அப்யஸித்து, தொடர்ந்து அமுதவித்யையில் மேன்மேலும் வித்யைகளைத் தெரிந்துகொள்ளும் ஆவலுடன் உத்தம கைங்கர்யமாக ஸ்ரீ மடத்தின் அத்வைதஸபை, வேதவேதாந்த ஸதஸ்கள், மேலும் எல்லா மடங்களின் ஆசார்யர்களிடத்திலும் மிகுந்த பக்தியுடன் அவர்களின் ஸதஸ்களிலும் அன்வயித்து மிக நல்ல செயலாக்கத்துடன் விளங்கி வருவது சாலச்சிறந்தது. மிகுந்த ஸந்தோஷத்தைக் கொடுக்கிறது. வேத பாஷ்யம் மற்றும் வேதாந்தத்தில் பல சிஷ்யர்களையும் வித்வான்களாக ஆக்கியுள்ளது இன்னும் விசேஷம். இந்த ஆதர்ச தம்பதிகள் தொடர்ந்த ஸ்ரீகுரு கைங்கர்யங்களை செய்துகொண்டு, பகவத் பக்தியுடன் ச்ரேயஸ்ஸுடன் விளங்க, நமது பரமாசார்யாள் மற்றும் குருவர்யர்களிடம் பிரார்த்தித்து வேதோக்த ஆசீர்வாதங்கள் செய்கிறோம்.

ஸ்ரீ சங்கராசார்யார், ஸ்ரீ ராமானுஜாசார்யார், ஸ்ரீமத்வாசார்யார் இவர்கள் வழங்கிய அத்வைத விசிஷ்டாத்வைத, த்வைத ஸித்தாந்தங்களை உடைய இம்மூன்று

மதங்களுமே வைதீகமானது. அதாவது வேதத்தை ப்ரமாணமாகக் கொண்டதுதான். வைதீகமான மதங்கள் யாவுமே நன்மை பயப்பன. அந்தந்த ஆசார்யபுருஷர்களின் அனுபவ ஸித்தாந்தங்கள் அவர்களால் தொகுக்கப்பட்டுள்ளன. சில கிரந்தங்களில், ஒரு மதாசார்யால் மற்ற மதாசார்யர்களின் ஸித்தாந்தங்களைக் கண்டனம் செய்வதாக அமைந்தால், அது தத்தம் மதத்தில் அவர்களுக்கு உள்ள அசைக்கமுடியாத பற்றினால் ஏற்பட்டதே ஆகும். இந்த வைதீக மதங்கள் அனைத்திற்குமே, வேதம் ப்ரமாணம். கர்மானுஷ்டானங்கள், ஆசார அனுஷ்டானங்கள் இவையும் அனேகமாக ஒன்றேதான். சிறு சிறு பேதங்களைத் தவிர அத்வைதிகள், கர்மமார்கத்தையும், உபாஸனாமார்கத்தையும் அணுகும்போது, த்வைதிகளின் த்வைதபாவத்தை அங்கீகரித்தே கர்மானுஷ்டானங்கள் செய்யப்படுகின்றன. உபாஸனாமார்க்கமாக பக்தி பாவத்திலும் அப்படித்தான். பக்திதான் வேதத்திற்கு முக்ய ஸாதனம். அதன் உயர்ந்த, கடைசிநிலைதான் ப்ரபத்தி-சரணாகதி என்பது விஶிஷ்டாத்வைதத்தின் கொள்கை.

ஞானத்தினால்தான் மோக்ஷம் எனும் அத்வைத பாவம், அனுபவத்தினால் மாத்திரம் அறியத்தக்கது. ஆகவே அவரவர்கள் தகுதிக்கேற்ப, அந்தந்த மதம் உயர்வானது. அதனால் முன்னோர்களான மஹான்கள், அந்தந்த நிலைக்கேற்ப, முக்தியை நான்குவிதமாகக் கூறுவார்கள். அவை 1. ஸாலோக்யம் 2. ஸாமீப்யம் 3. ஸாரூப்யம் 4. ஸாயுஜ்யம் என்பனவாகும். இவை அனைத்திற்குமே வேதங்களிலும், இதிஹாச புராணங்களிலும் ஸரளமான சான்றுகள் உள்ளன.

அவதார புருஷர்களான இம்மூவருமே, தமது தபோபலத்தாலும், பகவத்-பக்தியினாலும் ஸ்ரீ பகவத் ஸாக்ஷாத்காரத்தையும் அநேக அற்புதச் செயல்களையும் புரிந்தவர்களாகத் திகழ்கிறார்கள். அருளிச் செய்துள்ள ஸ்தோத்ரங்களோ எண்ணில் அடங்காதவை.

காளிதாஸஸ்ம்ருதி வசனத்தைக் கூறாமல் இக்கட்டுரை நிறைவு பெறாது. ஸர்வ சாஸ்த்ர நிபுணரும், தீர்க்கதரிசியுமான நம் காளிதாஸர் இவ்வாறு கூறுகிறார்.

त्वय्यावेशित चित्तानां त्वत्समर्पितकर्मणाम् । गतिस्त्वं वीतरागाणां अभूयस्सन्निवृत्तये ॥

கங்காநதியின் ப்ரவாஹம் பல கிளைகளாகச் செல்லும்போதும் கடைசியில் ஸமுத்ரத்தையே அடைகின்றது. அவ்வாறே சாஸ்திரங்கள், முக்தி மார்க்கங்கள் பலவாக இருப்பினும், அடையப்பட வேண்டியவர் பரமாத்மா ஒருவரே. எல்லா மார்க்கமும் மனிதனை இறைவனிடமே சேர்க்கிறது. बहुधाप्यागमैर्भिन्नाः पन्थानः सिद्धिहेतवः । त्वय्येन निपतन्त्योघा जाह्नवीया इवार्णवे॥

**பகவானையே ஸதா த்யானம் செய்பவரும், பலனில் விருப்பமின்றி பகவானிடத்திலேயே எல்லாச் செயல்களையும் அர்ப்பணித்து எதிலும் பற்றில்லாதவருமான பக்தர்கள் புனர்ஜன்மம் இல்லாமல் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தில் சாச்வதமாகத் திகழ்கிறார்கள்**

**ஸர்வே ஜநா: ஸுகிநோ பவந்து**
**ஸமஸ்த ஸன்மங்களானி ஸந்து.**

॥ श्रीगुरुभ्यो नमः ॥

Dr. R. मणिद्राविडशास्त्री
वेदान्त-मीमांसाचार्यः, मीमांसाशिरोमणिः, Ph.D.
पूर्वमीमांसाध्यापकः, मद्रपुरीसंस्कृतमहाविद्यालये
मैलापूर् , चेन्नै - ४

Dr. R. Mani Dravid Sastri
Assistant Professor, Purvamimamsa,
The Madras Sanskrit College,
Mylapore, Chennai- 4

दिनाङ्कः -13. 04. 2019

# आमुखम्

विदितमेवेदं सर्वेषां विदुषां यद् धर्मार्थकाममोक्षाख्येषु पुरुषार्थेषु मोक्ष एव परमः पुरुषार्थः। तस्य च साधनम् आत्मज्ञानमेव। 'तमेव विदित्वाऽति मृत्युमेति नान्यः पन्था विद्यतेऽयनाय' इति, 'तरति शोकमात्मवित्' इति च श्रुतेः। आत्मज्ञानार्थमेव सर्वाणि दर्शनानि प्रवृत्तानि। तेषु च भगवता बादरायणेन प्रणीतं ब्रह्ममीमांसादर्शनमेव मुख्यम्। अन्यानि तु दर्शनानि विनेयबुद्ध्यनुसारेण तदपेक्षितं तत्तदंशं बोधयन्ति सन्ति बादरायणीयस्य दर्शनस्योपकुर्वन्ति। ब्रह्ममीमांसादर्शनं चाध्यायचतुष्टयोपेतम् 'अथातो ब्रह्मजिज्ञासा' इत्यारभ्य 'अनावृत्तिः शब्दादनावृत्तिः शब्दादि'त्येतदवसानं सूत्ररूपेण संग्रथितम्। निगूढार्थानां तेषां सूत्राणां तात्पर्यस्फोरणाय अद्वैतं विशिष्टाद्वैतं द्वैतमिति प्रथितमतत्रयसिद्धान्ताननुसरद्भिराचार्यैः भाष्याणि विरचितानि। तत्र बादरायणीयं ब्रह्ममीमांसादर्शनमद्वैतसिद्धान्तानुसारिभाष्येण विभूषितं **श्रीमच्छङ्करभगवत्पादैः**। **श्रीमद्रामानुजाचार्याश्च** विशिष्टाद्वैतसिद्धान्तानुसारिश्रीभाष्यं प्रणीय ब्रह्मसूत्राणि व्यवृण्वन्। **श्रीमदानन्दतीर्थापरनामधेय-श्रीमन्मध्वाचार्यैश्च** भाष्यानुभाष्याणुभाष्यसन्न्यायविवरणाख्यानां चतुर्णां द्वैतसिद्धान्तानुसारिग्रन्थानां विरचनेन ब्रह्मसूत्रार्थो विवृतः। एतान्यतिरिच्यापि भेदाभेदवादाचिन्त्यभेदाभेदवादादिसिद्धान्तानवलम्ब्यापि ब्रह्मसूत्राणि व्याख्यातानि **भास्करप्रभृतिभिराचार्यैः**। सर्वेषामपि व्याख्याविशेषाणां ब्रह्मसूत्राणि अवकाशं ददतीत्येतत् दर्शनस्यास्य महिमातिशयं पुष्णाति। प्राधान्येन तु अद्वैत-विशिष्टाद्वैत-द्वैतसिद्धान्ताः लोके सर्वत्र प्रथिताः।

एतेषां च मतत्रयसिद्धान्तानां विवेकाय, तद्भाष्यकाराणां च निगूढाशयप्रकाशनाय प्रवृत्तैः तत्तदाचार्यैः व्याख्योपव्याख्यादिप्रणयनेन दुरवगाहमहासमुद्रतां नीतमिदं ब्रह्ममीमांसादर्शनम्। सत्यामेवं स्थितौ सुलभतया सामान्यजनानामपि शास्त्रार्थज्ञानं संपादयितुं महान्तोऽनेके आचार्याः तत्तत्सिद्धान्तानुसारेण ब्रह्मसूत्राणामर्थसंग्राहकान् ग्रन्थान् निरमासिषुः। तत्र वेद-धर्मशास्त्र-पूर्वोत्तरमीमांसा-व्याकरणादिसकलविद्यापारदृश्वानः वेदभाष्य-पराशरधर्मशास्त्र-व्याख्यादिप्रणयनेन सकलविद्वन्मान्याः परमहंसपरिव्राजकाचार्याः **श्रीविद्यारण्यस्वामिनः वैयासिकन्यायमालाख्यं** ग्रन्थरत्नं सुखेन अद्वैतसिद्धान्तं जिज्ञासमानानामुपकारायान्वगृह्णन्। महामहोपाध्यायादिबिरुदवद्भिः विद्वद्भिः **कपिस्थलं देशिकाचार्यैः** विरचितः **शारीरकाधिकरणरत्नमालाख्यो** ग्रन्थः विशिष्टाद्वैतसिद्धान्ततत्त्वजिज्ञासूनामुपकाराय कल्पते। तथैव यतिवर्यैः **श्रीराघवेन्द्रश्रीमच्चरणैः** प्रणीता न्यायमुक्तावली द्वैतसिद्धान्तमधिजिगमिषूणामुपकुर्वती विराजते।

अद्यत्वे पूर्वोक्तमतत्रयस्यापि तत्त्वम् एकेन ग्रन्थेन संस्कृतभाषायां नातिव्युत्पत्तिमतामपि जिज्ञासूनां सुलभाववोधं संपादयितुं भारतराष्ट्रपतिसंमानितैः महामहोपाध्यायैः ब्रह्मश्री R. कृष्णमूर्तिशास्त्रिभिः वेदभाष्यरत्न-शास्त्ररत्नाकर-अद्वैतसिद्धिरत्नाकरादि-नानाविधविरुदभूषितैः जगद्गुरुश्रीकाञ्चीकामकोटिपीठाधिपतीनां श्रीचरणानां निरवग्रहानुग्रहभाजनैः निरन्तर-वेद-वेदभाष्य-वेदान्तादिप्रवचन-प्रचारण-प्रथितयशस्कैः मद्रपुरीसंस्कृतकलाशालायां वेदान्तशास्त्रप्राध्यापकपदं प्रांशुपालपदं चालंकृतवद्भिः पूर्वोक्तान् वैयासिकन्यायमाला-शारीरकाधिकरणरत्नमाला-न्यायमुक्तावलीग्रन्थान् परिशील्य तेभ्यः तत्तन्मतसारं संगृह्य द्राविडभाषया सिद्धान्तत्रयसारः इति नाम्ना ग्रन्थरूपेण प्रकाश्यत इति महतः प्रमोदस्य स्थानम्।

ग्रन्थेऽस्मिन् संग्रहावसरे प्रत्यधिकरणं तत्तन्मतरीत्या पूर्वोत्तरपक्षसंक्षेपः, विचारप्रकारवैचित्र्यम् , अधिकरण-रचनाभेदः, अधिकरणघटकसूत्राणां संख्याभेदनामभेदौ, क्वचित् पाठभेदः, यत्र विचारसाम्यं तत्र तन्निर्देशश्च प्रदर्शित इति दर्शनमात्रेण मतत्रयवैलक्षण्यज्ञाने जिज्ञासूनामस्यास्ति महानुपयोगः। सरलभाषया विषयप्रतिपादनम् , विषयसार-संकलनसौष्ठवं, विस्तृतविषयाणां संक्षेपेण निरूपणं चात्र शास्त्रिपादानामनितरसाधारणं वैशिष्ट्यम्। इतोऽधिकं मतविशेषमधिजिगमिषतां तु तत्तदाचार्याणां ग्रन्थाः सन्त्येव।

प्रस्थानत्रयस्यापि शास्त्रिपादा इत्थमेव मतत्रयसंग्रहं करिष्यन्ति चेत् महानुपकारः संभवेज्जिज्ञासूनामिति भावयामि। विद्वांसश्छात्राश्चास्य ग्रन्थस्योपयोगेन सफलयन्तु ग्रन्थकृतः परिश्रममिति निवेदयति –

विदुषां विधेयः

मणिद्राविडः

# (ஸ்ரீ மணித்ராவிட் ஶாஸ்த்ரி அவர்கள் கொடுத்த ஆமுகத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு)

## முகவுரை

தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நான்கு புருஷார்த்தங்களில் மோக்ஷம் மிகவும் சிறந்தது என்று யாவரும் அறிவோம். அந்த மோக்ஷத்திற்குச் ஸாதனம் ஆத்மஞானம்தான். तमेव विदित्वाति मृत्युमेति नान्यः पन्था विद्यतेऽयनाय ('அவனை உணர்ந்துதான் ம்ருத்யுவைக் கடக்கிறான், வேறு வழி மோக்ஷத்திற்கு இல்லை'). என்றும் ஆத்மஞானமுடையவன் சோகத்தைத் தாண்டுகிறான் என்றும் ஶ்ருதி உள்ளது அல்லவா? அந்த ஆத்மஞானத்திற்காகத்தான் எல்லா தர்ஶனங்களும் (ஶாஸ்த்ரங்களும்) ஏற்பட்டுள்ளன. அவைகளில் பகவான் பாதராயணரால் இயற்றப்பட்ட ப்ரஹ்மமீமாம்ஸாதர்ஶனம் நான்கு அத்யாயங்களுடன் கூடியது; अथातो ब्रह्मजिज्ञासा என்று ஆரம்பித்து अनावृत्तिः शब्दादनावृत्तिः शब्दात् என்பதுவரை ஸூத்திர வடிவத்தில் அமைக்கப்பட்டுள்ளது. ஆழமாகப் பொதிந்துள்ள பொருட்களைக்கொண்ட அந்த ஸூத்ரங்களுக்கு தாத்பர்யத்தை வெளிப்படுத்த -அத்வைதம், விஶிஷ்டாத்வைதம், த்வைதம் என்று ப்ரஸித்தமான மதத்ரய ஸித்தாந்தங்களை அனுசரிக்கும் ஆச்சார்யர்களால் பாத்யங்கள் எழுதப்பட்டுள்ளன. இதில் பாதராயணரின் ப்ரஹ்மமீமாம்ஸாதர்ஶனம், அத்வைத ஸித்தாந்தானுஸாரியான பாஷ்யத்தினால், ஸ்ரீ ஶங்கராச்சாரியாரால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. ஸ்ரீமத் ராமானுஜாசார்யர்கள், விஶிஷ்டாத்வைத ஸித்தாந்த அனுஸாரியான ஸ்ரீபாஷ்யம் இயற்றி ப்ரஹ்மமதத்த்வங்களை விவரித்துள்ளார். ஸ்ரீ ஆனந்ததீர்த்தர் என்று மறுபெயர் கொண்ட ஸ்ரீ மத்வாசார்யர்களால் பாஷ்ய, அனுபாஷ்ய-அநுபாஷ்ய-ஸன்ந்யாயவிவரண - என்ற த்வைதானுஸாரியான நான்கு க்ரந்தங்களை இயற்றி ப்ரஹ்மஸூத்ரம் பொருள் விவரிக்கப்படுகிறது.

இவைகளைத்தவிர பேதாபேதவாத-அசிந்த்ய பேதாபேதவாதம் போன்ற ஸித்தாந்தங்களை அவலம்பித்து பாஸ்கரர் போன்றவர்களால் ப்ரஹ்மஸூத்ரங்கள் விளக்கப்படுகின்றன. எல்லாவிதமான வ்யாக்யான விசேஷங்களுக்கும் ப்ரஹ்மஸூத்ரங்கள் இடம் தருகின்றன என்பது இந்த தர்ஶனத்தின் சிறந்த பெருமையை புஷ்டி செய்கின்றது. முக்யமாக அத்வைத-விஶிஷ்டாத்வைத-த்வைத ஸித்தாந்தங்கள் உலகில் எங்கும் பிரஸித்தமானவைகள்.

இந்த மதத்ரயஸித்தாந்தங்களைப் படித்து உணரவும், அந்த பாஷ்யகாரர்களின் உள்ளே பொதிந்த கருத்தை வெளிப்படுத்துவதற்காகவும், முயன்றுள்ள அந்தந்த ஆசாரியர்கள், வியாக்யானம்- உபாக்யானம்- முதலியவற்றைப் பண்ணி இந்த ப்ரஹ்மமீமாம்ஸா-தர்ஶனமானது உள்ளே நுழையமுடியாத மஹாஸமுத்ரத்தன்மையை அடைந்துள்ளது.

இவ்விதம் நிலை ஏற்பட்டுள்ள நேரத்தில், ஸாமான்யஜனங்களும் ஸுலபமாக ஶாஸ்த்ரார்த்த அறிவை அடைவதற்கு பல ஆசார்யர்கள் அந்தந்த ஸித்தாந்தத்தை அனுஸரித்து ப்ரஹ்மஸூத்திரங்களின் பொருளை சுருக்கிக்கூறும் க்ரந்தங்களை நிர்மாணித்துள்ளார்கள். அவைகளுள் வேத-தர்மஶாஸ்த்ர-பூர்வோத்தர-மீமாம்ஸா வ்யாகரணம் போன்ற ஸகல வித்யைகளிலும் கரைகண்ட, சதுர்வேதபாஷ்ய பராஶரதர்ம-சாஸ்த்ர வ்யாக்யானாதிகளைச் செய்த ஸகலவித்வன்மான்யர்களான பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யரான ஸ்ரீவித்யாரண்யஸஸ்வாமிகள் "வையாஸிகந்யாயமாலா" என்ற நூலை அத்வைதஸித்தாந்தத்தை ஸுலபமாக அறிய விரும்புவர்களின் உபகாரத்திற்காக அனுக்ரஹித்துள்ளார்.

மஹாமஹோபாத்யாய போன்ற பிருதுகள் உடைய வித்வான் கபிஸ்தலம் தேசிகாச்சார்யர் அவர்களால் இயற்றப்பட்ட "ஶாரீரகாதிகரண ரத்னமாலா" என்ற புத்தகம் விஶிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை அறிய விரும்புவர்களுக்கு உபகாரமாக அமைந்துள்ளது.

இதேபோல மந்திராலய ஸ்வாமிகளான யதீஶ்வரர் ஸ்ரீராகவேந்திரஸ்ரீமத்சரணர்களால் இயற்றப்பட்ட "ந்யாயமுக்தாவளீ" த்வைதஸித்தாந்தத்தை அறிய விரும்புவர்களுக்கு உபகாரமாக விளங்குகிறது.

முன்புகூறிய இந்த மதத்ரயத்தையும் அறியவிரும்பும், ஸம்ஸ்க்ருத மொழியில் அதிகப்ரவேஸம் இல்லாதவர்களுக்கு சுலபமாகப் புரிந்துகொள்ளுமாறு செய்வதற்காக - பாரதராஷ்ட்ரபதிஸம்மானிதரான மஹாமஹோபாத்யாயரும், வேதபாஷ்யரத்ன ஶாஸ்த்ரரத்னாகர-அத்வைதஸித்திரத்னாகர போன்ற பலவித பிருதுகள் பெற்றவரும் ஜகத்குரு ஸ்ரீ காஞ்சிகாமகோடிபீடாதிபதி ஸ்ரீசரணர்களின் அளவுகடந்த அனுக்ரஹ பாத்திரரும், எப்போதும் வேத, வேதபாஷ்ய, வேதாந்தம் இவைகளைத் தகுந்த அதிகாரிகளுக்கு பாடம் சொல்வதிலும், பல இடங்களில் உபன்யஸம் செய்வதிலும், அதை நன்றாக ப்ரசாரம் செய்வதிலும் புகழ்பெற்றவரான, சென்னை ஸம்ஸ்க்ருத கலாசாலையில் வேதாந்த ஶாஸ்த்ரப்ராத்யாபக ப்ரின்ஸ்பால் பதவிகளை அலங்கரித்தவருமான ப்ரஹ்மஸ்ரீ R. கிருஷ்ணமூர்த்தி ஶாஸ்த்ரிகள் முன்கூறிய "**வையாஸிகந்யாயமாலா, சாரீரகாதிகரணரத்னமாலா, ந்யாயமுக்தாவளி**" க்ரந்தங்களை நன்கு பரிசீலித்து, அவைகளிலிருந்து அந்தந்த மதத்தின் ஸாரத்தைச் சுருக்கி தமிழ்மொழியில் '**ஸித்தாந்தத்ரயஸாரம்**' என்ற பெயரில் புத்தகவடிவமாக வெளிப்படுத்துகிறது என்பது மிகவும் ஸந்தோஷிக்கத்தக்கது.

இந்தநூலில் ஸங்க்ரஹம் செய்யும்போது 1) ஒவ்வொரு அதிகரணத்திலும் அந்தந்த மதரீதியில் பூர்வஸித்தாந்தச் சுருக்கம். 2) விசாரமுறைகளின் தனிச் சிறப்பு. 3) அதிகரணரசனையின் வேறுபாடு, 4) அதிகரணத்தில் அடங்கிய ஸூத்திரங்களின் எண்ணிக்கை, பெயர்களின் வேறுபாடு, 5) சில இடங்களில் பாட பேதம் 6) விசாரம் ஸமமாயிருக்கும் இடத்தில் அதைக்குறித்துள்ளது - என்பதாக அமைந்துள்ளதால் ஜிக்ஞாஸுகளுக்கு (அறிய விரும்புவர்-களுக்கு) பார்த்தவுடனேயே மதத்ரயவிசேஷங்களை உணர்வதில் பெரிய உபகாரம் ஏற்படுகின்றது. ஸரளபாஷையில் விஷயத்தைக்கூறுவதில், விஷயஸாரத்தை சுருக்குவதில் திறமை, விஸ்தாரமான விஷயங்களைச் சுருக்கிக்கூறுவது என்பவை ஶாஸ்த்ரிகளின் தனிப்பட்ட அஸாதாரணப் பெருமை. இதற்குமேல் மத விஶேஷங்களைத் தெரிந்துகொள்ள எண்ணமுள்ளவர்களுக்கு அந்தந்த ஆசார்யர்களின் க்ரந்தங்கள் உள்ளன. ஸ்ரீ ஶாஸ்த்ரிகள் இவ்விதமே ப்ரஸ்தானத்ரயத்திற்கும் (உபநிஷத் பாஷ்யம், கீதாபாஷ்யம் உட்பட) மதத்ரத்ரயங்களையும் செய்வார்களேயானால், ஜிக்ஞாஸுகளுக்கு பெரிய உபகாரம் என்று எண்ணுகிறேன்; விரும்புகிறேன். வித்வான்கள் மாணவர்கள் யாவரும் இந்த நூலை உபயோகப்படுத்தி, இவரது பரிஶ்ரமத்தை ஸபலமாக்கவேண்டும் என்று தெரிவிக்கிறேன்.

வித்வான்களின் விதேயன்
மணித்ராவிட்

**Prof. K.E.Devanathan**
**Dear, Faculty of Darshanas**
**Member, Board of Management**
**Former Vice-Chancellor**
**S.V.Vedic University, Tirupati**
**RASHTRIYA SANSKRIT VIDYAPEETHA**
**(Deemed to be University)**



**(O) 0877-2287649 Extn: 240**
**(M) :8978398442**
**7989076807**
**Email : ked0410@gmail.com**

# அணிந்துரை

மஹாமஹோபாத்யாய ஶாஸ்த்ர ரத்னாகர ப்ரஹ்மஶ்ரீ R. கிருஷ்ணமூர்த்தி ஶாஸ்திரிகள் மதத்ரய பாஷ்யங்களை அனுஸரித்து ஸித்தாந்தத்ரயஸாரம் (सिद्धान्तत्रयसार) என்கிற ஶாரீரகமீமாம்ஸமதத்ரயஸார ஸங்க்ரஹ: (शारीरकमीमांसामतत्रयसारसंग्रह:) என்னும் நூலை ஆக்கியுள்ளார். பண்டித உலகில் ஶ்ரீ ஶாஸ்த்ரிகளை அறியாதவர் எவரும் இல்லை. ஶ்ரீ ஶாஸ்த்ரிகள், அத்வைத-விசிஷ்டாத்வைத-த்வைத மதங்களை மிகவும் சுலபமாக அறிய உதவும் இந்த நூலை உருவாக்கியது, வரும் தலைமுறைகளில் பேசப்படும். அடியேன் இந்த க்ரந்தத்தைப் படித்துப் பார்த்தேன். விசிஷ்டாத்வைதஸிந்தாந்தத்தின் ஶ்ரீபாஷ்யத்தை அனுஸரித்து ஸூத்ரார்த்தங்களையும், பூர்வபக்ஷ ஸித்தாந்தங்-களையும் விசேஷமாக படித்து மிகவும் ஆஶ்சர்யம் அடைந்தேன். இவ்வளவு சொல் சுருக்கிலும் அதிகரணஸாரத்தை விடாமல் எழுதுவது மிகவும் கடினம். மேலும் படிக்கும்போது வாசகர்களுக்கு தொய்வு ஏற்படாதபடி செய்வது ஶ்ரீ ஶாஸ்த்ரிகளுக்கு கைவந்த கலை. அவருடைய பேச்சுபோல் எழுத்து நடையும் தடங்கலின்றி ரஸிக்க வைக்கிறது.

அடியேன் விசிஷ்டாத்வைத வேதாந்த ஸித்தாந்தத்தை அனுஸரித்த பகுதியில் கண்ட, சில விஶேஷங்களை இங்கு பகிர்ந்து கொள்கிறேன்.

1. ஜிக்ஞாஸாதிகரணத்தில் ஸித்தாந்தத்தைக் கூறும் ஶ்ரீபாஷ்யம் சிறிது கடினமானது. अम्बतातमातुलादीन् என்று ஆரம்பிக்கும் வாக்கியத்திற்கு பொருள் கூறுவது கஷ்டமே. வியாக்யானங்கள், ப்ரகரணக்ரந்தங்கள் ஶ்ரமத்தை அதிகரிக்கும். ஶாஸ்த்ரிகள் ‘குழந்தைக்கு இது சந்திரன், இது மாடு போன்றதான வாக்கியங்களைக் கூறி’ என்னும் ஒரே வாக்கியத்தில் அந்த தீர்க்கமான பாஷ்ய வாக்கியத்தின் ஸாரத்தை கொண்டு வந்துள்ளார்.

2. ஆனந்தமயாதிகரணத்திலும் விஶிஷ்டாத்வைதஸித்தாந்தத்தை எழுதும்போது முக்கியமான விஷயத்தை மிகச்சிறிய சொற்றொடரை உபயோகித்துள்ளார். "துக்கமும் ஸ்வல்பம் உண்டு என்று ஸந்தேகம் ஏற்படாதபடி" என்னும் இடம் கவனிக்கத்தக்கது.

3. அந்தர்யாம்யதிகரணத்தில் द्रष्टृत्वं பூர்வபக்ஷத்திலும், ஸித்தாந்தத்திலும் வெவ்வேறு பொருட்களில் கூறப்பட்டுள்ளது. இது அதிகரணத்தில் முக்கியமான விஷயம். இதனை அழகாக விளக்கியுள்ளார். (करणायत्तज्ञानत्वं – द्रष्टृत्वं பூர்வ பக்ஷத்தில் रूपसाक्षात्कारवत्त्वं ஸித்தாந்தத்தில்).

4. தஹராதிகரணத்தில் "तस्मिन् यत् अन्तः तत् अन्वेष्टव्यं" என்னுமிடத்தில் तत् என்னும் சொல்லால் தஹராகாஶமும், அதன் குணங்களும் கொள்ளவேண்டும். "स च तच्च तत्" என்னும் விக்ரஹத்தை அழகாகக் காட்டியுள்ளார். சிறிய க்ரந்தத்தில் ஸித்தாந்தத்தின் ஸூக்ஷ்மமான விஷயங்களை விடாமல் கூறுவது விசேஷம்.

5. ஒரு அதிகரணத்தை பராமர்சித்து எழுதும்போது மற்ற ஸித்தாந்தங்களை அதிதேசம் செய்வது, (அதேபோல் எனக்கூறுவது) ப்ராக்ஞருக்கு அழகு. ஶாஸ்த்ரிகள் அத்வைதபாஷ்யத்தில் உள்ள வழியே விஶிஷ்டாத்வைத பாஷ்யத்தில் உள்ளது என ஆங்காங்கு குறிப்பிடுவதன் மூலம் படிப்பவருக்கு சுமையைக் குறைக்கிறார். ஒரு விஶேஷத்தையும் அறிவிக்கிறார். இதற்கு உதாரணமாக அபஶூத்ராதிகரணத்திலும், இரண்டாவது அத்தியாயத்திலுள்ள தர்க்கபாதத்தில் சில அதிகரணங்களிலும் வாக்யங்களைக் காணலாம். அவ்வாறு விஷயவாக்யங்கள் ஸமானமாக உள்ள இடங்களில் ''அதே வாக்யம்'' என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

6. உத்பத்யஸம்பவாதிகரணம் அழகாக விளக்கப்பட்டுள்ளது. இந்த அதிகரணத்தில் விஶிஷ்டாத்வைதிகள் ஸ்ரீபாஞ்சராத்ர ஆகமத்தை ப்ரமாணமாக ஸ்தாபிக்கின்றனர். அத்வைதிகள் உத்பத்திவிஷயத்தில் ஶ்ருதிவிருத்தமான ப்ரக்ரியை இந்த ஆகமத்தில் உள்ளபடியால் இது தத்வவிஷயத்தில் அப்ரமாணம் என்று கூறுகின்றனர். ஆயினும் "पञ्चकालप्रक्रिया" அபிகமனம் முதலியவை ஶாங்கர பாஷ்யத்தில் உதாஹரிக்கப்பட்டது. ஸ்ரீபாஷ்யத்தில் இல்லை. இது ஶாங்கர பாஷ்யத்தில் விசேஷம். இந்த அதிகரணத்தை ஶாஸ்திரிகள் சுருக்கமாக தேவையான அம்சங்களை விடாமல் எழுதியுள்ளார்.

7. संज्ञामूर्तिक्लृप्ति - அதிகரணத்திலும் ஒரு விஶேஷம். பரமாத்மாவே கர்த்தா, அவனே ஜீவவிஶிஷ்டனாகக் காரணம் என்பது விஶிஷ்டாத்வைத ஸித்தாந்தம். அதனை அழகாகத் தமிழ்ப்படுத்தியுள்ளார் என்பது கவனிக்கத்தக்கது.

8. अन्याधिष्ठिताधिकरण-த்தில் சில செயல்கள் பாபம் அல்ல என்னும் விஷயத்தை மிக அழகாக விவரித்துள்ளார். அந்தச்செயல் தவறாகத் தோன்றினாலும் கெடுதல் பயப்பதல்ல என்பதுதான் அத்வைதிகளின் ஸித்தாந்தம். அந்தச்செயல் தவறே அல்ல என்பது விசிஷ்டாத்வைதிகளின் ஸித்தாந்தம்.

9. இவ்வாறே सन्ध्याधिकरण-த்தில் ஸ்வப்ன பதார்த்தங்களின் கர்த்தா ஈஶ்வரனே என்பதை விளக்கும்போது स हि कर्ता என்னும் ஶ்ருதிக்கு ப்ரஸித்தமான ஸர்வஶக்தனான பகவான்தான் பொருள் என்று முக்யமான விஷயத்தை குறிப்பிட்டுள்ளார்.

10. लिङ्गभूयस्त्वाधिकरण-த்தில் விபக்தி பேதங்களை சரிசெய்யும் விதத்தை சுருக்கமாக எழுதியுள்ளதும் வித்வான்களால் நோக்கத்-தக்கது.

இவ்வாறாக பல விசேஷங்களைக் கொண்ட இந்த "ஸித்தாந்த த்ரயஸாரம்" என்னும் க்ரந்தம் மிகவும் சிரமப்பட்டு ஆக்கப்பட்டுள்ளது. மூன்று மதங்களில் க்ரந்தங்களைப்படித்து தாத்பர்யத்தை அறிந்த பின்பே ஸரஸமாக எழுதமுடியும். அடியேன் எழுத வேண்டுமெனில் மிகவும் சிரமத்தை அடைவேன். ஶாஸ்த்ரிகள் கடந்த சில மாதங்களாக (நான்கு மாதங்களாக) இந்த க்ரந்தத்தை பரிஶ்ரமப்பட்டு ஆக்கியுள்ளார். இது மிகவும் பெருமைக்குரியது.

அடியேன் விஶிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தைச் சேர்ந்தவன். எனவே விஶிஷ்டாத்வைத வேதாந்தக்கருத்துக்களில் அடியேன் அனுபவித்ததை எழுதியுள்ளேன். இது கபிஸ்தலம் தேஶிகாசார்ய ஸ்வாமியின் அதிகரண ரத்னமாலா என்னும் க்ரந்தத்தை அனுஸரித்து எழுதப்பட்டது. அந்த ஸ்வாமி சுமார் 150 வருடங்களுக்கு முன் திருப்பதியில் தேவஸ்தான கலாசாலையில் ப்ரதான அத்யாபகராக இருந்து பல வித்யார்த்திகளுக்கு போதனம் செய்தவர். அவர் வ்யாஸஸித்தாந்தமார்த்தாண்டம், மதத்ரயஸாரம் முதலான க்ரந்தங்களை எழுதியவர். கௌசிக குலத்தைச் சேர்ந்த அவர் காசி முதலான க்ஷேத்ரங்களில் வாக்யார்த்தம் செய்து பெருமை பெற்றவர்.

ஸ்ரீ ஶாஸ்த்ரிகள் அந்தந்த ஸம்பிரதாயப்படி ஸூத்ர விபாகம் செய்து, அதிகரண விபாகங்களை அவதானத்துடன் பார்த்து எழுதியுள்ளார் என்பது விஶேஷம். ஸித்தாந்த பேதங்கள் தவிர்க்கமுடியாதவை. எனினும் ஆசார்யர்களின் க்ரந்தத்தை அநுவாதம் செய்யும்போது தன்னுடைய அபிப்ராயத்தை சேர்க்காமல் அந்தந்த ஸித்தாந்தத்திற்கு அனுகுணமாக அந்தந்த கருத்துக்களை ஸ்ரீ ஶாஸ்த்ரிகள் விவரித்துள்ளார் என்பது அவருடைய உயர்ந்த குணத்திற்கு எடுத்துக்காட்டு.

பல ஶாஸ்த்ரங்களையும், வேத-வேதாந்தங்களையும் நன்றாக அறிந்து, பலருக்கு அத்யாபித்து மிக்க புகழ் பெற்று अधीतम् अध्यापितम् आर्जितं च यश: என்றபடி விளங்கிவரும் பிரஹ்மஶ்ரீ முல்லைவாசல் கிருஷ்ணமூர்த்தி ஶாஸ்த்ரிகளின் பேரன்பிற்கு பாத்ரமானவன் என்பதால் அவருடைய நியமனத்தை ஏற்று அவருடைய இந்த சிறந்த க்ரந்தத்தைப் பற்றி சிறிது எழுதினேன்; தவறுகளை வித்வான்கள் க்ஷமிக்கவேண்டும்.

विनीत:
मा·ई·देवनाथ:
09/04/19

श्रीः

अ हरिदास भट्टः
निवृत्त प्राचार्य – पू.प्र.विध्यापीठम्
बेङ्गलूरु 14-04-2019

## पूर्ववक्तव्यम्

वेदार्थनिर्णायक-न्यायग्रथनात्मकानि ब्रह्मसूत्राणि साक्षाद्भगवदवतारभूतेन भगवता व्यासेन विरचितानि | तत्त्वनिर्णय एषां सूत्राणामद्वितीयं स्थानम् | "तस्मात् सूत्रार्थमागृह्य कर्तव्यः सर्वनिर्णयः" - इति च श्रीमध्वाचार्याणामादेशः |

ब्रह्मसूत्रेषु केवलपूर्वपक्षसूत्रम् किमपि नास्ति | सर्वाणि सिद्धान्तसूत्राणीति मन्यते आचार्यमध्वः | भगवता आचार्येण संक्षेप विस्तराभ्यामेषां सूत्राणां निर्णयार्थं चत्वारः ग्रन्थाः उपनिबद्धाः | तेषु अनुव्याख्यानं मूर्धन्यस्थानमलङ्करोति | स्वशिष्येण त्रिविक्रमपण्डिताचार्येण "व्यक्ततर्कततिं कुरु" इत्यभ्यर्थितः आचार्यः पद्यात्मकमिमं ग्रन्थं चतुरश्चतुरश्शिष्यान् युगपत् लीलयाऽलेखयदिति च इतिहासः | 'कुरु सूत्रभाष्यमविलंबितं व्रजेः' इति प्रभुणा व्यासेनादिष्टः श्रीमध्वः प्रथमं भाष्यं रचयामास |

टिप्पण्याचार्यचक्रवर्तीति विख्यातः श्रीराघवेन्द्रतीर्थोऽपि संक्षिप्तं ग्रन्थत्रयं सूत्रार्थविवरणपरं निर्ममे | तेषु त्रिषु **'तत्त्वमञ्जरी'** आचार्याणां सूत्रार्थसंग्राहकस्य पद्यात्मकस्य अणुभाष्यस्य विवरणरूपा | **"न्यायमुक्तावली"** ब्रह्मसूत्राधिकरणार्थ-संग्राहिका | "तन्त्रदीपिका" प्रतिसूत्रार्थप्रकाशिनी |

श्रीराघवेन्द्रयतिना प्रस्थानत्रयस्यापि प्रतिपदमर्थख्यापनाय संग्रहात्मकाः ग्रन्थाः विरचिताः | उपनिषदां प्रतिमन्त्रं अर्थः संग्रहीतः 'उपनिषत्खण्डार्थे' | भगवद्गीतायाः अर्थनिरूपणपरा कृतिः "गीताविवृतिः"| सूत्रप्रस्थानस्य प्रतिसूत्रं अर्थः निरूपितः

"तन्त्रदीपिकायाम्" | **"न्यायमुक्तावल्यां"** पुनः अधिकरणार्थः पिण्डीकृत्योदितः | प्रत्यधिकरणं पूर्वाधिकरणसङ्गतिं प्रदर्श्य पूर्वपक्षसिद्धान्तौ निरूपितौ | प्रत्येकं सूत्रार्थकथने नात्र तात्पर्यम् | यत्र श्रीमद्व्यासतीर्थप्रणीतचन्द्रिकाव्याख्यानं नास्ति, तत्र तृतीयाध्यायमारभ्य अधिकरणेषु चिन्तापरम्परापि स्वयं निरूपिता | सक्षेपेण अधिकरणार्थपरिज्ञाने नेमं विना अन्यः पन्थाः | "अपि मन्दकृते सर्वविषया च कृतिर्मम"- इत्येवं श्रीराघवेन्द्रयतेः प्रतिज्ञा |

तस्यैतस्य ग्रन्थकारस्य न्याय-व्याकरण- मीमांसा शास्त्रेषु चतुरस्य चतुर्ष्वपि वेदान्तेषु अनितरसाधारणी गतिः | सा च सुष्ठु परिज्ञायते तर्कताण्डव-चन्द्रिका-न्यायसुधाव्याख्यानेषु | अथापि ईदृशातिसरलग्रन्थप्रणयनेन मन्दा अपि अनुकम्पिताः इत्यहो भाग्यम् !

डा. कृष्णमूर्तिसास्त्रिणः वेद-वेदान्तेषु निष्णाताः विद्वांसः | "विद्या ददाति विनयं" इत्यार्योक्ति एषु नूनं सार्थक्यं भजते | त्रिमतस्थाचार्याणामपि आदरणीया एते भारतीयवैदिकदर्शनापरम्परायाः मण्डनायिताः सांप्रदायिकाध्ययनसंपन्नाः विपश्चितः | एते मतत्रयानुसारेण ब्रह्मसूत्राणां, प्रादेशिकभाषया अर्थविवरणं अकुर्वन् | माध्वभाष्यानुसारेण सूत्रार्थविवरणार्थं श्रीराघवेन्द्रतीर्थानां न्यायमुक्तावली अनुसृता | ग्रन्थेनानेन मतत्रयजिज्ञासवः, विमर्शकाश्चात्यन्त-मुपकृताः | शास्त्रिणामयं यत्नः अत्यन्तं श्लाघ्यः आवश्यकश्च |

अ. हरिदास भट्टः

# (ஸ்ரீ ஹரிதாஸ் பட் அவர்கள் கொடுத்த ஆமுகத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு)

அ.ஹரிதாஸ பட்டர்.
முன்னால் முதல்வர்

பூர்ணப்ரக்ஞ வித்யாபீடம்
கத்ரிகுப்ப மெயின் ரோடு,
பெங்களூர் - 28.

## முன்னுரை

வேதாந்தத்தை நிர்ணயம் பண்ணுவதற்காக, நியாயங்களைத் தொகுத்து கூறும் "ப்ரஹ்மஸூத்ரங்கள்" பகவானின் ஸாக்ஷாத் அவதாரமான ஸ்ரீ வேதவ்யாஸரால் இயற்றப்பெற்றன. தத்துவத்தைத் தீர்மானிப்பதற்கு இந்த ஸூத்ரங்களுக்கு நிகரற்ற ஸ்தானம். "தஸ்மாத் ஸூத்ராத்தமாக்ருஹ்ய கர்த்தவ்ய: ஸர்வநிர்ணய:" என்பது ஸ்ரீமத்வாசார்யரின் கட்டளை.

ப்ரஹ்மஸூத்ரங்களில் பூர்பக்ஷம் மட்டும் கூறும் ஸூத்ரம் ஒன்றுகூட இல்லை, எல்லாம் ஸித்தாந்தஸூத்ரங்கள்தான் என்று ஆசார்ய மத்வரின் அபிப்பிராயம். இவரால் ப்ரஹ்மஸூத்ரங்களுக்கு ஸங்க்ஷேபவிஸ்தாரமாகப் பொருள் உரைப்பதற்காக நான்கு நூல்கள் இயற்றப்பட்டன. இவைகளில் "அனு-வ்யாக்யானம்" தலை சிறந்தது. இவரது சிஷ்யரான த்ரிவிக்ரம - பண்டிதாசார்யரால் "வ்யக்த தர்க்க ததிம்குரு" = வ்யக்தமாக தர்க்கவிஸ்தரம் செய்யுங்கள் என்பதாக பிரார்த்தனை செய்யப்பட்ட, ஸமர்த்தரான ஸ்ரீ மத்வாசார்யர் செய்யுள் வடிவமான இந்த (அனுவ்யாக்யானம்) நூலை ஒரே நேரத்தில் நான்கு சிஷ்யர்களுக்குக் கூறி எழுதும்படி செய்தார் என்று இதிஹாஸம்.

டிப்பண்யாசார்ய சக்கரவர்த்தி - என்று பிரஸித்தமான ஸ்ரீ ராகவேந்த்ரதீர்த்தர் ப்ரம்ஹஸூத்ரார்த்த விவரணரூபமாக மூன்று நூல்கள் செய்தார். இவைகளில் (1) "தத்வமஞ்ஜரி" என்ற நூல் மத்வாசார்யரின் செய்யுள் வடிவமான அனுபாஷ்யத்தின் விளக்கமாக உள்ளது. (2) "ந்யாயமுக்தாவளி" என்ற நூல் ப்ரம்ஹஸூத்ராதிகரணார்த்த ஸங்க்ரஹ ரூமானது. (3) "தந்த்ரதீபிகா" என்பது பிரதிஸூத்ரார்த்த வடிவமாக அமைந்தது. மேலும் இவரால் ப்ரஸ்தான த்ரயத்திற்கும் பிரதிபதம் பொருள் கூறுவதற்காகச் சுருக்கமான நூல்கள் இயற்றப்பட்டுள்ளன. "உபநிஷத்கண்டார்த்தம்" என்பதில் உபநிஷத்துக்களின்

பிரதிமந்திரப்பொருள் சுருக்கமாகக்கூறப்பட்டுள்ளது. "கீதாவிவ்ருதி" என்ற நூலில் பகவத்கீதையின் பொருள் விளக்கப்பட்டுள்ளது..

"ந்யாயமுக்தாவளி" என்ற இந்த மொழிபெயர்க்கப்படும் நூலில் ப்ரஹ்மஸூத்ராதிகரணங்களின் பொருள் ரத்னச்சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

பிரதி அதிகரணத்திலும் பூர்வாதிகரணத்தின் தொடர்பைக்கூறி பூர்வபக்ஷ-ஸித்தாந்தங்கள் நிரூபிக்கப்பட்டுள்ளன, ஒவ்வொரு ஸூத்ரார்த்தங்கள் சொல்லப்படவில்லை, ஆனால் ஸ்ரீமத்வாசார்யரால் இயற்றப்பட்ட "சந்திரிகா" என்ற வ்யாக்யானம் இல்லாததான மூன்றாம் அத்யாயம் தொடங்கி, எல்லா அதிகரணங்களிலும் சிந்தாபரம்பரை (விசார வரிசை) நிரூபிக்கப்பட்டுள்ளது. சுருக்கமாக அதிகரணப்பொருள் அறிய இந்த நூலை விட்டால் வேறு வழியில்லை. நூலாசிரியரான ஸ்ரீ ராகவேந்த்ரர் "அபி மந்தக்ருதே ஸர்வ விஷயா ச க்ருதிர் மம" "மந்தர்களுக்கும் எல்லா விஷயங்களும் புரிய இந்த எனது நூல்" என்று கூறுகிறார். ந்யாய - வ்யாகரண - மீமாம்ஸா சாஸ்த்ரங்களில் சதுரரான (ஸமர்த்தரான) இவருக்கு நான்கு வேதாந்தங்களிலும் நிகரற்ற அறிவு. இந்த விஷயமானது தர்க்கதாண்டவம், சந்திரிகா-ந்யாஸுதாக்களின் வ்யாக்யானங்-களில் உணரப்படுகிறது. இவ்வாறு இருந்தும் இத்தனை அதிஸரள க்ரந்தத்தை இயற்றியதால் மந்தர்களும் க்ருதார்த்தரானார்கள். (தயையினால் அனுக்ரஹிக்கப் பட்டார்கள் என்பது என்ன பாக்கியம்)!!

ப்ரஹ்மஸ்ரீ ஆர்.கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் வேதவேதாந்தங்களில் கரை கண்ட வித்வான். “வித்யை வினயத்தைத்தரும்” என்ற பெரியோர்களின் வாக்கானது இவரிடம் முழுமையாக பலித்துள்ளது (= பொருள் பொருந்தியதாக இருக்கிறது)

மூன்று மதங்களின் ஆச்சார்யர்களாலும் ஆதரிக்கப்பட்ட இவர் பாரதீய வைதிக தர்சன பரம்பரைக்கு ஒரு அணியாக உள்ளார். ஸம்ப்ரதாயக்ரமத்தில் அத்யயனம் பண்ணிய சிறந்த பண்டிதர் இவர். மதத்ரயானுஸாரமாக இந்த நூலை ப்ரதேச மொழியில் (தமிழில்) இயற்றியுள்ளார். இதில் மூன்று மதங்களைத் தழுவி எழுதுகையில் ஸ்ரீ ராகவேந்திராசார்யரின் “ந்யாயமுக்தாவளி” நூலைப்பின்பற்றி மாத்வபாஷ்யம் கூறப்பட்டுள்ளது. இந்த நூலினால் மதத்ரயத்தை அறிய விரும்புபவர்களும் ஆராய்ச்சி செய்பவர்களும் மிகவும் பயன் அடைவார்கள். எனவே ஸ்ரீ சாஸ்திரிகளின் இம்முயற்சி மிகவும் தேவையானது, பாராட்டுதலுக்கு உரியது.

ஹரிதாஸ் பட்டர்

# இந்நூலின் ஆதாரமும் நடையும்

## 1. நடை

1. இந்த நூலின் நடையானது சில இடங்களில் பேசும் பாணியில் அமைக்கப்பட்டுள்ளது.
2. சுலபமாகப் புரிவதற்காக சிற்சில இடங்களில் ஆங்கில வார்த்தைகள் கூறப்பட்டுள்ளன.

## 2. ஆதாரம்

1. அத்வைதக்கருத்துக்கள் யாவும் ஶ்ரீ சங்கர பாஷ்ய ஸாரமான 'வையாஸிக ந்யாய மாலை' என்ற ஶ்ரீ வித்யாரண்யருடைய நூலின் மொழிபெயர்ப்பாக அமைந்துள்ளன.

2. விசிஷ்டாத்வைதக் கருத்துக்கள் ப்ரஹ்மஶ்ரீ உ.வே. கபிஸ்தலம் தேசிகாசார் ஸ்வாமி அவர்களின் 'ஶாரீரக அதிகரணரத்னாவளி' எனும் நூலின் சுருக்கமான மொழிபெயர்ப்பு.

3. த்வைதக் கருத்துக்கள் யாவும் மந்திராலயத்தின் ஸ்வாமிகளான ஶ்ரீராகவேந்தரஸ்வாமிகளுடைய "ந்யாய முக்தாவளி" என்ற க்ரந்தத்தின் சுருக்கமான மொழிபெயர்ப்புதான். நூலாசிரியரின் சொந்தக் கருத்துக்கள் சிறிதும் இடம்பெறவில்லை.

## ग्रन्थनिदानम्

## நூலின் தோற்றம்

"நடமாடும் தெய்வம்" என்பதாக எல்லா மக்களாலும் அன்றும் இன்றும் என்றும் போற்றப்படும் நமது "மஹா ஸ்வாமிகள்" காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளின் "ஆக்ஞை" (वाञ्छा = நல்லாசை) தான் ஸித்தாந்தத்ரய-ஸாரம் (ப்ரஹ்மஸூத்ரபாஷ்யத்ரயஸாரம்) என்ற இந்த நூலின் தோற்றத்திற்குக் காரணம். ஸ்ரீ பெரியவாள் அவர்கள் சுமார் 35 ஆண்டுகளுக்கு முன்பு என்னிடம் பேசிக்கொண்டு வரும் ஒரு ஸந்தர்பத்தில் "நீ ப்ரஹ்ம ஸூத்ரங்களுக்கு மூன்று ஆசார்யர்கள்-ஸ்ரீஸங்கரர், ஸ்ரீ ராமானுஜர், ஸ்ரீ மத்வர் இயற்றிய பாஷ்யங்களின் ஸாரத்தை சுருக்கமாக ஒரே நூலில் எழுத வேண்டும்; அதைப் படிப்பவர்களுக்கு அந்தந்த ஆச்சார்யர்களின் பாஷ்யத்தினுடைய மையக்கருத்து விளங்க வேண்டும்" என்று கட்டளை /அனுக்ரஹம் செய்தார்கள்.

ஆனால் இந்தக் கார்யம் கடினமானதால் உடனடியாக என்னால் நிறைவு செய்ய முடியாமலே இத்தனை வருடங்கள் ஓடிவிட்டன. அவ்வப்போது நினவு மட்டும் தோன்றும்; மறையும். என் மனைவியும் நடுநடுவே என்னை ஞாபகப்படுத்துவாள். "ஏன் நீ என்னுடைய கட்டளையைச் செய்யவில்லை" என்று ஒரு முறைகூட ஸ்ரீ பெரியவர்கள் கேட்கவே இல்லை" என்பது அவர்களது ஜீவன்முக்த லக்ஷணம்.

எல்லாச் செயல்களுக்கும் காலம் வரவேண்டும் என்ற உண்மை இந்த விஷயத்தில் பொருந்தியது. கார்யம் நிறைவேறும் காலம் தற்செயலாக ஸ்ரீ ஸ்ரீ முரளீதர குருஜீ அவர்களின் தூண்டுதலால் சுமார் ஆறுமாதம் முன்பு ஏற்பட்டதே ஒரு ஆச்சர்யம்! ஒரு விவாஹ மண்டபத்தில் நானும் குருஜியும் ஸந்தித்துப் பேசும் போக்கில் திடீரென குருஜி என்னிடம் "ஸ்ரீ பெரியவர்கள் கட்டளையாக இட்டதான" பாஷ்யத்ரய ஸாரம் வேலையைப்பற்றி

என்னிடம் சொன்னீர்களே, (ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில்) அதை நிறைவேற்றி விடலாமே'' என்று கூறி, "அதற்கான உதவி, எழுதுவதற்கு சிஷ்யர்கள், அச்சடிப்பது, வெளியிடுவது யாவற்றையும் நான் பார்த்துக்கொள்கிறேன். நீங்கள் உடனடியாக இந்த பெரிய நற்பணியைச் செய்யுங்கள்'' என்பதாக அன்புக் கட்டளை இட்டார். என் மனதில் உடனடியாக ஒரு உத்ஸாஹம் தோன்றி, மறுநாளே தொடங்கி இந்த நற்பணியைச் செய்ய ஆரம்பித்தேன்! குருக்ருபையால் ஐந்து மாதங்களில் எழுதும் வேலை பூர்த்தியாகி, இவ்வருடம் (விகாரி) ஸ்ரீ ஶங்கர ஜயந்தி உத்ஸவ காலத்தில் இந்த நூல் வெளிவருகிறது. ஈசனின் திருவிளையாட்டை உணர்ந்து என் மனம் நெகிழ்கின்றது!!

இந்த நற்பணியில் என்னை மிகவும் ப்ரோத்ஸாஹனம் செய்து ஸகலவிதமான வஸதிகளையும் அளித்து, இப்புத்தககங்கை பெருகுவதற்குக் காரணமாயும், மஹாபெரியவா அவர்களின் ஆக்ஞையை நிறைவேற்றுவதான இந்த திருப்பணியில் நான் வெற்றி பெறும் மஹா பாக்யத்தைத் தந்த மஹானுமான மஹாரண்யம் ஸ்ரீ ஸ்ரீ முரளீதர ஸ்வாமிஜி அவர்களுக்கு, நான் என்ன கைமாறு செய்வது என்று புரியாமல் என் மனதையே அர்ப்பணிக்கிறேன்.

இந்தப் பெரிய நற்பணியில் உதவி புரிந்த, என் கையெழுத்தை அச்சாக்கிய பணியில் சீரிய முறையில் டைப் பண்ணிய குமாரி. பூர்ணிமா அவர்களுக்கு என் மனமார்ந்த ஆசீர்வாதங்களை தெரிவிக்கிறேன்.

மேலும் இந்த நற்பணியை முழுமையாகப் பிழைகள் பார்த்து, அதை உடனுக்குடன் சரிசெய்யும் கடின வேலையில் உதவிபுரிந்த 1. ஸ்ரீ ராஜகோபால், 2. ப்ரஹ்மஸ்ரீ பாலாஜி, 3. ஸ்ரீ ராமானுஜம், 4. ஸ்ரீ ஜானகிராமன், 5. சௌ. பிரேமா இவர்களுக்கும் பகுதியாக சகாயம் செய்த ஸ்ரீமதி அருணா சங்கர், ஸ்ரீ ராமகிருஷ்ணன், போன்றவர்களுக்கும் ஸர்வாபீஷ்டமும் உண்டாக என் ஆசிகள்.

இதற்குத் தேவையான த்வைத விசிஷ்டாத்வைத புத்தகங்களைக் கொடுத்து உதவிய குப்புஸ்வாமி சாஸ்த்ரி ரிசர்ச் இன்ஸ்டிடிட்யூட், டைரக்டர் முதலியவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றிகள்.

Chennai – 4
27.4.2019

R. கிருஷ்ணமூர்த்தி சாஸ்த்ரி

# விசேஷமான நன்றி உரை

இந்த "ஸித்தாந்தத்ரயஸாரம்" நூலைப் படித்து அனுக்ரஹ-ரூபமாக ஸ்ரீமுகம் அளித்துள்ள ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதியான ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ சங்கர விஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் அவர்களுக்கும், அவர்களின் குருவான ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமி-களுக்கும், இவர்களின் குருவான ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ நடமாடும் தெய்வம் - நூலின் மூலகாரணமான ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளுக்கும் எனது அனந்தகோடி பிரணாமங்களைக் கூறி என்றும் க்ருதக்ஞதையைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மத வேறுபாடு இருப்பினும் ஒரே பெரிய பரந்தநோக்குடன் அடியேனிடம் அதீதமான அருள், அன்பு கொண்டு ஆசியுரை அருளிய அஹோபிலமடம் ஸ்ரீ அழகிய சிங்கர் அவர்களுக்கும், ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஆஸ்ரமத்தின் ப்ரக்ருத பீடாதிபதியான ஸ்ரீவராஹயதி ஸ்வாமிகள் அவர்களுக்கும் அடியேனுடைய அனந்தகோடி தண்டங்களை ஸமர்ப்பிக்கிறேன்.

உடுப்பி பர்யாய மடங்களில் மூத்த, பல பர்யாயங்களில் தலைவரான, நிஷ்பக்ஷபாதமாக த்வைதாத்வைத சர்ச்சைகளை அவ்வப்போது நடத்தி, சாஸ்த்ரவாதங்களை நன்கு பரிசீலிப்பதற்காக பற்பல ஸபைகளை நடத்திவருகின்ற, ஸ்ரீ ஸ்ரீ பெஜாவர் மடாதிபதி-களாகிய ஸ்ரீ விஶ்வேஶ்வரதீர்த்த ஸ்வாமிகளுக்கு நன்றிகூற வார்த்தைகள் இல்லாததால் "यतो वाचो निवर्तन्ते" என்ற வாக்யத்தின் பொருளைக் கூறி பலகோடி வந்தனங்களை ஸமர்ப்பிக்கிறேன். மேலும் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ சிருங்கேரி மஹா ஸந்நிதானம் ஸ்ரீ பாரதீதீர்த்த ஸ்வாமிகளும், ஸந்நிதானம் ஸ்ரீ விதுசேகரபாரதீஸ்வாமிகளும் மிகுந்த க்ருபைகொண்டு இந்நூலுக்கு ஸ்ரீமுகம் கொடுத்து அருளியதற்கு எனது அனந்தகோடி வந்தனங்களைக் கூறுகிறேன்.

இதேபோல் என்னிடம் பரம கருணை உடைய பதரீ சங்கராசார்ய சகடபுர பீடாதிபதிகளான ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ கிருஷ்ணானந்த யதீந்த்ரர்

அவர்கள் இந்தப் புத்தகத்திற்கு ஸ்ரீமுகம் அருளியுள்ளதற்கு எனது பலகோடி ப்ரணாமங்களைக் ஸமர்ப்பிக்கிறேன்.

புதுக்கோட்டை ஸ்ரீ புவனேஸ்வரி பீடாதிபதியாகவும், தேனீ வேதபுரி ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஆலய நிர்மாதாவாகவும் விளங்கும் ஸ்ரீ ஓங்காரானந்தா அவர்கள் தயைகூர்ந்து அருளாசி வழங்கியுள்ளதற்கு எனது பற்பல மனமார்ந்த ப்ரணாமங்கள்.

ஸ்ரீசக்ரமஹாமேருபீடாதிபதி ஸ்ரீ ஸ்ரீ சச்சிதானந்ததீர்த்த ஸ்வாமிகளுக்கும் (பிலாஸ்பூர்) ஸ்ரீமுகம் தந்து அருளியதற்கு எனது மனமார்ந்த வந்தனங்கள்.

Chennai – 4 R. கிருஷ்ணமூர்த்தி சாஸ்த்ரி
27.4.2019

# விஷய ஸூசிகை

முதல் அத்யாயம் .......... 1
முதல் பாதம் .......... 1
இரண்டாம் பாதம் .......... 47
மூன்றாம் பாதம் .......... 69
நான்காம் பாதம் .......... 108
இரண்டாம் அத்யாயம் .......... 133
முதல் பாதம் .......... 133
இரண்டாம் பாதம் .......... 164
மூன்றாம் பாதம் .......... 184
நான்காம் பாதம் .......... 225
மூன்றாம் அத்யாயம் .......... 249
முதல் பாதம் .......... 249
இரண்டாம் பாதம் .......... 275
மூன்றாம் பாதம் .......... 309
நான்காம் பாதம் .......... 395
நான்காவது அத்யாயம் .......... 427
முதல் பாதம் .......... 427
இரண்டாம் பாதம் .......... 449
மூன்றாம் பாதம் .......... 472
நான்காம் பாதம் .......... 487
मतत्रयरीत्या अधिकरणसूत्र सङ्ख्या सूचिका .......... 507
ब्रह्मसूत्र - सूत्राणि .......... 508

(குறிப்பு -

A அத்வைதம்

V விசிஷ்டாத்வைதம்

D - த்வைதம் என்று கொள்க.)

ஸ்ரீஹரி:

# शारीरक मीमांसामतत्रयसारसंग्रहः

## முதல் அத்யாயம்

### முதல் பாதம்

## 1.1.1 A अथातो ब्रह्मजिज्ञासा (1 सूत्रम्)

"ப்ரஹ்மத்தை உணர விரும்பு (தத்விஜிக்ஞாஸஸ்வ) என்ற விதி வாக்யத்தின் மூலம் (तद्विजिज्ञासस्व, तद्ब्रह्मेति) உபநிஷத்துக்-களாகிற வேதங்களில் போதிக்கப்படும் ப்ரஹ்மத்தை பற்றி நன்கு உணர வேதாந்த வாக்கியங்களை விசாரிக்க வேண்டுமா? வேண்டாமா?" என்பது ஸந்தேஹம். ஸந்தேஹம் இருப்பின் விசாரிக்க வேண்டும். அத்வைத ஸித்தாந்தத்தின்படி, ஆத்மாவே ப்ரஹ்மமாதலால், எல்லோருக்கும், "நான், நான்" என்று ஆத்மா நன்கு தெளிவாக தெரிந்துள்ளதால் விசாரம் தேவையில்லை. மேலும் இந்த ஆத்மஞானத்தினால் ஸம்ஸார துக்க நிவ்ருத்தி ஏற்பட்டு பூர்ணானந்த நிலை என்ற பயனும் (ப்ரயோஜனம்) ஏற்படாததால், பொருளும் பயனும் இல்லாத இந்த ப்ரஹ்ம விசார நூல் (ஶாஸ்த்ரம்) ஆரம்பிக்கப்பட வேண்டாம்," என்று பூர்வபக்ஷம் கிளம்புகிறது.

ஸித்தாந்தம் கூறப்படுகிறது: இந்த ஸூத்ரத்தில். - अथ = 1) நித்யாநித்ய விவேகம்; 2) இம்மை-மறுமையில் வரும் இன்பானுபவங்களில் ஆசையின்மை; 3) மன அடக்கம், புலனடக்கம்; வெளிநுகர்வுகளிலிருந்து விலகுவது, சகிப்புத்-தன்மை, ஶ்ரத்தை, மன ஒருமைப்பாடு- என்கிற ஆறு குண பூர்த்தி; 4) 'மோக்ஷமே வேண்டும்", என்ற தீவிர ஆவல், -

என்பதான ஸாதன சதுஷ்டயம் பெற்றபின், अतः = வினைகளினால் உண்டாக்கப்படும் எந்த இன்பமும் தாரதம்ய தன்மையையும், அழிவையும் கொண்டுள்ளதை ஆராய்ந்து வைராக்கியம் நிலைப்பது திண்ணமாதலால், ब्रह्मजिज्ञासा = ஶாஶ்வதமான மோக்ஷத்தின் வெளிப்பாட்டிற்கு காரணமான ஜீவ-ப்ரஹ்ம ஐக்ய ஞானத்தைப் பெறுவதற்கு அதை உணர்த்தும் வேதாந்த வாக்கியங்களின் விசாரமானது மிகவும் தேவை. எனவே இந்த ஶாஸ்த்ரம் ஆரம்பிக்கப்பட வேண்டும். நாம் அனைவரும் தெரிந்து கொண்டுள்ள, "நான்" என்ற ஆத்மஞானம், "ஆகாயம் நீலமானது" என்பது போல், தவறான ப்ரமையாகும். இதைப் போக்கி வேதாந்தங்கள் கூறுவதுபோல் பூர்ணானந்த வடிவமான ஆத்மஞானம் பெறுவதற்கு, மோக்ஷம் அடைய நாம் விசாரிப்போம்.

## 1.1.1 V अथातो ब्रह्मजिज्ञासा (1 सूत्रम्)

"ப்ரஹ்மத்தை அறிய விரும்பு" என்ற வாக்யத்தினால் ப்ரஹ்ம விசாரம் வேண்டுமா? வேண்டாமா?" என்ற ஸந்தேஹம் ஏற்படுகிறது. ப்ரஹ்மம் என்பது எப்போதும் உள்ளதான ஸித்த பொருளாக இருப்பதால், அதைமட்டும் போதனை செய்யும் வேதாந்த வாக்கியங்களுக்கு ப்ராமாண்யம் (validity) கிடையாது. ஏனெனில் பூர்வ மீமாம்ஸையில் "செய்", "செய்யாதே" என்பது போன்ற விதிவாக்கியங்களுக்கு மட்டுமே ப்ராமாண்யம், மற்ற சாதாரண செய்தியை கூறும் வாக்கியங்களுக்கு தனியாக ப்ராமாண்யம் கிடையாது என்பதான தீர்மானம் கூறப்பட்டுள்ளது. எனவே, வேதாந்த வாக்யங்களுக்கு ப்ராமாண்யம் ப்ரஹ்மத்தில் கிடையாது என்பதால், அந்த ப்ரஹ்ம விசாரத்தை கூறும் இந்த ஶாரீரக மீமாம்ஸா ஶாஸ்த்ரம் ஆரம்பிக்க வேண்டாம்", என்பது பூர்வபக்ஷம்.

ஸித்தாந்தம் :- இந்த பூர்வபக்ஷத்திற்கு பதில் கூறப்படுகிறது. "अथ" = பூர்வமீமாம்ஸை என்ற கர்ம விசாரம் செய்த பிறகு अतः= கர்மாக்களை விசாரித்து முடித்தபடியால், ब्रह्मजिज्ञासा = ப்ரஹ்மத்தை உணருவதற்கான வேதாந்த விசாரம் செய்யப்படவேண்டும். இதன் கருத்தாவது - ஒரு வாக்யமானது ஒரு வேலையை சொல்லாவிட்டால், பதங்களின் பொருள் புரியாது என்ற ப்ராபாகரரின் கொள்கை ஸரியல்ல. குழந்தைகளுக்கு "இது சந்திரன்", "இது பசுமாடு" போன்றதான வாக்யங்களைக் கூறி, கையினால் அப்பொருளைக் காட்டினால், வார்த்தைகளின் பொருள் நன்கு புரிவதைக் காண்கிறோம். பூர்வ மீமாம்ஸையில் கூறிய ஸித்தாந்தம் கர்ம காண்டத்திற்கு மட்டுமே பொருந்தும்; ஞான காண்டத்திற்கு பொருந்தாது. மேலும் கர்மாக்களின் பயன்களான ஸ்வர்க்கம் போன்றதான இன்பங்கள் அழியக்கூடியவை என்று தெரிந்ததால், "ஶாஶ்வதமான பேரின்பம் வேண்டும்"- என்ற எண்ணம் (ஆசை) ஏற்படும் பொழுது, ப்ரஹ்ம ஞானத்தினால் மோக்ஷம் ஏற்படும் என்று வேதாந்தம் கூறுவதால் (ப்ரஹ்மவித் மோக்ஷம் பெறுகிறான்), "ப்ரஹ்மம் எப்படிப்பட்டது? அதை அறியவும், மோக்ஷத்தை பெறவும் உபாயங்கள் என்ன?" என்று அறிய விருப்பம் ஏற்படுவது ஸகஜமானதால், அவைகளை போதிக்கும் வேதாந்தங்களின் கருத்தை தெரிந்துகொள்ள ப்ரஹ்மவிசார ஶாஸ்த்ரமானது ஆரம்பிக்கப்பட வேண்டும்.

## 1.1.1 D अथातो ब्रह्मजिज्ञासा (1 सूत्रम्)

"तद्विजिज्ञासस्व तद्ब्रह्म" - அதை அறிய விரும்பு, அது ப்ரஹ்மம்' என்ற வாக்யத்தினால் சொல்லப்பட்ட ப்ரஹ்மவிசாரம் செய்யப்பட வேண்டுமா? வேண்டாமா?" என்ற ஸந்தேஹம் ஏற்படுகிறது.

விசாரிக்கப்பட வேண்டிய ப்ரஹ்மம் 1) அனாத்மாவானால், அந்த அனாத்மா அஸத்யமானதால் விசாரிக்கப்பட வேண்டியதில்லை. 2) பரமாத்மாவானால் அவர் உலகின் இயக்கம் போன்ற ஹேதுக்களால் அனுமானத்தினாலேயே நிச்சயிக்கப்பட்டு விட்டதால் விசாரம் வேண்டாம் 3) தன் ஆத்மாவானால் - இவர் "அஹம்", "அஹம்" என்று யாவருக்கும் நன்கு தெரியப்படுவதால், விசாரம் அனாவசியம். தன்னை உணர்ந்தும்கூட ப்ரயோஜனம் ஏதும் இல்லாததால் பயனற்ற ஶாஸ்த்ர விசாரம் வேண்டாம். ப்ரஹ்மம் என்பது மேற்சொன்ன மூன்றையும் விட வேறானது என்று கொண்டாலும், அதை தெரிந்து கொள்வதால் பயனில்லை. ப்ரஹ்மஞானம் ஸ்வயம் பயனாகாது. ஏனெனில் கர்மா-வினாலேயே ஞானம் கிடைத்துவிடுகிறது என்று "कर्मणाज्ञानं आतनोति" கூறப்படுகிறது. ஞானத்வாரா ப்ரஹ்மப்ரஸாதம் பயன் என்றும் கூற முடியாது. ஹரியின் ப்ரஸாதம் தருவது கர்மா என்றும் கூறப்படுகிறது - "तत्कर्म हरितोषं यत्" . ப்ரஸாதமும் புருஷார்த்தம் அல்ல. ப்ரஸாதத்வாரா மோக்ஷம் பயன் என்றும் கூற முடியாது, "ஸோமயாகத்தினால் அம்ருதனாக ஆவேன்" (अपाम सोमं अमृता अभूम) என்று கர்மாவினாலேயே மோக்ஷமாகிற அம்ருதம் கிடைத்துவிடுகிறது. எனவே ப்ரஹ்மவிசார ஶாஸ்த்ரம் ஆரம்பிக்க வேண்டாம் என்று பூர்வ பக்ஷம்.

ஸித்தாந்தம்:- மேற்கூறிய அனாத்ம-பரமாத்ம-ஸ்வாத்ம- ரூபமான மூன்றும் விசாரிக்கத்தக்கதாக இல்லாவிட்டாலும் "ப்ரஹ்ம-ஜிக்ஞாஸா" என்று ஸூத்ரத்தில் கூறப்பட்டுள்ள ப்ரஹ்ம என்ற காரணம் பெயராலும் மிகப்பெரியது என்று பொருள். "अथ कस्मादुच्यते ब्रह्मेति - बृहन्तोऽस्यगुणाः" என்ற வேதவாக்யத்தாலும் தேசம்-காலம்-குணங்களினால் குறுக்கமுடியாத, ஜீவனைக்-காட்டிலும் வேறான விஷ்ணு என்ற பொருள் ப்ரஸித்தமானது இங்கு விசார விஷயமாகிறது. அந்த விஷ்ணு ஸகுணமா,

நிர்குணமா, அல்பகுணமா - என்று ஸந்தேஹம் ஏற்படுவதால் விசாரம் தேவையானது. அவரை அறிந்து அவர் ப்ரஸாதத்தினால் முக்தி என்ற பயனும் உண்டு. முக்தியாகிற அம்ருதத்வம் கர்மாவினால் ஏற்பட முடியாது. எனவே உலகபந்தம் ப்ரத்யக்ஷமாக உள்ளதால் விஷ்ணுப்ரஸாதத்தின் தேவை ஏற்படுகிறது. ஞானத்தினால்தான் ப்ரஸாதம் கிடைப்பதால், ப்ரஹ்மஞான விசார ஶாஸ்த்ரம் ஆரம்பிக்கப்பட வேண்டும்.

## 1.1.2. A जन्माद्यस्य यत: (1 सूत्रम्)

"ப்ரஹ்மம் எது?" என்ற கேள்விக்கு பதிலாக இந்த அதிகரணத்தில் ப்ரஹ்மத்தின் லக்ஷணம் கூறப்படுகிறது. "யதோ வா இமானி.." என்ற தைத்திரீய உபநிஷத்தில் அனைத்து உலகங்களின் உற்பத்தி, இருப்பு, அழிவிற்கு காரணமாக இருப்பது ப்ரஹ்மம் என்று தடஸ்தலக்ஷணம் கூறும் வாக்யமும் "ஸத்யம் ஜ்ஞானமனந்தம்" என்று "ஸத்ய-ஞான-அகண்டமானது ப்ரஹ்மம்," என்று ஸ்வரூப லக்ஷணம் கூறும் வாக்யமும் இங்கு விஷயம். இவை (இரு லக்ஷணங்களும்) ப்ரஹ்மத்தில் பொருந்துமா? பொருந்தாதா? என்று ஸந்தேஹம்.

பூர்வபக்ஷம் :- இரண்டு லக்ஷணமும் பொருந்தாது. ஏனெனில் பிறப்பு, இருப்பு, அழிதல் மூன்றும் உலகினில் காணப்படும் தன்மையாதலால் ப்ரஹ்மத்தை குறிக்காது; லக்ஷணமாகாது. ஸத்ய-ஞான-அகண்டமானது என்ற லக்ஷணமும் ஸரியில்லை, ஏனெனில் ஸத்யத்வம், ஞானத்வம், ஆனந்தத்வம் என்று வெவ்வேறு தன்மைகள் அகண்டமான ஒரே ப்ரஹ்மத்தில் அமையமுடியாது. எனவே ப்ரஹ்மத்திற்கு லக்ஷணமில்லை.

ஸித்தாந்தம் :- ஸ்வரூபத்தில் எப்போதும் இல்லாவிடினும் மற்றவைகளிலிருந்து பிரித்துக் காட்டும் லக்ஷணம் தடஸ்தலக்ஷணம். எப்போதும் வஸ்துவில் இருப்பது ஸ்வரூப-லக்ஷணம். மேற்கூறிய இரண்டு லக்ஷணமும் நன்கு பொருந்தும், ஏனெனில், பிறப்பு-இருப்பு-அழிவு மூன்றும் உலகில் இருப்பினும், இத்தகைய உலகின் காரணம் ப்ரஹ்மம் என்று கூறப்படும் ஜகத்காரணத்வம் தடஸ்தலக்ஷணமாகும். "காக்கை உட்கார்ந்துள்ளது ராமனின் வீடு" என்று கூறினால் ராமன் வீட்டை அறிகிறது போல், "உலகின் காரணம் ப்ரஹ்மம்" என்றால் ப்ரஹ்மம் அறியப்படும். "தோன்றும் தண்ணீருக்கு காரணம் கானல் "यज्जलं सा मरीचिका" ஜலமாகத் தோன்றுவது கானல் - என்றெல்லாம் உணர்த்துவது கண்கூடு.

ஸத்யம்-ஞானம்-அனந்தம் என்று வெவ்வேறு பொருள்கள் உள்ள வார்த்தைகளால் ஒரே அகண்ட வஸ்துவை கூற முடியுமா என்ற ஸந்தேஹம் ஸரியல்ல. ஒரே ஒரு மனிதனை - தந்தை, மகன், மாமன், மருமான், பணக்காரன், வித்வான் என்று வெவ்வேறு வார்த்தைகளால் கூறுகிறோம் அன்றோ? எனவே உபநிஷத் கூறும் லக்ஷணம் பொருந்தும்.

## 1.1.2 V जन्माद्यस्य यत: (1 सूत्रम्)

"यतो वा इमानि" என்ற தைத்திரீய உபநிஷத்தில் கூறப்படும் ஸகல உலக உற்பத்தி - இருப்பு - லயம் என்கிற மூன்றிற்கும் காரண-மானது ப்ரஹ்மம் என்று கூறினால், இது பொருந்துமா? பொருந்தாதா?" என்று ஐயம்.

பூர்வபக்ஷம் :- உலகின் உற்பத்தி காரணம், இருப்பின் காரணம், லயத்தின் காரணம் என்று சொன்னால் ப்ரஹ்மம் பலவாக (மூன்றாக) ஆகிவிடும். "ராமன் கருப்பு, வாலிபன், செங்-

கண்ணன்'' என்று மூன்றும் ஒரு ராமனிடத்தில் கண்ணுக்கு தெரிவதால் ராமன் பலவாராக இல்லாவிடினும், ப்ரஹ்மம் புலப்படும் ஒரு பொருளாக இல்லாததால், மூன்றும் ஒன்றிலேயே பொருந்தாது என்பதால், பல ப்ரஹ்மங்கள் என்று ஏற்படும். மேலும் உண்டாக்குவது, அழிப்பது என்ற முரண்பட்ட இரண்டிற்கு ஒருவர் காரணமாவது விரோதமன்றோ? இதே போல் ஸத்யம்-ஞானம்-அனந்தம் என்று கூறும் லக்ஷணமும், லக்ஷ்யமானது தெரியாத நிலையில் அதை நமக்கு உணர்த்த முடியாது. ஜகத்காரண வஸ்துவில் ஸத்ய ஞான அனந்தம் கூறப்படுகிறது என்று கூறினால் ஸத்ய ஞான அனந்தத்தில் ஜகத்காரணத்வம் கூறவேண்டும் என்பதால் அன்யோன்ய ஆப்ரயதோஷம் வரும். எனவே ப்ரஹ்மத்திற்கு லக்ஷணம் கூற முடியாது.

ஸித்தாந்தம் :- லக்ஷணங்களுக்கு ஒரு வஸ்துவை மற்றவை-களிலிருந்து நன்கு பிரித்து காட்டுவதுதான் தேவை. அந்த மற்ற பொருள் தனக்கு விருத்தமான தன்மை உடையதாக இருந்தால்போதும், தன்னைக்காட்டிலும் வேறு ஜாதி உடையதாக இருக்கத்தேவையில்லை. வெண்தாமரை என்றால், சிவப்பு தாமரையிலிருந்துதான் பிரித்து காட்டும். வெண்மைக்கு விரோதமில்லாத வேறு த்ரவ்யத்திலிருந்து பிரித்துக்காட்டாது. அதேபோல இங்கு ஜன்மகாரணமான ப்ரஹ்மம் ஸ்திதி-காரணமாகவும் இருக்கமுடியும். ஆகையால், "மூன்று காரணங்க-ளாக மூன்று ப்ரஹ்மங்கள் ஏற்படுமா?' என்ற கேள்வி கிடையாது. ப்ராணிகளின் கர்மாக்களை அனுஸரித்து படைப்பு நேரத்தில் படைப்பையும், ப்ரளய காலத்தில் அழிவையும் ஒருவரே செய்ய முடியும்; எனவே எந்த விரோதமும் இல்லை. மேலும் படைப்புக்கும் லயத்திற்கும் காரணம் ஒன்று என்பதால்தான் ப்ரஹ்மம் உபாதான காரணம் ஆகிறது (material cause).

நாராயண ஸூக்தாதிகளினால் லக்ஷ்மிபதியாக ப்ரஸித்தமாக

கூறப்பட்டு, யாவரும் அறிந்தவரிடத்தில் ஸத்ய-ஞான- அனந்த-த்வங்கள் கூறப்படுவதால் அன்யோன்யாஶ்ரயதோஷம் இல்லை. எனவே உபநிஷத்தில் கூறிய லக்ஷணங்கள் பொருந்தும்; அத்தகைய ப்ரஹ்ம விசாரம் ஸித்திக்கிறது.

## 1.1.2 D जन्माद्यस्य यत: (1 सूत्रम्)

(முன்கூறிய விசாரிக்கப்படவேண்டிய ப்ரஹ்மத்தின் லக்ஷண-த்தை கூறுகிறது இந்த ஸூத்ரம்.)

விஷயம் :- "யதோவா இமானி பூதானி" என்றதான தைத்திரீய வாக்யத்தில் அகில உலகின் படைப்பு, இருப்பு, முக்தியில் சேர்தல் ஆகிய மூன்று எவரிடம் அமைகிறதோ அவர்தான் ப்ரஹ்மம் என்ற வாக்கியம் விசாரிக்கப்படும் விஷயமாகும்.

ஸந்தேஹம் :- "அவர்தான் ப்ரஹ்மம்' என்ற வாக்யத்தில் கூறப்-படும் பொருள் ஜீவனா? விஷ்ணுவா?" என்பது ஐயம்.

பூர்வபக்ஷம் :- ब्रह्म जाति जीवकमलासन शब्दराशिषु = ஜாதி, ஜீவன், ஸரஸ்வதியின் கணவர், வேத ஶப்தங்கள் - இவை ப்ரஹ்மபதத்தின் பொருள்கள்- என்ற வசனப்படி ஜீவனிடத்தில் ப்ரஹ்மபதத்திற்கு ரூடி இருப்பதால், விஷ்ணுவை ப்ரஹ்மபதம் கூறுவதாக ப்ரஸித்தி (ரூடி) இல்லை. எனவே योगात् रूढेर्बलीयस्त्वात् ரூடியினால் கூறுவது மற்றதைக் காட்டிலும் ப்ரபலமாதலால், தனது அத்ருஷ்டம் மூலமாக ஜீவன் உலகிற்கு காரணமாக முடியும் என்பதால், ஜாதி முதலிய மற்ற அர்த்தங்கள் பொருந்தாததால், आत्मा वा अरे द्रष्टव्य: போன்ற வாக்யங்களில் ஜீவனிடத்தில் ஆத்மபதம் உபயோகபடுத்தப்படுவதாலும் ஜீவன்தான் இங்கு ஜகத்காரணமான ப்ரஹ்மம். எனவே அந்த ஜீவன் "நான்", "நான்" என ப்ரஸித்தமானதால் இந்த ப்ரஹ்ம விசாரம் வேண்டாம்.

ஸித்தாந்தம் :- இங்கு கூறப்படும் ஜகத்காரணத்வம் விஷ்ணு-விற்கு மட்டுமே பொருந்தும். य उ त्रिधातु पृथिवीमुतस्याम् என்று பல வாக்யங்களில் விஷ்ணுவிடமே இந்த காரணத்வம் கூறப்படுகிறது. படைத்தப் பொருட்களுக்கு ஜீவனகாரணத்வம் ஜீவனுக்கு வராது. மேலும் अभिसंविशन्ति என்று மூன்றாவதாக கூறப்படும் முக்தர்களால் அடையப்படும் தன்மை பொருந்தவே பொருந்தாது. மேலும் इतरव्यपदेशात् (२.१.२२) என்ற ஸூத்ரத்தில் ஜீவனுக்கு இது வராது என்பது ஊர்ஜிதமாக்கப்படுகிறது. எனவே ப்ரஹ்மபதத்தின் ரூடியை தள்ளி யோகார்த்தம் குணபூர்ணத்வம் எடுத்துக்கொள்ள வேண்டும். "ஆத்மா வா அரே" என்ற வாக்யத்தில் கூறப்படும் ஆத்மா ஶப்தத்திற்கு "स्वशब्दात्" (१.३.१) என்று கூறப்-படப்போகும் அதிகரணத்தின் தீர்ப்புப்படி விஷ்ணுதான் அர்த்தம். மேலும் तदेव ब्रह्म परमं कवीनाम् - என்ற வாக்யப்படி விஷ்ணுவிடம்தான் ப்ரஹ்மஶப்தத்திற்கு ரூடி ஏற்கவேண்டும். எனவே யோகம், ரூடி இரண்டையும் கொண்டு விஷ்ணுதான் ப்ரஹ்மம் என்பதால் அவரை அறிய விசாரம் தேவை.

## 1.1.3. A शास्त्रयोनित्वात् (1 सूत्रम)

"முன்பு கூறிய ஸர்வஜகத்காரணத்வம் ப்ரஹ்மத்திற்கு வராது. உலகின் பகுதியான வேதஶப்தங்கள் நித்யமானதால் அவைகளுக்கு ப்ரஹ்மம் காரணமாகாதே." என்ற ஆக்ஷேபத்திற்கு பதிலாக இந்த ஸூத்ரம்.

பூர்வபக்ஷம்- வேதங்கள் நித்யமானவையாதலால் வேதங்களை ப்ரஹ்மம் படைக்க முடியாது. மேலும் ஒருவனால் எழுதப்பட்டால் அந்த நூல் பௌருஷம் என்றாகும்; அதன் ப்ராமாண்யம் குறையும்; எனவே ஸர்வஜகத்காரணத்வம் வராது.

ஸித்தாந்தம் :- வேதங்கள் தொடர்ந்து ஒன்றே மறுபடி மறுபடி உண்டாக்கப்படுவதால் ப்ரவாஹ நித்யம்தான். (நதீப்ரவாஹம் போல்). ஏனெனில், "अस्य महतो भूतस्य निश्वसितं यद् ऋग्वेदः" என்று ப்ரஹதாரண்யகத்தில் வேதங்கள் ப்ரஹ்மத்தினால் சுலபமாக உண்டுபண்ணப்பட்டவை" என்றும், "ऋचस्सामानि जज्ञिरे" என்று புருஷஸூக்தத்தில் யக்ஞரூபியான ப்ரஹ்மத்திலிருந்து வேதங்கள் உண்டானவை" என்றும் திடமாக கூறப்பட்டுள்ளது. ஸ்வதந்திரமாக தனது ஆலோசனையின் வழியாக “ரகுவம்ஶம்’ போல் படைக்கப்-படாததினால் பௌருஷேயத்வதோஷம் வராது. எனவே ப்ராமாண்யம் பூர்ணமாக உண்டு.

இந்த ஸூத்ரத்தின் மறு- பொருள் - முந்தைய ஸூத்ரத்தில் லக்ஷணம் கூறப்பட்டது. இப்போது ப்ரஹ்மத்தை அறிய ப்ரமாணம் கூறப்படுகிறது.

விஷயம் :- “तन्त्वौपनिषदं पुरुषम्” என்ற வாக்யம் விஷயம்; ப்ரஹ்மத்தை உபநிஷத்துக்களினால் மட்டும் அறியப்படவேண்டும்.

ஸந்தேஹம் :- ப்ரஹ்மத்தை ப்ரத்யக்ஷாதிகளாலும் அறிய முடியுமா? வேதம் மட்டும்தான் ப்ரமாணமா?

பூர்வபக்ஷம் :- குடம், மலை போன்று ஒரு ஸித்தவஸ்துவாக இருப்பதால் ப்ரஹ்மம் மற்ற ப்ரமாணங்களாலும் அறியலாம். உபநிஷத்துகளினால்தான் என்பதில்லை.

ஸித்தாந்தம் :- நிறம், வடிவம், வாஸனை - எல்லாம் அற்றதால் ப்ரஹ்மம் ப்ரத்யக்ஷத்தினால் அறிய முடியாதது. தகுந்த மற்றவருக்கு வராத ஒரு ஹேது காட்ட முடியாததால் அனுமானமும் பயன்படாது. உவமையற்றதாக न तस्य प्रतिमास्ति

என்று ப்ரஹ்மம் கூறப்படுவதால் உபமானம் பயன்படாது. எனவே உபநிஷத் மட்டுமே ப்ரமாணமாகும். மேலும் नावेदविन्मनुते तं बृहन्तम्- என்று, வேதத்தைத் தவிர மற்றதால் உணர முடியாது என்றும் வரையறுத்திக்காட்டப்பட்டுள்ளது.

## 1.1.3 V शास्त्रयोनित्वात् (1 सूत्रम्)

ஜகத்தின் காரணமான ப்ரஹ்மம் அனுமானம் முதலியவற்றாலும் அறியமுடியுமாதலால் ப்ரஹ்மத்தை அறிய வேதாந்த பாஸ்த்ரத்தை விசாரிக்க வேண்டாம் என்ற ஆக்ஷேபத்திற்கு பதில் இந்த அதிகரணம். பாஸ்த்ரத்தினால் மட்டுமே ப்ரஹ்மத்தை உணர முடியும் என்று ஸூத்ரத்தின் பொருள்.

பூர்வபக்ஷம் :- பூமி முதலியவை கர்த்தாவால் உண்டுபண்ணப்-பட்டன. உண்டாக்கப்பட்ட பொருளாய் இருப்பதால், குடம் போல என்று அனுமானத்தால் காரண வஸ்துவை தெரிந்து கொள்ள முடியும்.

ஸித்தாந்தம் :- மேற்கூறிய அனுமானத்தினால் படைத்தவன் தேவை என்று மட்டுமே அறியமுடியும். தவ வலிமை, யோக வலிமை உள்ள பலர் சேர்ந்து உண்டுபண்ணியிருக்கலாம் என்ற ஸந்தேஹத்தை விலக்கத் தேவையான யுக்தி ஸ்திரமாக கூறமுடியாது. இந்த விஷயத்தை இங்கு தர்க்க ரீதியால் மிகவும் விரிவாக விளக்குகின்றனர். "கர்த்தா பலர் இருப்பதை விட ஒருவனே என்று கொள்வது இலகு," என்ற வாதத்தை ஸ்தாபிக்க முடியாது. எனவே வேதமே ப்ரமாணம்.

# 1.1.3 D शास्त्रयोनित्वात् (1 सूत्रम्)

“ஜகத்காரணத்வம் ருத்ரன் போன்ற தேவதைக்கும் வரலாம் என்பதால் லக்ஷணத்திற்கு அதிவ்யாப்திதோஷம் என்பதை நிராகரிப்பதற்கு இந்த அதிகரணம். விஷ்ணுவிற்கு மட்டுமே ஜகத்காரணத்வமா? மற்றவருக்கும் வருமா?” என்ற ஸந்தேஹம் ஏற்படுகிறது.

பூர்வபக்ஷம் :- அனுமானத்தினால் ஜகத்கர்த்தா ஸித்தித்தாலும், அவர் சிவனாகவே இருக்கமுடியும். ஏனெனில் ஸர்வஜ்ஞசிவனால் ஏற்படுத்தப்பட்ட சிவாகமத்தில் ருத்ரனே ஜகத்காரணம் என்று நிரூபிக்கப்பட்டுள்ளது. வேதத்தில் விஷ்ணுவிற்கு ஜகத்காரணத்வம் கூறியிருப்பதற்கும் மதிப்புத் தருவதானால், கால பேதத்தால் இருவரும் காரணமாகலாம். வேதத்திலும் ஆகமத்திலும் சிவ, விஷ்ணுக்களுக்கு நிஷேதம் இருப்பது மற்றவருக்கு ஏற்றம் தருவற்காக என்பதால் அக்னி-ஹோத்திரத்தில் உதித்த பிறகோ, உதிப்பதற்கு முன்போ செய்யலாம் என்பதுபோல் கொள்ள வேண்டும். எனவே லக்ஷணம் அதிவ்யாப்தி உள்ளது.

ஸித்தாந்தம் :- "வேதத்தை தவிர மற்ற ப்ரமாணத்தால் விஷ்ணுவை அறியமுடியாது "नावेदविन्मनुते" என்று கூறப்பட்டிருப்பதால் அனுமானத்தினால் இது தெரியமுடியாத ஒன்று. மேலும் சிவாகமத்திற்கு ப்ராமாண்யம் கிடையாது. மேலும் ऋग्यजुस्सामाथर्वाश्च भारतं पञ्चरात्रकम् என்கிற ஸ்மிருதியில் துராகமங்களுக்கு ப்ராமாண்யம் கிடையாது என்று கூறப்பட்டுள்ளது. எனவே ஜகத்காரணத்வலக்ஷணத்திற்கு ருத்ர- னிடத்தில் அதிவ்யாப்தி என்ற தோஷம் கிடையாது. ஆகையால் விஷ்ணுவைப்பற்றிய விசாரம் ஆரம்பிக்க வேண்டும்.

# 1.1.4. A तत्तु समन्वयात् (1 सूत्रम्)

## *முதல் வர்ணகம்: (முதல் வ்யாக்யானம் )*

விஷயம் :- எல்லா வேதாந்த வாக்கியங்களும் இங்கு விஷயம்.

ஸந்தேஹம் :- இவை கர்மாவில் முடிகின்றனவா? ப்ரஹ்மத்தை போதிக்கின்றனவா?

பூர்வபக்ஷம் :- வேதாந்தங்கள் கர்த்தா, தேவதைகளை பற்றிக் கூறி கர்மாவில் தொடர்பு அடைந்து, எனவே கர்மாக்கள் செய்யவேண்டும் என்று வரையறுத்துக் கூறுபவைகள்தான். ஏனெனில் அர்த்தவாத-மாகிற வேதபாகத்திற்கு கர்மாவுடன் இணைத்துத்தான் ப்ராமாண்யம் என்று பூர்வ மீமாம்ஸையில் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இல்லையேல் ப்ரஹ்மத்தை அறிவதால் அடையவேண்டிய, தள்ளவேண்டிய பொருள் இல்லாததால், வெறும் கதை கேட்பது போல் ப்ரயோஜனம் வராது.

ஸித்தாந்தம் :- வேதாந்தங்கள் அகண்ட பரிபூர்ண ப்ரஹ்மத்தை மட்டுமே தாத்பர்யமாக போதிக்கின்றன. “இந்த ப்ரஹ்ம ஞானத்தினால் ஸர்வபந்தநிவ்ருத்தி உண்டாகிறது तरति शोकमात्मवित्,” என்று வேதாந்தம் கூறுகிறது. அர்த்தவாத பாகத்திற்கு தனியே பயன் ஏற்படாது என்ற காரணத்தினால் கர்மாவில் தொடர்பு ஏற்படுத்தி ப்ரயோஜனம் கூற வேண்டியதாயிற்று. நேரடியாக பரம ப்ரயோஜனம் ஏற்படுத்தும் ப்ரஹ்மத்தின் உணர்வுக்கு ஸாதனமான வேதாந்தங்கள் ஏன் கர்மாவை சார்ந்து வணங்கவேண்டும்? மேலும் கர்ம காண்டம் தனியே பூர்த்தியாகி, அதோடு தொடர்பற்றதான ஞான காண்டத்தை எப்படி ஸந்தர்ப்பம் இல்லாமல் கர்மாவுடன் அங்கமாக இணைக்க-முடியும்? எனவே வேதாந்தங்கள் ஸ்வதந்த்ரமாக ப்ரஹ்மத்தை மட்டுமே போதிக்கின்றன.

***இரண்டாம் வர்ணகம் (மறு வ்யாக்யானம்):***

**விஷயம் வேதாந்தம்தான்.**

**ஸந்தேஹம் :- உபாஸனைக்கு விஷயமாக ப்ரஹ்மம் கூறப்படுகிறதா? ஸ்வதந்த்ரமாகவா?**

**பூர்வபக்ஷம் :- இவை உபாஸனை என்ற மானஸ கர்மாவை விதித்து அதன் பிறகு உபாஸனையில் த்யானிக்க வேண்டிய ப்ரஹ்மத்தை போதிக்கின்றன. आत्मेत्येवोपासीत என்று விதிகள் உள்ளன. இல்லாவிடில் வெறும் ஸித்தமான ப்ரஹ்மவஸ்துவை போதித்தால் வாக்கியங்களுக்கு பொருளையே உணர முடியாது. மேலும் நல்லதைப் பெறுவது, கெடுதலை விலக்குவது என்றவாறு ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி இரண்டில் ஒன்றை கூறினால்தான் ப்ரயோஜனம் ஏற்படும். மேலும் "இதைச்செய்" "இதைச் செய்யாதே" என்று शासनम् கட்டளையைச் சொல்லுவது மூலம்தான் வேதத்திற்கு ஶாஸ்த்ரம் என்று பெயர். வேதாந்தங்களிலேயே श्रोतव्यः என்று ப்ரஹ்மத்தை அறியுமாறு கூறிவிட்டு, मन्तव्यः என்று மனனத்தை விதிக்கின்றன. ஆகையால் உபாஸனை ஆகிற கட்டளையைக் கூறி, பிறகு உபாஸ்யமான ப்ரஹ்மத்தை கூறுகின்றன வேதாந்தங்கள்; ஸ்வதந்திரமாக கூறவில்லை.**

**ஸித்தாந்தம் :- "இது பாம்பு அல்ல கயிறுதான்' என்பது போன்ற வாக்கியங்களைக் கேட்பதால் பயம் போகின்றதை பார்க்கிறோம். அதுபோல் இங்கும் ஸம்ஸாரத்துக்கு நிவ்ருத்தி ப்ரஹ்ம ஞானத்தினால் ஏற்படும். திடமான ஞானம் ஏற்பட்டு நமது ப்ரமை விலகிவிட்டால், வேறு க்ரியை தேவையில்லை. மேலும் "அத்விதீய ப்ரஹ்மமே நான்" என்ற ஞானம் ஏற்பட்ட பிறகு, "நான் இதை செய்து இன்னதை அடைவேன்' என்று கூறும் நிலை ஏற்படமுடியாது. மனனம் விதித்திருப்பது ஆத்மஞானத்தில்**

ஸந்தேஹம் தெளிந்து திடமாக்குவதற்காகத்தான். மேலும் கர்மாக்களின் பலன் நான்கு விதம்தான் :- 1. உண்டாகுதல். 2. அடைதல். 3. மாற்றம் ஏற்படுதல் (உமி விலகுதல்). 4. தோஷம் விலகுதல். இவை நான்கும் ப்ரஹ்மத்தில் பொருந்தாது. ஏனெனில் ப்ரஹ்மம் நித்யமாகவே இருந்து, எல்லோராலும் தன் ரூபத்தில் அடையப்பட்டதாகவும், மாற்றம் ஏற்படுத்த முடியாததாகவும், தோஷமற்றதாகவும் விளங்குகிறது. கட்டளையிட்டால்தான் வேதம் ஶாஸ்த்ரமாகும் என்பது கிடையாது. ஹிதத்தை எடுத்து शंसनम् = உரைப்பது மூலம் ஶாஸ்த்ரமாக முடியும். க்ரியையைக் கலக்காமலேயே "சைத்ர, உனக்கு பிள்ளை பிறந்துள்ளது" என்பது போன்ற வாக்கியங்களினால் ஞானம் ஏற்படுகிறது என்பதனால் பொருளை உணர்த்துவதற்கு க்ரியையின் தொடர்பு தேவையில்லை. ஆகையினால் பரம ப்ரயோஜன ஸ்வரூபமான (ப்ரஹ்மானந்தமான) ப்ரஹ்மத்தை மட்டுமே உணர்த்துவதுதான் வேதங்களின் பயன்.

## 1.1.4. V तत्तु समन्वयात् (1 सूत्रम्)

சென்ற ஸூத்ரத்தில் ஶாஸ்த்ரம் மட்டுமே ப்ரஹ்மத்திற்கு ப்ரமாணம் என்று கூறியதை ஆக்ஷேபித்து ஸமாதானம் கூறுவதற்காக இந்த ஸூத்ரம். இதில் ब्रह्म என்றும், शास्त्रेण என்றும் இரண்டு வார்த்தைகளை சேர்த்து – "ஶாஸ்த்ரத்தினால் ப்ரஹ்மமானது பரமானந்தரூபமாக புருஷார்த்தமாகவே ப்ரதிபாதிக்கப்படுவதால் (போதிக்க) तत् அந்த ஶாஸ்த்ர ப்ரமாணகத்வம் முன் கூறியது ஸரியே" என்று ஸூத்ரத்தின் பொருள்.

பூர்வபக்ஷம் :- ப்ரஹ்மத்தை ஶாஸ்த்ரம் கூற வேண்டுமாயின், முன்பு தெரியப்படாத தன்மை எப்படி தேவையோ, அப்படியே ப்ரயோஜனமுடைய தன்மை மிகத்தேவை. ப்ரயோஜனம் என்பது "சுகம் ஏற்படுவது, துக்கம் விலகுவது' என்று இரண்டு விதமாக

உள்ளது. இவ்விரண்டும் க்ரியையினால் மட்டுமே சாத்தியமாகும். ப்ரஹ்மத்தில் ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி என்ற க்ரியைகள் ஸாத்யமாகாததால், ஶாஸ்த்ரம் ப்ரமாணமாகாது. "பூமியின் அடியில் பெரிய நிதி உள்ளது" என்று கூறும் வாக்யத்தில் க்ரியை இல்லாவிடினும் பயன் ஏற்படுவது போல் இங்கு ப்ரயோஜனம் வரலாம் என்று நினைக்க முடியாது. ஏனெனில் ஸந்தோஷம் கொடுக்கும் பொருளைப் பற்றி கூறுவதால் "உனக்கு பிள்ளை பிறந்துள்ளான்" "வீட்டின் அடியில் பொக்கிஷம் உள்ளது" என்ற வாக்கியம் போலவே ஏமாற்றுபவனால் கூறப்பட்ட மேற்கண்ட வாக்கியங்கள் போல் இங்கும் கூறப்பட்ட விஷயம் அஸத்யமாக இருக்கலாம் என்பதால் ஸத்யம்தான் என்று ஊர்ஜிதமாகாததால் ப்ரஹ்மம் அஸத்யமாகி விடும்.

ஸித்தாந்தம் :- "அபௌருஷேயமாகிற நித்யநிர்தோஷமான வேத வாக்கியங்கள், மேற்கூறிய பொய்யனின் வாக்கியம் போல நம்பத்தகாததோ?" என்ற ஸந்தேஹம் உண்டாகவே முடியாது. எனவே நித்ய நிரதிஶய புருஷார்த்தரூபமாக வேதாந்தங்களினால் கூறப்படும் ப்ரஹ்மம் அஸத்யம் என்ற ஸந்தேஹத்திற்கு இடமே இல்லை. அத்தகைய ப்ரஹ்மானுபவத்தை உண்டுபண்ணும் வேதாந்தங்கள் ப்ரமாணம் ஆவதில் ஆக்ஷேபணை இல்லை.

## 1.1.4. D - तत्तु समन्वयात् (1 सूत्रम)

"ஜகத்காரணத்வம் ஶாஸ்த்ரத்தினால் மட்டும் உணரப்பட-வேண்டியதால், ஜகத்காரணத்வம் என்ற லக்ஷணம் ருத்ர-னிடத்தில் அதிவ்யாப்தம் ஆகாது,' என்று சென்ற அதிகரணத்தில் கூறியதை திடப்படுத்துவதற்கான விஶேஷ விசாரம் இந்த ஸூத்ரத்தில் செய்யப்படுகிறது.

ஸந்தேஹம் :- ஶாஸ்த்ரயோனித்வம் மற்றவருக்கும் உண்டா? விஷ்ணுவுக்கு மட்டும்தானா?

பூர்வபக்ஷம் :- ருத்ரன் போன்றவருக்கும் காரணத்வம் உள்ளதாக ஶாஸ்த்ரயோனித்வம் வரும்.சைவாகமங்கள் வேதவ்யாக்யானமாய் வந்துள்ளன. அவைகளில் ருத்ரன் ஜகத்காரணம் என்று ஊர்ஜிதம் செய்யப்பட்டுள்ளது. அவைகள் (சைவாகமங்கள்) ப்ரமாணமல்ல என்று சென்ற ஸூத்ரத்தில் கூறியிருப்பதும் ஸரியில்லை. ப்ரமாணமான வேதத்தின் விளக்கமாக உள்ள சைவாகமத்திற்கு, ப்ரமாணாந்தரத்தின் விரோதமில்லாதபோது, ப்ராமாண்யம் நிலைபெற்றதாக ஆகின்றது. ப்ரமாணாந்தரத்தின் விரோத& மின்மையானது नैषा तर्केण मतिरापनेया என்று கூறப்பட்டுள்ளது. "பாஞ்சராத்திர ஆகமமானது விஷ்ணுவை ஜகத்காரணம் என்று கூறியிருக்கிறதே" என்று கேட்டால், காலபேதத்தால் இருவரும் காரணம் என்று கூறலாமேதவிர விஷ்ணுதான் காரணம் என்று நிலையாது. உபக்ரமாதிகள் தாத்பர்யத்தை தீர்மானிக்க முடியாது.

ஸித்தாந்தம் :- முதல்பார்வையில் வேதத்தில் முன்பின் முரண்பட்ட-தான விஷயங்கள் கூறப்படுவதால், முரண்பாட்டில்லாத ஏகவாக்ய-த்வம் ஏற்படுவதற்கு, உபக்ரமம் போன்ற அடையாளங்களை ஆராய்ந்துதான் முடிவு எடுக்கவேண்டும் என்ற காரணத்தினால், சைவாகமத்திற்கு முன்கூறபட்ட அப்ராமாண்யம் (invalidity) ஏற்படுவதால், சைவாகமப்படி ருத்ரன் ஜகத்காரணமாக ஆக முடியாது. எனவே வேதங்களில் கூறப்பட்ட தாத்பர்யத்தினால் நிர்ணயிக்கப்பட்ட விஷ்ணுதான் ஜகத்காரணமாக தாத்பர்யத்துடன் நிர்ணயிக்கப்படுவதால் முன்கூறிய ஆக்ஷேபம் ஏறுவதில்லை. எனவே இரண்டாம் ஸூத்ரத்தில் கூறிய லக்ஷணம் அதிவ்யாப்தி தோஷமற்றது.

# 1.1.5 A ईक्षतेर्नाशब्दम् (7 सूत्राणि)

“சாந்தோக்ய உபநிஷத் ஆறாம் அத்யாயத்தில் கூறப்பட்ட “ஸத்” என்ற வார்த்தை ஸர்வஜகத்காரணத்தை குறிக்கிறது. அந்த வாக்யத்தில் கூறப்படும் “ஸத்’ என்ற வார்த்தையால் ஸாங்க்ய மதத்தில் கூறப்படும் ப்ரதானம் என்ற பொருளை குறிக்கிறதா? ப்ரஹ்மத்தை குறிக்கிறதா?” என்று ஸந்தேஹம்.

பூர்வபக்ஷம் :- ஸத்வ, ரஜஸ், தமஸ் என்கிற மூன்று குணங்களுடன்கூடிய ஜடமான ப்ரதானம்தான் காரணமாகமுடியும். நிர்குணமான ப்ரஹ்மம் காரணமாகாது. ப்ரதானத்திற்கு ஸத்வ குணம் வாயிலாக ஞான சக்தியும் ரஜோகுணம் வாயிலாக க்ரியா சக்தியும் பொருந்துமானபடியால் ப்ரதானம்தான் ஜகத்காரணம். இதற்கு அனுமானம் ப்ரமாணமாகிறது. ப்ரதானத்திற்கு ஆலோசனை (ஈக்ஷணம்) இரண்டாம் நிலையில் பொருந்தும். எனவே तदैक्षत என்று கூறப்பட்ட ஈக்ஷணம் இடையூறாகாது.

ஸித்தாந்தம் :- तदैक्षत என்ற வாக்கியம் முன்னால் सदेव सौम्येदमग्र आसीत् என்று “ஸத்” என்று கூறிய வஸ்துவானது ஆலோசனைசெய்து படைத்தது என்று ஸ்பஷ்டமாக கூறுகிறது. ஜடமான ப்ரதானத்திற்கு ஈக்ஷணம் வரவே வராது; இந்த ஆலோசனை என்பதற்கு இரண்டாம் நிலையில் பொருள் ஏற்க முடியாது. ஏனெனில் अनेन जीवेनात्मना என்ற வாக்யத்தில் சேதனனான ஜீவனை தனது ஆத்மா (ஸ்வரூபம்) என்று சொல்லப்படுகின்றது. நிர்குணமான ப்ரஹ்மத்திற்கும் மாயை என்கிற சக்தியினால் உலகை படைக்கும் திறன் ஏற்படமுடியும். ஸத்வகுணத்தினால் மட்டும் ஸர்வஞுத்வம் வரவேமுடியாது. மேலும் तत्सत्यं स आत्मा என்று இறுதியில் ஜகத்காரண பொருள்தான் ஜீவனின் ஸ்வரூபம் என்று பலமுறை கூறப்படுகிறது. ஜடமாக காரணம் இருப்பின் அதற்கு ஸ்வரூபமாக சேதனஜீவன் எப்படி ஆவான்?

மேலும் ஜகத்காரண வஸ்துவையேதான் என்று நினைத்தவனுக்கு மோக்ஷம் கூறப்படுவதும் ப்ரதானத்திற்கு பொருந்தாது. எனவே சேதனமான ப்ரஹ்மமே ஜகத்காரணம்; ப்ரதானமல்ல.

## 1.1.5 V ईक्षतेर्नाशब्दम् (8 सूत्राणि)

हेयत्वावचनाच्च 1.1.8க்கும் स्वाप्ययात् 1.1.9க்கும் நடுவே 9 வது ஸூத்ரம் அதிகம் ஒன்று 1.1.9 என்று படிக்கப்படுகிறது- प्रतिज्ञाविरोधात् என்று. எனவே இந்த அதிகரணத்தில் எட்டு ஸூத்ரங்கள்.

ஜகத்காரண வஸ்துவை பெரிய புருஷார்த்தரூபமாக முன்பு கூறியது பொருந்தாது. ஏனெனில் சாந்தோக்யத்தில் தள்ளவேண்டிய ப்ரதானத்தை ஜகத்காரணமாக கூறியிருக்கிறதே என்று ஆக்ஷேபம் ஏற்பட, அதன் பரிஹாரமாய் இந்த அதிகரணம் ஆரம்பிக்கப்படுகிறது. अशब्दम् = அனுமானத்தினால் ஊகிக்கப்படும் ப்ரதானம், न "ஸத் வித்யாவில் கூறப்படும் ஜகத்காரணமான "ஸத்' என்ற வார்த்தையால் கூறப்படவில்லை; ஸத் என்று கூறப்படும் ஜகத்காரணத்திற்கு ஆலோசனை செய்யும் தன்மை கூறப்படுகிறது அல்லவா?" என்று ஸூத்ரார்த்தம்.

பூர்வபக்ஷம் :- ஸத்வ, ரஜஸ், தமோ வடிவமான (சுக துக்க மோஹமயமான) ப்ரபஞ்சத்திற்கு தகுந்தபடி முக்குணமயமான ப்ரதானம்தான் காரணமாக முடியும். எனவே सदेव सौम्येदमग्र आसीत्, तदैक्षत என்ற உபநிஷத்தில் அந்த ப்ரதானம்தான் உபாதானகாரணமாக சொல்லப்படவேண்டும். ஈக்ஷணம் (ஆலோசனை) நெருப்பு, ஜலம் போன்ற ஜடத்திற்கு, வாக்கிய சேஷத்தில் तेज ऐक्षत आप ऐक्षन्त என்று கூறப்படுவதால், அதே போல் இங்கும் இரண்டாம் நிலையில் ஈக்ஷணம் சொல்லப்படுகிறது. எனவே "கார்யத்தை உண்டுபண்ணுவதில் துடிப்பு' என்றவாறு பொருள்கொள்ள வேண்டும். ஆகையால் ப்ரதானம்-

தான் (ஸாங்க்யமதத்தினர் கூறுவது) இங்கு "ஸத்" என்ற வார்த்தையால் சொல்லப்படுகிறது.

ஸித்தாந்தம் :- இந்த உபநிஷத்தில் மேலே स आत्मा என்றபடி ஜகத்காரண பொருளை ஆத்மா என்று சொல்லுவதால், இங்கு குறிக்கப்படும் "ஸத்' என்ற பதத்தின் பொருள் சேதனனாகத்தான் இருக்க வேண்டும். "தேஜஸ் ஆலோசித்தது' என்ற வாக்கியங்களிலும் முக்கியமான ஈக்ஷணம்தான் என்ற விஷயம் இரண்டாம் அத்யாயம் இரண்டாம் பாதத்தில் நிரூபிக்கப்படப்போகிறது. மேலும் ஸத் வஸ்துவை உபாஸிப்பவனுக்கு தேஹம் மறைந்த பிறகு உடனே காரணவஸ்துவை அடைதல் सम्पत्स्य என்று கூறப்படுவதால், மோக்ஷோபாயமான உபாஸனையின் விஷயமாக ஸத்வஸ்து கூறப்படுவதாக தெரிகிறது. இந்த விஷயம் ப்ரதானத்திற்கு பொருந்தாது. எனவே இந்த உபநிஷத்தில் ஸாங்க்யர்கள் கூறும் ப்ரதானம் ஜகத்காரணமாக சொல்லப்படவில்லை. ஆகையால் முன்கூறிய ஆக்ஷேபம் பொருந்தாது.

## 1.1.5 D ईक्षत्यधिकरणम् (7 सूत्राणि)

"முக்யமான தொடர்பாகிற வாச்யத்வம் என்பது ஸர்வசாஸ்த்ரங் களுக்கும் ப்ரஹ்மத்திலேயே," என்ற சென்ற அதிகரணத்தை ஆக்ஷேபித்து, ஸமாதானம் இங்கு கூறப்படுகிறது.

ஸந்தேஹம் :- "சாஸ்த்ரயோனித்வம் முக்ய வ்ருத்தியினால் ப்ரஹ்மத்திற்கு (விஷ்ணுவிற்கு) பொருந்துமா? பொருந்தாதா?" என்பது ஐயம்.

பூர்வபக்ஷம் :- பொருந்தாது என்று, ஆக்ஷேபத்தின் மூலம் யாதெனில் "यतो वाचो निवर्तन्ते" என்று "வாக்கினால் நேரடியாக கூற முடியாது'' என்று சொல்லப்படுகிறது. எனவே சாஸ்த்ரம்

ப்ரஹ்மத்திற்கு வாசகமாக ஆகாது. पुरिशयं पुरुषं ईक्षते என்ற வாக்யத்தில் ப்ரஹ்மத்திற்கு ஸாக்ஷாத்கரிக்கப்படும் தன்மை கூறப்படுகிறது என்று எண்ண வேண்டாம். "ஈக்ஷிக்கிறான் ப்ரஹ்மத்தை" என்ற இடத்தில் கௌணமான ப்ரஹ்மம் அல்லது ஆத்மா இரண்டாம் நிலையில் சொல்லப்படுகிறது. அதற்கு வாச்யத்வம் வரமுடியும். முக்யாத்மாதான் கூறப்படுவதாக வைத்துக்கொண்டாலும் வாச்யமாக ஆக முடியாத அவருக்கு லக்ஷணையின் மூலம் ஈக்ஷணம் வரலாம். अवचनेनैव ब्रह्म प्रोवाच என்ற வாக்யத்தில் வாச்யவ்ருத்தியை தவிர்த்து லக்ஷணா-வ்ருத்தியால் உபதேசித்தார் என்பது பொருள். "லக்ஷணாவை ஏற்றால், எது லக்ஷியம்?" என்று கேட்டால், மறுபடி லக்ஷணமான வார்த்தையை கூறும்போது வாச்யத்தின் தொடர்பு தேவையானபடியால், "வாச்யம் எது?" என்று மறுபடி கேள்வி எழும். ஆதலால் மேன்மேலும் லக்ஷணங்களை கூறினால் அனவஸ்தா என்ற பெருங்குற்றம் ஏற்படும் என்று ஆக்ஷேபணை செய்யவேண்டாம். வாச்யத்வம் ஒப்புக்கொள்ளும் கக்ஷியிலும் வாசகசொல்லின் தொடர்பு தெரிந்தால்தான் ஞானம் ஏற்படும் என்பதால், ஸம்பந்தம் என்பது இரண்டு ஸம்பந்திகள் தெரிந்தால்-தான் தெரியுமாதலால், ஒரு ஸம்பந்தியான ப்ரஹ்மம் உபநிஷத்-தாகிய ஶாஸ்த்ரத்தினால் மட்டுமே தெரியப்படுத்துபவராக இருந்தால், இங்கும் இந்த கக்ஷியிலும் ஶாஸ்த்ர சொற்களுக்கு அனவஸ்தா வரத்தான் செய்யும். எனவே முக்ய வ்ருத்தி (direct meaning) யினால் என்று கூறுவது பொருந்தாது. மேலும் सर्व शास्त्रयोनित्वम् ப்ரஹ்மத்திற்கு கூற முடியாது. अनन्ता वै वेदाः என்றபடி வேதத்திற்கு அந்தம்,முடிவு, கிடையாது. ஆகையால் ஸ்வல்பாயுஸ் உடைய நம்மால் அனந்த வேதஸ்வரூபம் அறிய முடியாது. எனவே ஸர்வஶாஸ்த்ரமும் ப்ரஹ்மத்தையே குறிக்கிறது என்று கூறுவது தவறு.

ஸித்தாந்தம் :- आत्मन्येवात्मानं पश्यति, यस्यानु त्त: प्रतिबुद्ध आत्मा தன்னாலேயே தன்னை உணர்கிறான், எவனால் ஆத்ம ஸ்வரூபம் புரிந்து கொள்ளப்பட்டதோ - போன்ற வாக்கியங்களினால் ஈக்ஷண்யத்வமும், ஆத்மத்வமும், அதை உணர்ந்தவனுக்கு மோக்ஷோபதேசமும் சொல்லப்படுவதால் அந்த ஆத்மா கௌணாத்மா ஆகமுடியாது, சுத்தமான பரமாத்மாதான். எனவே ஈக்ஷண்யரான இவர் லக்ஷணையினால் கூறப்படுவதானால் முன் கூறியபடி அனவஸ்தா தோஷம் ஏற்படும். ஆத்மாவானவர் ஸ்வயம்ப்ரகாஶமாதலால் எப்போதும் ஸித்தமாய் உள்ளார். அவரை போதிப்பதற்கு லக்ஷணை என்று கூறுவதானால் அப்போது ஶாஸ்த்ரமே தேவையில்லை என்றாகிவிடும். ப்ரஹ்மத்தை கூறும் ஶாஸ்த்ரம் வாசகம் என்று கூறும் எங்கள் கக்ஷியில், "யௌகிகமான வார்த்தைகள் வாக்கியம் போன்றவை" என்ற ரீதியில், தனியாக சொல் தொடர்பு அறியப்பட தேவையில்லை என்றபடியால் வாசகத்வ பக்ஷத்தில் அனவஸ்தா தோஷம் கிடையாது. यतो वाचो निवर्तन्ते என்ற வாக்கியம் முழுமையாக உணர்த்த முடியாது என்ற கருத்தில் வந்துள்ளது. வேதங்கள் அனந்தமாயினும் ஸர்வஞரான ஸூத்ரகாரர் எல்லாமறிந்தவராதலால், ஸர்வ ஶாஸ்த்ரயோனித்வம் விஷ்ணுவிற்கு பொருந்தும்.

## 1.1.6 A आनन्दमयोऽभ्यासात् (8 सूत्राणि)

*முதல் வர்ணகம் (முதல் வ்யாக்யானம்):*

விஷயம் :- तस्यैष एव.. विज्ञानमयात् ....अन्योन्तर आत्मा आनन्दमय: என்று தைத்திரீய உபநிஷத்தில் ஐந்தாவது கோஶமாகக்-கூறப்பட்ட ஆனந்தமயத்தை கூறும் கண்டம் (खण्ड:) இங்கு விஷய வாக்யமாகும்.

ஸந்தேஹம் :- இந்த ஆனந்தமயன் ஸம்ஸாரியாகிய ஜீவனா, ப்ரஹ்மமா என்று ஐயம்.

பூர்வபக்ஷம் :- இங்கு, 1. சிரஸ்; 2. வலது புறம்; 3. இடதுபுறம்; 4. நடு உடல்; 5. புச்சம் (ஆதாரம்) என்று ஐந்து அவயவங்கள் கொண்டதாக இந்த ஆனந்தமயன் கூறப்படுகிறான். விரும்பிய பொருளை பார்ப்பது ப்ரியம், அதை அடைவது மோதம், அதை நுகர்வது ப்ரமோதம், தூக்கத்தில் உணரப்படும் இன்பம் (பொதுவானது) ஆனந்தம், அளவு, குறுக்கும் உபாதி இல்லாத பேரானந்த ப்ரஹ்மம் - ஆகிய ஐந்துகளும் மேலே கூறிய ஐந்து உறுப்புகளாக உருவகிக்கப்படுகின்றன. எனவே பாகங்கள் (அம்ஶங்கள்) அற்றதான ப்ரஹ்மம் ஆனந்தமயமாக கூறப்பட முடியாது. எனவே ஸம்ஸாரிதான் மற்ற கோஶங்களை போல இங்கும் கூறப்படுகிறான்.

ஸித்தாந்தம் :- ஆனந்தமயன் பரமாத்மாதான். ஆனந்த என்ற சொல்லை பலமுறை கூறி மீதியுள்ள பகுதியில் இவனே திரும்ப திரும்ப கூறப்படுகிறான். திரும்ப திரும்ப சொல்வது என்பது முக்கியத்வத்தை காட்டுகிறதாகும். இந்த புனருக்தியானது தாத்பர்யலிங்கமாதலால், வேதாந்தங்களின் தாத்பர்யம் ப்ரஹ்மத்தில்தான் என்று ஸமன்வயாதிகரணத்தில் நிர்ணயித்-துள்ளது. மேலும் உபநிஷத்தில் ஆரம்பத்தில் "அனந்தம் ப்ரஹ்ம" என்று ப்ரஹ்மத்தில் ஆரம்பித்ததை பூர்த்தியாக்கும் இடம் இது. அடுத்தாற்போல் इदं सर्वमसृजत என்று உலகனைத்தையும் ஸ்ருஷ்டி செய்பவனாக ஆனந்தமயன் சொல்லப்படுகிறான். "மய" என்ற வார்த்தைப்பகுதி மாறுதலை கூறுவதால் ப்ரஹ்மம் மாற்றம் அடையாததை எவ்வாறு ஆனந்தமயன் என்று கூற முடியும் என்ற கேள்வி எழாது. ஏனெனில் அதிகமாக உள்ள தன்மையையும் "மய" என்ற சொல் கூறமுடியும். எனவே ஆனந்தம் மிகுந்ததான ப்ரஹ்மம் ஆனந்தமயன். ப்ரிய, மோத உறுப்புகள் உபாதியினால்

உண்டானவை என்பதால் தோஷம் இல்லை என்பது சிலரின் கொள்கை.

*இரண்டாம் வர்ணகம் :-*

விஷயம் :- ஆனந்தமய கோஶம் கூறும் அனுவாகம்.

ஸந்தேஹம் :- இந்த பகுதியில் கூறப்படும் ब्रह्म पुच्छं प्रतिष्टा என்ற வாக்கியம் ப்ரஹ்மத்தை ஆனந்தமயனின் உறுப்பாக (அம்ஸமாக) கூறுகிறதா? ப்ரதானமாக கூறுகிறதா?

பூர்வபக்ஷம் :- ஸ்பஷ்டமாக புச்சம் (வால் போன்றது) என்று ப்ரஹ்மம் கூறப்படுவதால் ஆனந்தமயனின் அம்சம்தான் ப்ரஹ்மம், ப்ரதானமானது அல்ல.

ஸித்தாந்தம் :- இந்த பகுதியில் எந்த கோஶத்திலுமே (அன்னமய, ப்ராணமய..) புச்சம் என்ற வார்த்தைக்கு "வால்" tail என்ற முக்யார்த்தம் வரவில்லையாதலால், அது பொருந்தாது அன்றோ! எனவே பறவைகளுக்கு தரையில் உட்காரும்போது, பின்பகுதியில் வால் போன்று காணப்படும் பகுதிதான் ஸ்திரத் தன்மைக்கு ஆதாரமாக உள்ளதால் லக்ஷணையின் வாயிலாக ஆதாரம் என்று பொருள் கொள்ளவேண்டும். எனவே அன்ன-மயாதி, ஆனந்தமய உள்பட எல்லாவற்றிற்கும், உலக இன்பங்களுக்கும் ஆதாரமாக உள்ள ப்ரஹ்மமே இங்கு ஸ்வயம் ப்ரதானமாய் போதிக்கப்படுகின்றது. எனவேதான் सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म என்று ஆரம்பத்தில் கூறிய அதே வார்த்தை இங்கு உபயோகப்பட்டுள்ளது. ஜீவனுக்குமே ஆதாரம் ப்ரஹ்மம்தானே! மேலும் அடுத்தாற்போல் ஆனந்தமயனை விளக்கும் பகுதியில் असन्नेव स भवति என்றவாறு "ப்ரஹ்மத்தை உணராதவன் அஸத்தாகிறான்" என்று விளக்குவதால், ஆனந்தமயனை யாவரும் இன்பகாலத்தில் போக்தாவாக உணருவதால், ஆனந்தமயனின் விளக்கமாக அந்தப்பகுதி அமையாது. மேலும்

ब्रह्म பதத்தைதான் ஆவர்த்தி செய்கிறது. மேலும் ப்ருகு வல்லியில் ஐந்தாவது கூறப்படும் ஆனந்தம், ப்ரஹ்மம் என்று கூறப்படுவதால் இங்கும் ஐந்தாவது ஆனந்தமயன் ப்ரஹ்மம் என்று கூறுவது தவறு, அங்கு "மய" என்றும் இல்லை, "ஆனந்த" என்றுதான் உள்ளது. ஆனந்தம் அதிகம் உள்ளது என்று பொருள் கொண்டாலும், துக்கம் ஸ்வல்பம் இருப்பதாக ஆகிவிடும். அது ஸரியல்ல. மேலும் உபாதிகளற்ற நிருபாதியான ப்ரஹ்மம் இங்கு உணரப்படவேண்டும்.

## 1.1.6 V आनन्दमयोऽभ्यासात् (8 सूत्रा ण)

இந்த ஸூத்ரத்தில் भेदव्यपदेशाच्चान्यः ஸூத்ரத்திலிருந்து அன்ய: என்ற சொல்லை ஆகர்ஷிக்கிறோம். "எனவே ஆனந்தமய கண்டத்தில் अन्योन्तर आत्मा आनंदमयः கூறப்படும் ஆனந்தமயன் ஜீவனைக் காட்டிலும் அன்யன் = வேறுபட்டவன்; अभ्यासात् = மேன்மேலும் நூறுமடங்கு ஆனந்தம் அதிகரிக்கும் என்று திரும்ப-திரும்ப கூறப்படும் ஆனந்தத்தை இந்த ப்ரகரணத்தில் ஆனந்தமயனுக்கு தொடர்புடையதாக சொல்லப்படுகிறது அல்லவா!" என்று ஸூத்ரார்த்தம். மேலும் अभ्यासात् என்ற பதத்தை இருமுறை கூறியதாக வைத்துக்கொண்டு மற்றொரு பொருளும் கிடைக்கிறது - மறுமுறை கூறப்படுவதால் என்று ஆவ்ருத்த அப்யாஸ பதத்தின் அர்த்தம். எனவே ஆனந்த-வல்லியிலும், ப்ருகுவல்லியிலும் स यश्चायं पुरुषे यश्चासावादित्ये स एकः - என்று ஆனந்தமயனுக்கும் ஸூர்ய-மண்டலத்தினுள் உள்ளவருக்கும் ஐக்யம் கூறப்படுவதால் என்ற பொருள் கிடைக்கிறது. ஆறுவிதமான தாத்பர்ய-லிங்கங்களில் அப்யாஸம் என்ற தாத்பர்யலிங்கம் கிடைப்பதால் ஆனந்தமய, ஆதித்ய மண்டலத்துள் இருப்பவருக்கு ஐக்யம் திடப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- ஆனந்தவல்லியில் ஆரம்பத்தில் ப்ரஹ்ம லக்ஷணம் கூறிவிட்டு, ஆகாஶாதி ஸ்ருஷ்டியை கூறி ப்ரஹ்மத்திற்கே ஆத்மத்வமும் சொல்லபட்டு அந்த ஆத்மாவின் பரம்பரையில் விக்ஞானமயம் வரை கூறிவிட்டு அதற்கு உள்ளே ஆனந்தமயன், ஶரீரத்தின் உள்ளே ஶாரீரனாக உரைக்கப்படுகிறான், அன்யோந்தர ஆத்மா தஸ்ய ஶாரீரன் என்று. எனவே இந்த ஆனந்தமயன் ப்ரஹ்மம் என்றாகிறது. இவருக்கு ஶரீரஸம்பந்தம் (शरीर आत्मा) என்று கூறப்படுவதால் கர்மபரவஶனான ஜீவனுக்கு தான் கர்மபலனை அனுபவிப்பதற்காக ஏற்பட்டுள்ளது. கர்ம வஶ்யனாக இல்லாத பரமாத்மாவிற்கு கிடையாது. ஆகையால் ஶரீர ஸம்பந்தம் உடையவனாக கூறப்படும் ஆனந்தமயன் ஜீவன்தான்.

ஸித்தாந்தம் :- நிருபாதிகமான பரமானந்தத்வம் ஜீவனுக்கு ஸம்பவிக்காது. அகிலஜகத்தையும் ஶரீரமாக உடைய பரமாத்மாவிற்கு ஸகலஶரீரகத்வம் என்கின்ற ஶரீரித்வம் பொருந்தும் என்பதால் அத்தகைய பேரானந்தத்தன்மை உடையவராக சொல்லப்படும் ஆனந்தமயன் பரமாத்மாதான். இங்கு "மய" என்ற சொல்லிற்கு விகாரம் என்ற பொருள் கிடையாது. "மிக அதிகம்" என்று பொருள். எனவேதான் அந்த ஆனந்தமயமானது வாக்கு மனஸிற்கு அப்பாற்பட்டது यतो वाचो निवर्तन्ते என்ற வாக்கியத்தால் குறிக்கப்படுகிறது. இந்த விஷயம் பரமாத்மாவிற்கே பொருந்தும். "துக்கமும் ஸ்வல்பம் உண்டு", என்று ஸந்தேஹம் ஏற்படாதபடி மேலே ஆனந்தமயனுக்கு சதுர்முக ப்ரம்மாவைவிட அதிகமான ஆனந்தம் என்று ஆனந்தமய வார்த்தை விவரிக்கப்படுகிறதன்றோ! மேலும் விக்ஞானமயன் என்கிற ஜீவனைக்காட்டிலும் "विज्ञानमयात् अन्योन्तरआत्मा आनन्दमय:" என்று. மேலும் ஜகத்ஸ்ருஷ்ட்ருத்வம் सोऽकामयत என்றாரம்பித்து इदं सर्वमसृजत என்று ஆனந்தமயனுக்கு சொல்லப்படுவதால் ஆனந்தமயன் பரமாத்மாதான். மேலும் ஏஷ ह्येवानंदयाति- என்று ஜீவன்களை

ஆனந்தமயன் இன்பமுள்ளவர்களாக செய்கிறான் என்று சொல்லப்படுவதால் ஆனந்தப்பட வைக்கும் பரமாத்மா ஜீவனைக்காட்டிலும் வேறுப்பட்டவனாகிறான்.

## 1.1.6 D आनन्दमयोऽभ्यासात् (8 सूत्राणि)

விஷயம் :- தைத்திரீய உபநிஷத்தில் வரிசையாக அன்னமய, ப்ராணமய, மனோமய, விக்ஞானமய, ஆனந்தமய என்றவாறு குணமுடைய ஐந்து பெயர்கள், அதன் குணமான விக்ஞான, ஆனந்தங்களாலும் கூறப்பட்டுள்ளது விஷயம்.

ஸித்தாந்தம்:- இந்த வாக்யங்கள் சதுர்முக ப்ரஹ்மாவை கூறுகின்றனவா? பரமாத்மாவான விஷ்ணுவை (ப்ரஹ்மம்) கூறுகின்றனவா?

பூர்வபக்ஷம் :- அன்னமய போன்ற சொற்களில் விகாரத்தை (மாற்றத்தை) குறிக்கும் "மய" என்ற சொல் வருகிறது. ப்ரஹ்மமாகிய விஷ்ணுவிற்கோ "நிர்விகார: அக்ஷரம் பர: சுத்த::" என்றபடி நிர்விகாரமானபடியால் அன்னமயாபிமானத்வம் பொருந்தாது. "மய" என்பதற்கு "அதிகத்தனம்" என்று கொண்டாலும், துக்கம் சிறிது உண்டு என்றாவதால் ஸரியில்லை. மேலும் அன்னத்தின் பரிணாமமான (விகாரமான) உடலை அன்னமய என்று முதலில் கூறியுள்ளபடியால், மற்ற இடங்களிலும் விகாரம்தான் பொருள். மேலும் ப்ரஹ்மம் அஶரீரம் என்று கூறப்படுவதால், ஶரீர ஸம்பந்தம் உள்ள இந்த கோஶங்கள் ப்ரஹ்மமன்று (ஆகாது). மேலும் "ப்ரஹ்ம புச்சம் ப்ரதிஷ்டா" என்ற இடத்தில் ஆனந்தமயத்தின் அவயவமாக ப்ரஹ்மம் கூறப்படுவதால் ஆனந்தமயமும் ப்ரஹ்மமாகாது. எனவே ஐந்து கோஶங்களோ விகாரத்வங்கொண்ட ப்ரக்ருதியோ, விகாராபிமானியான ஜீவனோ, அல்லது வேறு யாரோதான் கூறப்படுகிறான். விஷ்ணுவல்ல.

ஸித்தாந்தம் :- அன்னமயாதியான ஐந்தும் ப்ரஹ்மமே. ஏனெனில் येऽन्नं ब्रह्मोपासते என்றவாறு ஒவ்வொரு கோஶத்திலும் ப்ரஹ்ம என்று பதம் கூறப்படுகிறது. விக்ஞானமய, ஆனந்தமயங்களில் ப்ரஹ்ம பதம் திரும்ப கூறப்படுகிறது. மேலும் ஐந்து இடங்களிலும் "ஆத்மானம்" என்றபடி ஆத்ம ஶப்தம் வருகிறது. மேலும் அன்னமயத்தில் अद्यतेऽत्ति च भूतानि போன்ற வாக்யங்களினால் எல்லோராலும் அண்டப்படவேண்டிய தன்மையும், எல்லாவற்றையும் ஸம்ஹரிக்கும் தன்மையும் சொல்லப்படுகிறது. ப்ராணமய கோஶத்திலும் ஸர்வதேவாதி சேஷ்டகத்வமும், ஸர்வஜகத்திற்கும் ஆயுர்ஹேதுகத்வமும் வர்ணிக்கப்படுகின்றது. மனோமயத்தில் ஸர்வ வாக் மனதினால் அறியமுடியாத தன்மையும் சொல்லப்படுகிறது. விக்ஞான-மயத்தில் विज्ञानंदेवा: सर्वे ब्रह्म ज्येष्टं उपासते என்று ஸர்வதேவ உபாஸ்யத்வம் கூறப்படுகிறது. ஆனந்தமயத்தினுள் ஸர்வஜகத்-ஸ்ருஷ்ட்ருத்வம் सोऽकामयत என்று கூறப்படுகிறது. மேலும் ஐந்து கோஶங்களுக்கும் ப்ரளயத்வம் उपसंक्रामति என்று சொல்லப்-படுகிறது. ப்ரஹ்மம் ஸர்வநியாமகரானபடியால் அவயவீ, அவயவ - இரண்டு ரூபத்திலும் கூறப்படலாம். ஆகையால் ஸாதக ப்ரமாணம் உள்ளதால், பாதிக்கும் ப்ரமாணம் இல்லாததால், அனிருத்த போன்ற ஐந்து ப்ரஹ்ம ரூபங்களே கோஶங்களில் கூறப்படுகின்றன.

## 1.1.7 A अन्तस्तद्धर्मोपदेशात् (2 सूत्रे)

விஷயம் :- சாந்தோக்ய உபநிஷத்தில் अथ य एषोऽन्तरादित्ये हिरण्मय: पुरुषो दृश्यते என்ற வாக்யம்.

ஸந்தேஹம் :- மேற்கூறிய வாக்யத்தில் கூறப்படும் புருஷன் உபாஸனை கர்மங்களின் மஹிமையால் உயர்ந்த பதவியடைந்த ஜீவனா? எங்கும் நிரம்பிய ஈஶ்வரனா?

பூர்வபக்ஷம் :- ஸூர்யதேவன்தான் கூறப்படுகிறார். ஏனெனில் ரூபம், ஆதாரம், எல்லைகள் கூறப்படுகின்றன. தங்க நிறம் என்று ரூபமும், மண்டலம், கண் என்ற ஆதாரமும், இவரது ஆட்சிமைக்கு விண்ணுலகிற்கு மேல் உள்ளவை அல்லது விண்ணுலகிற்கு கீழ் உள்ளவை என்றவாறு அளவு (limitation) சொல்லப்படுகிறது. ஸர்வேஶ்வரனான ப்ரஹ்மத்திற்கு இந்த மூன்றும் பொருந்தாதே! எனவே தேவதாதான் உபாஸ்யமாக கூறப்படுகிறது.

ஸித்தாந்தம் :- இங்கு வர்ணிக்கப்படுபவருக்கு ஸர்வாத்மத்வம் -सैवर्क् तत्साम तदुक्थं तद्यजुः என்றவாறு சொல்லப்படுகிறது. இந்த ஸர்வாத்மத்வம் அத்விதீயமான ப்ரஹ்மத்திற்குத்தான் பொருந்தும். மேலும் இவருக்கு ஸர்வபாப ஸம்பந்தமின்மை கூறப்படுகிறது सर्वेभ्यः पाप्मभ्यः उदितः என்று. தேவதைகளுக்கு கர்மாவில் அதிகாரம் கிடையாததால் செய்யப்படும், செய்யப்போகும் பாபங்கள் ஏற்படாது. எனினும் அஸூரர்களால் தொல்லை ஏற்படுகின்றதால் அதன் காரணமான பாபம், முன்ஜன்மாந்தரத்தில் செய்ததினுடைய தொடர்புவருகிறது. எனவே ஸர்வபாபராஹித்யம் பொருந்தாது. ரூபம், ஆதாரம், ஆட்சியின் எல்லை மூன்றும் ஸோபாதிகமான ஸகுண ப்ரஹ்மத்திற்கு இருக்கமுடியும். ஆகையால் ஹிரண்மய புருஷன் ப்ரஹ்மம்தான்.

## 1.1.7. V अन्तस्तद्धर्मोपदेशात् (2 सूत्रे)

இந்த ஸூத்ரத்தில் அடுத்த ஸூத்ரத்திலிருந்து अन्यः என்ற

சொல்லைச்சேர்த்துக்கொண்டு, अन्तः- ஸூர்ய மண்டலத்தினுள் கூறப்படும் புருஷன், अन्यः- ஜீவனைக்காட்டிலும் வேறொருவன், तद्धर्मोपदेशात् -அந்த பரமாத்மாவின் தன்மைகள் கூறப்படுவதால் - என்று ஸூத்ரார்த்தம்.

பூர்வபக்ஷம் :- முன்பு ஆனந்தமயாதிகரணத்தில் ஆனந்தமயன் பூர்ணானந்த ப்ரஹ்மமே என்று கூறபட்டது தவறு. ஏனெனில் स यश्चायं पुरुषे स एकः என்றபடி ஆனந்தமயனுக்கும் ஸூர்யமண்டலத்திலுள்ளவனுக்கும் ஐக்யம் கூறப்படுகிறது. இந்த ஆதித்ய வித்யையில் தங்கமயமான கேசம் போன்ற உறுப்புகள் கூறப்படுகின்றன. இத்தகைய ஶரீரம் புண்ய விஶேஷமாகத்தான் ஏற்பட வேண்டும். இத்தகைய ஶரீர ஸம்பந்தம் உள்ளவனைத்தானே ஆனந்தமயனாக கூறமுடியும். எனவே முன்பு கூறிய ஸித்தாந்தம் தவறு. ஆகவே இங்கு கூறப்படும் புருஷன் ஸூர்யரூபமான ஜீவன்தான்.

ஸித்தாந்தம் :- இங்கு கூறப்படும் ஶரீரம் புண்ணியத்தின் பயனாக உண்டான ஶரீரம் அல்ல. सर्वेभ्यः पाप्मभ्यः उदितः என்று இவருக்கு புண்ணிய பாப ஸம்பந்தம் இல்லாததாக கூறப்படுகிறது. ஆகவே இங்கு தெரிவிக்கப்பட விரும்பும் உடல் புண்யத்தினால் உண்டானதான கர்மஜன்யமான ப்ராக்ருதமல்ல. ஆனால், आदित्यवर्णं तमसः परस्तात् என்றவாறு கூறப்படும் தனது இச்சை மாத்திரத்தினால் உண்டான அப்ராக்ருதமான ஶரீரம் என்று கொள்ளவேண்டும். மேலும் ஆதித்யமண்டலத்தினுள் உள்ள தேவதைக்கும் அந்தர்யாமியாக "सः सर्वेषु देवेषु तिष्ठन्" என்றபடி ஸர்வதேவதைகளான ப்ரம்மன், ருத்ரன் போன்றவர்களுக்கும் அந்தர்யாமியாய் கூறப்படுவதால் இவர் (இந்த புருஷன்) ஜீவனாக மாட்டான். மேலும் இந்த புருஷனுக்கு புண்டரீகாக்ஷன் என்று விஶேஷணம் உள்ளது. ஸர்வ பாப ஸம்பந்தமற்றவனாக

கூறப்படுகிறது."अपहतपाप्मा दिव्यो देव एकोनारायण:" என்ற நாராயணரின் ப்ரத்யபிஜ்ஞை (recollection) இங்கு ஏற்படுகிறது. எனவே இங்கு ப்ரஹ்மமான நாராயணரே கூறப்படுகிறார்.

## 1.1.7. D अन्तस्तद्धर्मोपदेशात् (2 सूत्रे)

விஷயம் :- अन्त: प्रविष्टं कर्तारमेतं सहैव मंत्रं न विजानन्ति देवा: என்ற காடக வாக்யம் இங்கு அந்தஸ்தனுக்கு அத்ருஶ்யத்வம் கூறப்படுகிறது. எனவே அத்ருஶ்யத்வ அடையாளத்தினால் ஆனந்தமயன் ப்ரஹ்மம் என்று முன்பு கூறியது ஆக்ஷேபத்திற்கு உரியது என்ற ஆக்ஷேபத்திற்கு பதிலாக இந்த அதிகரணம் அமைகிறது.

ஸந்தேஹம் :- இங்கு சொல்லப்பட்ட புருஷன் இந்திரன், அக்னி, ஸூர்யன் போன்ற தேவதையா? விஷ்ணுவா?

பூர்வபக்ஷம் :- இந்திரன் போன்ற தேவதைகள்தான். ஏனெனில் இந்த ப்ரகரணத்தில் इंद्रो राजा, ब्रह्मेंद्रमग्निम्, सप्तयुञ्जन्ति என்றெல்லாம் இந்திர, அக்னி, ஸூர்யன்களை கூறுகிறது. अपां नेतारम् என்று வருண லிங்கமும் (அடையாளம்) கூறப்படுகிறது. அத்ருஶ்யத்வம் போன்ற விஷ்ணு அடையாளத்தை விட நேரிடையான இந்திர, அக்னி போன்ற ஶ்ருதியும் லிங்கமும் தேவதைகளுக்கு அமைவதால் விஷ்ணுலிங்கம் துர்பலமானது. அல்லது இரண்டுவிதமான அடையாளங்களினால் இந்திராதிகளுக்கு விஷ்ணுவுடன் ஐக்யமிருக்கட்டும். அப்படி இருப்பினும் இங்கு கல்பிதபேதமுடைய இந்திராதிதேவதையில் ஒருவர் அந்தஸ்தனாக கூறப்படுகிறார்; விஷ்ணு அல்ல.

ஸித்தாந்தம் :- अन्त: समुद्रे मनसा चरन्तं यस्याण्डकोशं शुष्ममाहु: என்றெல்லாம் ஸமுத்திரத்தினுள் இருக்கிறார் என்று எவருடைய

பலத்தினால் ப்ரம்மாண்டம் இயங்குகிறதோ என்றெல்லாம் இந்த ப்ரகரணத்தில் ப்ரமாண லிங்கங்கள் (அடையாளங்கள்) ஶ்ருதி சொல்லிலேயே கிடைக்கின்றன. இவைகள் நிறைய உள்ளதால் இந்திராதிகள் கூறப்பட முடியாது. மேலும் इंद्रादयात्मानवायोरात्मानम् என்றவாறு இந்திராதிகளைக் காட்டிலும் அந்தஸ்தனுக்கு பேதம் கூறப்படுவதால் ஐக்யம் வரமுடியாது. மேலும் இந்திரன் போன்ற வார்த்தைகளுக்கு ஐஶ்வர்யமுடையவன் என்றமாதிரி யௌகிக பொருள் கொண்டு விஷ்ணு வாசகத்வம் பொருந்தும். ஆகையால் இந்த அந்தஸ்தன் விஷ்ணுவேதான்.

## 1.1.8 A आकाशस्तल्लिंगात् (1 सूत्रम्)

**விஷயம் :-** सर्वाणि ह वा इमानि भूतानि आकाशादेव समुत्पद्यंते என்ற சாந்தோக்ய வாக்யம் விஷயமாகிறது.

**ஸந்தேஹம் :-** இங்கு ஆகாஶம் என்ற வார்த்தை ஆகாஶத்தை குறிக்கிறதா? ப்ரஹ்மத்தை குறிக்கிறதா?

**பூர்வபக்ஷம் :-** உலகில் ப்ரஸித்தமாக ஆகாஶம் என்று கூறினால் ரூடியாக வானம்தான் அறியப்படுகிறது. ஆகாயத்திற்கு ஸர்வபூத உற்பத்தி லயகாரணத்வம் பொருந்தும். ஏனெனில் आकाशात्वायुः वायोरग्निः अग्नेरापः என்று தைத்திரீயத்தில், வாயு போன்ற பூதபௌதிகங்களின் படைப்புக்கு ஆகாஶம் காரணம் என்று சொல்லப்படுகிறது.

**ஸித்தாந்தம் :-** மந்திரத்தில் सर्वाणिभूतानि என்றபடி ஆகாஶத்தையும் சேர்த்து எல்லா பூதங்களும் கார்யப்பொருளாகவும், எல்லாவற்றின் லயகாரணமாகவும் சொல்லப்படும் ஆகாஶம் என்ற வார்த்தை ப்ரஹ்மத்தை கூறுகிறது. ஆகாஶம் தனக்கு காரணமாக ஆக முடியாதன்றோ! உலக ப்ரஸித்தி ஆகாஶத்திற்கு இருந்தாலும்,

வேதத்தில் ஆகாஶஶப்தம் ப்ரஹ்மத்தையே கூறும். आकाशो ह वै नाम नामरूपयो: निर्वहिता என்ற இடத்தில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. ஆகாஶத்தையே கூறும் व्योम என்ற சொல்லும் "परमे व्योमन्" என்ற இடத்தில் ப்ரஹ்மத்தை கூறுகிறது. மேலும் आकाशादेव என்பதாக ஏவ என்ற வார்த்தை மற்றதை விலக்குவதாலும் ப்ரஹ்மம் மட்டுமே இங்கு கூறப்பட வேண்டும். ப்ரஹ்மமமானது ஸர்வத்துடன் வேறாக இல்லாததால் ஏவகாரம் பொருந்தும். மேலும் ஜ்யாயஸ்த்வம் (மேம்பட்டத்தன்மை), பராயணத்வம் (எல்லாவற்றிற்கும் லக்ஷ்ய-மான தன்மை) என்ற இரண்டு தன்மைகளும் வேறு உபநிஷத்தில் ப்ரஹ்மத்திற்கே உரைக்கப்படுகிறது - ज्यायान्पृथिव्या: ज्यायानन्तरिक्षात्, विज्ञानमानंदं ब्रह्म रातिर्दातु: परायणम् என்று. ஆகையால் இந்த இடத்தில் ஆகாஶஶப்தம் ப்ரஹ்மத்தை கூறுவதாகவே ஆகும்.

## 1.1.8 V आकाशस्तल्लिंगात् (1 सूत्रम्)

பூர்வாதிகரணங்களில் அந்த அந்த லிங்கங்களால் (அடையாளங்-களால்) ஜகத்காரண வஸ்து ப்ரஹ்மம்தான் என்று நிர்ணயித்ததை ஆக்ஷேபித்து பதில் கூறுவதற்கு இந்த ஸூத்ரத்தில் முந்தைய ஸூத்ரத்திலிருந்து अन्य: (வேறுபட்டவன்) என்ற சொல் சேர்த்துக்கொண்டு -ஆகாஶ: - ஆகாஶ பதத்தால் கூறப்படுபவர் अन्य: = பூதாகாஶத்தைக்காட்டிலும் வேறுபட்டவர் तल्लिंगात् = அந்த பரமாத்மாவின் லிங்கமிருப்பதால் என்று ஸூத்ரார்த்தம்.

பூர்வபக்ஷம் :- ஈக்ஷணம் போன்ற லிங்கங்களால் ப்ரஹ்மத்திற்கு அசேதனனின்று வேறுபட்டத் தன்மையை நிர்ணயிப்பது தவறு. यतो वा इमानि என்றவாறு ஜகத்காரணத்வம் ப்ரஹ்மலக்ஷணம் என்று கூறபட்டது. "எந்த ஒருவரிடமிருந்து (விஶேஷமாக) பூதங்கள் உண்டாகின்றன?" என்று ஜிக்ஞாஸை ஏற்பட்டதும் ஏதோ ஒரு லிங்கத்தினால் விஶேஷ தீர்மானம் ஏற்படுவதற்கு

முன்பே தாமதமில்லாமல் நிர்ணயம் கூறும் ப்ரபலமான "ஆகாஶம்" என்று ஶ்ருதியினால் பூதாகாஶமாகிற விஶேஷம் நமக்கு ஸ்புரிப்பதால், லிங்கத்தினால் நிர்ணயம் வராது. இவ்விதம் பூதாகாஶத்திற்கு காரணத்வம் நிர்ணயமான பிறகு ஈக்ஷணம் போன்றவைகள் இரண்டாம் நிலையில் எடுத்துக் கொள்ளப்படவேண்டும்.

ஸித்தாந்தம் :- "கங்கையில் வீடு" என்ற வாக்யத்தில் வீட்டிற்கு ஆதாரமாக கங்கை இருக்க முடியாது என்று ப்ரத்யக்ஷம் கூறுவதால் கங்கை என்ற சொல்லிற்கு "கங்கையின் கரை" என்ற இரண்டாம் நிலையில் பொருள் கூறப்படுவது போல், பொருள் பாதிக்கப்பட்ட ஶ்ருதியை விட பாதிக்கப்பட முடியாத வேதத்தில் கூறிய லிங்கம் (அடையாளம்) ப்ரபலமாகிறபடியால்; இங்கு ஆகாஶபதத்திற்கு முக்யார்த்தமான பூதாகாஶம் என்று எடுத்துக்கொண்டால் பெரியதன்மை (ज्यायस्त्वम्) எல்லாவற்றிற்கும் பரமலக்ஷ்யத்தன்மை (परायणत्वम्) போன்றவை பாதிக்கப்படுகின்றன. எனவே ஆகாஶஶ்ருதியின் ப்ராபல்யம் பயனற்றது. பாதிக்கப்பட முடியாத ஶ்ருதியில் கூறிய லிங்கங்களால் "நான்கு புறமும் ப்ரகாஶிப்பதால்" ஆகாஶம் ப்ரஹ்மமே என்பதால் மேற்கூறிய ஆக்ஷேபம் எழாது.

## 1.1.8 D आकाशस्तल्लिंगात् (1 सूत्रम्)

விஷயம் :- அதே ஆகாஶலிங்கம்தான் விஷயம்.

ஸந்தேஹம் :- ஆகாஶம் = பூதாகாஶமா? அல்லது விஷ்ணுவா?

பூர்வபக்ஷம் :- ஆகாஶஶப்தம் பூதாகாஶத்திலே ரூடமானது. எனவே விஷ்ணுவை கூறாது. விஷ்ணுவின் லிங்கம் ஸர்வபூத-

காரணத்வம் இருப்பதால் விஷ்ணுவாக இருக்கட்டும் எனக்கூறமுடியாது. ஶ்ருதியைக் காட்டிலும் லிங்கம் துர்பலமானது. பூர்வாதிகரணத்தில் இந்திராதி வார்த்தைகளை ஐஶ்வர்யமுடையன் என்ற யோகபொருள் கொண்டு விஷ்ணு பரமாக நிர்ணயித்தது போல் ஏன் இங்கு முடியாது என்றால், இடமளிப்பது (विवरत्वम्) என்ற குணம் ஆகாஶத்திற்கு விஷ்ணுவின் அதீனமாக ஏற்பட்டதல்ல. அசேதனத்திற்கு ஈஶ்வர ப்ரஸாதம் ஏற்பட முடியாது என்பதால் , ஈஶ்வர அதீனத்வம் பொருந்தாது . (ஐஶ்வர்யம் போல்). விவரத்வம் பொருந்துவதில்லை. எனவே பூதாகாஶம்தான் இங்கு கூறப்படுகிறது.

ஸித்தாந்தம் :- இங்கு கூறப்படும் பரோவரீயஸ்த்வம், உத்கீதத்வம், அனந்தத்வம் போன்ற தன்மைகள்; "परस्मादुत्तमं प्रोक्तम्" என்ற ஸ்ம்ருதியினாலும், "परो भावय" என்ற ஶ்ருதியினாலும், विष्णोर्नुकं वीर्याणि என்ற ஶ்ருதியினாலும் விஷ்ணுவிடம் மட்டுமே இருப்பதாக நிர்ணயிக்கபட்டுள்ளது. எனவே உலக ப்ரஸித்தியை தள்ளி ஆகாஶஶப்தம் விஷ்ணுவையே கூறுவதாகும், பொதுத்தன்மை இரண்டிற்கும் இல்லையே என்ற எண்ணம் வேண்டாம். नभो ददाति श्वसतां मार्गं यन्निभमाददः எவரால் ஆகாஶம் இடைவெளியை தரும் சக்தி பெறுகிறதோ என்று கூறும் ஸ்ம்ருதியில் விவரத்வம் ஈஶ்வராதீனம்தான். மேலும் சேதனனே ஈஶ்வராதீனமாயிருக்கிறான் என்றால் அசேதனத்தை பற்றி கூறவேண்டுமோ கைமுதிக ந்யாயத்தினால் ஈசாதீனத்வம் ஏற்படுகிறது. இந்த விவரத்வம் விஷ்ணுவிற்கு நேரிடையாகவே உள்ளதாக கீதை கூறுகிறது "सर्वभूतगुणैर्युक्तम्" என்று. ஆகையால் ஆகாஶஶப்தம் விஷ்ணுவைக் குறிக்கிறது.

## 1.1.9 A अत एव प्राणः (1 सूत्रम्)

சாந்தோக்ய உபநிஷத்தில் ஆகாஶவாக்யத்திற்குப் பிறகு "ப்ரஸ்தாவம்" என்கிற ஸாமாவயவத்தில் எந்த தேவதையை நினைக்க வேண்டும் என்கிற கேள்விக்கு பதிலாக இந்த வாக்கியம் கூறப்படுகிறது - प्राण इति होवाच । सर्वाणि ह वा इमानि भूतानि प्राणमेवाभिसंविशन्ति என்று இதுதான் இந்த அதிகரணத்தின் விஷயம்.

ஸந்தேஹம் :- இங்கு ப்ராணன் என்ற சொல் மூச்சுக்காற்றை கூறுகிறதா? ப்ரஹ்மத்தைக் கூறுகிறதா?

பூர்வபக்ஷம் :- மூச்சுகாற்றைத்தான் கூறுகிறது. ஏனெனில் அந்த பொருள்தான் உடனடியாக ப்ரஸித்தமானதாக ரூடியின் மூலம் அறியப்படுகிறது. மேலும் ப்ராணனில் இங்கு கூறப்படும் ஸர்வ-பூதலயம் பொருந்தும்; தூக்க நேரத்தில் ஸர்வபூதங்களின் ஸாரமான இந்திரியங்கள் ப்ராணனில்தானே ஒடுங்குகின்றன.

ஸித்தாந்தம் :- இந்திரியங்கள் யாவையும் ஒடுங்கினாலும் பூத-பௌதிகங்கள் யாவையும் ஒடுங்குவதாக கூறப்படும் सर्वाणि भूतानि என்ற விஷயம் மூக்கிற்கு பொருந்தாது. மேலும் ப்ராண ஶப்தமானது ப்ரஹ்மத்தில் ரூடமாகவே ஸ்பஷ்டமாக प्राणस्य प्राण: என்ற இரண்டாவது ப்ராணஶப்தம் குறிக்கிறது. எனவே ப்ராணன் என்ற வார்த்தை ப்ரஹ்மத்தையே குறிக்கிறது.

## 1.1.9 V अत एव प्राण: (1 सूत्रम्)

சென்ற அதிகரணத்தின் விரிவுதான் இது. முன் அதிகரணத்தில் ப்ரஸித்தமானதாக "ஹ வை" என்ற இரு அவ்யயங்களால் ப்ராணனுக்கு ஸர்வபூதலயாதாரத்வம் கூறப்படுகிறது. முன்

போலவே "அன்ய:" என்ற சொல்லை அனுவர்த்தித்துக்கொண்டு "ப்ராண:"= ஶ்ருதியில் வரும் ப்ராணன் என்ற பதத்தின் பொருள் "அன்ய:"= மூச்சுக்காற்றை தவிர வேறுதான்.

பூர்வபக்ஷம் :- ஆகாஶஶப்தத்திற்கு ஆகாஶம் என்று கூறுவது வாக்யஶேஷத்திற்கு பொருந்தாததானபடியால் சென்ற அதிகரணத்தில் ஆகாஶஶப்தம் ப்ரஹ்ம வாசகம் என்று கூறினாலும் இங்கு ஸர்வப்ராணிகளுக்கும் ப்ராணனால்தான் உற்பத்தி, ஸ்திதி யாவும் காணப்படுவதால் ப்ராணனை காரணமாக சொல்லும் இந்த வாக்யத்தில் மூச்சுக்காற்றுத்தான் பொருள்.

ஸித்தாந்தம் :- நீங்கள் கூறியபடி ஏற்றால் "ஸர்வாணி பூதானி" என்றவாறு சேதனனுக்கும் ப்ராணாதீனமாக உற்பத்தி ஸ்திதி கூறப்படுவது பொருந்தவே பொருந்தாது. எனவே வாக்கிய ஶேஷம் ப்ராணனிடத்தில் பாதிதம் (बाधितम्). பொருந்தாது. மேலும் "ஹ வை" என்ற இரு பதங்கள் ப்ரஸித்தியை கூறுவதால், ப்ரஸித்தியானது नारायणात् ब्रह्माऽजायत என்று ஶ்ருதியில் உள்ளது ஆகையால் மேற்கூறிய ப்ராபக வாக்கியத்தை அனுஸரித்து ப்ராண பதார்த்தம் நாராயணனே என்று தீர்மானமானபோது, ப்ராணவாயு என்ற ஸந்தேஹமே தவறு. நாராயணனிடத்தில் "ப்ராணயதி = ஜீவயதி" என்றபடி உயிர்வாழவைப்பவர் என்று காரணப்பெயராகபொருந்துகிறது. ஆகவே ப்ராண ஶப்தம் பரமாத்மாவையே குறிக்கிறது.

# 1.1.9. D अत एव प्राण: (1 सूत्रम्)

விஷயம் :- "तद्वै त्वं प्राणो अभव:" என்ற காடகத்திலுள்ள வாக்கியம் விஷயமாகிறது. மேலும் அடுத்த அனுவாகத்தில் भर्ता सन् म्रियमाणो बिभर्ति என்றும் சொல்லப்படும் ப்ராணன் விஷயம்.

**ஸந்தேஹம் :-** இந்த ப்ராணன் மூச்சுக்காற்றா? அல்லது விஷ்ணுவா?

**பூர்வபக்ஷம் :-** சென்ற அதிகரணத்தில் ப்ரஹ்மலிங்கத்தினால் ஆகாஶத்தை நிராகரித்தாலும், இங்கு ப்ராண ஶப்தத்திற்கு விஷ்ணுவிடத்தில் ரூடி இல்லாததால், உலக ப்ரஸித்தியான முக்கிய ப்ராணன் - மூச்சுக்காற்றுதான் ப்ராணன். யோக வ்யுத்பத்தியை எடுத்துக்கொண்டாலும் ஜீவனகாரணத்வம் மூச்சுகாற்றிற்குத்தான் பொருந்தும், ப்ராணன் விஷ்ணு அல்ல.

**ஸித்தாந்தம் :-** சென்ற அனுவாகத்தில் अद्भ्यः संभूतः என்றதில் ह्रीश्च तेलक्ष्मीश्च पत्न्यौ என்று லக்ஷ்மீ பதித்வம் என்கிற நிரவகாஶ லிங்கத்தினால் லோகப்ரஸித்தியை தள்ள வேண்டும். இந்த வாக்யத்தில் "தே" = உன்னுடைய என்று வருவதால், இதே விஷ்ணுவைத்தான் "तद्वै त्वम्" என்ற நீ என்ற வாக்கியம் கூறுகிறது. மேலும் भर्ता सन् என்ற அனுவாகத்தில் तमेव मृत्युममृतं तमाहुः என்றபடி அம்ருதத்வம் என்ற லிங்கம் விஷ்ணுவிற்கே பொருந்தும். மேலும் तत्प्राणः என்ற ஶ்ருதியில் முக்கிய ப்ராணனுக்கு விஷ்ணு தேஹத்வம் சொல்லியுள்ளது. எனவே ஜீவனஹேதுத்வம் விஷ்ணுவிற்கும் பொருந்தும். மேலும் प्राणस्य प्राणः என்ற இடத்தில் விஷ்ணுவிடம் ப்ராணஶப்தம் ரூடமாக பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆகையால் யோகம் ரூடி இரண்டி-னாலும் ப்ராணன் என்ற ஶப்தம் விஷ்ணுவையே குறிக்கிறது.

## 1.1.10 A ज्योतिश्चरणाभिधानात् (4 सूत्राणि)

**விஷயம் :-** சாந்தோக்யம் மூன்றாவது அத்யாயத்தில் ஹ்ருதயச்-சித்ரத்தின் (ஓட்டை) வித்யையைக் கூறிய பிறகு கூறப்படும் अथ यदतः परो दिवो ज्योतिः दीप्यते வாக்யம் விஷயம்.

ஸந்தேஹம் :- இங்கு கூறப்பட்டுள்ள ஜ்யோதி என்பது கார்யமான கண்ணுக்கு உதவும் ஒளியா, ப்ரஹ்மமா?

பூர்வபக்ஷம் :- உண்டுபண்ணபட்ட ஒளிதான். ஏனெனில் இங்கு ப்ரஹ்மமானது அருகில் கூறப்படவில்லை. ஆனால் ஜ்யோதிஸ் அக்னிதான் என்று கூறுவதற்கு வாக்ய ஶேஷத்தில் லிங்கங்கள் (அடையாளங்கள்) உள்ளன. 1. தீப்யதே - என்று ஒளிர்கிறது என்ற அடையாளம் 2. इदं वाव तद्यदिदमस्मिनन्त: पुरुषे ज्योति: என்பதாக அந்த தேஜஸ்ஸை ஶரீரத்தினுள் உள்ள ஜாடராக்னியுடன் அபேதமாகக் கூறப்படுவது. எனவே ப்ரஹ்மம் அல்ல.

ஸித்தாந்தம் :- இங்கு ப்ரஹ்மம் அருகில் கூறப்படவில்லை என்ற காரணம் தவறு. முந்திய காயத்ரீ கண்டத்தில் पादोऽस्य सर्वा भूतानि त्रिपादस्यामृतं दिवि என்பதாக சதுஷ்பாத் ப்ரஹ்மம் (நான்கு பாதங்கள் கொண்டது) கூறப்பட்டுள்ளது. எனவே ப்ரஹ்ம ப்ரகரணம் உள்ளது. அதே ப்ரஹ்மம்தான் "यदत:" என்ற இந்த வாக்யத்தில் உள்ள "யத்" = எந்த ஒன்று, என்பதான பதத்தினால் சுட்டிக்காட்டப்படுகிறது. ஜ்யோதிஸ் என்பதும் உலகை விளங்கவைக்கும் ப்ரஹ்மத்திற்கும் பொருந்தும். மேலும் இங்கு ஜ்யோதிஸ் என்கிற உபாதியில் ப்ரஹ்மத்யானம் கூறப்படுவதால் ஜ்யோதிஸ் என்ற பதம் பொருந்தும். ஆகையால் ஜ்யோதிஸ் என்ற சொல் ப்ரஹ்மத்தையே கூறும்.

## 1.1.10 V ज्योतिश्चरणाभिधानात् (4 सूत्राणि)

இங்கு "அன்ய:" என்ற பதம் சேர்த்துக்கொண்டு "ஜ்யோதி:" = இங்கு கூறப்படும் ஜ்யோதிஸ், என்பது ஆதித்யன் போன்ற தேஜஸ்ஸைத்தவிர வேறானவர், "சரணாபித்யானாத்"= பூதம் போன்றவற்றை சரணமாக உடையதாக காயத்ரீ வாக்யத்தில் கூறியதை இங்கு "யத்" என்று கூறுவதால் என்று அர்த்தம்.

பூர்வபக்ஷம் :- ப்ரஸித்தமாக விண்ணில் ஒளிர்வதாக கூறப்படும் தேஜஸ் ஸூர்யன் போன்ற ஒளிதான். மேலும் வயிற்றிலுள்ள ஜாடராக்னியுடன் ஐக்கியமும் கூறப்படுகிறது. இந்த ஜ்யோதிஸ்ஸிற்கு நிரதிஶயமான தீப்தீ கூறப்பட்டுள்ளது. முண்டகோபநிஷத்தில் ஜகத்காரணமானவருக்கு न तत्र सूर्यो என்ற மந்திரத்தில் நிரதிஶயதீப்தி கூறப்படுவதால் இங்கும் நிரதிஶயதீப்திமத்வம் ஜகத்காரணத்தில் பொருந்தும். எனவே ஆதித்யன் போன்ற தேஜஸ்தான் ஜகத்காரணமானது. விஷ்ணு அல்ல.

ஸித்தாந்தம் :- இந்த வாக்யத்தில் கூறப்படும் ஜ்யோதிஸ்ஸிற்கு முந்திய காயத்ரீ வாக்யத்தில் पादोऽस्य सर्वा भूतानि त्रिपादस्यामृतं दिवि என்று ஸர்வபூதங்களும் ஒரு பாதமாக (கால்பாகமாக)வும் அம்ருதமான மூன்று பாதங்கள் விண்ணிலும் உள்ளதாக சொல்லப்படுகிறது. இத்தகைய சதுஷ்பாத்வம் புருஷ ஸூக்தத்தில் கூறப்பட்டபடியால் அதே விஷ்ணுதான் இங்கும் கூறப்படவேண்டும் என்று அறிய வேண்டும். அந்த ஜ்யோதிஸ்ஸை குக்ஷியிலுள்ள அக்னியோடு ஐக்கியம் கூறியது அவ்விதம் த்யானத்திற்காக மட்டுமே. த்யானத்தினால் வேறு பலன் ஏற்படும். ஆகையால் இங்கு ஜ்யோதிஸ் என்ற வார்த்தை ப்ரஹ்மத்தையே கூறுகிறது.

## 1.1.10 D. ज्योतिश्चरणाभिधानात् (1 सूत्रम्)

மத்வமதத்தின் த்வைத கொள்கைப்படி இந்த அதிகரணம் ஒரு ஸூத்ரம் மட்டுமேயாகும். மற்றொரு ஸூத்ரமான "சந்தோபித்யானாத்" என்பது வேறு அதிகரணம்.

விஷயம் :- वि मे कर्णा पतयतो विचक्षुर्वीदं ज्योतिर्हृदय आहितं यत् (ऋ 6.9.6) என்ற வாக்கியம்.

  

ஸந்தேஹம் :- இங்கு கூறப்படும் ஜ்யோதிஸ் அக்னியா? விஷ்ணுவா? என்று ஸம்ஶயம்.

பூர்வபக்ஷம் :- அக்னியைதான் ஜ்யோதிஸ் என்ற பதம் கூறுவதாக ரூடி இருப்பதால் அக்னிதான். மேலும் இருட்டுக்கு விரோதியை மட்டும் ஜ்யோதிஸ் வார்த்தை குறிப்பதாயிருந்தாலும் ஹ்ருதய குகையில் இருப்பதாக (ஹ்ருதயே ஆஹிதம்) கூறியுள்ளதாலும், त्वमग्ने तमसि என்று அக்னி ஶப்தம் அருகில் இருப்பதாலும், அக்னியை விட்டு மற்றபடி இச்சொல் கூறமுடியாது. முந்தைய அதிகரண ஸித்தாந்தத்தால் (நிரவகாஶலிங்கத்தினால்) ஶ்ருதிக்கு தடை (बाध:) என்று கூறமுடியாது. ப்ராண ஶ்ருதிக்கு வாயு ஸௌக்தத்தின் பக்கபலம் அங்கு இல்லை. ஆனால் இங்கு ஶ்ருதிக்கு ஜ்யோதிஸ் என்ற வார்த்தைக்கு அக்னி ஸௌக்தத்தில் பக்கபலம் உள்ளது. மேலும் இது "அக்னி ஸௌக்தம், விஷ்ணுவல்ல" என்ற லோக ப்ரஸித்தியும் உள்ளதால், இங்கு அக்னிதான் கூறப்படுகிறது.

ஸித்தாந்தம் :- वि मे कर्णा पतयत - போன்ற வாக்யத்தில் காது போன்றவைக்கு அப்பாற்பட்டது (அறிய முடியாதது) என்றபடி, அளவு கடந்த (अपरिच्छिन्न) வைபவத்வம், என்ற லிங்கமானது "परो मात्रया" என்ற ஶ்ருதியின் பலத்தினால் விஷ்ணுவிடம் மட்டுமே பொருந்தும் என்று ஊர்ஜிதமாவதால் மற்றவரிடம் பொருந்தாது. ப்ரகாஶரூபத்வம் என்ற ஜ்யோதிஸ்பதத்தின் பொருள் விஷ்ணுவிடம் கூறப்பட்டது. மேலும் "तद्देवा ज्योतिषां ज्योति:" என்று விஷ்ணுவிடத்தில் ஜ்யோதிஸ் ஶப்தம் உபயோகப்படுத்தப்பட்டுள்ளது. இது விஷ்ணு ஸௌக்தம் அல்ல என்ற கூற்று ப்ரஸித்தி தவறானது. ஆகையால் யோகம், ரூடி இரண்டிலும் ஜ்யோதி: என்ற சொல் விஷ்ணுவைக் கூறுகிறது.

# 1.1.11 D "छन्दोभिधानात्" (1 सूत्रम्)

(த்வைத மதப்படியாக இது தனி அதிகரணம்)

விஷயம் :- गायत्री वा इदं सर्वं भूतम् என்ற சாந்தோக்ய வாக்யம் விஷயமாகிறது. இதில் காயத்ரீ பதம் யாரைக் கூறுவது?

ஸந்தேஹம் :- எழுத்துக்களின் வரிசை விஶேஷமான சந்தஸ் (meter) தானா? விஷ்ணுவா?

பூர்வபக்ஷம் :- காயத்ரீ என்ற சொல் உலகப் ப்ரஸித்தியை வைத்து சந்தஸ்தான் என்று ஆகிறது. விஷ்ணுவையே குறிக்கும் லிங்கங்-களினால் (அடையாளங்களால்) ஶ்ருதிக்கு தடை (बाध:) கூற முடியாது. ப்ரஸித்தமான வார்த்தையை விட்டுவிட்டு காயத்ரீ என்று கூறியதில் ப்ரயோஜனம் இல்லையே? முந்தய அதிகரணத்தில் ஒரே ஒரு ஜ்யோதிஸ் வார்த்தையை மட்டும் விஷ்ணுலிங்கத்தினால் பொருட்படுத்தாமல் தள்ளினாலும், இங்கு காயத்ரீ, வாக், ப்ருதிவீ போன்ற அனேக ஶ்ருதிகளுக்கு விஷ்ணு லிங்கத்தினால் பாதிப்பு ஏற்படுத்துவது ஸரியில்லை. எனவே காயத்ரீ சந்தஸ்தான்.

ஸித்தாந்தம்: - "ततो ज्यायाम्श्च पूरुष:" "यद्वैतद् ब्रह्म" "एतामेवं ब्रह्मोपनिषदं वेद" என்றவாறு புருஷன், ப்ரஹ்மம் போன்ற அனேக ஶ்ருதி வார்த்தைகள் விஷ்ணுவையே கூறுகின்றன. गायति च त्रायति च என்ற வ்யுத்பத்திப்படி அஶேஷவேதோச்சாரணம், காப்பாற்றுதலை சொல்வது, போன்ற பொருளைக்கொண்டு காயத்ரீபதம் விஷ்ணுவை குறிக்கும். மேலும் பூதங்களை காலாக உடைய தன்மை, ஸர்வோத்தமத்வம் போன்ற தன்மைகள் விஷ்ணுவிற்கே பொருந்தும். காயத்ரீக்கு அமையாது. எனவே

காயத்ரீ என்ற பதத்தின் பொருள் (சொல்பவரைகாப்பது) விஷ்ணுவிற்கு மிகப்பொருந்துவதால் அந்த குணத்தை உடையவராக விஷ்ணுவை த்யானம் (உபாஸனை) பண்ணுவதற்காகவே அப்ரஸித்தமான காயத்ரீபதத்தை கூறியிருக்கிறது வேதம். பலபல ஶ்ருதி லிங்கங்களினால் அதிகமான பதங்களுக்கு ப்ரஸித்தமான அர்த்தத்தை தள்ளுவது ந்யாயமே.

## 1.1.11 A प्राणस्तथानुगमात् (4 सूत्राणि)

விஷயம் :- கௌஷீதகி உபநிஷத்தில் இந்திரனுக்கும் ப்ரதர்தனன் என்ற அரசனுக்கும் சம்பாஷணை வரும் இடத்தில் (ஶ்ருதியில்) "प्राणोऽस्मि प्रज्ञात्मा" என்று ஆரம்பித்து 1. வாயு 2. இந்திரன் 3. ஜீவன் போன்றவர்களின் லிங்கங்களும் 4. ப்ரஹ்மலிங்கமும் கூறப்படுவது விஷயம்.

ஸந்தேஹம் :- பல பேர்களையும் குறிப்பதாக இங்கு வாக்யம் உள்ளதால் யாரைக் குறிக்கிறது என்று ஐயம்.

பூர்வபக்ஷம் :- எந்த முடிவும் எடுக்கமுடியாது என்று முடி-வெடுப்போம். ஏனெனில் நிர்ணயகாரணம் கிடைக்கவில்லை.

ஸித்தாந்தம். :- பூர்வபக்ஷத்தில் கூறிய படி 1. ஶரீரத்தை இயக்குகிறது என்பதாக ப்ராணலிங்கமும், 2. "அஸ்மி" என்று தன்னை 1st person singular ல் கூறுவதால் இந்திர லிங்கமும், 3. வக்தாவை (பேச்சாளனை) அறி என்று ஜீவலிங்கமும் 4. आनन्दोऽजोऽजरः ஆனந்தரூபன், பிறப்பு மூப்பு அற்றவன் என்று ப்ரஹ்மலிங்கமும் காணப்படுவது உண்மை-யாயினும், ப்ரஹ்மலிங்கமானது மற்றவர்களிடம் சற்றும் பொருந்தாது, மற்றவரின் லிங்கங்கள் ப்ரஹ்மத்திற்கு பொருந்த முடியும் என்று நிர்ணயம் பண்ண முடியும். எனவே நிர்ணயகாரணம் உள்ளது. இங்கும் ப்ராணன் என்பது ப்ரஹ்மமேதான். மேலும் ஆரம்பத்தில்

ஹிததமமானது கூறுமாறு அரசன் கேட்டான். ப்ரஹ்மம்தான் ஹிததமம் அன்றோ!

# 1.1.11 V प्राणस्तथानुगमात् (4 सूत्राणि)

இந்த ஸூத்ரத்தில் ப்ராணபதம் இந்திரனையும் குறிக்கும். "அன்ய:" என்ற சொல் முன்போல் அனுவ்ருத்திக்கிறது. எனவே "ப்ராண:" = ப்ராணன் இந்திரன் என்ற சொல்லால் கூறப்படும் போ்வழி "அன்ய:" = ப்ராணன் இந்திரனைக்காட்டிலும் வேறான (விஷ்ணு) "तथा" = இந்திராதிகளைக் காட்டிலும் வேறானவருக்கே பொருந்தும் தன்மையை "அனுகமாத்" = தொடர்ந்து கூறப்படுவதால் என்று ஸித்தாந்தம்.

விஷயம் :- கௌஷீதகி உபநிஷத் வாக்யம் प्राणोऽसि प्रज्ञात्मा तं मामायुरमृतमित्युपास्व என்ற பகுதி.

ஸந்தேஹம்:- இங்கு மொத்தத்தில் கூறப்படுகிறது இந்திரனா? விஷ்ணுவா?

பூர்வபக்ஷம் :- "த்வஷ்டாவைக் கொன்றேன்" என்னும் குற்றம் குறை எனக்கு இல்லை, அம்ருதமான என்னை உபாஸித்தால் உனக்கு ஹிததமமேற்படும் என்று ஸ்பஷ்டமாக உள்ளதால் இந்திரன்தான் இங்கு உணர்த்தப்படுகிறான். எனவே முமுக்ஷுவினால் உபாஸ்யத்வம் ஜகத்காரணத்திற்கானபடியால் இந்திரன்தான் ஜகத்காரணம்; விஷ்ணு அல்ல.

ஸித்தாந்தம் :- नान्य: पन्था विद्यतेऽयनाय என்று விஷ்ணுவை உபாஸிப்பது தவிர வேறு மோக்ஷோபாயம் கிடையாது என்று வேதம் அடித்து கூறுகிறது. எனவே முமுக்ஷுவிற்கு உபாஸ்யமாக கூறப்படும் இந்த இந்திரன் ப்ரஸித்த இந்திரனைக்

குறிக்கவில்லை. ஏனெனில் ஜீவவிஶேஷனான இந்திரன் எவ்வாறு முமுக்ஷு த்யேயன் ஆவான்? மேலும் प्रज्ञात्मा, अजरः अमृतः என்றெல்லாம் கூறப்படும் பல பல தன்மைகள் ஜீவனுக்கு வராது. மேலும் ஸுபாலோபநிஷத்தில் கூறப்படும் तमात्मानं उपासीत अजरममृतमभयम् என்ற சொற்றொடர் இங்கு ஒலிக்கின்றது என்பது அதையே நினைவூட்டுகிறது. ஆகையால் இந்திரனுக்கோ ப்ராணனுக்கோ விஷ்ணுவின் ஶரீரமாகும் தன்மையை (ஶரீரஶரீரி பாவத்தை) ஶாஸ்த்ரத்தினால் (அந்தர்யாமி ப்ராஹ்மணத்தினால்) உணர்ந்து, வாமதேவ முனிவர் अहं मनुरभवं सूर्यश्च என்றவாறு தன்னைக்கூறும் வார்த்தையினால் பரமாத்மாவைக் குறிப்பது போல் இங்கு இந்திரன் கூறுகிறான். எனவே இங்கு ப்ரஹ்மம்தான் கூறப்படுகிறது.

## 1.1.12 D प्राणस्तथानुगमात् (4 सूत्राणि)

விஷயம், ஸந்தேஹம் :- ஐதரேய (உபநிஷத்தில்) ப்ராம்ஹணத்தில் ता वा एताः शीर्षन् श्रियः श्रिताश्चक्षुश्श्रोत्रं मनो वाक् प्राणः என்ற இடத்திலும் பல இடங்களிலும் கூறப்படும் ப்ராணः என்பவை முக்கிய ப்ராணன் வாயு போன்றவரா? அல்லது விஷ்ணுவா? என்ற ஸந்தேஹம்.

பூர்வபக்ஷம் :- வாயு, இந்திரன், ஜீவன் என்று பூர்வபக்ஷம். ஏனெனில் அவர்களை குறிப்பிடும் ஶ்ருதி லிங்கங்கள் உள்ளன. கண் முதலியவற்றுடன் சேர்த்து கூறியிருப்பது ता अहिंसना என்றவாறு இந்திரியங்களுக்கும். ப்ராணனுக்கும் ஸம்வாதம், உடலை விட்டு வெளியே செல்வது, மறுபடி வருவது, போன்ற முக்கியப் ப்ராண லிங்கங்கள், ப்ராணன் என்ற ரூடமான சொல், இவை ப்ராணனை குறிக்கின்றன. तं यच्छन्तं वर्षा ण अभ्यार्चत् என்று கூறப்படும் நூறு வயது ஆயுஸும் அங்கு கூறப்படும் புருஷ என்ற சொல்லும் ஜீவலிங்கங்கள். "इंद्रो वै वृत्रं हत्वा" போன்ற வ்ருத்ரா-ஸுர வதம், மஹாவ்ரதயாகித்வம்போன்றவை இந்திர லிங்கங்கள்

"தமிந்த்ர உவாச ப்ராணோ வா அஹமஸ்மி" என்று இந்திரன் கூறும் "நான் எனும்" அஹம் ஶ்ருதியும் இந்திரனை குறிக்கும் லிங்கங்கள். இவை எல்லாம் விஷ்ணுவிடத்தில் பொருந்தாது.

ஸித்தாந்தம் :- "एतद्ब्रह्मैतत्सत्यम्" (ऐ 2-1-1) "तं प्रपदाभ्यां प्रापद्यत" "ब्रह्मं पुरुषं अः इति ब्रह्म" (2-3-8) என்றதான ஶ்ருதிகளும்; "तं देवाः प्राणयन्तः" (2-1-5) "तं भूतिरिति देवा उपासाञ्चक्रिरे" (२-१८) "सर्वे वेदा" (2-2-2), "प्राणो ह्येष य एष तपति" (2-2-1) "आपीपिलिकाभ्यः प्राणेन बृहत्या विष्टब्धानि" என்று கூறப்பட்டுள்ள தேவர்களால் உபாஸிக்கப்படும் தன்மை, எல்லா வேதங்களிலும் கூறப்படும் தன்மை, ஸௌர்ய-மண்டலத்தில் உள்ள தன்மை, ஸர்வாந்தர்யாமித்வம், ஸர்வவ்யாபித்வம் ஆகிற பல லிங்கங்கள் யாவும் விஷ்ணுவிடம் மட்டுமே பொருந்துகின்றன. எனவே பூர்வபக்ஷத்தில் கூறிய லிங்கங்களைக் காட்டிலும் இவை அதிகமானவை. எனவே பூர்வபக்ஷத்தில் கூறிய ஶ்ருதி லிங்கங்கள் அந்தர்யாமியான விஷ்ணுவிடமும் சேர முடியும். இந்திரன் ''நான்'' என்று கூறும் வார்த்தை லக்ஷணையால் வாமதேவ வாக்யம் போல விஷ்ணுவையே குறிக்கும். எனவே ப்ராண ஶப்தம் விஷ்ணு பரமே.



## இரண்டாம் பாதம்

## 1.2.1 A सर्वत्र प्रसिद्धोपदेशात् (8 सूत्राणि)

**விஷயம் :-** சாந்தோக்ய உபநிஷத்தின் மூன்றாம் அத்யாயத்தில் உள்ள ஶாண்டில்ய வித்யையில் "மனோமய: ப்ராண ஶரீரோ பாரூப:" என்ற வாக்யம்.

**ஸந்தேஹம் :-** "மனோமயத்வாதி தன்மையுடன் கூறப்படும் உபாஸிக்கப்படவேண்டியவர் ஜீவனா? ப்ரஹ்மமா?" என்று ஐயம்.

**பூர்வபக்ஷம் :-** மனதின் தொடர்பு, ப்ராணனை சேர்ந்துள்ளன போன்ற அடையாளங்கள் ஜீவனுக்கே பொருந்துமாதலால் ஜீவன்-தான் கூறப்படுகிறான்; ஈஶ்வரனிடத்தில் இது பொருந்தாது. ஏனெனில் "அப்ராணோ ஹ்யமனா: ஶுப்ர:" என்று ப்ராணமனங்களின் தொடர்பற்றவராக ப்ரஹ்மம் கூறப்படுகிறது. மேலும் "ஏஷ ம ஆத்மான்தர்ஹ்ருதயேऽணீயான்வ்ரீஹே" என்று இதயத்தில் வஸிப்பதாகவும் அணுபரிமாணமும் கூறப்படுகிறது. ஸர்வகத, விபுவான ப்ரஹ்மத்தை எவ்வாறு எடுத்துக்கொள்ள முடியும்? எனவே ஜீவன்தான் உபாஸ்யன்.

**ஸித்தாந்தம் :-** இந்த ப்ரகரணத்தின் ஆரம்பத்தில் ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலானிதி ஶான்த உபாஸீத என்று உலகின் ஸ்ருஷ்டி, ஸ்திதி ஸம்ஹாரங்களின் காரணமான ப்ரஹ்மம் கூறப்படுகிறது. அதே ப்ரஹ்மம்தான் இந்த மனோமயன், ப்ராணஶரீரன் என்பதாக சொல்லப்படுகிறது. விஶேஷமான இந்த இரண்டு வார்த்தைகள் விஶேஷ்யத்தை எதிர்பார்க்கும் தருணத்தில் முன்கூறிய ப்ரஹ்மம்தானே வரும். ஆகையால் மனோமயத்வாதி தன்மைகள் ப்ரஹ்மத்தைத்தான் கூறவேண்டும், ப்ரஹ்மத்திற்கு மனம்,

ப்ராணன்களில் தொடர்பு இல்லை. மேற்கூறிய வாக்கியம் அப்ராணோ ஹ்யமனா: ஶுப்ர: என்பது நிருபாதிகப்ரஹ்மம். அவருக்கே உபாஸிப்பதற்கு சுலபமாக உபாதிகளின் தொடர்பு கூறப் -படுகிறது. ஆகையால் எல்லா வேதாந்தங்களிலும் உபாஸ்யமாக ப்ரஸித்தியுள்ள ப்ரஹ்மம்தான் கூறப்படுகிறது. எங்குமே ஜீவன் உபாஸ்யமாய் காணப்படவில்லை. மேலும் இங்கேயே ஜ்யாயானாகாஶாத் என்று ஆகாயத்தைக் காட்டிலும் விபுவாக கூறுவது ஜீவனுக்கு எவ்வாறு பொருந்தும். எனவே மனோமயாதிகளால் ப்ரஹ்மம்தான் கூறப்படுகிறது.

## 1.2.1 V सर्वत्र प्रसिद्धोपदेशात् (8 सूत्राणि)

இந்த ஸூத்ரத்தில், மூன்றாம் பாதத்தில் "ईक्षतिकर्मव्यपदेशात्सः" என்று கூறப்படும் "सः" என்ற வார்த்தை எடுத்துக்-கொள்ளப்படுகிறது. எனவே सर्वत्र = எல்லா இடத்திலும் பொருளிலும் இணைந்துள்ளதாகக் கூறப்படும் (तज्जलान्) பொருள், सः - பரமபுருஷனான விஷ்ணுதான். प्रसिद्ध = மற்ற இடங்களில் ப்ரஸித்தமானவனை, उपदेशात् = அனுவாதம் பண்ணுவதால் என்பதாக ஸூத்ரார்த்தம்.

பூர்வபக்ஷம் :- सर्वं खल्विदं ब्रह्म என்று ஆரம்பித்து பிறகு एष आत्मा अन्तर्हृदये என்பதாக ஶரீராந்தர்வர்த்தி ஹ்ருதயத்தில் வஸிப்பதாக கூறப்படுவதால், ஶரீரம் என்பது இவனுடைய போகத்திற்கு ஆயதனமாதலால் ஶரீர ஸம்பந்தமான சுக, துக்க போக்த்ருத்வம் அல்பஸ்தாநிகத்வம், अणिमान् व्रीहेर्वा என்பதாக அணுபரிமாணத்வம் கூறப்படுகிறது. இவைகள் ப்ரஹ்மத்திற்கு வரவே முடியாது. ஆகையால் ஜீவன்தான் ஆரம்ப வாக்யத்தில் ब्रह्म என்று கூறப்படுகிறான். கர்மாவின் வைசித்திரியத்தால் தேவமனுஷ்யாதிரூபேண பிறப்பதால் "सर्वं इदं ब्रह्म" என்று தாதாத்ம்யம் வரலாம்.

ஸித்தாந்தம் :- தஜ்ஜத்வதல்லத்வாதிகளைக் (அதனிடமிருந்து

பிறப்பு, அதிலேயே லயம்) கொண்டு (அனுவாதம் செய்து) ஸர்வ தாதாத்ம்யம் கூறப்படுகிறது. ஜீவனுக்கு இத்தகைய தாதாத்ம்யம் பொருந்தாது. மேலும் सर्वमिदम् என்று கூறப்படும் ஸர்வசேதன தாதாத்ம்யம் ஜீவாத்மாவிற்கு எப்படி வரும்? எனவே ப்ரஹ்ம ஶப்தத்தினால் நிர்தேஶம் பண்ணியவன் ஜீவன் அல்ல. யோகத்தினால் பரிஶுத்தமான மனதினால் க்ரஹிக்கப்படும் தன்மையாகிய மனோமயத்வம் ப்ரஹ்மத்திற்கே பொருந்தும். இந்த "மய" என்ற சொல் க்ராஹ்யக்ராஹக தன்மையை உணர்த்துகிறது. "यस्य प्राण: शरीरम्" என்பதாக அந்தர்யாமிப்ராம்ஹணத்தில் கூறியபடி ப்ராண நியந்த்ருத்வம்தான் கூறப்படுகிறது. "भारूपत्वम्" என்பதும் आदित्यवर्णं तमस: परस्तात् என்றுள்ளதால் நிரதிஶயதீப்தியுடைய தன்மைதான். எனவே இது போன்ற தன்மைகள் ஜீவனுக்கு பொருந்தாது. एतमित:प्रेत्याभिसंभवितास्मि என்று கூறப்படும். ப்ராப்ய ப்ராபகத்தன்மை ப்ரஹ்மபதத்தினால் ஜீவன் சொல்லப்பட்டால் பொருந்தாது. "அணீயான்" என்று சொல்லப்படும் அணுத்வம், ப்ரஹ்மத்திற்கு உபாதி ஸம்பந்தத்தால் ஏற்பட்டது. எனவே இங்கு ப்ரஹ்மம்தான் கூறப்படுகிறார்.

## 1.2.1 D सर्वत्र प्रसिद्धोपदेशात् (8 सूत्राणि)

விஷயம் :- ஐதரேயத்தில் चत्वार: पुरुषा इति बाध्व: என்ற கண்டத்தில்(பாகத்தில்) तस्यैतस्यासावादित्योरस: என்று உபக்ரமத் -தில் (ஆரம்பத்தில்) एतं ह्येव बह्वृचा महत्युक्थे मीमांसन्ते முதலிய வாக்யத்தினால் உக்தாக்னி, மகாவ்ரத, த்யுலோக ப்ருத்வி, வாயு, ஆகாஶ, ஔஷதி, வனஸ்பதி, சந்திர, நக்ஷத்திரங்களில் एतमेव ब्रह्मेत्याचक्षते என்பது போன்ற வாக்யத்தினால் ஸர்வபூதங்களிலும் உள்ள ஒரு பொருள் கூறப்படுகிறது. அது யார் என்பது விஷயம்.

ஸந்தேஹம் :- ஆதித்யனும், ஜீவனுமா? விஷ்ணுதானா?

பூர்வபக்ஷம் :- முதலில் பலமுறை கூறப்படும் ஆதித்யனைதான் "एतम्" என்ற பிரதிபெயர் வார்த்தையால் குறிக்கப் பண்ணமுடியும். அவரையேதான் तस्मात्तस्यै என்ற பதங்களால் முன்கூறிய ஸம்வத்ஸரத்தை பராமர்சித்து रस: என்பதாக தத்ஸாரத்வ லிங்கத்தினால் ஆதித்யன்தான் ஸர்வபூதகதன். அல்லது चक्षुर्मयः श्रोत्रमयः என்பதனால் கண் முதலிய புலன்களின் ஸம்பந்தம் கூறப்பட்டதால் ஜீவனாகவும் இருக்கலாம்; விஷ்ணு அல்ல.

ஸித்தாந்தம் :- एतमेव ब्रह्मेत्याचक्षते என்று ப்ரஹ்மஸம்பந்தமானது விஷ்ணுவையே குறிக்கும். ஏனெனில் तदेव ब्रह्मं परमं कवीनाम् என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. நாராயண ஸூக்தத்தில் மேலும் एतमेव என்ற இடத்தில் "ஏவ" என்று மற்றவை விலக்கியுள்ளது. எனவே ப்ரஹ்ம பதத்தின் முக்யார்த்தம்தான் கொள்ளவேண்டும். மேலும் வாக்யஶேஷத்தில் अश्रुत: अमत: போன்ற லிங்கங்கள் முழுமையாக விஷ்ணுவில்தான் பொருந்தும். மேலும் கீதையில் अहमात्मा गुडाकेश सर्वभूताशयस्थितः என்பது மிகுந்த ப்ரமாணம். பூர்வபக்ஷத்தில் கூறிய லிங்கங்கள் ஸர்வாந்தர்யாமியான விஷ்ணுவிற்கும் பொருந்தும். எல்லா பூதங்களினுள் இருந்தாலும் தனியான சிறப்பினால் சுக துக்கங்களின் பாதிப்பு விஷ்ணுவிற்கு வராது. கண் முதலியவற்றிற்கு ஸ்வாமியாக இருப்பதால் चक्षुर्मयःश्रोत्रमयः எல்லாம் விஷ்ணுவிற்கும் பொருந்தும் என்பதால் ஸித்தாந்தத்திற்கு பாதகம் இல்லை. ஆதித்யன், ஜீவன் இவர்களுக்கு ஸர்வகதத்வம் பொருந்தவே பொருந்தாது என்பதால் பூர்வபக்ஷத்திற்கு बाधकम्. எனவே ப்ருத்வி போன்ற-வற்றினுள் உள்ளதாக கூறப்படுபவர் விஷ்ணுதான்.

## 1.2.2 A अत्ता चराचरग्रहणात् (2 सूत्रे)

விஷயம் :- கடோபநிஷத்தில் கூறப்படுகிற यस्य ब्रह्म च क्षत्रं चोभे भवत ओदनः என்ற வாக்கியம் விஷயம். இதில் அகில உலகிற்கும் போக்தாவான, உலகை அன்னமாயும், யமனை ஊறுகாயாகவும் உண்ணுகிறவன் ஒருவன் கூறப்படுகிறான்.

ஸந்தேஹம் :- (அகில உலகையும்) உண்ணும் திறன் போக்தாவான ஜீவனுக்குதான் வரும். ஈச்வரன் போக்தா ஆகமாட்டான். எனவே ஜீவன், அக்னி, ப்ரஹ்மம் மூன்றில் யார் கூறப்படுகிறார்?

பூர்வபக்ஷம் : 1) ஜீவன்தான் கூறப்படுகிறான். तयोरन्यः पिप्पलं स्वाद्वत्ति என்று கர்மபலத்தை உண்ணுபவனாக ப்ரஸித்தமாயுள்ளான். 2) அல்லது अग्निरन्नादः என்று வேதத்தில் அக்னியை அன்னத்தை சாப்பிடுபவன் எனக்கூறப்படுகிறது.

ஸித்தாந்தம் :- ப்ரஹ்ம க்ஷத்ர இருபதங்களினால் அது போன்ற அகில உலகுமே குறிக்கப்படுகிறது. இத்தகைய உலகத்தை சாப்பிடுவதானாலும், ஸம்ஹாரம் பண்ணுவதானாலும் அக்னியோ, ஜீவனோ ஆக முடியாது. மேலும் இதற்கு முந்திய சந்தர்பத்தில் अन्यत्रधर्मात् என்ற மந்திரத்தில் ப்ரஹ்மத்தை பற்றி கூறுமாறு கேள்வி நசிகேதஸ்ஸினால் கேட்கப்பட்டு, அதன் பதிலாக இந்த மந்திரம் அமைகிறது. எனவே ப்ரஹ்மம்தான் இங்கு கூறப்படுகிறார். அவருக்கு போஜனம் கிடையாது என்றால், உலகின் ஸம்ஹாரம் என்ற பொருளில் ओदन பதம் உபயோகப்பட்டுள்ளதாக கொண்டு, அதன் மூலம் ஸர்வஜகத்ஸம்ஹர்த்ருத்வம் ப்ரஹ்மலக்ஷணம் சொல்லப்படுவதால் ப்ரஹ்மம்தான்.

# 1.2.2. V अत्ता चराचरग्रहणात् (4 सूत्राण)

[இங்கு விஶிஷ்டாத்வைதப்படி अत्त्रधिकरणम् த்தில் 4 ஸூத்ரங்கள் உள்ளன. அத்வைத மதப்படி இந்த அதிகரணம் 2, गुहां प्रविष्टावात्मानौ हि तद्दर्शनात् என்பதாக தொடங்கி 2 ஸூத்ரங்கள் வேறு அதிகரணம்.]

விஷயம்:- यस्य ब्रह्म च क्षत्र என்ற கடவல்லி வாக்கியம் விஷயம். "இங்கு கூறப்படுபவர் ஜீவனா? ப்ரஹ்மமா?" என்று ஐயம்.

பூர்வபக்ஷம் :- இந்த மந்திரத்தில் ப்ராஹ்மண க்ஷத்ரிய ஜாதியை சேர்ந்த ஸ்திரீ புருஷர்களுக்கு பரஸ்பரம் போக்யதன்மை கூறப்படுகிறது. எனவே போக்தாவாக கூறப்படுபவன் ஜீவன்தான் ஆகமுடியும். கர்மபயனான ஸ்திரீ முதலிய இவைகளின் போகம் இவனுக்குதானே வரும்? எனவே ஜீவன்தான் இங்கு கூறப்படுகிறான். ம்ருத்யுவானவன் ஜீவாத்மாவிற்கு பாதகமாகமாட்டான் என்று "உபஸேசன" பதம் கூறுகிறது.

ஸித்தாந்தம் :- உபஸேசனம் என்ற சொல் अबाधकम् என்ற பொருளைக் கூறாது. தானும் உண்ணப்பட்டு மற்றதை உண்ணுவதற்கு கருவியாயிருப்பது (தயிர் முதலிய) உபஸேசனம் என்றுதான் ப்ரஸித்தி. எனவே ஸம்ஹரிக்கப்படுவதாகவும் உலகை ஸம்ஹரிப்பதற்கு கருவியாகவும் (உதவி) இருப்பவன்தான் யமன். எனவே ओदनम् என்ற பதமும் அன்னம் என்ற பொருளில் வரவில்லை. ஆகையினால் கர்மபல போக்த்ருத்வம் இங்கு கூறப்படவே இல்லை என்பதால் ஜீவனுக்கு ப்ரஸக்தியே இல்லை. மேலும் இதற்கு முன்பு तं दुर्दर्शम् என்ற மந்திரத்தில் பரமாத்மாவை ஆரம்பித்து, அவரையே தொடர்ந்து கூறி, பிறகு இந்த மந்திரம் படிக்கப்படுகிறது. மேலும் क इत्था वेद என்று

அறிவது மிகவும் கடினம் என்று துர்ஞானத்வம் ப்ரஹ்மலிங்கம் ஆகிறது. ஆகவே இதில் பரமாத்மாதான் கூறப்படுகிறார். அடுத்த மந்திரத்தில் "गुहां प्रविष्टौ ऋतं पिबन्तौ" என்பதாக புத்தி- ஜீவர்கள் கூறப்படுவதால் ப்ரஹ்மப்ரகரணமாக இது ஆகாது என்ற ஆக்ஷேபம் ஏற்படுவதால் गुहां प्रविष्टौ आत्मानौ हि என்ற ஸூத்ரம், அதனுக்கு அடுத்த ஸூத்ரம் (विशेषणाच्च) சேர்ந்து குகையில் ப்ரவேஶமுள்ளவர்கள் ஜீவனும் பரமாத்மாவும்தான் நிர்ணயிக்கப்படுவதால் ப்ரஹ்மப்ரகரணம் ஊர்ஜிதப்படுவதால் "அத்தா" என்பவர் இம்மந்திரத்தில் கூறப்படுபவர் பரமாத்மாதான்.

## 1.2.2 D अत्ता चराचरग्रहणात् (2 सूत्रे)

விஷயம் :- स यद्यदेवासृजत तत्तदत्तुमध्रियत என்ற ப்ருஹதாரண்ய வாக்கியம்.

ஸந்தேஹம் : மேற்கூறிய வாக்கியத்தில் "सर्वं वा अत्तीति तददितेरदितित्वं" என்பதாக கூறப்படுபவர் அதிதி (अदिति) தேவதையா (தேவமாதா)? விஷ்ணுவா?

பூர்வபக்ஷம் :- அதிதி என்கிற ரூடியால் தேவமாதாதான். அத்தி என்பதாலும் அதிதி என்று ஸ்பஷ்டமாக கூறப்படுகிறது அன்றோ! லிங்கமும் உள்ளது. முன்பு - ஸவிதா என்ற சொல்லிற்கு விஷ்ணுபரத்வம் நிர்ணயிக்கப்பட்டிருப்பதால் ஆதித்யன் என்ற ஶ்ருதிக்கு விஷ்ணுபரத்வம் நிர்ணயிக்கப்பட்டாலும் அத்தகைய நிர்ணயகாரணம் இல்லாத அதிதி ஶ்ருதிக்கு அந்த நியாயம் வராது. ஶ்ருதி ப்ரபலமானதாலும் லிங்கமான சாப்பாட்டுத்-தன்மை என்ற பொருள் விஷ்ணுவிற்கு.(லிங்கமும் பொருந்தாது). ஆகையால் அதிதியாகிய தேவதைதான் இங்கு கூறப்படுகிறாள்.

ஸித்தாந்தம் :- ஸர்வம் வா அதிதி: என்றவாறு ஸர்வஸம்ஹர்த்ரு-த்வம் இங்கு கருத்தாக உள்ளது. "यमप्येति भुवनं साम्पराये" என்ற ஶ்ருதியாலும் स्रष्टा पाता तथैवात्ता என்ற ஸ்ம்ருதியாலும் விஷ்ணுதான் ஸர்வஸம்ஹர்தா என்று ஊர்ஜிதமாகியுள்ளது. ஆகையால் அதிதி ஶ்ருதியும் அத்ருத்வ லிங்கமும் விஷ்ணுவிற்கு -த்தான் பொருந்தும். மேலும் இங்கு "नैवेह किञ्चनाग्र आसीत्" என்பதாக இங்கு ப்ரஹ்மப்ரகரணம் உள்ளது. ஆகையால் விஷ்ணு -தான் அத்தா (अत्ता).

## 1.2.3 A गुहां प्रविष्टावात्मानौ हि (2 सूत्रे)

கடோபநிஷத்தில் வரும் ऋतं पिबन्तौ सुकृतस्य लोके गुहां प्रविष्टौ परमे परार्धे என்ற வாக்கியம் விஷயம்.

ஸந்தேஹம் :- இங்கு கர்ம பலனை அனுபவிப்பதாகவும் ஒருவருக் -கொருவர் விலக்ஷணர்களாயும் ஹ்ருதய குகையில் நுழைந்துள்ள -வர்களாயும் கூறப்பட்ட இரண்டுபேர்கள் யார்? புத்தியும் ஜீவனுமா? ஜீவனும் பரமாத்மாவுமா?

பூர்வபக்ஷம் :- சிறு குகையில் பரமாத்மா இருக்க முடியாது. மேலும் கர்ம பலனை அனுபவிக்கவும் மாட்டார். அதோடு ஜட சேதன ரூபமான வேறுபாடும் சேதனர்களில் வர இயலாது. புத்தியும் ஜீவனும்தான் கூறப்படுகின்றன.

ஸித்தாந்தம் :- पिबन्तौ என்பதாக அனுபவிக்கும் திறன் உடைய சேதனர்கள்தான் இருமையால் கூறப்பட முடியும். கர்மபலனை அனுபவிப்பவரில் ஒருவன் ஜீவன்தான் என்று நிர்ணயித்த பிறகு தனக்கு ஜோடியாக மற்றவனும் சேதனனாகத்தான் இருக்க முடியும். ப்ரஹ்மம் அனுபவிக்காவிட்டாலும் அனுபவிக்கத் திறன் தந்து causal reason ஆகிறார். ஸோபாதிகர் நிருபாதிகர் என்ற வேறுபாடு உள்ளது. இதயத்தில் புரிந்துகொள்ளப்படுவதால்

குகையில் இருப்பதாக கூறப்படுகிறது. எனவே-ஜீவனும் ப்ரஹ்மமும் - இருவர் கூறப்படுகின்றனர்.

1.2.3 குஹாதிகரணம் விஸிஷ்டாத்வைதமதத்தில் தனியானது அல்ல. அத்த்ரதிகரணத்தில் அடங்கியது.

## 1.2.3 D गुहां प्रविष्टावात्मानौ (2 सूत्रे)

விஷயம் :- ऋतं पिबन्तौ என்ற கடோபநிஷத்வாக்கியம் விஷயமாகிறது. இங்கு கர்மபயனை அனுபவிக்கும் இரண்டு பேர்கள் கூறப்படு-கின்றனர். இவ்விருவர் பற்றியதே விஷயம்.

ஸந்தேஹம் :- இவர்கள் ஜீவன்-ஈய்வரர்களா? அல்லது ஈய்வர-விஶேஷமான இருவர்களா?

பூர்வபக்ஷம் :- பிबन्तौ குடிக்கும் அல்லது அனுபவிக்கும் இருவர் என்று இருமை உள்ளதால் ஒரே இறைவனிடம் இருமை பொருந்தாது என்பதால் ஜீவேய்வரர்கள்தான் குறிக்கப்படுகிறார்கள். மேலும் கர்மபயனின் ஸம்பந்தமற்ற ஈய்வரனுக்கு அனுபவித்தல் பொருந்தாது. எனவே ஸஜாதியர்களான ஜீவனும் ஈய்வரனும்தான். குடையற்றவனும் குடையுள்ளவனுடன் செல்லும்போது "குடை-யுள்ளவர்கள் செல்கிறார்கள்" என்று கூறப்படுவது போல் ஜீவனான போக்தாவுடன் இருக்கும் ஈய்வரனுக்கும் போக்த்ருத்வம் உடையதாக இருமை பொருந்தும். ஆகையால் ஜீவனும் ஈய்வரனும்தான் இங்கு சொல்லப்படுகிறார்கள்.

ஸித்தாந்தம் :-குகையில் நுழைந்தவர்கள் என்பதாக गुहां प्रविष्टौ - கூறப்படுவது ஸ்பஷ்டம். இந்த அடையாளம் (லிங்கம்) यो वेद निहितं गुहायाम्,गुहाहितं गह्वरेष्टं पुराणम् என்றெல்லாம் கூறப்படும் விஷ்ணுவிற்குத்தான் பொருந்தும். மேலும் "य: सेतुरीजानानामक्षरं

ब्रह्म तत्परम्" என்பதாக மேலே கூறப்படும் ப்ரஹ்மத்வம், ஸேதுத்தன்மை இரண்டும் விஷ்ணுவை மட்டுமே கூறும். அதோடு "एष सेतुर्विधृति:" என்று வேறு ஶ்ருதியில் உள்ள ஸேது பதம் ப்ரஹ்மத்தையே ஞாபகப்படுத்துகிறது. விஷ்ணுவிற்கே இருமையால் கூறுவது பொருந்தும்தான். ஏனெனில் आत्मान्तरात्मेति हरि: एक एवद्विधास्थित: (बृ. संहिता) ஸ்ம்ருதியில் ஹரி இரண்டாக இருப்பதாக கூறப்பட்டுள்ளது. எனவே ரூபவிஶேஷத்தினால் இருமை பொருந்தும். மேலும் "शुभं पिबत्यसौ नित्यं नाशुभं स हरि: पिबेत्" (பாத்ம) ஹரி ஶுபத்தை மட்டும் அனுபவிப்பார், அஶுபத்தை அனுபவிக்கமாட்டார் என்று கூறியுள்ளதால் கர்மபலபோக்த்ருத்வம் விஷ்ணுவிற்கும் சம்பவிக்கும். ஆகையால் ஈஶ்வரரின் இரண்டு ரூபங்கள்தாம் கூறப்படுகின்றன, ஜீவனும் ஈஶ்வரனும் அல்ல.

## 1.2.4 A अन्तर उपपत्ते: (5 सूत्राणि)

**விஷயம் :-** சாந்தோக்ய உபநிஷத்தில் கூறப்படும் य एषोऽक्षिणि पुरुषो दृश्यत एष आत्मेति होवाच एतद् अमृतं अभयं एतद्ब्रह्मेति என்ற வாக்கியம் விஷயம்.

**ஸந்தேஹம் :-** "கண்ணில் காணப்படும் ஒரு பொருள்தான் ஆத்மா, அம்ருதம், ப்ரஹ்ம" என்று கூறப்படும் பொருள் 1) ப்ரதிபிம்பமா? 2) ஜீவனா? 3) தேவதையா? 4) ஈஶ்வரனா? என்று.

**பூர்வபக்ஷம்:-** எல்லோராலும் காணப்படும் கண்பார்வையில் தெரியும் நமது ப்ரதிபிம்பம் என்று தோன்றும் பக்ஷம்; அல்லது உருவம் பார்க்கும் நேரத்தில் ஜீவன் கண்ணில் வருகிறான் என்பதால் ஜீவன் என்று மற்றொரு பக்ஷம்; அம்ருதத்வம் இவனுக்கு வராது என்றால் ஆதித்யதேவதையை எடுத்துக்-

கொள்ளலாம், ஸூர்யன் கண்ணாக ஆகி கண்ணில் நுழைந்தான் என்று ஶ்ருதி உள்ளதன்றோ! எப்படியும் பரமாத்மா ஆகமுடியாது. கண்ணில் வஸிப்பதும் கண்ணால் பார்க்கப்படும் தன்மையும் ஈஶ்வரனுக்கு அமையாது.

ஸித்தாந்தம் :- "ஆனந்தரூபமாயும், ஆகாயம் போல் பூர்ணமாயும் இருப்பவர் ப்ரஹ்மம்" कं ब्रह्म, खं ब्रह्म என்று கூறப்படுவதால் (முன் வாக்யத்தில்) இங்கும் एषः இந்த என்ற வார்த்தையானது ப்ரஹ்மத்தைத்தான் குறிக்க முடியும். அவரை கண்ணில் இருப்பதாக உபாஸனை கூறி அவருக்கு 1) வாமநீத்வம் (ஆசையை பூர்த்தி செய்பவர்) 2) பாமநீத்வம் (உலகை ப்ரகாஶப்படுத்துபவர்) போன்ற குணங்களை பின்பு கூறுகிறது. இத்தகைய குணங்களுடன் ஸோபாதிகப்ரஹ்மமானது ஶாஸ்த்ர பார்வையில் காணப்படுவது என்பது பொருந்தும். மேலும் அம்ருதத்வம், அபயத்வம் போன்ற தன்மை ஜீவனுக்கும், ப்ரதிபிம்பத்திற்கும் அறவே பொருந்தாது. ஆகையால் இந்த வாக்கியம் உபாஸ்ய ப்ரஹ்மத்தைக் கூறுகிறது.

## 1.2.3 V अन्तर उपपत्ते: (6 सूत्राणि)

(अत एव च स ब्रह्म என்று அதிகபடியான सूत्रम्)

விஷயம் :- முன் கூறிய உபகோஶல வித்யையில் உள்ள य एषोऽक्षिणि पुरुषो दृश्यत एष आत्मेति होवाच एतद् अमृतं अभयं एतद्ब्रह्मेति என்பதுதான் விஷயவாக்கியம்.

ஸந்தேஹம் :- இவர் ப்ரதிபிம்பமா? ஜீவனா? ஸூர்யனா? ப்ரஹ்மமா?

பூர்வபக்ஷம்:- அத்வைதிகளின் யுக்திகளின்படியே பரமாத்மாவிற்கு காணப்படும் தன்மை, குறுகிய இடம், பொருந்தாததால் மற்ற மூவருக்கும் பொருந்தும் ஆதலால், முதன்முதலில் கூறப்படும் த்ருஶ்யத்வலிங்கம் ப்ரபலம் ஆனதால் பின்னால் கூறப்படும்

அம்ருதத்வாதிகள் இரண்டாம் நிலையாக கருதப்பட வேண்டுமாதலால் ப்ரதிபிம்பம், ஜீவன், தேவதைகளில் ஒருவர்தான். ब्रह्म, आत्मा என்ற வார்த்தைகளுடன் इति ஶப்தமானது கூறப்படுவதால் முக்கியமானது அல்ல.

ஸித்தாந்தம் :- இதி ஶப்தம் "इति हस्माचार्य: आह" என்ற இடத்தில் தாத்பர்ய முக்யத்வம் இதி ஶப்தத்தில் காணப்படுவதால் ब्रह्म, अमृत போன்றவை முக்யமானவைதான். மேலும் இந்த ப்ரகரணத்தில் कं ब्रह्म, खं ब्रह्म என்று பூர்ணானந்தத்தன்மை கூறியவரையே एतद्ब्रह्म என்று ப்ரஹ்மஶப்தத்தினாலே கூறுகிறது. எனவே இந்த பூர்ணானந்தத்தன்மை ப்ரஹ்மத்தில்தான் வரும். மேலும் அந்தர்யாமிப்ராம்ஹணத்தில் चक्षुषितिष्ठन् என்று ப்ரஹ்மம் நியந்தாவாக கண்ணில் உள்ளதாக கூறப்பட்டுள்ளது. எனவே ப்ரஹ்மம்தான் இங்கு கூறப்படுகிறது.

## 1.2.4 D अन्तर उपपत्ते: (5 सूत्राणि)

விஷயம் :- விஷயவாக்யம் முன்பு கூறப்பட்டதுதான்.

ஸந்தேஹம் :- இவர் அக்னியா? விஷ்ணுவா?

பூர்வபக்ஷம்:- முன்பு கார்ஹபத்யாக்னியாக தன்னை ஆதித்யனில் உள்ளவன் என்று கூறியுள்ளதால், ஆதித்யனை கண்ணில் நுழைந்ததாக கூறுவதால் अथहाग्नय: समूदिरे - என்பதாக அக்னி ஶ்ருதி அதிகமிருப்பதால் அக்னிதான் கூறப்படுகிறான். स यश्चायं पुरुषे यश्चासावादित्ये स एक: என்றவிதமான ஸமாக்யாவைக் கொண்டு அக்னி கூறிய "அஹம்" என்ற சொல் அந்தர்யாமி விஷ்ணுவை கூறுவதாக எண்ணமுடியாது எனவே இங்கு அக்னி -தான் கூறப்படுகிறார்.

ஸித்தாந்தம் :- एतदमृतम् என்றவாறு கூறப்படும் அம்ருதத்வம், அபயத்வம் போன்றவை அக்னிக்கு பொருந்தாது. மேலும் ब्रह्म- आत्मा - ஶப்தங்கள் விஷ்ணுவிற்கே உகந்தன, மேலும் कं ब्रह्म खं ब्रह्म என்று சொல்லப்படும் ப்ரஹ்மப்ரகரணம் அக்னிக்கு வரவே வராமல் தடுக்கிறது. மேலும் स एनान् ब्रह्म गमयति என்று சொல்லப்படும் ப்ரஹ்மப்ராப்தியும் ப்ரஹ்மலிங்கமாகிறது. அக்னி ஶப்தப்யாஸம் அந்தர்யாமிபரம் அதனால் இங்கு ஸ்வதந்த்ரமான விஷ்ணுதான் கூறப்படுகிறார்.

## 1.2.5 A अन्तर्याम्यधिदैवादिषु... (3 सूत्राणि)

விஷயம் :- யாக்ஞவல்க்ய உத்தாலக விவாதத்தில் கூறப்படும் यः पृथिव्यां तिष्ठन् போன்ற அந்தர்யாமி ப்ராம்ஹணம் விஷயம்.

ஸந்தேஹம் :- ப்ருதிவீ போன்ற ஸர்வ ஜகத்திற்கும் உள்ளிருந்து தூண்டிவிடும் அந்தர்யாமியானவர் 1) ப்ரதானமா? 2) ஜீவனா? 3) ப்ரஹ்மமா?

பூர்வபக்ஷம் :- ப்ரதானமானது அகில ஜகத்திற்கும் உபாதான காரணமாதலால் உபாதான காரணமாக (material cause) தனது கார்யத்திற்கு (effects) நியமனம் பண்ண முடியும். அல்லது ஜீவனும் கூட தனது கர்மாக்களின் பயனாக பலனை போகிப்பதற்கு ஸாதனமான உலகை உண்டுபண்ணவைப்பதால் அவனும் அந்தர்யாமி ஆகலாம்.

ஸித்தாந்தம் :- இங்கு ஒவ்வொரு கண்டத்திலும் एष ते आत्माऽन्तर्यामी अमृतः என்று அந்தர்யாமியின் தாதாத்ம்யமும் (ஐக்கியம்) அம்ருதத்வமும் கூறப்படுகிறது. மேலும் ஸர்வ-

வ்யாபித்வம் கூறப்படுகிறது. இது ப்ரஹ்மத்திற்கே பொருந்தும். மேலும் த்ரஷ்ட்ருத்வம் சேதன தர்மம்; ஜடமான ப்ரதானத்திற்கு வராது. "ஆத்மனி திஷ்டன்" என்றவாறு ஜீவனுக்கும் அந்தர்யாமியாக கூறப்படும் இவர் ஜீவனாக இருக்க முடியாது. ப்ரஹ்மம்தான்.

## 1.2.4 V अन्तर्याम्यधिदैवादिषु... (3 सूत्राणि)

(न च स्मार्तमतद्धर्माभिलापाच्छारीरश्च என்றும் उभयेऽपि हि भेदेनैनमधीयते என்றும் பிரிந்துள்ளது)

விஷயம் :- அதே அந்தர்யாமி ப்ராம்ஹணம்தான் (நாராயணனுக்கு கண்ணிலிருப்பதான ஶ்ருதியினால் முன்பு ஸித்தாந்தம் கூறியது ஸரியல்ல என்பதாக இந்த அதிகரணம் வருகிறது)

ஸந்தேஹம் :- ஜீவனா? பரமாத்மாவா?

பூர்வபக்ஷம் :- अदृष्टो द्रष्टा என்று கூறப்படும் த்ரஷ்ட்ருத்வம் கண்ணினால் வரும் பார்வை உடையவன் என்று அந்தர்யாமியை கூறுவதால், கருவிகள் இல்லாமலேயே ஞானமடையக்கூடிய பரமாத்மா இங்கு அந்தர்யாமியாக முடியாது. இங்கு ஒவ்வொரு இடத்திலும் பூமி போன்ற பூதங்களில் இயக்குபவனான தனித்தனியான வெவ்வேறு ஜீவன் என்று சொல்ல வேண்டும். आत्मनि तिष्ठन् என்பதும் அன்யமான ஆதாரமில்லாதவன் என்ற கருத்தில் ஜீவனுக்கு பொருந்தும். ப்ருதிவியில் அந்தர்யாமி யாரோ அந்த ரகத்தை (ஜாதியை) சேர்ந்த (ஸஜாதியன்)தான் மற்றவைகளிலும் அந்தர்யாமி என்பதாக स त आत्मा என்ற தொடருக்கு सः என்ற வார்த்தையின் அர்த்தம் கொள்ள வேண்டும். அதனால் இங்கு கூறப்படும் அந்தர்யாமி ஜீவன்தான்.

ஸித்தாந்தம் :- ப்ரதிபர்யாயம் (ஒவ்வொரு இடத்திலும்) வெவ்வேறு அந்தர்யாமி என்ற பூர்வபக்ஷம் ஸரியில்லை. இந்த ப்ரகரணத்தில் य इमञ्च लोकं परं च लोकं सर्वाणि च भूतानि योऽन्तरो यमयति என்று எல்லாவிடத்திலும் ஒரு அந்தர்யாமியை கூறு

  

என்ற கேள்வியின் பதிலாக இங்கு கூறப்படும் அந்தர்யாமி ஒருவராகத்தான் இருக்க வேண்டும். எனவே ஒவ்வொரு கண்டத்திலும் கூறப்படும் ஆத்மஶப்தம் ஒருவரையே குறித்தாக வேண்டும். எனவே இந்த ஒரு மகிமை பரமாத்மா தவிர வேறு யாருக்கு வரும்? எனவே பரமபுருஷன்தான் அந்தர்யாமி. आत्मनि तिष्ठन् என்பதற்கு பூர்வபக்ஷப்படி பொருள் கொள்வது இரண்டாம் நிலையானதால் ஸரியில்லை. அதனால் ஜீவனுக்கும் ஆட்டிவைக்கும் பொருளானவர் ப்ரஹ்மமே, ஜீவனின்று வேறுபட்டவரே. த்ரஷ்ட்ருத்வம் என்பதும் பரமாத்மாவிற்கு நியம்யரான ஜீவர்களின் கரணங்களினால் வரும் அறிவாக முடியாவிடினும், ரூபஸாக்ஷாத்-காரமான அறிவு கருதப்படுகிறதால் இது பரமாத்மாவிற்குத் தான் பொருந்தும். எனவேதான் पश्यत्यचक्षु என்று பரமாத்மாவிற்கு தர்ஶனஶ்ரவணாதிகள் கூறப்படுகின்றன. அதனால் இங்கு கூறப்படும் அந்தர்யாமி நாராயணன்தான்.

## 1.2.5. D अन्तर्याम्यधिदैवादिषु... (3 सूत्राणि)

விஷயம், ஸந்தேஹம், பூர்வபக்ஷம் மூன்றும் அத்வைதிகளின் மதம் போலவே உள்ளது. அந்தர்யாமிப்ராம்ஹணத்தில் கூறப்-படுபவர் ஜீவனா, ப்ரதானமா, விஷ்ணுவா? என்று ஸந்தேஹித்து, விஷ்ணுவல்ல மற்ற இருவர்தான் என்று பூர்வபக்ஷம் ஏற்படுகிறது.

ஸித்தாந்தம் :- यं पृथिवी न वेद, यस्य पृथिवी शरीरम् என்று ப்ருதிவீ தேவதை போன்றவர்களால் அறியமுடியாததன்மை உடையவராக அந்தர்யாமி கூறப்படுகிறார். மேலும் வெளிப்பொருளின் தொடர்பின்றி ரமிப்பது என்கிறதான ஆந்தரத்வம் கூறப்படுகிறது. இவை இரண்டும் ப்ரஹ்மமாத்ர லிங்கங்கள். மேலும் "न ते विष्णो जायमानो न जात:" "स योऽतोऽश्रुतोऽगतोऽमतोऽनतोऽदृष्टोऽविज्ञातोऽना-

दिष्ट: सर्वेषां भूतानामन्तर पुरुष" என்று (I.3.2.4) அந்தர்யாமித்வாதி-தன்மை விஷ்ணுவிற்கே கூறப்படுகிறது. ப்ரக்ருதியின் (ப்ரதானத்தின்) ஜடத்வமோ, ஜீவனின் ஸம்ஸாரி- த்வமோ இங்கு காணப்படாததால் அந்த இரண்டு பக்ஷம் பொருந்தாது. எனவே அந்தர்யாமி விஷ்ணுதான்.

## 1.2.6 A अदृश्यत्वादिगुणको (3 सूत्राणि)

விஷயம்:- முண்டக உபநிஷத்தில் "यत्तदद्रेश्य-मग्राह्यमगोत्रमवर्ण-मचक्षु: श्रोत्रं तदपाणिपादम्, नित्यं विभुं सर्वगतं सुसूक्ष्मं तदव्ययं यद्भूतयोनिं परिपश्यन्ति धीरा:" என்ற வாக்கியம் விஷயம்.

ஸந்தேஹம் :- இங்கு ஸர்வபூதங்களுக்கும் காரணமாக கூறப்படும் அத்ருஶ்யமான பொருள் யாது? ப்ரதானமா? ஜீவனா? ப்ரஹ்மமா?

பூர்வபக்ஷம் :- ப்ரதானமாக இருக்கலாம் - ஏனெனில் யோனி = காரணம் என்பதாக ப்ரதானமானது உலக பரிணாமத்திற்கு காரணம் ஆகமுடியும். அல்லது யோனி என்பதற்கு நிமித்த காரணம் என்று வைத்துக்கொண்டால் தனது புண்யபாப கர்மங்கள் வாயிலாக நிமித்த காரணமாக ஜீவனாகமுடியும். எனவே ப்ரதானமோ ஜீவனோதான்.

ஸித்தாந்தம் :- இங்கு பூதயோனியாக கூறப்படுவது ப்ரஹ்மம்-தான். ஏனெனில் அடுத்தாற்போல் "य: सर्वज्ञ: सर्ववित् यस्य ज्ञानमयं तप:" என்பதாக ஸர்வஞத்வம் சொல்லப்படுகிறது. இது ப்ரதானம், ஜீவன்களுக்கு அமையாது. மேலும் सबाह्याभ्यन्तरो ह्यज: என்று ஸர்வவ்யாபித்வமும் பிறப்பற்றத்தன்மையும் ஜீவனுக்கு பொருந்தாது. அக்ஷரம் எனப்படும் ப்ரதானத்திற்கும் மேலாக "अक्षरात्परत: पर:" என்று பூதயோனியை கூறுவதால் ப்ரதானமும்

இங்கு கூறப்பட முடியாது. எனவே பரமாத்மாதான் பூதயோனி ஆவார்.

## 1.2.5 V अदृश्यत्वादिगुणको (3 सूत्राणि)

அத்ருஶ்யத்வம் முதலிய தன்மைகள் உடையவர் பரமாத்மாதான், பரமாத்மாவிற்கே பொருந்துகிற ஸர்வஞுத்வாதிதன்மைகள் கூறப்படுவதால்.

விஷயம் :- மேற்கூறிய வாக்கியம் விஷயம்.

ஸந்தேஹம் :- ப்ரதானமா? ஜீவனா? ப்ரஹ்மமா?

பூர்வபக்ஷம் :- த்ருஶ்யமாக இருந்தது அத்ருஶ்யமாக ஆனது என்னும் பொருள் अदृश्यम् என்ற சொல்லினால் குறிக்கப்-படுகிறது. ஆகவே ப்ருதிவீ போன்ற ரூபவத்தான த்ருஶ்யமாக எது இருந்ததோ அது ரூபத்தை விட்டுவிட்டு அத்ருஶ்யமாகிறது என்று உணர்வு (அறிவு) ஏற்படுவதால் ப்ரதானம் கூறப்படுகிறது. அல்லது परात् अक्षरात्परः என்பதாக அவ்யக்தமான பரத்தை விட பரமான ஜீவன் என்று கொள்ளலாம். ஆகவே ப்ரதானம் அல்லது ஜீவன் கூறப்படுகிறது.

ஸித்தாந்தம் :- அத்ருஶ்யமென்று கூறப்பட்ட அக்ஷரத்தை "यः सर्वज्ञः सर्ववित्" என்ற மந்திரத்தில் ஸர்வஞுன் என்று சொல்வதால் இது அவ்யகதம் என்கிற ப்ரதானம் அல்ல. अक्षरात् परतः परः என்ற மந்திரத்தில் परतः अक्षरात् परः என்று அன்வயம் ஸ்வாரஸ்ய-மில்லை. மேலும் மேல்பட்டது என்றால் எதை காட்டிலும் என்ற கேள்வி எழுவதால் அக்ஷரத்தை காட்டிலும் பரமான = ஜீவன், அந்த பரமான परतः = ஜீவனைக்காட்டிலும் பரமான அக்ஷர

புருஷனான பரமாத்மாதான் கூறப்படுகிறார். மேலும் அக்ஷரத்திற்கு விஸ்வரூபத்தன்மை கூறப்படுகிறது. अग्निर्मूर्द्धा चक्षुषी चन्द्रसूर्यौ என்று இது ஜீவனுக்குமுற்றிலும் பொருந்தாது. எனவே அக்ஷரபுருஷனான இவர் ப்ரஹ்மம்தான்.

## 1.2.6 D अदृश्यत्वादिगुणको (3 सूत्रम्)

விஷய வாக்யம் அத்வைதம் போலவே

ஸந்தேஹம் :- ப்ரக்ருதியா? ருத்ரனா? ப்ரஹ்மாவா? விஷ்ணுவா?

பூர்வபக்ஷம் :- "यथा पृथिव्यामोषधय: सम्भवन्ति" என்ற உதாரண வாக்கியத்தில் கூறும் உபாதான காரணத்வமாகிற லிங்கத்தைக் கொண்டு ஆலோசித்தால் ஜடமான ப்ரக்ருதி என்று பூர்வபக்ஷம் (1) कूटस्थोऽक्षर उच्यते என்று கீதையில் அக்ஷரம் என்ற வார்த்தை ஸ்ரீதத்வத்தை குறிப்பதாக உள்ளதால் உபாதானமாகிய ஜடத்தின் அபிமானியாகிய சேதனத்திலும் உபாதானத்வம் வரலாம் என்பதால் சித்துதான் ப்ரக்ருதி என்ற போதிலும் स ब्रह्मविद्यां என்று நான்கு முகமான ப்ரஹ்மதேவனோ அல்லது कर्तारमीशं என்ற இடத்தில் ஈஶன் என்ற பதம் இருப்பதால் ருத்ரனோ அக்ஷரமாக ஏற்க வேண்டும். அக்ஷரத்தை நிக்ருஷ்டமாக ஆக்கி अक्षरात् पर: என்று கூறப்படுவதால் விஷ்ணுவாக அக்ஷரம் இருக்க முடியாது.

ஸித்தாந்தம் :- "अथ परा यथा स हरिर्वेदितव्य:" "सा विद्या तन्मतिर्यया" என்றதான ஶ்ருதி ஸ்ம்ருதிகளால் விஷ்ணுவிடம் மட்டுமே பொருந்தக்கூடிய ரிக், யஜுர் போன்ற பரவித்யையினால் அறியவேண்டியதன்மை கூறப்படுகின்றது அன்றோ! மேலும் "यदा पश्य: पश्यते रुक्मवर्णम्" என்று ரூபம் கூறப்படுகிறது. अक्षरत्रयमीरितम्

(स्कान्द:) என்று கூறியிருப்பதால் பரத்வத்திற்கு அவதியாக கூறிய அக்ஷரம் விஷ்ணுவாகமாட்டார். மேலும் ப்ருதிவி போன்ற உதாரணங்கள் வெறும் காரணத்தன்மையை மட்டும் காட்டுகின்றபடியால் உபாதான-மென்று எடுத்துக்கொள்ள அவசியம் இல்லை. ப்ரஹ்மன் ஈஶன் என்ற சொல்லெல்லாம் விஷ்ணுவைத்தான் நேரடியாக கூறுகின்றன. ஆகையால் இங்கு கூறப்படும் மேலான அக்ஷரம் விஷ்ணுவே.

## 1.2.7 A वैश्वानर: साधारण (9 सूत्राणि)

விஷயம் :- சாந்தோக்ய உபநிஷத்தின் ஐந்தாவது அத்யாயத்தில் கூறும் வைஶ்வானரவித்யை குறித்த வாக்கியம் விஷயம்.

ஸந்தேஹம் :- आत्मानं वैश्वानरं उपास्ते என்று கூறப்படும் வ்யாபக-மாக ஸர்வரூபமாக உள்ள வைஶ்வானரன் 1) வயிற்றிலுள்ள ஜாடராக்னியா 2) தேஜஸ்ஸா (भूताग्नि) 3) ஸூர்ய தேவதையா? 4) ஜீவனா? 5) பரமாத்மாவா? என்றவாறு ஐந்து பக்ஷமான சந்தேஹம் ஸந்தேஹம். வைஶ்வானர என்ற சொல்லினால் 1-3 பக்ஷங்கள் எழுகின்றன. "ஆத்மா" என்ற சொல்லினால் 4-5வது பக்ஷங்கள் தோன்றுகின்றன.

பூர்வபக்ஷம் :- 1) अयमग्निर्वैश्वानरो योऽयमन्तः पुरुषे येनेदमन्नं पच्यते यदिदमद्यते என்று கூறியிருப்பதால் ஜாடராக்னியாகலாம்.

2) विश्वस्मा अग्निं भुवनाय देवा वैश्वानरम् என்று பூதாக்னியும் சொல்லப்படுகிறார்.

3) वैश्वानरस्य सुमतौ स्याम என்பதாக தேவதையும் சொல்லப்-படுகிறார். எனவே மூன்றில் ஒருவர் வைஶ்வானரர். அல்லது ஆத்மா என்ற வார்த்தை ஜீவனில் ரூடமானதால் வைஶ்வானரன் ஜீவன்தான்; பரமாத்மா ஆக முடியாது. அவரை கூறுவதற்கு ப்ரமாணமில்லை (அடையாளம் இல்லை)

ஸித்தாந்தம் :- ப்ரஹ்மம்தான் வைய்ஶ்வானரன் ஆகும். ஏனெனில் விண்ணுலகம் தலை என்றும், சந்திர-ஸூர்யர்கள் கண்கள் என்றும், திசைகள் காதுகள் என்றும் இவ்வாறு விஸ்வரூபத்வம் கூறப்படுகிறது. இது ஈஶ்வரனைத் தவிர யாருக்கும் பொருந்தாது. மேலும் को नः आत्मा किं ब्रह्म என்று முதன்முதலில் சொல்லப்படுவதால் ப்ரஹ்மஶப்தம் ஈஶ்வரன்தான். வைய்ஶ்வானரன் என்ற பதம் யோகவ்யுத்பத்தியினால் विश्वेषां हितः, विश्वचासौ नरश्च என்றவாறு எல்லாமாகவும் நரனாகவும் உள்ளவர் அல்லது எல்லோருக்கும் ஹிதமானவர் என்ற பொருள் கொண்டு ப்ரஹ்மத்தில் பொருந்தும். ஆத்மஶப்தமானது ஜீவனைப்போல் ப்ரஹ்மத்தையும் கூறும் சக்தி உடையது. அதனால் வைய்ஶ்வானரன் ப்ரஹ்மம்தான்.

## 1.2.6 V :- वैश्वानरः साधारण (9 सूत्राणि)

விஷயம் :- அத்வைதத்தில் கூறும் வைய்ஶ்வானர வித்யைதான் விஷயம்.

ஸந்தேஹம், பூர்வபக்ஷம் :- வைய்ஶ்வானர என்கிற வார்த்தை 1) அக்னி (நெருப்பு) 2) மூன்றாவது பூதம் 3) தேவதா 4) பரமாத்மா எனும் நான்கிலும் ப்ரயோகம் பண்ணப்படுவதால் நான்கினில் யார் என்ற ஸந்தேஹம். இந்த ஶப்தமானது நான்கிற்கும் சாதாரணமாயுள்ளதன்றோ. ஆரம்பத்தில் को न आत्मा किं ब्रह्म என்று ப்ரஹ்மஶப்தம் உள்ளதால் நிர்ணயம் ஏற்படுமே என்று கூற முடியாது. சுக்ல யஜுர்வேத உபநிஷத்தில் वैश्वानरं ह वै संप्रति भगवान् वेद, तं नो ब्रूहि என்பதாக ப்ரஹ்மத்திற்கும் அக்னி -க்கும் பொதுவாக சாதாரணமாக உபயோகிக்கப்பட்டுள்ளது. மேலும், स एषोऽग्निरेव वैश्वानरः என்பதாக அக்னியின் ஸமானார்த்தமாக வைய்ஶ்வானரஶப்தம் வருகிறது. ஆகையால்

உபக்ரமமாத்திரத்தினால் ப்ரஹ்மம்தான் என்று நிர்ணயிக்க-முடியாது.

ஸித்தாந்தம்:- வைய்ஶ்வானர என்ற சொல் स: = நாராயணன்தான், साधारणस्य = அக்னி, தேவதா, பூதம், பரமாத்மா என்ற நான்-கிற்கும் பொதுவான வைய்ஶ்வானர வார்த்தைக்கு विशेषात् = பரமாத்மாவிற்கு மட்டும் பொருந்தும் அடையாளங்களில் விசேஷித்திருப்பதால், என்று ஸூத்ரார்த்தம் கொள்ள வேண்டும். எல்லா ஜீவர்களுக்கும் ஆத்மாவான ப்ரஹ்மமானது அறிய விரும்பப்படுவதாக உபக்ரமம் இருக்கிறது. மேலும் உபாஸகர் கூறுகிற सर्वेषु भूतेषु सर्वेष्वात्मसु अन्नमत्ति என்பதாக நிரதிஶயபோக்யமான ब्रह्मानुभवम् பயனாகக் கூறப்படுகிறது. எல்லா இடங்களிலும் ஆத்மாக்களிலும் இருக்கிற अन्नम् = நிரதிஶயபோக்யமான ப்ரஹ்மத்தை अत्ति = அனுபவிக் -கிறான் என்றவாறு ஏக வாக்கியத்திற்கு அர்த்தம். ஸாதாரண அன்னம் என்று கொள்வது ஸரியில்லை. முமுக்ஷுகளுக்கு உணவு ஹேயம் அன்றோ!! மேலும் ஸர்வபாபதாஹம்(அழிவு) உபாஸனா -பலம் கூறப்படுவது ப்ரஹ்மஞானத்திற்கே பொருந்தும். த்ரை -லோக்யஶரீரத்வமும் பரமாத்மாவை நிர்ணயிக்கிற யுக்தி. ஜாடராக்னியில் வைய்ஶ்வானரஶப்தம் கூறப்பட்டால் ததுபாதிக (तदुपाधिक or तच्छरीरक) ப்ரஹ்மத்தையேதான் குறிக்கும்.

## 1.2.7 D वैश्वानरः साधारण (8 सूत्राणि)

விஷயம் :- ஸமமான வைய்ஶ்வானர வித்யைதான்

ஸந்தேஹம் :- மூன்றாவது பூதமா? தேவதையா? விஷ்ணுவா?

பூர்வபக்ஷம் :- அக்னியில்தான் வைய்ஶ்வானர வார்த்தை ப்ரஸித்த -மாயுள்ளது. மேலும் वैश्वानरे तद्दुतं भवति, हृदयं गार्हपत्य: என்றபடி

ஹோமாதாரத்வம், கார்ஹபத்யாங்கத்வம் காண்வ-ஶ்ருதியில் கூறப்படும் पाचकत्वम् போன்ற லிங்கங்கள் நெருப்பிற்கே பொருந்தும். விஷ்ணுவிற்கும் பொது என்றால் போகவ்யவஹார விரோதம் வரும். ''எல்லாமே விஷ்ணு வித்யா'' என்றால் இது அக்னி வித்யா, இது வேறு வித்யா என்ற வ்யவஸ்தை இல்லாமல் ஆகிவிடும். எனவே மூன்றாவது பூதம் அல்லது தேவதைதான் வைஶ்வானரன்.

ஸித்தாந்தம் :- "ஆத்மா" என்று கூறப்படுவது அபிவிமானம் என்று கூறிய ஸர்வகதத்வம் போன்றவற்றால் விஷ்ணு என்று நிர்ணயம் பண்ணவேண்டும். மேலும் "अहं वैश्वानरो भूत्वा" என்று கீதையில் கூறியுள்ளதால் ப்ரஹ்மப்ரகரணம்தான் இது. வைஶ்வான-ராதி வார்த்தைகள் அவ்வாறு விஷ்ணுவை உபாஸிப்பதற்காகவே கூறப்படுகின்றன. விஷ்ணுவையே கூறும் வார்த்தைகளுக்கு வ்யவ-ஹாரகாலத்தில் நடைமுறையை விரோதிக்காமல் இருப்பதற்காக அக்னி போன்ற பொருள் கொள்கிறோம்.



## மூன்றாம் பாதம்

# 1.3.1 A द्युभ्वाद्यायतनं स्वशब्दात् (7 सूत्राणि)

விஷயம் :- முண்டகோபநிஷத்தில் வரும் மந்திரமான यस्मिन्द्यौः पृथिवी च अन्तरिक्षमोतं मनः सह प्राणैश्च सर्वैः । तमेवैकं जानथ आत्मानमन्या वाचो विमुञ्चथ என்ற மந்திரம் விஷயம்.

ஸந்தேஹம்:- விண்ணுலகம் மண்ணுலகம் போன்ற எல்லாவற்றிற்கும் ஆதாரமான ஆத்மாவை மட்டும் அறியுங்கள், ஆதாரத்தில் உள்ள ப்ருத்வீ போன்றவைகளை அறியாதே. இந்த வேதாந்தத்தை தவிர மற்ற தர்க்கஶாஸ்த்ரங்கள் போன்றவற்றை விட்டுவிடுங்கள், புருஷார்த்தமாக அவை ஆகாது, இதுவே புருஷார்த்தம்'' என்ற கருத்துள்ள மேற்படி மந்திரத்தில் கூறுவதால் ஆதாரம் 1) ஸூத்ராத்மாவா? 2) ப்ரதானமா? 3) போக்தா வா? 4) ஈஶ்வரனா? என்று ஐயம்.

பூர்வபக்ஷம் :- 1) ஸூத்ராத்மா இருக்கலாம் वायुर्वाव गौतम तत्सूत्रं वायुना वै गौतम सूत्रेणायं च लोकः परश्च लोकः सर्वाणि च भूतानि संदृब्धानि भवन्ति என்பதாக ஶ்ருதியில் வாயுவாகிற ஸூத்ராத்மாவிற்கு இந்த விண்ணுலகம் மண்ணுலகம் முதலியவற்றின் ஆதாரத்தன்மை உள்ளது. 2) ப்ரதானமும் ஆகலாம். ஸாங்க்ய ஸ்ம்ருதி ப்ரஸித்தியினால் ஸர்வாதாரத்வம் கூறப்படுகின்றது. 3) तमेवैकं जानथ आत्मानं என்று ஆத்மா ஶப்தம் உள்ளதால் போக்தாவான ஜீவனும் ஆகலாம்.

ஸித்தாந்தம் :- 1) 2) ஸரியில்லை; ஏனெனில் மேற்சொன்ன ஆத்மஶப்தம் பொருந்தாது. போக்தா ஜீவன் ஆதாரம் என்ற மூன்றாவது பக்ஷமும் ஸரியில்லை. ஏனெனில் निरञ्जनः परमं

साम्यमुपैति என்ற வாக்யத்தில் द्युभ्वाद्यायतन-த்தை உணர்ந்தவனுக்கு முக்தர்களால் அடையப்படும் தன்மை கூறப்பட்டுள்ளது. மேலும் कस्मिन्नु भगवो विज्ञाते सर्वमिदं विज्ञातं भवति என்று ஒன்றை அறிந்தால் எல்லாம் அறிந்ததாகும் என்பதாக ஆரம்பத்தில் கூறியிருப்பதும் ब्रह्म वेद ब्रह्मैव भवति என்று முடிவில் கூறியிருப்பதும் ப்ரஹ்மத்திற்கே பொருந்தும். மேலும் பூதயோனிக்கு ஸர்வஜ்ஞத்வமும் கூறப்படுவது ப்ரஹ்மத்தையே சாரும்.

## 1.3.1 V द्युभ्वाद्यायतनं स्वशब्दात् (6 सूत्राणि)

(प्राणभृच्च என்ற ஸூத்ரம் தனியாக இல்லாமல் नानुमानमतच्छब्दात् என்பதோடு சேர்ந்து இருக்கிறது.)

விஷயம் :- விண்ணுலகம் மண்ணுலகம் போன்றவைகளின் ஆதாரமாக சொல்லப்பட்டவர் सः = பரமாத்மாதான், स्वशब्दात्= பரமாத்மாவிற்கு மட்டும் பொருந்தும் தன்மையை கூறும் ஶப்தம் இருப்பதால் - என்று ஸூத்ரார்த்தம். वायुर्वाव गौतम तत्सूत्रं वायुना वै गौतम सूत्रेणायं च लोकः परश्च लोकः सर्वाणि च भूतानि संदृब्धानि भवन्ति தான் விஷயம்.

ஸந்தேஹம், பூர்வபக்ஷம் :- மனம், ப்ராணன், இந்திரியங்கள், கர்மங்களின் தொடர்பும், நாடி ஸம்பந்தமும் (संहता यत्र नाड्यः), சரீராந்தபிரதேசத்தில் சஞ்சாரமும், தேவமனுஷ்யாதி ரூபமான பலவித ஜன்ம ஸம்பந்தமும் இங்கு காணப்படுகிறது. இவை எல்லாம் ஸ்புடமான ஜீவலிங்கங்கள். ஜீவனுக்கு விண்ணுலகம் போன்றவற்றிற்கு ஆதாரத்வம் என்பது ஜீவனின் கர்மாவை மூலமாக வைத்து உலக ஸ்ருஷ்டி ஏற்படுவதால் இரண்டாம் நிலையாக அமையும். இந்த ப்ரகரணம் பரமாத்மாவை கூறினாலும், ப்ரகரணத்தைக் காட்டிலும் ப்ரபலமான

லிங்கத்தினால் ப்ரகரணத்தை முறியடித்து ஜீவவிஷயகத்வம், இந்த மந்திரத்திற்கு வரும்.

ஸித்தாந்தம் :- ஆதாரத்திற்கு "अमृतस्यैष सेतुः" என்ற பகுதியினால் மோக்ஷத்தை அடைவிப்பது என்கிற அம்ருத ஸேதுத்வம் தெரிவிக்கப்படுகிறது. அதனால் மோக்ஷ ப்ரதத்வம் கிடைக்கிறது. இது பரமாத்மாவிற்கு மட்டும் கூறப்படுகிறது. तमेव विद्वानमृत इह भवति नान्यः पन्था अयनाय विद्यते என்று. மேலும் तमेवैकं जानथ आत्मानम् என்று கூறப்படும் ஆத்மத்வம் ஸர்வஜகதாத்மத்வமே என்று ஸ்வரஸமாக தெரிகிறது. இதுவும் ஸர்வத்திலுள்ளும் வ்யாப்தியை கூறும். மேலும் முக்தர்களால் அடையப்படும் தன்மை "अन्यमीशस्य महिमानमिति वीतशोकः" என்று இந்த ஆதாரத்திற்கு ஜீவனைக்காட்டிலும் பேதம் (வேற்றுமை) கூறப்படுகிறது. எனவே இங்கு கூறப்படுபவர் பரமாத்மாதான் ஜீவன் அல்ல.

## 1.3.1 D द्युभ्वाद्यायतनं स्वशब्दात् (6 सूत्राणि)

விஷயம் : அதே முண்டக வாக்கியம்தான் விஷயம்.

ஸந்தேஹம் :- ஆதாரமானவர் 1) ருத்ரனா? 2) ப்ரதானமா? 3) வாயுவா? 4) ஜீவனா? 5) விஷ்ணுவா?

பூர்வபக்ஷம்:- ருத்ரன் போன்ற நால்வரில் ஒருவர் ஏனெனில் "रुद्रो वा लोकाधारः", "प्राणानां ग्रन्थिरसि रुद्रो" என்ற ருத்ர ஸமாக்யை (ப்ரஸித்தமான பெயர்) இருக்கிறது. आकाश एव तदोतं च प्रोतं च -என்று அவ்யக்தமான ப்ரதானத்திலும் ஸமாக்யை உள்ளது. वायुना वै என்று வாயுவும் கூறப்படுகிறார். स एषोऽन्तरश्चरते बहुधा जायमानः - என்று பலவிதமான பிறப்புகள் சொல்லப்படுவதால்

ஜீவ லிங்கமும் உள்ளது. எனவே விஷ்ணு இங்கு கூறப்படவில்லை.

ஸித்தாந்தம் :- ஆத்மா என்ற சொல், அம்ருதத்தின் ஸேது என்கின்றவை விஷ்ணுவிற்கு மட்டுமே பொருந்தும். ருத்ரன் போன்றவர்களின் சிறப்பு அடையாளங்களான பஸ்மம் அணிதல், உக்ரத்தன்மை- போன்றவை சொல்லப்படவில்லை. பெயரில் உள்ள ருத்ரபதமானது யௌகிக வ்யுத்பத்தியினால் ருதம் - வருத்தத்தை, द्रावयति = விரட்டுகிறார் என்பதால் விஷ்ணுவையே குறிக்கும். रुजं द्रावयते यस्मात् என்று கூறப்பட்டுள்ளது அல்லவா? பலவிதமான பிறப்பு ஸம்பந்தமும் "अजायमानो बहुधा विजायते" என்று கூறப்பட்டது போல் प्रादुर्भाव: = வெளிப்படுவது என்ற பொருளில் விஷ்ணுவிற்கும் பொருந்தும். ஜீவனுக்கும் விஷ்ணுவிற்கும் अन्यमीशस्य என்று பேதம் கூறப்படுவதால் இங்கு கூறப்படுபவர் விஷ்ணுதான்.

## 1.3.2 A भूमा संप्रसादादध्युपदेशात् (2 सूत्रे)

விஷயம் :- சாந்தோக்யம் ஏழாம் அத்யாயத்தில் நாரதருக்கு ஸனத்குமாரர் கூறும் நாமாதி ஆசாந்தம் 15 விஷயங்களை ஒன்றுக்கொன்று மேம்பட்டது என்பதை, கேள்வி பதில் வழியாகக் கூறி ஆசையைக்காட்டிலும்ப்ராணன் பெரியவர் என்று கூறிய பிறகு நிரதிஶயமான பூமா கூறப்படுகிறது. यत्र नान्यत्पश्यति नान्यत् शृणोति नान्यत् विजानाति स भूमा...भूमा वै सुखम् என்று. இது விஷயமாகிறது.

ஸந்தேஹம் :- இந்த பூமா என்பதால் ப்ராணன் கூறப்படுகிறாரா? பரமாத்மா கூறப்படுகிறாரா?

பூர்வபக்ஷம் :- ப்ராணன்தான் பூமா. ஏனெனில் முன்பு எல்லா இடத்திலும் "நாமாவை விட பெரியது உண்டா" "வார்த்தையை விட பெரியது உண்டா" என்றவாறு உத்தோரத்தரம் நாரதர் பெரியதை கேட்ட பிறகே வாக்கு முதலியது சொல்லப்படுகிறது. ஆனால் இங்கு ப்ராணனைக் காட்டிலும் பெரியது உண்டா என்ற கேள்வி இல்லாமலேயே ப்ராணனை தெரிந்தவன் "அதிவாதி" = பெரிய orator என்று புகழ்ந்து அவரையே தொடர்ந்து இந்த பூமா கூறப்படுவதால் இவர் ப்ராணன்தான். மேலும் ப்ரகரணம் வேறு என்ற ஸந்தேஹம் வராமலிருக்க அதிவாதித்வத்தை एष तु वा अतिवदति य: सत्येनातिवदति என்றவாறு தொடர்ந்து ஸத்யம் போன்ற குணங்களை கூறி ப்ராணனை விட்டுவிடாமல் "यत्र नान्यत्पश्यति" என்று பூமா கூறப்படுவதால் இவர் ப்ராணன்தான். தூங்கும் நிலையில் மற்றதைப் பாராமல் கேளாமல் சுகமாக இருப்பதால் அப்போது ப்ராணன் மட்டும் உள்ளதால், பூமாவின் லக்ஷணம் பொருந்தும்.

ஸித்தாந்தம் :- மேற்பட்ட பொருளைக்காட்டிலும் பெரியது உண்டா? உண்டு என்றுதான் கூற வேண்டும் என்று கட்டாயம் கிடையாது. முன்பு குறித்ததை விட அதற்கு பொருந்தாத வேறொன்று கூறினாலும் போதும். மேலும் அதிவாதித்வம் ஏற்பட முதலில் கூறிய காரணத்தை தள்ளி एष तु वा अतिवदति என்ற வாக்யத்தில் ஸத்யேன அதிவாதிதான் உண்மையான அதிவாதி என்ற த்வனியில் வாக்கியம் வருகிறது. இந்த ஸத்யம் என்பது ப்ரஹ்மமே. மேலும் "சோகத்தைப் போக்குகிறான் ஆத்மவித்" என்று கூறி ஆத்மஞானத்தை விரும்பி நாரதர் வந்து அதையே ஆரம்பித்து கேட்டார். சோகதரணம் ப்ரஹ்மஞானத்தினால்தான். மேலும் ஸகல த்வைதத்தையும் நிஷேதித்து பூமா கூறப்படுவது ப்ரஹ்மத்திற்கே பொருந்தும். சுகம் என்பதும் தூக்கத்தில் ஆத்மாவுடன் ஒன்றானதால் ஸ்வரூபசுகம் ஏற்படுகிறது.

ப்ராணனுக்கு சுகத்வம் கிடையாது. எனவே அத்வைதமான ப்ரஹ்மம்தான் பூமா.

## 1.3.2 V भूमा संप्रसादादध्युपदेशात् (2 सूत्रे)

விஷயம் :- பூமவித்யைதான். ஆனால் "यत्र नान्यत्पश्यति" என்ற பகுதி அல்லவா! நாமாதி ஆசாந்தம் கூறி, பிறகு ஆசைகளைக் காட்டிலும் பெரியவனாக ப்ராணன் என்ற வார்த்தையை கூறி (संप्रसाद என்ற பதம் ஜீவனைக் குறிக்கிறது) ப்ராணனை ஹிம்சித்தால் தோஷம் கூறப்பட்டுள்ளதால் ஹிம்சைக்கு தகுதியற்ற प्रत्यगात्मा = ஜீவன்தான் ப்ராணன் என்று கூறப்பட்டுள்ளான். எனவே भूमा = அனல்ப சுகவான் य:= பரமாத்மா, संप्रसादात् = ஜீவாத்மாவைக்காட்டிலும் अधि = மேலாக उपदेशात् = கூறியிருப்பதால் என்று ஸூத்ரார்த்தம்.

பூர்வபக்ஷம் :- ப்ரத்யகாத்மாவான प्राण என்ற சொல்லினால் ஆத்மாவை கூறிய பிறகு அதனினும் பெரிது உண்டா என்று கேள்வியோ, உண்டு என்ற பதிலோ இல்லாததால், நாரதருக்கு ஸனத்குமாரரின் உபதேசம் ஜீவனில் முடிந்தது என்று தீர்மானிக்க வேண்டியுள்ளது. எனவே ஜீவப்ரகரணத்திற்கு விச்சேதம் (Cut) இல்லாததால் பிறகு கூறப்படும் பூமாத்மா ப்ரத்யகாத்மாதான்.

ஸித்தாந்தம் :- ப்ரத்யாகாத்மாவை உபாஸிப்பவனுக்கு அதிவாதித்வம் சொல்லிவிட்டு, एष तु वा अतिवदति என்ற இடத்தில் तु = என்ற வார்த்தையால் வேறு ஒரு அதிவாதியை உபதேசம் (ஸூசனை) பண்ணி "य: सत्येन अतिवदति" என்றவாறு ஸத்யமப்த பொருளான ப்ரம்ஹோபாஸகனுக்கு அதைவிட மிகுந்த அதிவாதித்வம் சொல்லி இதற்குக் காரணமான ஸத்ய மப்தார்த்தமான, ஜீவனைக் காட்டிலும் வேறான ப்ரஹ்மம்தான்

सत्यं त्वेव विजिज्ञासितव्यम् என்று உபதேசிக்கப்படுகிறது. ஆகையால் இங்கு பூமாத்மா பரமாத்மாதான் ஜீவன் அல்ல.

## 1.3.2 D भूमा संप्रसादादध्युपदेशात् (2 सूत्रे)

விஷயம் :- பூமாவித்யைதான் यो वै भूमा तत्सुखम् என்று வருகிறது.

ஸந்தேஹம் :- இந்த பூமா முக்ய பிராணனா? விஷ்ணுவா?

பூர்வபக்ஷம் :- நாம, வாக், மனம், ஸங்கல்பம், சித்தம், த்யானம், விக்ஞானம், பலம், அன்னம், ஜலம், தேஜஸ், ஆகாஶம், ஸ்ம்ருதி (ஸ்மரணம்), ஆசை, (15) ப்ராணன் என்ற பொருட்கள் மேன்மேல் உண்டா? உண்டு - என்றவாறு கேள்வி பதில் வாயிலாகவே உரைக்கப்படுகின்றன. இவ்வாறு இந்த கேள்வியோ பதிலோ இல்லாததால், ப்ராணன்தான் பூமா. ப்ராண ஶ்ருதியானது "अत एव प्राण:" என்ற இடத்தில் கூறியதை विष्णुवाचकम् என்று சொல்ல முடியாது. ஏனெனில் இங்கு उत्क्रान्तप्राणान् என்று கூறப்படும் உத்க்ராந்தி விஷ்ணுவிற்கு பொருந்தாது. எனவே பூமா ப்ராணன்தான்.

ஸித்தாந்தம் :- ஸங்கோசம் கூற முடியாதபடி நிருபபதமான சுக (सुख) பதத்தினால் भूमा वै सुखं என்று கூறப்பட்டுள்ள பூமா விஷ்ணுவேதான். மேலும் ஸர்வாதிகத்வதன்மை விஷ்ணுவிற்கே பொருந்தும். விஷ்ணுவிடம்தானே "विश्वशम्भुवं, विश्वत: परम्" என்று ஸர்வாதிகத்வம் ஶ்ருதியில் கூறியுள்ளது. प्राण ஶப்தத்தினால் கூறியவருக்கு உத்க்ராந்தி என்பதும் விஷ்ணுவிற்கு பொருந்தாதது அன்று. ஏனெனில் விஷ்ணுவிற்கு अणोरणीयान् என்று அணுத்வமும் கூறப்படுகிறது. எனவே பூமா விஷ்ணுதான்.

## 1.3.3 A अक्षरमंबरान्तधृते: (3 सूत्राणि)

விஷயம் :- கார்கிக்கு யாக்ஞவல்க்யர் கூறும் அக்ஷர ப்ராம்ஹணத்தில் வரும் - "एतद्वै तदक्षरं गार्गि ब्राह्मणा अभिवदन्त्यस्थूलमनणु ....आकाश ओतश्च प्रोतश्च" என்ற வாக்கியம் விஷயம்.

ஸந்தேஹம் :- இங்கு அக்ஷரஶப்தத்தினால் கூறப்படுவது ஓங்கார எழுத்தா? ப்ரஹ்மமா?

பூர்வபக்ஷம் :- ஓங்காரம்தான் கூறப்படுகிறது. ஏனெனில் எழுத்து -தான் அக்ஷர ஶப்தத்தினால் ப்ரஸித்தமாகச் சொல்லப்படுகிறது. ஆகவே ப்ரணவம் என்கிற ஓங்கார எழுத்தை உபாஸிப்பதற்காக இங்கு கூறப்படுகிறது.

ஸித்தாந்தம் :- ஆகாஶாதி, ஸமஸ்தபூத பௌதிகங்களுக்கும் ஆதாரமாக கூறப்படும் இந்த அக்ஷரம் ஜடமான ஓங்காரம் ஆக முடியாது. மேலும் "अस्थूलमनणु" என்று நிஷேதிக்கப்படுகின்றன. மேலும் ஸூர்யசந்திராதி ஸர்வமும் அக்ஷரத்தின் கட்டளையால் இயங்குகின்றன என்று ஸர்வஜகத்திற்கும் ஆள்பவராக கூறுகிறது. இவை எல்லாம் ப்ரஹ்மத்திற்கே பொருந்துவதால் அக்ஷரம் ப்ரஹ்மமே.

## 1.3.3 V अक्षरमंबरान्तधृते: (3 सूत्राणि)

விஷயம் :- இதே வாக்யம்தான்

ஸந்தேஹம் :- ப்ரதானமா? ப்ரஹ்மமா?

பூர்வபக்ஷம் :- अस्थूलत्वादि தன்மைகள் ஜகத்காரணமாக ஸாங்க்ய

ஸ்ம்ருதியில் கூறும் ப்ரதானத்திற்கு பொருந்துவதால் ஆகாஶத்திற்கும் காரணமான ப்ரதானம்தான் அக்ஷரம். மேலும் अक्षरात् परतः परः என்ற இடத்தில் அக்ஷரம் என்றும் ப்ரதானம் கூறப்படுகிறது. यया तदक्षरमधिगम्यते என்று ப்ரஹ்மத்திலும் அக்ஷர ஶப்தம் கூறப்பட்டிருப்பினும் கூட, ஶ்ருதியினால் மட்டும் அறியப்படும் பரமாத்மாவைக் காட்டிலும் அனுமானத்தினால் தெரியும் ப்ரதானம் சீக்கிரமாக புத்தியில் வருகிறது. தாமதமாக புரியும் ப்ரமாணத்தை விட சீக்கிரம் தெரியும் ப்ரமாணம் ப்ரபலம் என்பது ஶ்ருதிலிங்க மீமாம்ஸையில் ப்ரமாணங்களில் ப்ரஸித்தம். மேலும் அஸ்தூலாதிநிஷேதம் பரமாத்மாவில் அப்ரஸித்தம். எனவே அக்ஷரம் = ப்ரதானமே.

ஸித்தாந்தம் :- "ஸர்வப்ரபஞ்சத்திற்கும் (past, present, future) ஆதாரமாக உள்ள ஆகாஶத்தைக்காட்டிலும் ஆதாரம் எது?" என்ற கார்கியின் கேள்விக்கு பதிலாக அமைந்த ஆகாஶஶப்தம் பூதாகாஶத்தை குறிப்பது அல்ல. ஏனெனில் கார்யத்திற்குள் அகப்பட்ட ஆகாஶம் ஸர்வகார்யாதாரமாக இருக்க முடியாது. எனவே ப்ரதானம்தான் ஆகாஶவார்த்தைக்கு (அவ்யாக்ருத ஆகாஶம்) பொருள். ஆகவே ப்ரதானத்திற்கும் ஆதாரமாக சொல்லப்படும் அக்ஷரம் ப்ரதானமாகாது. ஜீவனும் ஆக முடியாது. ஸர்வகர்மங்களுக்கும் ப்ரவர்த்தகனாக அக்ஷரம் கூறப்படுகிறது. ஆகையால் அக்ஷரம் பரமாத்மாதான்.

## 1.3.3. D अक्षरमंबरान्तधृतेः (3 सूत्राणि)

விஷயம் :- இதே வாக்கியம்தான்

ஸந்தேஹம்:-அக்ஷரம் சித்ப்ரக்ருதியான ஶ்ரீதத்வமா? விஷ்ணுவா?

பூர்வபக்ஷம் :- அக்ஷர ஶப்தத்தினால் "येत्वक्षरमनिर्देश्यम्" என்று கீதையில் ஶ்ரீதத்வத்தில் ப்ரயோகம் உள்ளது. न क्षरति =

அழிவதில்லை என்ற பொருளும் பொருந்துவதால் ஸ்ரீதத்வம்தான் அக்ஷரம். மேலும் अहं सोममाहनसं बिभर्मि என்று ரிக்வேதத்தில் ஸ்ரீதத்வதன்மையாக ஸூர்யசந்திரர்களின் ஆதாரத்தன்மை கூறப்பட்டுள்ளது. அதே தன்மை இங்கு सूर्याचन्द्रमसौ विधृतौ तिष्ठत: என்று கூறப்படுகிறது. எனவே ஸ்ரீதத்வம்தான் அக்ஷரம்.

ஸித்தாந்தம் :- ஸர்வஜகத்திற்கும் ஆதாரமான ஆகாஶத்திற்கும் ஆதாரமான ப்ரக்ருதிக்கு ஸர்வாதாரத்வம் அதற்கும் ஆதாரமாக ப்ரக்ருதியாகிற ஆகாஶத்திற்கும் ஆதாரமாக அக்ஷரம் கூறப் -படுகிறது. மேலும் சிறிதும் ஸங்கோசமில்லாமல் பிறருக்கு அதீனமாகாத சாஸகத்தன்மை இந்த அக்ஷரத்திற்கு கூறப்படுகிறது. மேலும் एको दाधार भुवनानि, भुवनस्य रेतो विष्णोस्तिष्ठन्ति என்ற ஶ்ருதியில் விஷ்ணுவிடத்திலேயே ஸர்வ -நியந்த்ருத்வம் சொல்லப்படுகிறது. அதோடு நான்குவிதமான குறைபாடு உடையது = क्षरति, न क्षरति = अक्षरम् என்பதாக அக்ஷரபதத்தின் யோகார்த்தம் முழுமையாக விஷ்ணுவிற்கே பொருந்தும். "तस्मादक्षरंतस्मादक्षरम्" என்றவாறு அக்ஷரஶப்தா -வ்ருத்தி உள்ளது விஷ்ணுவிடத்தில்தான். ஆகையால் सर्वाधारत्वेसति अन्यैकाशितत्वं இருப்பதால் ஆகாஶஶப்தத்திற்கு அர்த்தம் ஸ்ரீதத்வம் என்று கொள்ளவும்.

## 1.3.4 A ईक्षतिकर्मव्यपदेशात्स: (1 सूत्रम्)

விஷயம் :- ப்ரஶ்நோபநிஷத்தில் வரும் य: पुनरेतं त्रिमात्रेणो -मित्येतेनैवाक्षरेण परं पुरषं अभिध्यायीत என்ற வாக்கியம் விஷயம்.

ஸந்தேஹம் :- இங்கு உபாஸனைக்குறியதாக கூறப்படும் பொருள் ஹிரண்யகர்பர் என்கிற அபர ப்ரஹ்மமா? பரமா?

  

பூர்வபக்ஷம் :- स सामभिरुन्नीयते ब्रह्मलोकम् என்பதாக உபாஸகர் ப்ரஹ்மலோகத்தை அடைவதாக பலன் சொல்லப்படுகிறது. ப்ரஹ்மத்யானமானால் இந்த பலன் பொருந்தாது. "பரம்" என்ற விஶேஷணம் இவருக்கும் ஆபேக்ஷிகமாக பொருந்தும்.

ஸித்தாந்தம் :- பரப்ரஹ்மம்தான் கூறப்படுகிறது. ஏனெனில் பிறகு இங்கு स एतस्माज्जीवघनात्परात्परं पुरिशयं पुरुषमीक्षते என்ற வாக்யத்தில் நன்கு புரிந்துகொள்ள வேண்டியதாக கூறும் பொருளேதான் இவ்வாக்யத்திலும் சொல்வதாக அறிகிறோம். परं पुरुषं ईक्षते என்றல்லவா உள்ளது. அர்த்தம் - உபாஸனையால் ப்ரஹ்மலோகம் அடைந்தவன் ஸர்வஸமஷ்டியான ஹிரண்ய-கர்பனைக்காட்டிலும் உத்க்ருஷ்டமான ஸர்வப்ராணி ஹ்ருத-யத்தில் உள்ள (पुरिशयं) பரமாத்மாவை அறிகிறான். இவ்விதம் கூறப்படும் பரப்ரஹ்மமே "परम पुरुष" இருஶப்தங்களால் இங்கு கூறுவதாக உணரவேண்டும். த்யானமாக செய்தால் ப்ரஹ்மலோகம் போய் க்ரமமாக உணர்ந்து முக்தி பெறுகிறான். ஆகையால் இங்கு பரப்ரஹ்மமே கூறப்படுகிறது. ஹிரண்யகர்பர் அல்ல.

## 1.3.4 V ईक्षतिकर्मव्यपदेशात्स: (1 सूत्रम्)

விஷயம் :- முன்பு கூறிய அதே விஷயம்தான்.

ஸந்தேஹம் :- இந்த अभिध्यायीत...पुरुषमीक्षते என்பதால் கூறப்படும் பொருள் சதுர்முக ப்ரம்மனா? பரமாத்மாவா?

பூர்வபக்ஷம் :- ப்ரஶ்நோபநிஷத்தில் ஓங்காரத்தின் 1,2,3 மாத்திரைகளை (அ,உ,ம) உபாஸிப்பவர்கள் முறையே இவ்-வுலகு, அந்தரிக்ஷ உலகு, ப்ரஹ்ம உலகின் பயன்களை அடைவார்கள் என்று கூறப்படும் இடத்தில் மூன்றாவதாக

கூறப்படும் ப்ரஹ்மலோகம் "சதுர்முக உலகமா? வைகுண்டமா?" என்றால், சதுர்முகம் ப்ரம்ஹ்லோகம் போன்றவற்றில் காணப்படும் ப்ரம்மன் எவ்வாறு பரபரம்ஹம் ஆக முடியும்? ஆகையால் परात्परं पुरिशयं पुरुषमीक्षते என்ற வாக்யத்தில் கூறப்-படுபவர் சதுர்முக ப்ரம்மன்தான்.

ஸித்தாந்தம் :- இங்கு ஸர்வபாபத்திலிருந்து விடுபட்டவனால் காணப்படும் தன்மை பரபுருஷனுக்கு கூறப்பட்டுள்ளது. சதுர்முகலோகம் அடைந்தவனுக்கு ஸர்வபாபவிடுபாடு ஸம்பவிக்காது. எனவே இவனால் காணப்படும்தன்மை சதுர்முகனுக்கு வராது. மேலும் த்ரிமாத்திரையுடன் ஓங்கார உபாஸகன் அடையும் லோகத்தை "कविभिः"=ஸூரிகளால் பார்க்க-ப்படும் தன்மை உள்ளதாக வர்ணிக்கப்பட்டுள்ளது. "यत्तत्कवयो वेदयन्ते" ஆகையால் "तद्विष्णोः परमंपदं सदा पश्यन्ति सूरयः" என்ற வேத வாக்யத்தினால் விஷ்ணுலோகமே காணப்படுவதாக தீர்மானிக்கப்பட்டுள்ளதால் இங்கு ஸூரி த்ருஶ்யமான லோகம் வைகுண்டமே. இந்த லோகாதிபதி சதுர்முகன் அல்ல. மேலும் यत्तच्छान्तमजरममृतमभयं परं च என்று கூறப்படும் குணங்கள் சதுர்முகனுக்கு பொருந்தாது. ஆகையால் परात्परं पुरिशयं पुरुषमीक्षते என்ற வாக்கியம் பரமாத்மாவையே குறிக்கிறது. ईक्षति कर्म = ஈக்ஷ்யமாணனாக கூறப்படும் பொருள் सः = ईक्षत्याधिकरणम् - முதல் விரிவாக உரைக்கப்பட்ட ஜகத்காரண வஸ்துவான பரமபுருஷனே. பரமபுருஷனுக்கே பொருந்தும் தன்மைகளை கூறியிருப்பதால் (=व्यपदेशात्) என்று ஸூத்ரார்த்தம் கொள்ள-வேண்டும்.

# 1.3.4 D ईक्षतिकर्मव्यपदेशात् स: (1 सूत्रम्)

விஷய வாக்கியம் :- तदैक्षत बहुस्यां प्रजायेय என்று கூறும் சாந்தோக்ய வாக்கியம் விஷயம்.

ஸந்தேஹம் :- காரணத்வம் போன்ற தன்மையினால் जगत्कारण மாக கூறப்படும் सत् ப்ரதானமா? ப்ரஹ்மமா?

பூர்வபக்ஷம் :- बहुस्याम् என்றவாறு நெருப்பு போன்ற பொருள்களாக பரிணாமம் அடைவேன் - என்று சொல்லப்படுவதால் பரிணாமத்தை அடையும் ப்ரதானத்திற்கே இது பொருந்தும். निर्विकार: अक्षर: शुद्ध: என்று கூறப்படும் ஈஶ்வரனுக்கு பொருந்தாது. ஸ்வரூபபஹுபாவம்தான் சொல்லப்படுகிறது. நெருப்புவடிவை பஹுபாவம் இல்லை என்று சொல்ல முடியாது. ஏனெனில் ஸ்வரூபபஹுபாவம் என்று கூறிவிட்டு தேஜஸ்ஸை உண்டு பண்ணினார் என்று கூறுவது பொருந்தாது அன்றோ! ப்ரதானத்திற்கு ஸத்வகுணம் இருப்பதால் ஈக்ஷணம் வர முடியும். எனவே இங்கு ப்ரதானமே கூறப்படுகிறது.

ஸித்தாந்தம் :- तदैक्षत என்கிற இடத்தில் ஸத்தின் ஈக்ஷணம் முக்கியமாக பொருந்தும்போது கௌணமான ஈக்ஷணம் க்ரஹிக்க முடியாது. மேலும் ஜடமான ப்ரதானத்திற்கு நெருப்பு போன்ற சேதனனாக ஆகும் பஹுபாவம் வர முடியாது. நியாமகஸ்வரூப பஹுபாவமானது, நியம்ய (தேஜஸ் போன்ற) ஸ்ருஷ்டியில்லாமல் முடியாது என்பதால் स्वरूपबहुभावத்தை ஸங்கல்பித்த பிறகு நியம்யமானதேஜஸ் ஸ்ருஷ்டி கூறுவது தவறல்ல. ஆகையால் முக்யமான ஈக்ஷணம் காரணத்வம் போன்ற லிங்கங்களால் "ஸத்" பத வாச்யம் ப்ரஹ்மம்தான்.

# 1.3.5 A दहर उत्तरेभ्य: (8 सूत्राणि)

ஒரே அதிகரணமாக சங்கரர் கூறியதை வித்யாரண்யர் 5+3 என்று 2 அதிகரணமாக கூறுகிறார். முதலில் தஹரப்ரஹ்மம் என்றும் இரண்டில் अक्षिपुरुष: ப்ரஹ்மம் என்றும் (दहरविद्या + प्रजापतिविद्या) கூறுகிறார்.

விஷயம் :- अथ यदिदमस्मिन् ब्रह्मपुरे दहरे पुण्डरीकं वेश्म, दहरोस्मिन्नन्तराकाश: என்ற தஹரவித்யா வாக்கியம் விஷயம்.

ஸந்தேஹம் :- இந்த தஹராகாஶம் ஆகாஶமா? ப்ரஹ்மமா?

பூர்வபக்ஷம் :- ஆகாஶஶப்தம் பூதாகாஶத்தில் ரூடமானது எனவே ஆகாயம்தான், அல்லது தஹர - அல்பம் என்று கூறியதால் பரிச்சின்னஜீவன் எனலாம். ப்ரஹ்மம் எடுத்துக்கொள்ள முடியாது.

ஸித்தாந்தம் :- ப்ரஹ்மம்தான் இங்கு கூறப்படுகிறது. வெளி ஆகாஶத்தை தஹராகாஶத்திற்கு உபமானமாக यावान्वा अयमाकाशस्तावानेष: என்று கூறப்பட்டுள்ளது. தனக்கு தானே உபமானமாக இருக்க முடியாது. அல்பபரிமாணம் உடைய ஜீவனும் ஆகாயத்தோடு ஒப்பிடமுடியாதவன். யௌகிக ரூடியானது ச்ரௌதரூடியால் பாதிக்கப்படும். மேலும் आत्मापहतपाप्मा என்றெல்லாம் கூறும் பாபமற்றதன்மை இருவருக்கும் பொருந்தாது. மேலும் உலகக்கட்டுப்பாடுகளை காக்கும் ஸேதுவாகவும் கூறப்பட்டுள்ளது. எனவே ப்ரஹ்மம்தான் தஹராகாஶம்.

இதற்கு மேல் उत्तराच्चेदाविर्भूतस्वरूपस्तु போன்ற மூன்று ஸூத்ரங்களும் प्रजापति विद्या வில் முன்பு கூறிய குணங்களை

கூறி, ஜாக்ரத் ஸ்வப்ன சுஷுப்தி அவஸ்தாவானான ஜீவனை கூறுவதால் இங்கும் ஜீவனோ என்று மறுபடி சங்கை எழும்புவதற்கு பதிலாக அமைகின்றன. ப்ரஜாபதி வித்யையில் ஜீவன் தனது ஸ்வரூபத்தில் கூறப்படவில்லை. அவஸ்தாநிர்முக்த சைதன்யமாத்திர ஸ்வரூபனாக கூறப்படுவதால் அதுவும் ப்ரஹ்ம ப்ரகரணமே என்பது ஒரே அதிகரணமாக கூறும் பாஷ்யத்தின் அபிப்ராயம்.

வித்யாரண்யர் வ்யுத்பத்தி வளருவதற்காக தனி அதிகரணமாக 3 ஸூத்ரங்களை எண்ணுகிறார்.

விஷயம் :- ப்ரஜாபதி வித்யை -य एषोऽक्षिणि पुरुषो दृश्यते
ஸந்தேஹம் :- கண்ணில் தெரியும் புருஷன் ஜீவனா? ப்ரஹ்மமா?
பூர்வபக்ஷம் :- அவஸ்தாத்ரயம் கூறப்படுவதால் ஜீவன்தான்.

ஸித்தாந்தம் :- பரமாத்மாதான் கூறப்படுகிறார். ஏனெனில் आत्मापहतपाप्मा विजरो என்று பரமாத்மாவை சொல்ல ஆரம்பித்து "स उत्तमः पुरुषः" என்று முடிவு கூறியுள்ளார். அவஸ்தாத்ரயம் கூறியது शाखाचन्द्रदर्शन நியாயப்படி உணர்த்தும் வழியாகும். உபாதிகளால் மூன்று அவஸ்தைகள் உள்ளன. உண்மையில் அவஸ்தாத்ரயரஹிதன்தான். எனவே உபாதியைத் தள்ளி உணர்த்துவதற்காக சந்திரனைக்காட்டுவதற்கு மரக்கிளையைக் காட்டுவது போல் இங்கு உபலக்ஷணமாக அவஸ்தைகள் வருகின்றன.

## 1.3.5 V दहर उत्तरेभ्यः (10 सूत्राणि)

(விஶிஷ்டாத்வைத மதப்படி இந்த அதிகரணத்தின் 8 ஸூத்ரமும், அத்வைத கொள்கைப்படி அனுக்ருத்யதிகரணமான अनुकृतेस्तस्य

ச இரண்டு ஸூத்ரங்களும் சேர்ந்து ஒரே அதிகரணம்! பெரியோர்களின் மேதாவிலாசம் அலாதி!)

விஷயம் :- இதே தஹரவித்யைதான் விஷயமாகிறது.

ஸந்தேஹம் :- ஆகாஶமா? ப்ரஹ்மமா?

பூர்வபக்ஷம் :- இங்கு கூறப்படும் தஹராகாஶம் பரமாத்மா ஆக முடியாது. ஏனெனில் தேடவேண்டியதாயும், உணர வேண்டிய -தாயும் கூறப்படும் தஹராகாஶத்திற்கு மேல் அதனுக்கு உள்ளே எது உள்ளதோ அதை அறியவேண்டும். तस्मिन्यदन्तः तदन्वेष्टव्यम् என்பதாக வாக்யசேஷத்தில் கூறப்படுவது இந்த தஹராகாஶம் பூதாகாஶமாக இருந்தால்தான் முடியும். மேலும் ப்ரஸித்தியினால் ஆகாயம்தான் தெரிகிறது. அதனால் பூதாகாஶமே தஹரம்.

ஸித்தாந்தம் :- किं तदत्र विद्यते என்ற கேள்விக்கு பிறகு एष आत्मापहतपाप्मा विजरो என்று விவரிக்கப்படுகின்றது. இதை யோசித்து பார்த்தால், தஹராகாஶம் ஆத்மா என்றும், அதனுள் உள்ளே अपहतपाप्मा போன்ற குணங்கள் எட்டு என்றும், அது தஹராகாஶம்தான் குணாஷ்டக விஶிஷ்டராக एष आत्मापहतपाप्मा என்பதாக குறிக்கப்பட்டுள்ளார் என்பதாக தெரிய வருகிறது. குணாஷ்டகம் மட்டும் உபாஸ்யம் என்பதாக तदन्वेष्टव्यम् என்று கூறுவதாக நினைத்து தஹராகாஶத்திற்கு உபாஸ்யத்வம் இல்லை என்று ஆக்ஷேபம் ஸரியில்லை. स च तच्च & तत् என்று ஸமாஸம் என்று விவக்ஷித்து இரண்டிற்கும் உபாஸ்யத்வம் என்ற கருத்து வருகிறது, எனவே தஹராகாஶம் ப்ரஹ்மம்தான்.

# 1.3.5 D दहर उत्तरेभ्य: (8 सूत्राणि)

விஷயம் :- இதே தஹரவித்யைதான்.

ஸந்தேஹம் :- இங்கு ஸர்வாதாரமாக ஹ்ருதயத்தில் உள்ளதாக கூறப்படுபவர் ஆகாயமா? ஜீவனா? விஷ்ணுவா?

பூர்வபக்ஷம் :- 1) ஆகாஶ சப்தத்திற்கு பூதாகாஶத்தில்தான் ப்ரஸித்த ப்ரயோகம் உள்ளது. ஸர்வாதாரத்வம் என்ற லிங்கம் ப்ரஹ்மத்திற்குத்தான் என்று ஆகாஶாதிகரணத்தில் தீர்மானித்தாகிவிட்டது என்ற ஆக்ஷேபம் இங்கு வேண்டாம். "पद्मकोश प्रतीकाशंहृदयम्" என்று வேறு ஶ்ருதியில் ஓட்டையாகிற ஆகாயத்திற்கு ஸர்வாதாரத்வம் கூறப்படுகிறது. மேலும் ஆகாஶமே ப்ரஹ்மம் என்றால் तस्मिन्यदन्त: என்று, "ஆகாஶத்தின் உள்ளே இருப்பவனை அறி'', என்ற வாக்யசேஷம் பொருந்தாது. ஆகையால் ஹ்ருத்பத்மத்தில் உள்ள ஆகாஶம்தான் ஸர்வாதாரம்.

அல்லது :- தஹராகாஶத்தில் உள்ளவனை आत्मा என்று வாக்ய-சேஷத்தில் கூறுவதால் ஜீவனையும் க்ரஹிக்கலாம். பரிச்சின்ன ஜீவனுக்கு இது பொருந்தும்; ப்ரஹ்மத்துக்கு/விஷ்ணுவிற்கு வராது.

ஸித்தாந்தம் :- ஹ்ருதயத்திலுள்ள தஹராகாஶத்தினுள் இருப்பதாக சொன்னவர் விஷ்ணுதான். य आत्मा अपहतपाप्मा என்ற வாக்கிய சேஷத்தில் பாபரஹிதத்வம், மூப்பற்றதன்மை, மரணமில்லாத தன்மை போன்றதான விஷ்ணுலிங்கங்கள் உள்ளன. இவை स एष सर्वेभ्य: पाप्मभ्य उदित: என்றெல்லாம் ப்ரஹ்ம லிங்கம் என்று நிர்ணயிக்கப்பட்டது. மேலும் தூங்குபவனால் தினஸரி அடையப்படுவதாக ब्रह्मलोकं गच्छन्त्य: கூறுகிறது. இந்த விஷயம் ஸத்வித்யையில் सता सोम्य तदा என்று ப்ரஹ்மத்தில் லயிப்பது ஊர்ஜிதப்படுத்தியுள்ளது. य एषोऽन्तर्हृदयं आकाशस्तस्मिन् शेते (बृ.

4.22)ல் आकाश என்ற வார்த்தையினால் ப்ரஹ்மம் சொல்லப்பட்டுள்ளது. மேலும் तस्मिन्यदन्तः तदुपासितव्यं என்பதாக விஷ்ணுதான் கூறப்படுகிறார். பூர்ணனான விஷ்ணுவிற்கு சிறிய வஸிப்பிடம் வரலாம், அசிந்த்ய மகிமை உடையவரன்றோ! எனவே ஸர்வாதாரமாக விஷ்ணுதான் கூறப்படுகிறார்.

## 1.3.6. A अनुकृतेस्तस्य च (2 सूत्रे)

விஷயம் :- முண்டக உபநிஷத்தில் வரும் न तत्र सूर्यो भाति न चन्द्रतारकम् என்ற வாக்கியம் விஷயம்.

ஸந்தேஹம் :- ஸூர்யன் போன்ற ஒளிகளையும் மங்கலாக்கும், எல்லாவற்றையும் விளக்கி கொண்டு விளங்கும் ஒளி (தேஜஸ்) என்று கூறப்படுவது ஸூர்யன் போன்று ஜடமான, அதைவிடவும் ஒளி மிகுந்த ஒரு தேஜஸா அல்லது ப்ரஹ்மமா / சைதன்யமா?

பூர்வபக்ஷம் :- வேறு ஒரு ஜடஜ்யோதி என்றிருக்கவேண்டும். ஸூர்யாதி ஒளியை மங்கச்செய்து விளங்குவதாக கூறப்படுகின்ற- தன்றோ! பெரும் ஒளியின் முன்னிலையில், ஸூர்யன் முன் சந்திரன் போல், ஸ்வயமே மங்குமல்லவா? ஆகையினால் ஸூர்யாதிகளை மங்கவைக்கும் ஜ்யோதி ஜடஜ்யோதிதான்.

ஸித்தாந்தம் :- இங்கு ஸூர்யன் முதலிய ஒளிகளால் ப்ரகாமப்படுத்தமுடியாத ஒளிதான் கருதப்படுகிறது. இது சைதன்யமான ப்ரஹ்மம்தான். ஏனெனில் பூர்வபக்ஷியின் கருத்துப்படி ஸூர்யனையும் மங்கலாக அடிக்கும் ஜடஜ்யோதி உண்டு என்ற ப்ரமாணம் இல்லை. மேலும் तमेव भान्तं अनुभाति என்பதால் கூறப்படும் - எல்லா ஒளிகளுக்கும் முன்னாலேயே விளங்குவதாக அல்லவா இது சொல்லப்படுகிறது? மேலும் சொல், பொருள் ஆகிய இரண்டும் ஒளி இருட்டு இரண்டும் யாவுமே

  

सर्वमिदं विभाति விளங்குவது எதனால் என்று சொல்லப்படும் இந்த ஜ்யோதி சைதன்யமான ப்ரஹ்மம்தான். கீதையிலும் இது கூறப்படுகிறது. न तद्भासयते सूर्यो न शशाङ्को न पावकः | यद्गत्वा न निवर्तन्ते तद्धाम परमं मम || என்று.

இந்த அனுக்ருத்யதிகரணம் என்பது விஶிஷ்டாத்வைதிகளின்படி சென்ற தஹராதிகரணத்திலேயே உள்ளடக்கப்பட்டுவிட்டது.

## 1.3.6 D अनुकृतेस्तस्य च (2 सूत्रे)

விஷயம் :- "तदेतदिति मन्यन्तेऽनिर्देश्यं परमं सुखम्, कथं नु तद्विजानीयां किं भाति न भाति वा" என்று கடோபநிஷத்தில் வரும் வாக்கியம் விஷயம்.

ஸந்தேஹம் :- ஞானத்திற்கு வேண்டப்பட்டதும் அனுகூலமாக க்ரஹிக்கப்படுவதான தன்மை உடையதுமாக இங்கு கூறப்படும் சுகம் ஞானியின் சுகமா? விஷ்ணுவின் சுகமா?

பூர்வபக்ஷம் :- तद्विजानीयां என்ற வாக்யத்தில் 'தத்' என்ற பதமானது முதல் வரியில் கூறிய अनिर्देश्यं परमं सुखं எனக் கூறப்பட்ட சுகத்தைத்தான் குறிக்கிறது. அந்த சுகமானது "तमात्मस्थं ये अनुपश्यन्ति धीराः" என்பதாக முன்னால் ப்ரக்ருதமான அருகில் கூறப்பட்ட ஞானியின் சுகத்தை குறிக்கக்கூடிய "एतत्" என்ற pronoun னால் அறியப்படுகிறது. ஆகையால் ஞானியின் சுகம்தான் கூறப்படுகிறது. "एको वशी" என்ற மந்திரத்தில் ஈஶ்வன் ப்ரக்ருதமாயிருந்தாலும் "तत्, एतत्" என்ற நம்பும்ஸகலிங்கமான வார்த்தைகள் இரண்டும் இருப்பது - என்ற காரணத்தால் ஈஶ்வனை க்ரஹிக்கமுடியாது. அதனால் ஞானியின் சுகம்தான் கூறப்படுகிறது.

ஸித்தாந்தம் :- "न तत्र सूर्य" என்ற மந்திரத்தில் கூறிய ஸூர்யாதி-களால் விளங்கப்படாத தன்மை, ஸூர்யனுக்கு ஒளியூட்டும் தன்மை, ஸர்வஜகத்ப்ரகாஶத்வம் என்பவையாவும் ஈஶனுக்கே பொருந்தும். ஏனெனில் கீதையில் न तद्भासयते सूर्य:, यदादित्यगतं तेज: போன்ற வசனங்கள் இவைகள் ஈஶனுக்கே வருகின்றன. "नित्यो नित्यानाम्" என்ற மந்திரத்தில் ஈஶனும் அருகில் கூறப்படுகிறார். ஈஶனை நபும்ஸகலிங்கம் பராமர்சிக்க முடியாவிட்டாலும் அவரது அபரிமிதமான அநிர்தேச்யமான சுகத்தையும் ஆத்மஸ்வரூபத்தையும் நபும்ஸகலிங்க வார்த்தையால் கூற முடியும். அதனால் ஈஶனுடைய சுகம்தான் இந்த வாக்யத்தில் கூறப்படுகிறது.

## 1.3.7 A शब्दादेव प्रमित: (2 सूत्रे)

விஷயம் :- கடவல்லி உபநிஷத்தில் வரும் -
अङ्गुष्ठमात्र: पुरुष: मध्य आत्मनि तिष्ठति ।
ईशानो भूतभव्यस्य न ततो विजुगुप्सते ॥ என்ற வாக்கியம்.

ஸந்தேஹம் :- இங்கு அங்குஷ்ட (கட்டைவிரல்) அளவுடையதாக கூறப்படும் ஶரீரத்தின் நடுவே விளங்கும் பொருள் ஜீவனா? பரமாத்மாவா?

பூர்வபக்ஷம்:- அல்பப்ரமாணம் உடையவனாக சொல்லியிருப்ப-தாலும் ஶரீரம் நடுவே வசிப்பதாக கூறப்படுவதாலும் ஜீவன்தான்.

ஸித்தாந்தம் :- பரமாத்மாதான் சொல்லப்படுகிறார். ஏனெனில் past, present (अतीतानागत) ஸர்வஜகத்தையும் ஆள்பவராக இவர் ईशानो भूत भव्यस्य என்று வர்ணிக்கப்படுகிறார். இத்தகைய

  

ஈசித்ருத்வம் ஜீவனுக்கு பொருந்தாதன்றோ! ஜீவன் ஈஶனால் ஆளப்படுபவன். ஹ்ருதய மத்தியில் ஈஶ்வரன் அறியப்படுவதால் அல்பபரிமாணம், ஶரீர மத்திய ஸ்திதி இரண்டும் ஈஶனுக்கும் பொருந்தும். [அல்லது, அங்குஷ்டமாத்திரமாக தோன்றும் ஜீவனை அனுவாதம்பண்ணி உண்மையில் இவன் உபாதியை விலக்கினால் ஈஶன்தான் என்று இம்மந்திரம் கூறுவதாகவும் பொருள் பாஷ்யத்தில் கூறப்படுகிறது]

## 1.3.6 V शब्दादेव प्रमित: (2 सूत्रे)

விஷயம் :- அத்வைதத்தில் கூறியுள்ளபடி.

ஸந்தேஹம் :- அத்வைதத்தில் கூறியுள்ளபடியே.

பூர்வபக்ஷம்:- ஶரீரமத்தியில் இருப்பவனுக்கு அல்பபரிமாணமானதால் भूत भव्य ईशितत्वं = கடந்த, இருப்பதான, - ஸர்வஜகத்தின் ஆளும்தன்மை இங்கு கூறப்பட்டுள்ளது. प्राणाधिप: संचरति स्वकर्मभि: अङ्गुष्ठमात्रो रवितुल्यरूप: என்று அங்குஷ்ட பரிமாண -மானது கர்மபரவசனான ஜீவனுக்கு ஶ்வேதாஶ்வதரத்தில் கூறப் -பட்டுள்ளது. பரமாத்மாவிற்கு எங்குமே இந்த பரிமாணம் சொல்ல-வில்லை. எனவே இவன் ஜீவன்தான். இவனுக்கு போக்யங்கள் தன் அதீனமாதலால் ஆபேக்ஷிகமாக ஈஶ்வரத்வம் கூறப்பட வேண்டும்.

ஸித்தாந்தம் :- वालाग्रशतभागस्य शतधा कल्पितस्य च भागो जीव: स विज्ञेय: என்ற ஶ்வேதாஶ்வதரவாக்கியத்தில் கேசத்தின் நுனியை நூறாக பண்ணினால் உள்ள அளவுதான் ஜீவன் என்று சொல்லி -யிருப்பதால், ஹ்ருதய உபாதியினால் ஜீவனுக்கு அங்குஷ்டமாத்ரத்வம் ஔபாதிகமாகத்தான் எடுத்துக்கொள்ள வேண்டும். அப்போது ஈஶனுக்கு உபாஸகரின் ஹ்ருதயத்தில் உபாஸிக்கப்படுவதால் உபாதிநிமித்தமாக அங்குஷ்ட

பரிமாணத்வம் ஒரே போல் பொருந்தும். எனவே நிர்ணய காரணமாக இது ஆகாது. உத்தரார்தத்தில் ईशानो भूत भव्यस्य என்று சொல்லப்படும் past, present யாவற்றிற்கும் அடக்கியாள்பவன் என்று கூறப்படும் सर्वेशितृत्वं பரமாத்மாவிற்கே பொருந்தும்தன்மை. இதை வைத்து பரமாத்மாதான் என்ற நிர்ணயம் பண்ணுகிறோம்.

## 1.3.7 D शब्दादेव प्रमित: (2 सूत्रे)

अङ्गुष्ठमात्र: पुरुषो मध्य आत्मनि तिष्ठति | ईशानो भूतभव्यस्य (क. 2.1.12) என்று கட்டைவிரல் பரிமாணம் உள்ளதாகவும், பூத-பவ்ய-ஈஶானனாகவும் கூறப்பட்டவர் முக்யவாயுவா? விஷ்ணுவா? என்ற ஸந்தேஹத்தில் -

பூர்வபக்ஷம் :- இவர் வாயுதான். ऊर्ध्वं प्राणमुन्नयति(क.2.2.3) என்று ப்ராணாதி வ்யவஸ்தாபகத்வ-மத்யகத்வ-ஸர்வதேவ உபாஸ்ய-த்வங்கள் கூறப்படுகின்றன. இந்த தன்மைகள் "एकमेव एष प्राण: इतरान् प्राणान्..", "योऽयं मध्यम: प्राण:" என்ற வாக்யங்களில் வாயுவின் தன்மைகளாகவே கூறப்பட்டுள்ளன. விஷ்ணுவிற்கு கட்டைவிரல் பரிமாணம் பொருந்தாது. கட்டைவிரல் என்பது ப்ராணிக்குப் ப்ராணி வேறுபடுவதால் பரிமாண நிர்ணயம் வராது.

ஸித்தாந்தம்:- இங்கு வாக்யத்தில் "मध्ये वामनमासीनम्" என்பதாக வாமனத்வம் கூறப்பட்டுள்ளது. "एष एव उ वामनी:" என்ற ஶ்ருதியிலும், "उपेन्द्रो वामन:" என்று ஸ்ம்ருதியிலும் விஷ்ணு-விற்கும் சொல்லப்பட்டுள்ளது. வாமன-வாமனி என்று சிறு மாறுதல் குற்றமாகாது. மேலும், "ப்ராணனை நியமித்து" என்பது ஸர்வநியாமகரான விஷ்ணுவிற்கே பொருந்தும். மனுஷ்யர்களுக்கு ஶாஸ்த்ரம் ஏற்பட்டதால் மனிதர்களின்

  

ஹ்ருதய அளவு கட்டைவிரல் பரிமாணம் என்பதால் அந்த பரிமாணம் விஷ்ணுவிற்கு உபஸரிக்கப்படுகிறது. எனவே விஷ்ணுதான் இங்கு கூறப்படுகிறார்.

## 1.3.8 A तदुपर्यपि ब्रादरायण: ...(8 सूत्राणि)

[பூர்வாதிகரணத்தில் ஶாஸ்த்ரங்கள் மனிதர்களுக்கே உரியன, என்று கூறியதும், தேவர்களுக்கு வேதாந்தஶாஸ்த்ரத்தில் அதிகாரம் உண்டா இல்லையா என்று ஐயம் தோன்றுவதால் இந்த அதிகரணத்தில் ஆத்மவித்யையில் தேவர்களுக்கு தகுதி உண்டு என்று நிர்ணயிக்கிறது ]

விஷயம் :- तद्यो यो देवानां प्रत्यबुद्ध्यत स एव तदभवत्, तथर्षीणां तथा मनुष्याणाम् என்ற ப்ருஹதாரண்யக வாக்கியம் விஷயம்.

ஸந்தேஹம் :- இதில் கூறப்படும் தேவ, ரிஷி, மனிதர்களுக்கு ப்ரஹ்மஞானத்வாரா ப்ரஹ்மபதமான முக்தி சொல்லப்படுவது பொருந்துமா? பொருந்தாதா?

பூர்வபக்ஷம் :- மனிதர்கள், ரிஷிகள் இருவருக்கும் உடல், அறியும் ஆவல், வேண்டும் என்ற அர்த்தித்வம் (desire to get) எல்லாம் உண்டு; ஆனாலும் தேவர்களுக்கு உடல் கிடையாது, எப்போதும் ஆனந்தத்தில் திளைத்திருப்பதால் ஆத்மஞானத்தில் ஆசை (முமுக்ஷுத்வம்) வராது. மேலும் தேவதா உபாஸனைக்கு இந்திராதிகள் அதிகாரி ஆகமுடியாது. இந்திரனுக்கு வேறொரு இந்திரன் இல்லையே! அர்த்தவாதப்பகுதியில் இந்திராதிகளுக்கு ஶரீரம் கூறப்பட்டது துதிக்காக மட்டுமே உண்மையில்லை. ஆகையால் தேவதைகளுக்கு ஆத்மரஹஸ்ய மார்கத்தில் உரிமை இல்லை.

**ஸித்தாந்தம்:-** தேவர்களுக்கு உடல், வடிவில்லை என்றால், த்ருப்தி போன்றவை உள்ளதாகக் கூறும் வேதபாகமானது அர்த்தவாதம்தான். எனினும் இந்த அர்த்தவாதம் ஏற்புத்தன்மை உடையது. தெரிந்த விஷயத்தையும் பொருந்தாதவற்றையும் கூறும் மற்ற இரண்டுவிதமான அர்த்தவாதம்தான் ஏற்க முடியா-தது, நேர்பொருள் தள்ளவேண்டியது. ஆனால் மூன்றாவது வித-மான தேவதாவிற்கு உடல் இருக்கிறது போன்ற அர்த்தவாதங்கள் ஸரியானவைதான். இதற்கு ப்ரமாணம் உண்டு. अनुवादोऽवधारिते | भूतार्थवादस्तद्धानात् अर्थवादास्त्रिधा मतः || विरोधे गुणवादः स्यात् என்ற வாக்கியம் அர்த்தவாதத்தை மூன்று விதமானதாக கூறுகிறதன்றோ. தேவர்களுக்கு தன்னுலக போகத்தில் வைராக்கியம் வர இடமுண்டு. இந்திரன் பிரஜாபதியிடம் ஆத்மஞானதிற்காக 101 வருஷங்கள் இருந்ததாக உபநிஷத் கூறுகிறது. எனவே கர்மாக்களில் அதிகாரம் (உரிமை) இல்லாவிட்டாலும் ஆத்மஞானத்தில் தேவர்களுக்கு அதிகாரம் உண்டு. தேவர்களுக்கு ப்ரஹ்மவித்யை அடைய தகுதி உள்ளதினால்தான் ஸகுணஉபாஸனை செய்தவர்கள் தேவலோகங்களுக்கு சென்று க்ரமமுக்தி பெறுகின்றது ஸாத்தியமாகிறது.

## 1.3.7 V तदुपर्यपि ब्रादरायणः -(5 सूत्रा ण)

இந்த அதிகரண விஷயத்தில் முதல் 5 ஸூத்ரங்கள் தேவதாதி-கரணம் என்றும், 6,7,8 ஸூத்ரங்கள் (மத்வாதிஷு..) மத்வாதிகரணம் என்பதாக இரண்டாவது அதிகரணமாயும் விஶிஷ்டாத்வைதிகளின் மதம்.

**விஷயம் :-** அத்வைத மதம் போலவேதான்.

**ஸந்தேஹம் :-** ஸந்தேஹமும் அதுவேதான். தேவதைகளுக்கு உபாஸனையில் அதிகாரம் உண்டா? இல்லையா?

तत् = பரமாத்ம உபாஸனம், उपरि अपि = மனிதர்களினும் மேற்பட்ட தேவர்களுக்கு உண்டு, सम्भवात् = வேண்டும்தன்மை, திறமை போன்றவை உள்ளதால் என்று ஸூத்ரார்த்தம்.

பூர்வபக்ஷம் :- பூர்வமீமாம்ஸையில் அர்த்தவாதங்களுக்கு ப்ராமாண்யம் இல்லை என்று தீர்மானிக்கப்பட்டிருப்பதால் வேதாந்தங்களில் வரும் அல்லது தேவதா கர்ம காண்டங்களில் வரும் அர்த்தவாதங்களுக்கும் தனது நேரடியான பொருளில் தாத்பர்யம் கிடையாது என்பதால் இந்திரன் போன்ற தேவதைகளுக்கு உடம்பே இல்லாதபோது உபாஸனையில் எவ்வாறு அதிகாரம் வர முடியும்? தேஹாதிகள் இல்லாததால் அதனால் ஏற்படும் துக்கங்கள் இல்லாததால் மோக்ஷ விருப்பம் வராது. எனவே ப்ரஹ்மவித்யையில் தேவதைகளுக்கு உரிமை கிடையாது.

ஸித்தாந்தம் :- ஸ்வர்காதி பயனுக்கு ஸாதனமான தேவதா ப்ரஸாதத்தில் அர்த்தவாதங்களுக்கும் தாத்பர்யம் அவசியம் ஏற்க வேண்டும். ஆகையால் அர்த்தவாதங்கள் மூலம் தேவதைகளுக்கு உடல், த்ருப்தி, ப்ரஸாதம் போன்றவை உண்டு. மேலும் இந்திராதிகளுக்கும் தன் பதவி போய்விடும் ஆபத்து பல இடங்களில் ஏற்பட்டதாக கூறப்படுவதால் அவர்களுக்கு அநித்தியமான சுகங்களில் வைராக்கியம் ஸம்பவிக்கும். ஆகையால் ப்ரஹ்மவித்யையில் தேவதைகளுக்கு அதிகாரம் உண்டு.

## 1.3.8 V मध्वादिष्वसंभवात् (3 सूत्राणि)

முன் அதிகரணத்தில் தேவதைகளுக்கு ப்ரஹ்மவித்யையில் அதிகாரம் ஸ்தாபிக்கப்பட்டது. அதே ப்ரஹ்மவித்யையின்

விஶேஷமான மதுவித்யையில் அதிகாரம் உண்டா இல்லையா என்ற ஸந்தேஹத்தின் நிவாரணத்திற்காக இந்த அதிகரணம்.

பூர்வபக்ஷம் :- மதுவித்யை என்ற உபாஸனத்தில் (ஆதித்யோபாஸனத்தில்) வஸு, ஆதித்யர்களுக்கு அதிகாரம் வர முடியாது. ஏனெனில் உபாஸனையின் பயன் तत्क्रतु ந்யாயத்தினால் அதே வஸ்வாதித்யப்ராப்திதான் கூறவேண்டும். இது வஸுவிற்கு கிடைத்து விட்டதால் இதில் ஆசை (अर्थित्व)வர முடியாது. மேலும் வஸு என்பவர் தன்னையே (வஸுவையே) உபாஸிப்பது ஸாத்யமன்று. எனவே ஆதித்ய வஸ்வாதிகளின் உபாஸனை வடிவமான மதுவித்யையில் தேவர்களுக்கு அதிகாரம் கிடையாது.

ஸித்தாந்தம்:- மதுவித்யையின் பயனாக ப்ரஹ்மப்ராப்தி கூறப்படுகிறது.- न ह वाअस्मा उदेति, न निम्रोचति; सकृद्दिवा हैवास्यै भवति, य एतामेवं ब्रह्मोपनिषदं वेद என்ற இடத்தில் ப்ரஹ்மம் உபாஸ்யமாக இல்லாவிட்டால் ப்ரஹ்மவித்யாத்வமே வராது. எனவே ஆதித்யவஸ்வாதி ஶரீரகனான ப்ரஹ்மத்தையே உபாஸிப்பதாக கூறவேண்டும். இவ்வாறு ஏற்பின் ஆதித்யன், வஸு போன்ற வஸ்வஶரீரகமான ப்ரஹ்மத்தை உபாஸிக்க முடியும். அடுத்த கல்பத்தில் மறுபடி ஆதித்ய ஸ்தானமும் தத்த்வாரா ப்ரஹ்மப்ராப்தி காமனையும் வர முடியும். எனவே மது வித்யையில் தேவதைகளுக்கு அதிகாரம் உண்டு.

## 1.3.8 D तदुपर्यपि ब्रादरायण: (8 सूत्राणि)

விஷயம், ஸந்தேஹம் இரண்டும் பொதுவானதே

பூர்வபக்ஷம் :- இந்திராதிகளின் பதவிபோல் இந்திராதிகளும் நித்யமானவர்களே. இல்லாவிட்டால் அநித்யமான பதவி

அநித்யமான ஆட்களும் கூறும் வேதத்திற்கு அப்ரமாண்யம் வரும். ஆகையால், ஆதி அந்தம் இல்லாதவர்களான தேவர்களுக்கு மோக்ஷத்தில் ஆசை வராது. மேலும் வஸ்வாதித்ய ப்ராப்தியை பயனாக உடைய மதுவித்யையில் வஸூ முதலியவர்களுக்கு அதிகாரம் வர முடியாததனால் ஸர்வவித்யைகளிலும் அதிகாரம் விலக்கப்படுவதாக ஆகிறது. மேலும் नैव दैवपरं प्राप्ता: ब्रह्मदर्शवर्जिता: என்ற இடத்தில் தேவதைகளுக்கு ப்ரஹ்மஞானம் ஸ்வயமாகவே உள்ளதாக கூறப்படுவதால் மோக்ஷஹேது ப்ரஹ்மஞானத்தில் அதிகாரம் வர முடியாது.

ஸித்தாந்தம் :- தேவர்களுக்கு விசேஷ புத்தியிருப்பதாலும், ஶூத்ரர்களுக்கு போல் இவர்களுக்கு நிஷேதம் (prohibition) இல்லாததாலும் இவர்களுக்கு மோக்ஷஸாதன ஞானத்தில் உரிமை உண்டு. ஏனெனில் மோக்ஷம் நித்தியமானது. தேவர்களோ, அவர்களது பதவிகளோ அநித்யமானதாலும், ப்ரவாஹம் போல் அது தொடர்வதாலும் धाता यथा पूर्वमकल्पयत् என்று ஒரே விதமான ஸ்ருஷ்டி வருவதாலும், வேதத்திற்கு அப்ரமாண்யம் கிடையாது. எனவே தேவதைகளுக்கும் அதிகாரம் உண்டு.

## 1.3.9 A शुगस्य तदनादरश्रवणात् – (5 सूत्राणि)

விஷயம் :- "अह हारे त्वा शूद्र तवैव सह गोभिरस्तु" "आजहारेमा: प्रजा: शूद्र! अनेनैव मुखेनालपिप्यथा" என்ற சாந். 4.2.3 ஸம்வர்க்க வித்யா வாக்கியம் விஷயம்.

ஸந்தேஹம் :- இங்கு கூறப்படும் शूद्र ஶப்தம் முக்யார்த்தமா? கௌணார்த்தமா? முக்யார்த்தமானால் ஶூத்ரனுக்கு ப்ரஹ்ம

வித்யையில் அதிகாரம் உண்டு. கௌணமானால் இல்லை. எது ஸரி?

பூர்வபக்ஷம் :- த்ரைவர்ணங்களில் (ப்ராம்மண, க்ஷத்ரிய, வைச்ய) இல்லாத தேவர்களுக்கு ப்ரஹ்மவித்யையில் அதிகாரம் உண்டு என்று சென்ற அதிகரணத்தில் கூறியிருப்பதால் த்ரைவர்ணத்தில் இல்லாத ஶூத்ரனுக்கும் அதிகாரம் இருக்கட்டுமே? மேலே உள்ள வாக்யத்தில் ஶூத்ரஶப்தம் வருகிறது இதற்கு அடையாளம் என்பதால் ஶூத்ரனுக்கும் அதிகாரம் உண்டு.

ஸித்தாந்தம் :- ஜானஶ்ருதி என்ற க்ஷத்ரிய ராஜா ஒரு நாள் ரைக்வ முனிவர் மிகச்சிறந்தவர் என்று உணர்ந்து, அவரிடம், தானும் சிறப்பின் காரணமான ஸம்வர்க்கவித்யையை உபதேசம் பெறுவதற்காக நிறைய பசு மாடுகள் முதலிய தக்ஷிணையுடன் ரைக்வரிடம் வந்து வித்யையை கூறுமாறு வேண்டிய உடனே ரைக்வ முனிவர் கூறுவதாக இந்த வாக்கியம் உள்ளது. எனவே அரசனான இந்த சிஷ்யன் ஶூத்ரன் அல்ல. ஆனால் இவர் மனதில் சற்று கோபத்தினால் (இவன் பணத்தினால் வித்யையை விலைக்கு வாங்க வந்துள்ளானே என்ற கோபம்) தனது முக்கால ஞானத்தை காட்டும் பொருட்டு இந்த வார்த்தையை शूद्र என்றார். இது யௌகிக வார்த்தை. இதன் பொருள் - பறவைகளின் வ்யங்க்யமான வார்த்தைகளால் शुक् = வருத்தம் ஏற்பட்டு, அதனால் आद्रवणात् = ஓடி வந்துள்ளதால் , ஶூத்ரன்" என்று உரைத்தார். அதிக்ஷேபமாக. தேவதைகளின் உதாரணத்தை வைத்து பூர்வபக்ஷம் ஸரியல்ல. தேவர்களுக்கு தானாகவே வேத அறிவு உண்டு. ஶூத்ரர்களுக்கு உபநயனம் இல்லாததால் வேத வித்யை தெரியாது. நிஷேதமும் உள்ளது. तस्मात् शूद्रो यज्ञेऽनवक्लृप्तः வேத ஶ்ரவணே தண்டனையும் உள்ளது. ஶூத்ரர்களுக்கு முமுக்ஷா ஏற்பட்டால் ஸ்ம்ருதி புராணாதி வழியாக ப்ரஹ்மத்தை அறியலாம். வேத வித்யையில் அதிகாரம் கிடையாது.

  

## 1.3.9 V शुगस्य तदनादरश्रवणात् (7 सूत्राणि)

## (=5 सूत्राणि அத்வைதத்தில்)

அத்வைத ஐந்து ஸூத்ரங்களில் இரண்டை பிரித்து +2 ஆக கூறுவதால் 7 கணக்கு வருகிறது.

விஷயம் ஸந்தேஹம் இரண்டும் ஸமமே.

பூர்வபக்ஷம் :- ஶூத்ரனுக்கு வேதாத்யயனம் இல்லாமல் போனாலும் இதிஹாஸ புராணாதி ஶ்ரவணத்தினால் ब्रह्मस्वरूपम् உணர்ந்து உபாஸனை வர முடியும், மோக்ஷத்தில் ஆசையும் இருக்க முடியும். என்பதால் अर्थित्व सामर्थ्यम् இரண்டும் பெற்ற ஶூத்ரன் ப்ரஹ்மவித்யையை கற்க முடியும். அதிகாரிதான். எனவேதான் ரைக்வர் ஜானஶ்ருதியை ஶூத்ர என்று கூப்பிட்டார்.

ஸித்தாந்தம் :- வேத அத்யயனத்தினால் க்ரஹிக்கப்பட்ட ப்ரஹ்ம ஸ்வரூபப்படி அதனுடைய உபாஸனம்தான் ப்ரஹ்மஞானத்தின் அங்கம். உதாரணம் - கர்ம காண்ட விஹிதவாக்யங்களினால் கர்மஸ்வரூபம் உணருவதுதான் கர்மானுஷ்டானத்தின் அங்கமாவது போல. எனவே வேதாத்யயனத்தில் தடுக்கப்பட்ட ஶூத்ரனுக்கு வேதாந்தவாக்யஜன்யப்ரஹ்மஸ்வரூபம் போன்ற ஞானம் சம்பவிக்காது. எனவே ஶூத்ரனுக்கு அர்த்தித்வம் இருந்தாலும் ஸாமர்த்யம் இல்லாததால் ப்ரஹ்மவித்யையில் அதிகாரம் இல்லை. ஶூத்ரபதம் யௌகிகம் (முன்பு அத்வைதத்தில் கூறியபடியே) பொருந்தும்.

## 1.3.9 D शुगस्य तदनादरश्रवणात् - (5 सूत्राणि)

விஷயம் ஸந்தேஹம் இரண்டும் ஸமமே

பூர்வபக்ஷம் :- அலாதியான புத்தி, சாமர்த்தியம் உள்ளதால் தேவர்களை போல் ஶூத்ரர்களுக்கும் ப்ரஹ்மவித்யை உண்டு. உபநயனம், அத்யயனம் இல்லாத ஶூத்ரனுக்கு எப்படி ப்ரஹ்மவித்யையில் உரிமை என எண்ணவேண்டாம். வைதிக-மான ஸம்வர்க்க ஶ்ரோதாவை अह हारे त्वा शूद्र என்று ரைக்வர் கூறியுள்ளாரே! ரூடமான பதமன்றோ. மேலும் விதுரர் போன்றவர்களுக்கு வேதார்த்த நிர்த்தாரணம் பண்ணுவது போன்ற லிங்கங்கள் உள்ளது. எனவே 1) ஶூத்ரனுக்கு உபநயனம், அத்யயனம் உண்டு என்றோ 2) உபநீதனாக இல்லாதவனுக்கும் அத்யயனம் உண்டு என்றோ 3) அத்யயனம் இல்லாமலேயே பார்த்துப்படிப்பதால் அர்த்தஞானம் வரலாம் என்றோ கல்பனை செய்வோம். எனவே ஶூத்ரனும் அதிகாரீ.

ஸித்தாந்தம் :- अयमश्वतरीरथः என்பதாக வாக்ய சேஷத்தில் रथं உடைய தன்மையை கூறுகிறது. यत्र वेदो रथस्तत्र न वेदो यत्र नो रथः (ब्रह्मवैवर्ते) என்ற ஸ்ம்ருதியினால், வேதத்திற்கு रथव्याप्यत्वं சொல்லியுள்ளபடியால் ரதமாகிய வ்யாபகம் இல்லாததால் வேதமும் இல்லை என்றாகிறது. க்ஷத்ரியனுக்கு रथत्वं இயல்பானது. எனவே पौत्रायण னான (ஜானஶ்ருதி)க்கு க்ஷத்ரிய-த்வம் தெரிவதால் ஶூத்ரத்வம் வரவே முடியாது. ஆகையால் ஶூத்ரஶப்தம் முன்புகூறியபடி யௌகிகம்தான். ஹம்ஸ-வாக்யத்தின் வ்யங்க்யமான கூற்றால் இவனுக்கு शुक् = வருத்தம் ஏற்பட்டு ஓடிவந்ததை வைத்து (शुचं आद्रवणात्) ஶூத்ர பதம் ஏற்பட்டது. எனவே இந்த ஸம்போதனத்தினால் ஶூத்ராதிகாரம் கூறவே முடியாது. மேலும் ஶூத்ரனுக்கு அத்யயனம் ஏற்பட்டால் தண்டனை கூறியுள்ளதால், விஶிஷ்டமான புத்தியிருப்பினும் கூட நிஷேதிக்காமல் இருக்க கூடிய தன்மையாகிற அதிகாரத்தின் உரிமை என்ற காரணமில்லை என்பதால் ஶூத்ரனுக்கு ப்ரஹ்ம-வித்யையில் அதிகாரம் கிடையாது. விதுரருக்கு ஜன்மாந்தர

  

ஸம்ஸ்கார விஶேஷத்தால் வேதார்த்தஞானம், பிறக்கும்போதே இருந்தபடியால் அது உதாரணமாகாது.

## 1.3.10 A कम्पनात् – (1 सूत्रम्)

விஷயம் :- यदिदं किञ्च जगत्सर्वं प्राण एजति निःसृतम् ।
महद्भयं वज्रमुद्यतं य एतद्विदुरमृतास्ते भवन्ति ॥
என்ற கடவல்லி வாக்கியம் விஷயம்.

ஸந்தேஹம் :- ஜகத்தின் கம்பம் (நடுக்கம், பயம்) ஏற்படுத்தும் பொருளாக கூறும் வஸ்து ப்ராணனா? இடியா? வாயுவா? ஈஶ்வரனா? என்று நான்கு விதமானது.

பூர்வபக்ஷம் :- 1) अशनिः=இடி(thunderbolt) ஆகலாம், மஹத்பயம் என்பதால் - பயத்தை உண்டுபண்ணுவதால். 2) காற்றாகவும் இருக்கலாம் (புயலில் பயப்படுவதால்) 3) प्राण एजति = என்று ஶரீர சலன ஹேதுவான ப்ராணன் ஆகலாம்.

ஸித்தாந்தம் :- ப்ராணன் என்று கூறியவர் ப்ரஹ்மமே. ஏனெனில் य एदद्विदुः अमृतास्ते भवन्ति என்பதாக இதை அறிந்தவர்களுக்கு மோக்ஷம் பலன் கூறியுள்ளது. அந்தர்யாமியாக உள்ளே இருந்து யாவருக்கும் பயத்தை ஈஶன் கொடுக்க முடியும். மேலும் भीषाऽस्मात् वातः पवते என்று தைத்திரீயம் கூறுகிறது. தேஹாதி சேஷ்டைகளுக்கு ஈஶன் ஸர்வசக்தனாதலால் காரணமாவார். அதனால் ப்ராண ஶப்தத்தினால் ஈஶன் கூறப்படுகிறார்.

இந்த அதிகரணம் விஶிஷ்டாத்வைதமத ரீதியில் प्रमिताधिकरण த்திற்கு (1:3:6) உட்பட்டது, தனியல்ல.

## 1.3.10 D कम्पनात् (1 सूत्रम्)

**விஷயம் :- அதே வாக்கியம்**

**ஸந்தேஹம்:- வஜ்ரஶப்தமானது இந்திரனுடைய ஆயுதமா? விஷ்ணுவா?**

**பூர்வபக்ஷம்:- 'இந்திரனுடைய ஆயுதம் வஜ்ரம்' என்பது ப்ரஸித்தமானது. மேலும் வாக்கிய ஶேஷத்திலும் முன் அதிகரணம் போல விஷ்ணுலிங்கம் காணவில்லை. யௌகிகமாக வைத்து வ்யுத்பத்தி கூறினால் அது விஷ்ணுவைப் போல் மற்றவருக்கும் பொருந்தலாம், நிர்ணயம் வராது. மேலும் उद्यतम् = தயராக கையில் உள்ளது என்ற லிங்கம் வஜ்ரத்திற்கே பொருந்தும்.**

**ஸித்தாந்தம் :- "सर्वं प्राण एजति" என்பதாக ப்ராணனால் உலகம் சேஷ்டிக்கிறது என்ற பொருள் விஷ்ணுவிற்கே பொருந்தும். को ह्येवान्यात् कः प्राण्याद्यदेष आकाश आनन्दो न स्यात् என்று ஸர்வசேஷ்டகத்வம் விஷ்ணுவிற்கு கூறப்பட்டுள்ளது. வஜ்ரத்தை விஷ்ணுவாக கீதை கூறுகிறது. आयुधानामहं वज्रम् என்று. उद्यतम् = என்பதற்கு உத்க்ருஷ்டமான ப்ரயத்னம் என்று பொருள்படுவதால் விஷ்ணுவிற்கு பொருந்தும்.**

## 1.3.11 A ज्योतिर्दर्शनात् (1 सूत्रम्)

**விஷயம் :- एष संप्रसादोऽस्माच्छरीरात्समुत्थाय परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेण अभिनिष्पद्यते...उत्तम: पुरुष: என்ற சாந்தோக்யாஷ்டம அத்யாய வாக்யம் விஷயம்.**

  

ஸந்தேஹம்:- பரஞ்ஜோதி என்றதால் ஸூர்யமண்டலமா? ப்ரஹ்மமா?

பூர்வபக்ஷம் :- உடலிலிருந்து கிளம்பி, ஜ்யோதிஸ்ஸை அடைந்து என்று கூறுவதால் ஸூர்யமண்டலம்தான் பரஞ்ஜோதி. மேலும் ப்ரஹ்மமானால் கிளம்புதலும், அடைதலும் பொருந்தாது.

ஸித்தாந்தம் :- ப்ரஹ்மம்தான் பரஞ்ஜோதி ஏனெனில் स उत्तमः पुरुषः என்று கூறியிருக்கிறது. இது ஸூர்ய மண்டலத்திற்கு பொருந்தாது. கேட்பவன் - கேள்வி - கேட்கப்படுவது - எல்லாவற்றிலும் இவன் ஸாக்ஷியாக மேலே கூறப்படுகிறான். அதோடு ஏகவாக்யதை உண்டு. எனவே ப்ரஹ்மம்தான் பரஞ்ஜோதி. ஆகையால் கிளம்புதல் = ஶரீரத்ரயத்திலிருந்து பிரித்து உணருதல். அடைதல் = ப்ரஹ்மமாக உணர்தல் என்று தாத்பர்யம் கொள்ள வேண்டும்.

இந்த அதிகரணம் விஶிஷ்டாத்வைத மதரீதியில் प्रमिताधिकरण-த்திற்கு உட்பட்டது.

## 1.3.11 D ज्योतिर्दर्शनात् (1 सूत्रम्)

விஷயம் :- ப்ருஹதாரண்யகத்தில் வருகின்ற योऽयं विज्ञानमयः प्राणेषु हृद्यन्तर्ज्योतिः पुरुषः என்ற வாக்கியம் விஷயம்.

ஸந்தேஹம் :- ஜ்யோதியானது ஜீவனா? விஷ்ணுவா?

பூர்வபக்ஷம் :- ஜீவன்தான் கூறப்படுகிறான். ஏனெனில் "स समानः सन् उभौ लोकावनुसञ्चरति , स वा अयं पुरुषो जायमानः...य उत्क्रामन् म्रियमाणः என்றவாறு கர்மாதீனமாக லோகஸஞ்சாரமும், ஜன்ம-மரணங்களும் ஆகிய ஜீவ லிங்கங்கள் பல உள்ளன. மேலும் किं

ज्योतिरयं पुरुषः என்ற கேள்விக்கு आत्मनैवायं ज्योतिषा என்று ஜீவனையே ஜ்யோதியாக கூறியுள்ளது.

ஸித்தாந்தம் :- "विष्णुरेव ज्योतिः" विष्णुर्ब्रह्म (சதுர்வேதசிகா) என்ற ஶ்ருதியினால் ஜ்யோதிஸ் என்ற வார்த்தைக்கு விஷ்ணுவேதான் பொருள் என்று தெரிகிறது. இவரேதான் "हृद्यन्तर्ज्योतिः" என்பதாக ஆரம்பத்திலும் "अत्रायं पुरुषः स्वयं ज्योतिः" என்பதாக உபஸம்ஹாரத்திலும் (முடிவிலும்) அடையாளம் சொல்லப்படுவதால் (प्रत्यभिज्ञातः) நடுவே கூறப்படும் ஜீவலிங்கங்களில் எல்லாம் हेतुकर्तृत्वं (causal meaning) வைத்து விஷ்ணுவிடம் பொருந்துவதாக கொள்ளவேண்டும். எனவே இங்கு பரஞ்ஜோதி விஷ்ணுதான்.

## 1.3.12 A आकाशोऽर्थान्तरत्वादिव्यपदेशात्

(1 सूत्रम्)

விஷயம் :- आकाशो वै नाम नामरूपयोर्निर्वहिता ते यदन्तरा तद्ब्रह्म तदमृतं स आत्मा என்ற வாக்கியம்.

ஸந்தேஹம் :- பெயர் வடிவம் (नामरूपे / name and form) ஆகிய ஜகத்திற்கு நிர்வாஹகனாக கூறப்படும் ஆகாஶம் நாமரூபங்களை காட்டிலும் வேறானதாலும் எந்த ஆகாஶத்தின் நடுவே நாமரூபங்கள் இருக்கின்றனவோ, அந்த ஆகாஶம் பூதாகாஶமா? ப்ரஹ்மமா?

பூர்வபக்ஷம்:- ப்ரஸித்தியினால் பூதாகாஶம்தான் கொள்ளவேண்டும். நாமரூபங்கள் ஆகாயத்தின் நடுவேதானே உள்ளன.

ஸித்தாந்தம் :- இங்கு நிர்வாஹகத்வம் என்பது இடமளிப்பது மட்டுமன்று. அடக்கி ஆள்வது பொருள். அடக்கியாளும் தன்மை சேதனனுக்குத்தான் பொருந்தும். மேலும் சாந்தோக்ய மந்த்ரம்

ஒரு இடத்தில் आत्मनाऽनुप्रविश्य नामरूपे व्याकरवाणि என்று ப்ரஹ்மம் கூறப்பட்டிருக்கிறது. மேலும் சாந்தோக்யத்தில் तद्ब्रह्म तदमृतं स आत्मा என்று ப்ரஹ்மத்தன்மை, அம்ருதத்வம், ஆத்மத்வம் பூதாகாஶத்திற்கு வரவேவராது. எனவே ஆகாஶம் ப்ரஹ்மம்-தான்.

## 1.3.10 V आकाशोऽर्थान्तरत्वादिव्यपदेशात् - (3 सूत्राणि)

(அத்வைதப்படி அடுத்த அதிகரணம் இதனுள் அடங்குகிறது- ஸுஷுப்தி..)

விஷயம் :- இதே வாக்கியம்தான்.

ஸந்தேஹம் :- இந்த வாக்கியம் अश्व इव रोमाणि विधूय पापं என்று பாபங்களை உதறித்தள்ளி குதிரை புரண்டு ரோமங்களை தள்ளுவதுபோல் - என்று இதற்கு முன் ப்ரஹ்மலோகம் அடையக் கூடியவனைச் சொல்லி அதை தொடர்ந்து - இந்த வாக்யத்தில் ஜீவனுடைய बद्धावस्था வும் முக்தாவாஸ்தாவும் சொல்லப்படுகிறது என்றபடியால் இந்த ஆகாஶம் ஜீவனா? ப்ரஹ்மமா?

பூர்வபக்ஷம் :- ஆகாஶஶப்தம் आ + काशते என்று யௌகிகமாக வைத்து ப்ரகாஶஸ்வரூபமான ஜீவனையே குறிக்கிறது. தேவ- மனுஷ்யாதி வடிவங்களையும், பெயர்களையும் தரிப்பதால் நாமரூப நிர்வாஹம் பொருந்தும். (बद्धावस्थावும்). ते = அந்த நாம- ரூபங்கள் अन्तरा = இல்லாமல் (வினா) எது உள்ளதோ तत् = அது முக்தாவஸ்த ब्रह्म = பெரிய தன்மை உடையது. தத் அம்ருதம் ஸ ஆத்மா என்று ஸூத்ரத்தின் பொருள். இவ்விதமாக இந்த வாக்கியம் நாம ரூபங்களில் நிர்வஹிதா என்னும்படியால் ஜீவனின் बद्धावस्थाவும், ते यदन्तरा என்பதால் நாமரூப நிர்முக்தத்வமான முக்தாவஸ்தாவும் கூறப்படுவதால் ஆகாஶம் என்பது ஜீவன்தான்.

ஸித்தாந்தம் :- நாமரூபநிர்வஹணம் என்பது நாமரூபதாரீ - என்ற பொருளைவிட அவைகளை ஆள்பவன் என்ற பொருள்தான் சீக்கிரம் ஸ்புரிக்கிறது. அதே போல் ये यदन्तरा = நாமரூபங்களின் நடுவே என்பதால் நாம ரூபங்களினால் தொடப்படாதவன் என்று பொருள் ஏற்படுவதால், இவை இரண்டும் பரமாத்மாவிற்குத்தான் பொருந்தும். எனவே பூர்வ மந்திரத்தில் ब्रह्मलोकम् என்று ப்ராப்யமாக கூறப்பட்ட ப்ரஹ்மம்தான் ஆகாஶ வார்த்தையினால் கூறப்படுகிறது, அடைபவனான முக்தாத்மாவான ஜீவன் கூறப்படவில்லை. இவ்வாறு நிருபாதிகமான ப்ரஹ்மத்வம், அம்ருதத்வம், ஆத்மத்வம் ஸ்வயமாக பொருந்துவது ப்ரஹ்மத்திலே -தான். எனவே ஆகாஶம் ப்ரஹ்மமே.

## 1.3.12 D आकाशोऽर्थान्तरत्वादिव्यपदेशात्

(1 सूत्रम्)

விஷயம் :- முன்பு கூறியது போலவேதான்.

ஸந்தேஹம் :- இங்கு பூதாகாஶமா? விஷ்ணுவா? (அத்வைதம் போலவே)

பூர்வபக்ஷம் :- आकाशो वै नाम என்பதாக இரண்டு ரூபங்களின் ப்ரஸித்தியை கூறுவதால் அல்லது ஆகாஶம் நாம ரூபங்களின் நிர்வாஹகன் என்பது ப்ரஸித்தம் என்று கூறுவதால், பூதாகாஶமானது தானாகவே நாமரூபங்களுக்கு இடமளித்து நிர்வஹிப்பதால், ஈஶனிடம் இவ்வித ப்ரஸித்தி கிடையாததால் பூதாகாஶம்தான் கூறப்படுகிறது.

ஸித்தாந்தம் :- ते यदन्तरा என்பதாக நாமரூபங்கள் இல்லாமல் எது உள்ளதோ என்று ஆகாஶம் சொல்லப்படுகிறது. அதை முழுமையாக சொற்களால் உரைக்க முடியாது என்ற விதமாகவும்

நாமமற்றது என்பதாகவும், நிர்வஹிக்கப்படுகிற ப்ராக்ருத-ரூபமற்றதன்மை கொண்டதால் ரூபமற்றது என்பதாகவும், பொருள் கொண்டு (ப்ரஹ்மத்திற்கு) விஷ்ணுவிற்கு தே யதந்தரா பொருந்தும். "यतो वाचो निवर्तन्ते अरूपमस्पर्शम्" என்று விஷ்ணுவை கூறுகின்றது அல்லவா? மேலும் அம்ருதம் ப்ரஹ்ம என்ற ப்ரஹ்மஶப்தத்தாலும் விஷ்ணுவே கூறப்படுகிறார் அன்றோ! எனவே ஆகாஶம் விஷ்ணுவே!

# 1.3.13 A सुषुप्त्युत्क्रान्त्योर्भेदेन (2 सूत्रे)

விஷயம் :- योऽयं विज्ञानमय: प्राणेषु हृद्यन्तर्ज्योति: पुरुष: என்ற ப்ருஹதாரண்யக வாக்கியம்.

ஸந்தேஹம் :- இங்கு கூறப்படுபவன் ஜீவனா? ப்ரஹ்மமா?

பூர்வபக்ஷம் :- "ஸ்தூலதேஹம், இந்திரியங்கள், ப்ராணன், மனம் போன்றவைகளைக் காட்டிலும் வேறான ஜ்யோதிரூபனான ஒருவன் கூறப்படுகிறான். இவன் லிங்கஶரீர ஸம்பந்தத்தால் இஹலோக பரலோகங்களில் ஸஞ்சரிக்கின்றான்'', என்று சொல்லப்படுபவன், விஞ்ஞானமயனான ஜீவன்தான். மேலும் இந்தப் பகுதியில் முழுமையாக ஸம்ஸாரத்தன்மைதான் கூறப்படுகிறது. எனவே ஜீவன்தான்.

ஸித்தாந்தம் :- இந்த ப்ராம்ஹணத்தில் போதிக்கப்படுபவன் ஜீவன் அல்ல. ஜீவனை ஸாதாரணமாய் நாம் "அஹம்" "அஹம்" என்று தெரிந்துகொண்டு தானே உள்ளோம். எனவே இங்கு சரீராதிகளைக் காட்டிலும் வேறான இவனை ஆராய்ந்தால் இவனுக்கு அஸங்கத்வம் விளங்கும். ஜீவனை அனுவாதம் பண்ணி இவனுக்கு உண்மையான ப்ரஹ்மத்தன்மையை இந்த

ப்ராம்ஹணத்தில் இந்த வாக்கியம் கூறியுள்ளது. எனவே இங்கு ப்ரஹ்மம்தான் கூறப்படுகிறது.

இந்த அதிகரணம் விஶிஷ்டாத்வைதத்தின்படி தனியல்ல.

## 1.3.13 D सुषुप्त्युत्क्रान्त्योर्भेदेन -

(1 सूत्रम् தான், மற்றொன்று தனி அதிகரணம்)

விஷயம் :- "स वा एष महानज आत्मा ...पुण्यं च पापं च पुन:" என்று ஸ்வப்னாவஸ்தையை பார்ப்பவனைக் கூறும் வாக்கியம்.

ஸந்தேஹம்: - முன் கூறிய காண்பவன் ஜீவனா? ஈஶனா?

பூர்வபக்ஷம் :- வேதத்தின் ப்ரஸித்தி இல்லாவிடில் லோக ப்ரஸித்தி ஏற்கவேண்டும். ஆதலால், ஈஶனுக்கு ஶரீரமில்லாததால் ஸ்வப்னம் பார்க்க முடியாது என்பதாலும், அஸங்கன் என்ற தன்மை ஈஶாபேதத்தின் மூலம் வரலாம் என்பதாலும் ஜீவன்தான்.

ஸித்தாந்தம் :- असङ्गोह्ययम् என்று கூறப்படும் அஸங்கத்வம் ஈஶனுக்கு மட்டுமே பொருந்தும். "असङ्गम् अस्पर्शम्" என்று கூறுகிறபடியால் ஈஶன் ஸர்வஜ்ஞன் ஆனதால் ஸர்வத்ரஷ்ட்ருத்வம் பொருந்தும். "य: सर्वज्ञ" என்பது ஶ்ருதி. सुषुप्त्युत्क्रान्त्योर्भेदेन- என்று ஜீவனும் ஈஶனும் வேறு என்று கூறப்பட்டதால் அபேதம் கொள்ளமுடியாது. எனவே ஸ்வப்னம் பார்ப்பவன் விஷ்ணுவே.

## 1.3.14 D पत्यादिशब्देभ्य: (1 सूत्रम्)

த்வைத மதத்தில் இது தனியான 14வது அதிகரணம்.

விஷயம் :- एष नित्यो महिमा ब्राह्मणस्य என்ற ப்ருஹதாரண்யக 6-ம் அத்தியாய வாக்கியம் விஷயம்.

ஸந்தேஹம் :- இங்கு ப்ராம்ஹணன் என்று கூறப்படுவது சதுர்முக ப்ரஹ்மாவா? ஈஶ்வரனா?

பூர்வபக்ஷம் :- स वा एष महानज आत्मा என்பதாக அஜன் என்று அகரமான விஷ்ணுவிடமிருந்து உண்டானவன் (अ + जः) என்ற யோக வ்யுத்பத்தியினாலும் லோக ரூடியினால் சதுர்முகன்தான் அர்த்தம். மேலும் ப்ராம்ஹணாதி வர்ணமற்ற விஷ்ணுவிடம் ब्राह्मण என்ற சொல் பொருந்தாது; எனவே சதுர்முகனையேதான் (அஜன்) குறிக்கும். எனவே சதுர்முகன்தான் இங்கு கூறப்படுகிறார்.

ஸித்தாந்தம்:- सर्वस्य वशी என்பதாக எல்லாவற்றிற்கும் வசீயாகவும், ஈஶனாயும், அதிபதியாயும் கூறப்படுவதால் அஜன் விஷ்ணுதான். இவரிடம் வேதத்தினால் ब्रह्मणा, अण्यते = அறியப்படுகிறார் என்று கொண்டு விஷ்ணுவே ब्राह्मणः என்று கூறப்படுகிறார்.



## நான்காம் பாதம்

# 1.4.1 A आनुमानिकम् (7 सूत्राणि)

**விஷயம்:-** महत: परं अव्यक्तं अव्यक्तात्पुरुष: पर: என்ற கடோபநிஷத்தின் வாக்கியம்.

**ஸந்தேஹம்:-** அவ்யக்தம் என்ற சொல் ஸாங்க்யர்கள் கூறும் ப்ரதானமா? அல்லது ஸூக்ஷ்ம ஶரீரமா?

**பூர்வபக்ஷம்:-** மஹத்தத்வம், அவ்யக்தம், புருஷன் என்ற வரிசையில் இங்கு கூறும் பாணியின் மூலம் ஸாங்க்யர்கள் கூறும் இந்த வரிசையைச் சொல்வதனால் முக்குணவடிவான ப்ரதானம்-தான் அவ்யக்தம்.

**ஸித்தாந்தம் :-** இதற்கு முன்பு வாக்யத்தில் ஆத்மா = தேரின் ஸ்வாமீ, ஶரீரம் = தேர், புத்தி = தேரோட்டி, மனம் = கடிவாளம், இந்திரியங்கள் = குதிரைகள், சப்தாதி விஷயங்கள் = சாலைகள் என்று உருவகப்படுத்திச் சொல்லப்பட்டன. அவைகளையே இங்கு ஒன்றைவிட மற்றொன்று பெரியது என கூறுமிடத்தில் மற்றவைகள் அதே வார்த்தைகளால் குறிப்பிடப்படுகின்றன. இந்திரியங்கள், மனம், புத்தி, ஆத்மா எல்லோரும் கூறப்பட்டு-விட்டபடியால் மீதியுள்ள ஶரீரம்தான் கூறப்பட வேண்டியதாக உள்ளது. எனவே அங்கு அவசிஷ்டமான மீதியான ஶரீரம் இங்கு அவசிஷ்ட அவ்யக்தபதத்தினால் கூறமுடியும் என்றால் காரணாவஸ்தையில் உள்ள பூத ஸூக்ஷ்மங்களானவை (ஸூக்ஷ்ம ஶரீரம்) அவ்யக்த பதத்தால் குறிக்கப்படுகிறன. மேலும் மஹத்-பதம் ஸாங்க்யர்களின் மஹத்தத்தவத்தை கூறவில்லை. எனவே இங்கு அவ்யக்தம் என்ற வார்த்தை ப்ரதானத்தைக் கூற முடியாது. எனவே ஸாங்க்ய மதத்திற்கு ப்ரவேசம் இல்லை.

  

# 1.4.1 V आनुमानिकम् (7 सूत्राणि)

சென்ற அதிகரணத்தில் बद्ध मुक्त ஜீவர்களைக்காட்டிலும் பரமாத்மா வேறானவர் என்று நிர்ணயித்ததை ஆக்ஷேபித்து, இந்த அதிகரண பூர்வபக்ஷம் கூறப்படுகிறது.

விஷயம் :- முன் கூறிய
इन्द्रियेभ्य: परा ह्यर्था अर्थेभ्यश्च परं मन: | मनसस्तु परा बुद्धि: बुद्धेरात्मा महान् पर: | महत: परं अव्यक्तं अव्यक्तात् पुरुष: पर: | என்ற வாக்கியம்தான்.

ஸந்தேஹம் :- ப்ரதானம் கூறப்படுகிறதா? ஸூக்ஷ்ம ஶரீரமா?

பூர்வபக்ஷம் :- காபில மதத்தில் கூறப்படும் 25 தத்துவங்கள் இந்திரியங்கள்=10, பூதானி = 10 (5+5 தன்மாத்ரைகள்), அந்தக்கரணம் (1), அஹங்காரம் (1), மஹான் (1), அவ்யக்தம் (1), புருஷன் (1) = 25 என்று அவர்கள் கூறுகிறார்கள். "पुरुषान्न परं किञ्चित्" என்பதாக 25 காட்டிலும் வேறு தத்துவம் கிடையாது என்று கூறுவதாலும் ஸாங்க்ய மதம் குறிக்கப்படுகிறது. எனவே அப்ரஹ்மாத்மகமான ப்ரஹ்மத்திலிருந்து வேறான 25 தத்துவங்கள் இங்கு கூறப்படுவதால் ப்ரதானகாரணவாதமும் வேதத்திற்கு ஸம்மதமே என்று பூர்வபக்ஷ ஸாரம்.

ஸித்தாந்தம் :- இம்மந்திரத்தில் முந்தியதைக்காட்டிலும் பிந்தியவைக்கு பரத்வம் கூறியிருப்பது அவைகளை தன் வசப்படுத்துவதுதான் விவக்ஷிதம். அதில் பிந்தியபிந்திவற்றை வசீகரிப்பது கடினம் என்ற முறையில் மேன்மை (परत्वम्) சொல்லப்படுகின்றது. ஆகையால், आत्मानं रथिनम्-என்று முன்பு கூறியவைகளுள் இந்த மந்திரத்தில் மற்றவைகள் அந்தந்த வார்த்தை-

களால் குறிக்கப்பட்டு, ஶரீரம் மட்டும் குறிக்கப்படாமல் மீதி -யுள்ளதால் அவ்யக்தபதம் ஶரீரத்தையே(ஸூக்ஷ்ம ஶரீரத்தையே) கூறுவதாகிறது. இந்த ஶரீரம்தான் முந்திய மந்திரத்தில் தேராக நிரூபிக்கப்பட்டது. ஆகையால் ஸாங்க்யமதத்தின் தத்துவங்களோ புருஷனைக் காட்டிலும் மற்றதை (ப்ரஹ்மத்தை) நிஷேதமோ இங்கு சற்றும் ஸந்தேஹத்திற்கு இடமில்லை. மேலும் இங்கு அவ்யக்தத்திற்கு அறியப்படும்தன்மை (ज्ञेयत्वम्) சொல்லப்பட-வில்லை(ஆனால் ஸாங்க்யர்கள் கூறுகிறார்கள்). எனவே ப்ரதான -வாதம் ஶ்ருதி ஸம்மதமில்லை.

## 1.4.1 D आनुमानिकम् (9 सूत्राणि)

இங்கு चमसवत् என்ற அடுத்த அதிகரணத்தையும் சேர்த்துள்ளது)

விஷயம் :- महत: परं अव्यक्तं अव्यक्तात् पुरुष: पर:, जीवा एव तु दु:खिन:, योनिमन्ये प्रपद्यन्ते, कार्यकारणबद्धौ तौ போன்ற வாக்யங்கள் விஷயம்.

ஸந்தேஹம் :- அவ்யக்தம், दु:खि अवरादि ஶப்தங்களுக்கு முக்யார்த்தம் ப்ரக்ருதியா? ஜீவனா? ஈஶனா?

பூர்வபக்ஷம் :- ப்ரக்ருதி (ப்ரதானம்) ஜீவன் போன்றவர்கள்தான் கூறப்படுகிறார்கள். ப்ரக்ருதி, ஜீவன் போன்றவர்களிடம்தானே அவ்யக்த, ஜீவன், என்ற சொல் ப்ரஸித்தமாகிறது. இவைகளுக்கு விஷ்ணு என்று அர்த்தம் கூறுவதற்கு ப்ரமாணம் இல்லை. இந்த வார்த்தைகளுக்கு ப்ரதானம் போன்ற அர்த்தம் கிடையாது என்றால் எந்த வார்த்தையையும் எந்த பொருளிலும் கூறலாம் என்று அவ்யவஸ்தா ஏற்படும். மஹத்தைக்கட்டிலும் அவ்யக்தம் பெரியது என்பதும், ஜீவனிடம் துக்கித்வம் என்பதும் விஷ்ணுவிடம் வரவே வராது. மேலும் महान्तं च समावृत्य प्रधानंसमवस्थितम् என்ற ப்ரமாணத்தால் ப்ரதானம் என்று நிர்ணயிக்க வழியுள்ளது.

ஸித்தாந்தம் :- नामानि सर्वाणि समाविशन्ति என்ற (भाल्लवेयश्रुति) -யினால் அவ்யக்தாதி ஸர்வஶப்தங்களினாலும் விஷ்ணு ஸர்வ-ஶப்த வாச்யகராகிறார். ப்ராணாதாரத்வம் என்று பொருள்படும் அவ்யக்த ஶப்தம் விஷ்ணுவிற்கே ரூடம். மேலும் சமஸம், மஹத் - என்ற வார்த்தைகள் யஞ்ய பாத்திரம், மஹத்தத்வம் என்று ப்ரஸித்தமானாலும் யௌகிகமாக விஷ்ணுவிடத்திலும் அவர் தலையிலும் உபயோகப்படுத்தப் படுகின்றன. महान्तं विभुमात्मानं इदं तच्छिरः என்று. அதுபோல் இங்கு அவ்யக்தம் = விஷ்ணுவே. துக்கம் விஷ்ணுவிற்கு ஏற்படாதாயினும் துக்கமானது ஈசாதீனமாகவே உண்டாவதால் ப்ரதானமும் ப்ரஹ்மாதீனம் ஆனபடியால் அவ்யக்த, துக்காதி வார்த்தைகள் விஷ்ணுவிற்கு பொருந்தும்.

## 1.4.2 A चमसवद वशेषात् (3 सूत्राणि)

விஷயம் :- अजामेकां लोहितशुक्लकृष्णाम् என்ற மஹாநாராயண, ஶ்வேதாஶ்வதர உபநிஷத் வாக்கியம் விஷயம்.

ஸந்தேஹம் :- இந்த ஶ்ருதியில் கூறப்படும் சிவப்பு, வெளுப்பு, கருப்பு நிறமுள்ள அஜா என்பது ஸாங்க்யர்கள் கூறும் ப்ரஸித்த-மான த்ரிகுணாத்மகப்ரதானமா? சாந்தோக்யத்தில் கூறும் தேஜஸ், ஜலம், ப்ருதிவீ ரூபமான ஜகத் ப்ரக்ருதியா?

பூர்வபக்ஷம் :- நிறங்கள் மூன்றும் ஸத்வம் = வெளுப்பு, ரஜஸ் = சிவப்பு, தமஸ் = கருப்பு என்பதாக முக்குணத்திலும் பொருந்துவதால் இங்கு ப்ரதானம்தான் கூறப்படுகிறது.

ஸித்தாந்தம் :- சாந்தோக்யத்தில் यदग्नेः लोहितं रूपं तेजसः तद्रूपं, यच्छुक्लं तदपां, यत्कृष्णंतदन्नस्य நெருப்பிற்கு நிறம் சிவப்பு, ஜலத்திற்கு வெளுப்பு, ப்ருத்விக்கு கருப்பு என்று கூறப்படுவதால்

ப்ரபலமான ஶ்ரௌதமான ப்ரஸித்தியை கொண்டு நிர்ணயம் பண்ண வேண்டும் என்பதாலும், உண்மையாக இந்த நிறங்கள் மூன்று பூதத்தில் கூறப்படுவதாலும் தேஜஸ், ஜலம், ப்ருதிவீ என்றுள்ளதான ஜகத்ப்ரக்ருதிதான் கூறப்படுகிறது. பூர்வ-பக்ஷத்திலும் அஜா என்பதற்கு ஆடு என்ற முக்யார்த்தம் க்ரஹிக்க -முடியாததுபோல் ஸித்தாந்தத்திலும் கற்பனையாக ஆடு கூறப்-படுகிறது. ஏனெனில் "न जायते" என்ற யோகபொருள் தேஜஸ் போன்றவைக்கு பொருந்தாது. ஸூர்யனுக்கு மதுத்தன்மை இல்லாவிடினும், मधु = आदित्यः என்று கல்பனையும், தலையை சமஸம் (ஒருவிதமான பாத்ரம்) என்று கூறுவதும் (கற்பனை) இதற்கு உதாரணம். எனவே இங்கு அஜா என்பது ப்ரதானம் அல்ல.

## 1.4.2 V चमसवद वशेषात् (3 सूत्राणि)

விஷயம் :- அதே மந்திரம்தான்.

ஸந்தேஹம் :- அதுவே ஸாங்க்ய ப்ரதானமா? ப்ரஹ்ம கார்யமான ப்ரக்ருதியா?

பூர்வபக்ஷம் :- மந்திரம் अजां ஸ்ருஜமானாம் = என்பதாக ஸ்ருஷ்டியில் शानच् விகுதியால் ஸ்வாதந்த்ர்யம் கூறப்படுகிறது (கர்த்ருத்வ-ரூபமான ஸ்வாதந்த்ர்யம்) எனவே ஸ்வதந்த்ரமாக கூறப்படும் அஜா என்பது உண்டாகாதது என்றும் கூறப்படுவதால் காபில ஶாஸ்த்ரத்தில் கூறும் ப்ரதானமேதான்.

ஸித்தாந்தம் :- ஸ்ருஜமானாம் என்ற शानच् விகுதியின் பொருளான கர்த்தா என்பதன் மூலம் ஸ்வாதந்த்ர்யம் தெரிந்தாலும் கூட रथो गच्छति தேர் செல்கிறது என்ற இடத்தில் தேரோட்டி தூண்டுபவன் உள்ளான், அவனால் தூண்டப்பட்டுத்தான் தேர் செல்கிறது.

ஆனால் செல்லுதல் என்ற க்ரியையின் ஆஶ்ரயமாகவே தேர் உள்ளது. அதுபோலவே ப்ரஹ்மத்தினால் ப்ரேரிதமாக ப்ரக்ருதியானது ஸ்ருஷ்டியினுடைய வ்யாபாரத்திற்கு ஆச்ரயமாக இருப்பதாகிய ஸ்வாதந்த்ரயம்தான் உண்டு. எனவே காபில ஶாஸ்த்ரத்தில் கூறிய அப்ரஹ்மரூபமான ப்ரக்ருதியானது இங்கு க்ரஹிக்கப்பட முடியாது. மேலும் தைத்திரீயத்தில் ப்ரஹ்மாத்மகமான ப்ரக்ருதி-தான் अजामेकाम् என்று கூறப்படுகிறது. அஜா என்ற வார்த்தை பிறப்பற்றது என்றும், ஸ்ருஷ்டிப்ரகரணத்தில் இங்கு கூறப்படும் பிறப்பும் எவ்வாறு ஒன்றிற்கே பொருந்தும் என்று ஆக்ஷேபம் வேண்டாம். ஏனெனில் தமஸ் ஸ்வரூப காரணாவஸ்தையில் அதற்கு அஜத்வம் மஹததாதி கார்யவஸ்தையில் அதற்கு உத்பன்னத்வம் என்பதாக நிலைவேறுபாட்டினால் இரண்டும் பொருந்தும். மது-வித்யையில் ஒரே ஸூர்யனுக்கு கார்யாவஸ்தையில் உதயா-ஸ்தமனமும், மதுத்வமும் கூறப்படுகிறது. அதே ஸூர்யனுக்கு காரணாவஸ்தையில் அவை மறுக்கப்படுகிறது. எனவே காபில-மத ஸம்பந்தமான ப்ரதானம் இங்கு கூறப்படவில்லை.

## 1.4.2 D ज्योतिरुपक्रमात् (2 सूत्रे)

(மத்வமதரீதியாக ज्योतिरुपक्रमात्, कल्पनोपदेशाच्च என்ற இரண்டு ஸூத்ரங்கள் உள்ளதாக இந்த அதிகரணம் உள்ளது. चमसवदविशेषात् என்ற ஸூத்ரம் 2ம் அதிகரணமாக ஏற்காமல் சென்ற அதிகரணத்திலேயே சேர்க்கபட்டுவிட்டது)

விஷயம் :- वसन्ते वसन्ते ज्योतिषा यजेत என்ற வாக்கியம் விஷயமாகிறது.

ஸந்தேஹம் :- ज्योतिः वसन्तः என்ற பெயர்களால் கூறப்படுவது ஜ்யோதி போன்றவற்றைக் குறிப்பதா? அல்லது கர்மாவைக் குறிப்பதா? விஷ்ணுவையா?

பூர்வபக்ஷம்:- கர்மாவையே குறிக்கும். ஏனெனில் ஜ்யோ-திஷ்டோமம் என்ற சோமயாகத்தைத்தான் ப்ரஸித்தமான, "ஜ்யோதிஷா யஜேத" என்ற வாக்கியம் கூறுகிறது. ப்ரஸித்தியை விட்டுவிட்டு ப்ரஹ்மத்தை கூறுமாகில், இந்த கர்மாவையோ, அதன் அங்கமான காலத்தையோ கூறுவதற்கு வேறு ப்ரமாணம் இல்லாததால் இந்த நித்யகர்மாநுஷ்டானம் லோபித்துவிடும். ஜ்யோதிஶ்ஶப்தம் விஷ்ணுவைக்கூறி அவரோடு தொடர்பு உடைய கர்மாவையும் குறிக்குமானால் லக்ஷணாதோஷம் ஏற்படும். மேலும் கர்மாவிக்கு இந்த ஶப்தம் ரூடமானதால் அதுதான் ப்ரபலம். விஷ்ணுவிற்கு ஸர்வபதவாச்யத்வம் கிடைப்பதற்காக ஜ்யோதிஸ்ஸின் அவயவங்களுக்கும் (காலம் போன்றவற்றிற்கும்) ப்ரஹ்மபரத்வம் சொன்னாலும் மொத்த ஸமுதாயத்திற்கும் விஷ்ணுபரத்வம் பொருந்தாது.

ஸித்தாந்தம் :- तं यच्छतं वर्षाण्यभ्यार्चत्... என்ற வேதபாகத்தில் "சதர்சி" போன்ற சில வார்த்தைகளுக்கு மஹாயோகம் அல்லது வித்வான்களின் ரூடியை வைத்து விஷ்ணுபரத்வம் கூறிவிட்டு கடைசியில் "ता वा एता: सर्वा ऋच: सर्वे वेदा: सर्वे घोषा: என்பதாக வேதத்தில் எல்லா வார்த்தைகளுக்கும் முக்யமான பொருள் விஷ்ணுவே. இதற்கு உதாரணம் தேனில் ப்ரஸித்தமான மது ஶப்தத்திற்கு உலக ரூடியை தள்ளிவிட்டு असौ वा आदित्यो मधु என்று ஸூர்யனுள் உள்ள விஷ்ணுவைக் கூறுவது என்பது போல். இதனால் தேன் என்ற பொருளில் ரூடியானது பாதிக்கப்-படவில்லை. அதே போல் இங்கும் ஜ்யோதிஸ் என்பதற்கு கர்மாவில் ரூடி பாதிக்கப்படவில்லை. அவயவங்களான உபாதிகள் யாவும் விஷ்ணுவை குறிப்பதால் அவயவியும் விஷ்ணுவேதான்.

  

# 1.4.3. A न संख्योपसंग्रहादपि नानाभावादतिरेकाच्च - (3 सूत्राणि)

**விஷயம் :-** यस्मिन्पञ्च पञ्चजना आकाशश्च प्रतिष्ठित: |
तमेव मन्य आत्मानं विद्वान्ब्रह्मामृतोऽमृतम् ||
என்பதான வாக்கியம் விஷயம்.

**ஸந்தேஹம் :-** இங்கு पञ्च पञ्च जना: என்று கூறுகின்ற பொருள் ஸாங்க்யர்கள் கூறும் 5X5=25 தத்துவங்களா அல்லது ப்ராணன், கண், காது, மனம், அன்னம் - என்ற ஐந்து பொருள்களா?

**பூர்வபக்ஷம்:-** காபில மதமான ஸாங்க்யம் கூறும் 25 தத்துவங்கள்-தான் என்று அறிய வேண்டும். ஏனெனில் पञ्चxपञ्च = என்பதாக மேல்வாக்யத்தில் அன்வயம் கொண்டால் 25 என்ற எண்ணிக்கை வருகின்றதன்றோ? அவர்களின் மதத்திலும் இருபத்தைந்து தத்துவங்கள் கணக்கிடப்படுகின்றன அல்லவா?

**ஸித்தாந்தம் :-** மேற்கூறிய மந்திரத்தில் पञ्च என்ற வார்த்தை இரண்டுமுறை கூறப்பட்டிருந்தாலும், இரண்டாவது पञ्च என்ற சொல் ஸமாஸத்தின் முற்பகுதியாக உள்ளது. எனவே பஞ்சஜனங்கள் என்று அழைக்கப்படும் பேர்கள் पञ्च - ஐந்து பேர்கள் என்பதாகத்தான் பொருள் ஏற்பட முடியும். மேலும் 5 x 5 என்று கொள்ள வேண்டுமானால் ஐந்து ஐந்து தனித்தனி group (குழுமம்) இருந்தாக வேண்டும். ஸாங்க்ய மதத்திலும் கூட 1 + 7 + 16 + 1 என்பதாகத்தான் group கூறப்படுகின்றதே ஒழிய ஐந்து ஐந்தாக பிரிக்குமாறு ஐந்து குழுக்கள் கணக்குப்படுத்தப் படவில்லை. மேலும் ஆகாஶம் என்ற தத்வமும் 25 க்குள் அடங்குமாதலால் தனியாக கூறப்படுவது ஸரியல்ல. அதோடு यस्मिन् आत्मनि என்று ஆதாரமாக ஆத்மதத்வமும் தனியாக கூறப்படுகிறது.

பஞ்சஜனங்கள் என்பவர் எந்த ஐந்து பேர்கள் என்றால் வாக்கிய சேஷத்தில் கூறப்படும் 1) ப்ராணன் 2) கண் 3) காது 4) மனம் 5) அன்னம் என்றாவது அல்லது நிஷாதனுடன் (1+4) கூடிய ப்ராம்ஹணாதிகளான நான்கு வர்ணத்தவர்கள் - என்றாவது கொள்ளவேண்டும். அதனால் ஸாங்க்ய மதத்திற்கு நுழைய இங்கு இடமில்லை.

## 1.4.3 V न संख्योपसंग्रहादपि नानाभावादतिरेकाच्च (3 सूत्राणि)

**விஷயம் :-** அதே வாக்கியம்தான்.

**ஸந்தேஹம் :-** அப்ரஹ்மாத்கமான கபில ஶாஸ்த்ரம் கூறும் 25 தத்வங்கள் கூறப்படுகின்றனவா? வேறா?

**பூர்வபக்ஷம் :-** அத்வைதிகள் போலதான். ஆனால், ஐந்து மஹா பூதங்கள், ஐந்து தன்மாத்திரைகள், ஐந்து ஞானேந்த்ரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், ப்ரக்ருதி, மஹத், மனம், அஹங்காரம், புருஷன் = 5 என்பதாக குழு வரலாம் என்பதால் காபில தத்வங்கள்தான் இங்கு கூறப்படுகின்றன. எனவே அப்ரஹ்மாத்மகங்கள் இவை.

**ஸித்தாந்தம் :-** நீ கூறியபடி இருபத்தைந்து தத்வங்கள் இங்கு கூறுவதாக ஏற்றாலும்கூட, यस्मिन् எதில் இவைகள் நிலைபெற்றுள்ளனவோ என்பதாக ப்ரஹ்மாத்மகத்வம் கிடைப்பதால் இங்கு காபில ஶாஸ்த்ரம் விஷயம் அல்ல. மேலும் ஆதாரமான பொருள் மறுமுறை आकाशश्च என்று மற்றொரு தத்வம் கூறப்படுவதால் 25 நம்பரைதாண்டுகிறது. எனவே இந்த தத்வங்கள், ஸாங்க்யதத்வங்களைக் காட்டிலும் नाना = வேறுபட்டவை. எனவே அத்வைத மதம் கூறியபடியே ப்ராணன், கண், காது, மனம், அன்னம் என்ற पञ्च ஜனங்கள் கூறப்படுகின்றனர்.

# 1.4.3 D न संख्योपसंग्रहादपि नानाभावादतिरेकाच्च (3 सूत्राणि)

விஷயம் :- அதே மந்திரம்தான்

ஸந்தேஹம் :- பஞ்சஜன வார்த்தையினால் கூறப்படுவது ப்ராணன், கண் போன்ற வாக்கிய சேஷத்தில் வரும் பொருள்களா? ஈஶ்வரனின் ரூபங்களா?

பூர்வபக்ஷம்:- விஷ்ணுவைக் காட்டிலும் வேறான ப்ராணன் போன்ற ஐந்து பொருள்கள்தான் கூறப்படுகின்றன. ஏனெனில் ஈஶனிடம் एकमेवाद्वितीयम् என்று ஈஶன் ஒருவனே என்று நிர்ணயிக்கப்-பட்டுள்ளவரிடம் பன்மை பொருந்தாதே! விஷ்ணுவிற்கு அதீனமாக ப்ராணாதிகள் இருப்பதால் ஸரிசெய்யலாம் என்று கூறமுடியாது. பல ஜனங்களை தன் வசத்தில் உள்ள அரசனிடம் बहुवचनத்தின் உபயோகம் செய்வதில்லையே!

ஸித்தாந்தம் :- प्राणस्य प्राणम् என்ற வாக்யத்தில் ப்ராணாதிகளை கூறி, प्राणं, श्रोत्रं - என்பதாக இரண்டாம் வேற்றுமை (द्वितीया विभक्ति)யில் கூறப்பட்ட ப்ராணாதிகளுக்கு நியந்தாவாக சொல்லிய தன்மை விஷ்ணுவைக் குறிக்கும் அடையாளமன்றோ! எனவே அவை விஷ்ணுரூபமே. ஆறாம் வேற்றுமையினால் கூறப்பட்ட ப்ராணாதிகளைக் காட்டிலும் ப்ராதான்யம் உள்ளவை. "नामानि सर्वाणि", "ता वा एता:" என்றெல்லாம் வாக்யங்களில் எல்லா ஶப்தங்களுக்கும் நேர்பொருள் விஷ்ணுதான் என்று சொல்லப்படுகிறது. பேதத்திற்கு ப்ரதிநிதியான விஶேஷம் என்றதை ஏற்று அதன் பலத்தினால் (बलेन) पञ्चत्व எண்ணிக்கை விஷ்ணுவிற்கும் பொருந்தும்.

# 1.4.4 A कारणत्वेन चाकाशादिषु यथाव्यपदिष्टोक्तेः (2 सूत्रे)

இந்த அதிகரணமானது ஸமன்வயாதிகரணத்திலிருந்து நான்கு பாதங்களில் இதுவரை கூறிய விஷயமான- "ப்ரஹ்மம்தான் ஜகத்காரணம், அதில்தான் உபநிஷத் வாக்யங்களில் ஸமன்வயம் என்று கூறப்பட்டதை ஆக்ஷேபம் பண்ணி ஸமாதானம் கூறப்படுகிறது.

விஷயம்:- வேதாந்த வாக்யங்களில் ஸ்ருஷ்டி பற்றி கூறுகின்றபோது பரஸ்பர விரோதமாக கூறப்பட்டுள்ளதாலும், ஸ்ருஷ்டி வாக்யங்களில் ப்ராமாண்யம் பற்றி விசாரிக்கப்படுகிறதால் ஸ்ருஷ்டி வாக்கியம்தான் விஷயம்.

ஸந்தேஹம் :- பரஸ்பர விரோதமாக ஸ்ருஷ்டிகள் சொல்லப்படுவதால் ப்ராமாண்யம் ஜகத்திற்கு உரியதா? இல்லையா?

பூர்வபக்ஷம் :- "ஆத்மாவிலிருந்து ஆகாஶம் தோன்றியது (தைத்)" "ப்ரஹ்மம் தேஜஸ்ஸை படைத்தது (சாந்)", "ஆத்மா இந்த உலகங்களை ஸ்ருஷ்டி செய்தது, (ஐதரேயம்) "இவரிடமிருந்து ப்ராணன் உண்டாயிற்று (முண்டகம்), உண்டாக்கப்பட்ட பொருள்களில் முறை வெவ்வேறாக இருப்பது மட்டும் அல்லாமல், सदेव सोम्येदमग्र आसीत् என்று முதலில் ஸத் இருந்ததாயும், "असद्वा इदमग्र आसीत्" அஸத் முதலில் இருந்ததாயும், आत्मा वा इदमग्र आसीत् ஆத்மாதான் முதலில் இருந்ததாயும் விதவிதமாக சொல்லப்படும் காரணத்தினாலும் முரண்பாடு இருக்கிறது.

ஸித்தாந்தம் :- படைக்கப்படும் பொருள்கள், அதன் வரிசையில் முரண்பாடு இருந்துவிட்டு போகட்டும் (அதுவும் இல்லை

என்பது 2 ம் அத்தியாயத்தில் கூறப்படபோகிறது) ஆனால் முக்ய தாத்பர்யமான காரணவஸ்துவைப்பற்றி ஒரேமாதிரியாக ஆலோசனை செய்து ஸர்வஞரான, ஸர்வசக்தரான, ப்ரஹ்மம்-தான் காரணம் என்பதை ஒரேவிதமாக எல்லா உபநிஷத்துகளும் ஐககண்ட்யத்துடன் (ஒரே குரலில்) சொல்லுகின்றன. 'அஸத்' என்று கூறிய இடத்தில் வெளிப்படாத பெயர்கள் உருவங்கள் உடையது என்ற பொருள். ஏனெனில் அஸத் காரணமாகாது. "कथमसत: सज्जायेते" என்று கூறப்பட்டுள்ளது. எனவே ப்ரஹ்மமாகிற ஒரு அத்வைதப் பொருளில் வேதாந்த ஸமன்வயம் பொருந்தும்.

## 1.4.4 V कारणत्वेन चाकाशादिषु यथाव्यपदिष्टोक्ते: (2 सूत्रे)

விஷயம் :- வேதாந்தத்தில் ஜகத்காரணவஸ்துவை கூறுமிடத்தில் "सत्" "असत्" "अव्याकृतम्" என்றவாறு ஸாங்க்யமத ஸித்தாந்தமான ப்ரதான காரணவாதத்திற்கு அனுகூலமானதாக தோன்றுவதால், சென்ற அதிகரணத்தில் அப்ரஹ்மாத்மகமான प्रधानम् காரணமாகாது என்று கூறியது ஸரியில்லை. வேதாந்த வாக்யங்களிலேயே ஒரே குரலில் ஒரே விஷயமாக கூறப்படாததால் ப்ரதானமே ஜகத்காரண-மாகட்டும் என்று இங்கு ஆக்ஷேபத்தில் கூறப்படுகிறது.

ஸந்தேஹம்:- ஜகத்காரணம் ப்ரதானமா? ப்ரஹ்மமா?

பூர்வபக்ஷம்:- முதலில் கூறியபடி வேதாந்தங்களுக்குள் ऐकमत्यम् (ஒரே எண்ணம்)காணப்படாததால் प्रधानम्தான் காரணம். ஈக்ஷணம் (ஆலோசனை) ஜடத்திற்கு பொருந்தாததுபோல் சிதசித்-விபிஷ்டமான பரமாத்மா ஜகத்காரணமாக ஏற்க வேண்டுமாதலால், அந்த ப்ரஹ்மத்தின் விஶேஷணமான அசித்திற்கு ஈக்ஷணம் அமுக்யந்தானே? எனவே சித்திற்கு முக்கியமான ஈக்ஷணம்

என்பதால் இரண்டுவிதமாக சொல்வது நியாயமில்லை. ஆகையால் அவ்யக்தமான அசித்திற்கு காரணத்வம் கூறி ஈக்ஷணம் போன்றவை கௌணம் (गौण) என்பதே யுக்தம்.

ஸித்தாந்தம்:- காரணவாக்யங்களில் ஸர்வஜ்ஞத்வாதி விஶிஷ்டத்திற்குத்தான் காரணத்வம் கூறப்படுகிறது. 'सत्यं ज्ञानं अनन्तम्' என்று ஆரம்பித்து तस्माद्वा एतस्मादात्मनः என்பதாக ஸ்ருஷ்டி காரணத்வம் உரைக்கப்படுகிறது. இதே தொடரில் அவருக்கு ஸர்வஜகத்ஸ்ருஷ்ட்ருத்வம் கூறி तदप्येषश्लोको भवति | असद्वा इदं என்பதாக அவரையே விளக்குமிடத்தில்கூறிய அஸத்பதம் = அவ்யக்தநாமரூபம் என்றே பொருள்படும். அல்லது ப்ரஹ்மத்திற்கு தேவமனுஷ்யாதி கார்யவடிவத்தில் அஸத்வம் கொள்ளவேண்டும். எனவே ஸர்வஜ்ஞம் ஸத்யஸங்கல்பமாக கூறப்படும் பரமாத்மாதான் காரணம். சேதன அசேதன இரண்டிற்கும் பொருந்தாத ஸங்கல்பாதிகம் ப்ரஹ்மத்திற்கே பொருந்தும்.

## 1.4.4. D कारणत्वेन चाकाशादिषु यथाव्यपदिष्टोक्तेः (1 सूत्र)

விஷயம் :- "आत्मनः आकाशः संभूतः / आकाशाद्वायुः" என்ற ஸ்ருஷ்டி வாக்யங்கள் விஷயம்.

ஸந்தேஹம் :- இங்கு கூறப்படும் ஆகாஶம், வாயு, அக்னி போன்ற பதங்கள் ஆகாஶம் போன்ற பஞ்சபூதங்களைக் கூறுகின்றனவா? விஷ்ணுவையே குறிக்கின்றனவா?

பூர்வபக்ஷம்:- "न जायते म्रियते वा" என்பதாக ஶ்ருதிகள் உற்பத்தியற்ற ப்ரஹ்மத்தை கூறுவதால், கார்யத்வம் வரமுடியாத ப்ரஹ்மத்திற்கு ஸ்வகார்யத்வம் வரவே முடியாது. விஷ்ணுவின் அதீனமாக ஆகாஶம் இருப்பதாகக் கொண்டாலும் தந்தையின் அதீனமான பிள்ளையிடம்

जात: என்று சொல்வது கிடையாது. எனவே ஆகாஶாதி பதங்கள் ஆகாயம் முதலியவற்றைக் கூறுகிறது.

ஸித்தாந்தம் :- य: आकाशे तिष्ठन् என்றவாறு விஷ்ணுவிற்கு ஆகாஶாதி நியாமக வடிவங்கள் கூறப்படுகின்றன. அவை யாவும் தெளிவாகவெளிப்படுவது முறையே ஏற்படும். ஆகையால் வ்யங்க்யவ்யஞ்ஜகபாவரூபமான கார்யகாரணத்வம் வரமுடியும். பல அதிகரணங்களில் அனேக வார்த்தைகள் விஷ்ணுவிற்கு உண்டு என நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

## 1.4.5 A जगद्वाचित्वात् (3 सूत्राणि)

விஷயம் :- यो वै बालाक एतेषां पुरुषाणां कर्ता यस्य वैतत्कर्म स वै वेदितव्य: என்ற கௌஷீதகீ உபநிஷத் வாக்கியம் விஷயம்.

ஸந்தேஹம் :- இங்கு கூறப்படுபவர் ப்ராணனா? ஜீவனா? ப்ரஹ்மமா?

பூர்வபக்ஷம் :- 1) ப்ராணன்தான் பொருந்தும். ஏனெனில் "कर्म" =என்ற சொல் அசைவு என்ற க்ரியைத்தான் குறிக்கும். உடல் முதலியவற்றை அசையவைக்கும் ப்ராணனைதான் எடுத்துக்கொள்ள வேண்டும். 2) அல்லது ''கர்ம'' என்பது புண்ணிய பாபங்களை கூறும். புண்ணிய பாபங்களின் ஸ்வாமி ஜீவன்தான்; எப்படியும் பரமாத்மா அன்று.

ஸித்தாந்தம் :- இங்கு கர்ம என்ற சொல் செயலையே (movement) குறிப்பதும், புண்ணிய பாபங்களை குறிப்பதும் அல்ல. செய்யப்படும் (உண்டாக்கப்படும்) (क्रियते इति = कर्म) உலகைக் குறிக்கிறதாகும். இப்படி கொண்டால்தான் ''கர்ம'' எனும் சொல் repetition ஆகாது. (பயனுள்ளதாக ஆகும்). மேலும்

சில புருஷர்களுக்கு மட்டும் ப்ரஹ்மம் கர்த்தா அல்ல, இந்த முழு உலகமும் எவரிடமிருந்து உண்டானது என்று சொல்லும். முழு உலகின் கர்த்தா ப்ரஹ்மம்தான் ஆகும். மேலும் ஆரம்பத்தில் உனக்கு ப்ரஹ்மத்தைக் கூறுகிறேன் என்ற பிரதிக்ஞை உள்ளது. எனவே ப்ரஹ்மம்தான் இங்கு கூறப்படுகிறது.

## 1.4.5 V जगद्वाचित्वात् (3 सूत्राणि)

விஷயம் :- முன்பு கூறியது போலவேதான் வாக்கியம்.

இந்த ஸூத்ரத்தில் "न संख्योप.." என்ற ஸூத்ரத்திலிருந்து "न" என்ற வார்த்தை தொடர்கிறது. (எடுத்துக்கொள்ளபடுகிறது). இதே வாக்யத்தில் कर्म என்ற பதம் ஜகத்தை கூறுவதால், न = ஸாங்க்ய ஸம்மதமான புருஷன் இங்கு (ஜீவன்) கூறப்படவில்லை என்று ஸித்தாந்தம்.

ஸந்தேஹம்:- य:, यस्य - என்று 'யத்' வார்த்தைகளால் கூறப் -படுவது ஜீவனா? ப்ரஹ்மமா?

பூர்வபக்ஷம் :- புண்ணிய பாப கர்மாக்கள்தான் கர்ம பதத்தினால் ப்ரஸித்தியாயுள்ளது. கர்மாவின் மூலம் ஆதித்யன் போன்ற புருஷர்களுக்கும் உலகிற்கும் ஜீவன் காரணமாக முடியும் ஆதலால் ஜீவன்தான் கூறப்படுகிறான். இவனுக்கே ப்ரக்ருதி வியுக்தமான சுத்த ஸ்வரூபம் உணரப்பட வேண்டும் என்ற கருத்தில் वेदितव्य: = என்று கூறப்பட்டுள்ளது பொருந்தும். எனவே ஜீவன்தான்.

ஸித்தாந்தம் :- இந்த ஸம்வாதத்தில் இதற்கு முன்பு பாலாகீ என்பவரால் கூறப்பட்ட ஆதித்யன் போன்றவர்களுக்கு ப்ரஹ்ம-த்வம் கிடையாது என்று தள்ளிவிட்டு, அந்த ப்ரஹ்மத்தை காட்ட

வந்ததான இந்த நிர்ணய வாக்யத்தில் ஜீவனையே போதிப்பது உசிதமில்லை. ஆகவே க்ரியதே இதி கர்ம என்று வ்யுத்பத்தி பண்ணி 'உலகு' என்ற பொருள். எனவே, "இந்த அனைத்து உலகும் எவருடைய படைப்போ அவரை அறிய வேண்டும்", என்றுதான் பொருள். ஆகையால் ஸாங்க்யமதமான ப்ரக்ருதியின் அதிஷ்டாதாவான க்ஷேத்ரஞனை கூறவில்லை. ப்ரஹ்மத்தைதான் வாக்கியம் போதிக்கின்றது.

## 1.4.5 D जगद्वाचित्वात् (9 सूत्राणि)

இங்கு இந்த அதிகரண விஷயத்தில் மாத்வமதப்படி "समाकर्षात्" என்று தொடங்கி जगत्वाचित्वात् (3 सूत्राणि) என்ற அதிகரணமும், वाक्यान्वयात् (4 सूत्राणि) என்ற அதிகரணமும் சேர்ந்து ஒரே அதிகரண -மாகிறது.

விஷயம் :- எல்லா சொற்களும் விஷயம். இவைகள் பற்றி நிலமை விசாரிக்கப்படுகிறது.

ஸந்தேஹம் :- ஆகாயம் போன்ற சொற்களுக்கு விஷ்ணுவும் பொருள், ஆகாயம் போன்றவைகளும் பொருள் என்பது - ஒரே விதமாகத்தானா (as அக்ஷ - ஒரு மரத்தின் விதை + இந்திரியம்) அல்லது விஷ்ணு என்பதுதான் ரொம்ப முக்கியமான பொருள் மற்றவை அதனிலும் சற்று ஊனமானதாக கொள்ளவேண்டுமா?

பூர்வபக்ஷம் :- இரண்டு பொருள் உடைய சொற்கள் யாவும் ஒரே விதமாக இரண்டுப்பொருளையும் கூறுவதுதான் உசிதம் என்று ப்ரஸித்தம். மற்றொன்றில் ஊனம் என்றால் லக்ஷணை என்றுதான் ஏற்படும். முக்கியமாக எப்படி ஆகும்?

ஸித்தாந்தம்:- எல்லா சொற்களுக்கும் விஷ்ணுவிடம்தான் ப்ரதானமாக முக்யார்த்தம் என்று கொள்ள வேண்டும். மற்ற அந்தந்த பொருள்களில் சிறிது ஊனமான முக்யார்த்தம் ஒன்றானாலும் ரூடிக்கு சற்று ஆதிக்யம் உள்ளதன்றோ! ப்ரக்ருதத்தில் விஷ்ணு, மற்றவைகளில் ரூடிதான் என்றாலும் வித்வத் ரூடி அவித்வத் ரூடி என்று நாம் கொள்கிறோம். யோகத்திலும் யோக மஹாயோக என்று ஏற்பது இதற்கு உதாரணம். எனவே பரம ரூடியினால் விஷ்ணுவையே சொல்லும் எல்லா ஶப்தங்களுக்கும் விஷ்ணுவிடமிருந்து பிரித்து வேறு பொருள்களில் வ்யவஹாரம் செய்கிறோம். சிறுவர்களுக்கு படத்தில் வரையப்பட்ட சிங்கத்திலேயே முக்யார்த்தத்வம் உணரப்படுவது இதற்கு உதாரணம். எனவே வேறு பொருள்களில் ஶப்தங்களுக்கு ப்ரஸித்தி உள்ளது தவறில்லை. ஸமன்வயாதிகரணத்தில் எல்லா ஶப்தங்களும் விஷ்ணுவையே போதிக்கின்றன என்ற ஸித்தாந்தம் ஆக்ஷேபித்து இந்த அதிகரணத்தில் நிர்ணயிக்கப்பட்டது.

## 1.4.6 A वाक्यान्वयात् (4 सूत्राणि)

விஷயம் :- "आत्मा वा अरे द्रष्टव्य: श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्य:" ஆத்மாவையே ஶ்ரவணம், மனனம், நிதித்யாஸனங்கள் பண்ணி நன்கு காணவேண்டும் என்ற வாக்கியம் விஷயம்.

ஸந்தேஹம் :- ஆத்மா என்ற சொல்லினால் ஸம்சாரியாக விளங்கும் ஜீவாத்மா கூறப்படுகிறானா? பரமாத்மாவா?

பூர்வபக்ஷம்:- மனைவி, கணவன், பிள்ளை, பணம் போன்ற ஸுகபோகஸாதனங்களின் தொடர்பும், அதனால் நுகரப்படும் போகமும் கூறப்பட்டு, போக்தாவாக ஒருவர் விளங்குவதாக சொல்லப்படுவதால், தனக்காகத்தான் பொருள்களில் ப்ரியம் என்று

  

நிருபித்து "ஆத்மாவை உணரு" என்று கூறுவதால் இங்கு ஸம்சாரியான ஜீவன்தான் சொல்லப்படுகிறான். ஈப்வரனுக்கு போகம் பொருந்தாது அன்றோ!

ஸித்தாந்தம்:- இந்த அத்யாயத்தின் ஆரம்பத்தில் "அம்ருதத்தன்மை பணம், கர்மங்களால் கிடையாது" என்று கூறிவிட்டு எந்த ஆத்மஞானத்தில் அம்ருதத்வம் அனுபவிக்கப்படுமோ அதையே எனக்கு உபதேசியுங்கள் என்று மைத்ரேயீ கேட்டபிறகு கூறப்படும் இந்த ஆத்மா பரமாத்மாதான். तरति शोकमात्मवित् என்றல்லவா கூறப்படுகிறது. ஸம்சாரியை உணர்ந்தால் ஸம்ஸாரம்தான் மறுபடி மறுபடி வருமன்றோ! பூர்த்தியிலும் एतावदरे खल्वमृतत्वम् என்பதாக அம்ருதத்வத்தின் பூர்த்தி உறுதிப்படுத்தப்படுகிறது. ஆகையால் பரமாத்மாதான் ஆத்ம பபத்தினால் கூறப்படுகிறார்.

## 1.4.6 V वाक्यान्वयात् (4 सूत्राणि)

விஷயம், ஸந்தேஹம், பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் நான்குமே அத்வைத ரீதியினின்று வேறுபடவில்லை. எனினும் கூறும் விதம் தனியானது.

விஷயம் :- அதுவே.

ஸந்தேஹம்:- போக்தாவானவன்தான் ப்ரக்ருதியின் அதிஷ்டாதாவாகி, ஸாங்க்ய மதம் போல் ப்ரக்ருதிதான் ஜகத்காரணமா? ப்ரஹ்மமா?

பூர்வபக்ஷம் :- பூர்வ அதிகரணத்தில் कर्म பதத்திற்கு உலகம் என்ற பொருள் கொண்டு அதன் கர்த்தா ஜீவனல்ல என்று ஸித்தாந்தத்தை இங்கு ஆக்ஷேபித்து போக்தாவையே ஜகத்-காரணமாய் இருக்கட்டும் என்று ஆக்ஷேபத்தின் மூலம் இந்த அதிகரணம் வருகிறது. ஆகவே கணவன், மனைவி, பணம் போன்றவைகளை தனக்கு இன்பம் தருவதால் ப்ரியமாக கருதி

அன்பு வைக்கிறான் என்பதாக போக்தாவை வாக்யங்கள் உணர்த்துகின்றன. இவ்வாறு போக்தவாகக் கூறியவன் ப்ரக்ருதியின் அதிஷ்டாதாவாக ஆகி உலகஸ்ருஷ்டி பண்ணு-வதாகக் கூறுவதால் ப்ரதாநு தான் ஜகத்காரணம் ஆகும்.

ஸித்தாந்தம் :- தனக்கு இன்பம் ஏற்படுத்துவதால் கணவன் ப்ரியமாகிறான், மனைவி ப்ரியமாகிறாள் என்று பொருள் கூறிவிட்டு ப்ரியமான கணவனை, மனைவியைவிட்டு தன்னை அறிய விரும்பு என்று கருத்து கூறுவது ஸரியில்லை. எல்லோரும் ப்ரியத்தை தானே விரும்புவார்கள். ப்ரியத்தை எப்படி விடமுடியும்? ஆகையால் இங்கு ஆத்மா என்பது பரமாத்மாவை குறிக்கிறது. எனவே आत्मनः = பரமாத்மாவின் कामाय = ஸங்கல்பத்தை நிறைவேற்றுவதற்கு கணவன் போன்றவர்கள் அவரவர்களின் தொடர்பான மனைவி போன்றவர்களுக்கு ப்ரியமாகிறார்கள் என்று பொருள் ஏற்படுகிறது. கணவன் போன்றவர்கள் தனது கர்மபலனைத்தரும் பரமாத்மாவின் ஸங்கல்பத்தினால்தான் ஒருவருக்கு ஒருவர் ப்ரியமாகிறார்கள். இவ்வாறு ஒளபாதிகமான (மற்றதை ஒட்டி வருவது) ப்ரியங்-களைப் பரித்யாகம் பண்ணி, நிருபாதிகமான ப்ரியமாகிற பரமாத்மாவைத் தேடு என்று आत्मा वा अरे द्रष्टव्यः, आत्मनस्तु कामाय என்ற இரு இடத்திலும் ஆத்மா பரமாத்மாதான்.

இந்த அதிகரணம் மாத்வமத ரீதியில் தனியானது அல்ல. பூர்வாதிகரணத்தில் சேர்ந்தது.

## 1.4.7 A प्रकृतिश्च प्रतिज्ञादृष्टान्तानुपरोधात् (5 सूत्राणि)

(அல்லது 6 सूत्राणि) ஒரே ஸூத்ரமான "आत्मकृतेः परिणामात्" இரண்டாகவும் சொல்லலாம் என்று கூறப்படுகிறது.

விஷயம் :- வேதாந்தத்தில் வரும் ஜகத்காரணபோதகமான எல்லா வாக்யங்களும் இங்கு விஷயம்.

ஸந்தேஹம் :- இந்தக் காரணத்வம் நிமித்தரூபமா (குயவன் போல்) அல்லது உபாதானரூபமா (கடம்-மண் போலவா)? இரண்டாகவும் இருக்கிறதா? என்று ஸந்தேஹம். இரண்டாகவும் உள்ளதாக ஸித்தாந்தம் வரப்போகிறது.

பூர்வபக்ஷம் :- "तदैक्षत" "सोऽकामयत" என்றெல்லாம் ஸ்ருஷ்டிக்கு முன்பாக ஆலோசனை செய்ததாகக் கூறப்பட்டதால் சேதனன் காரணம் என்று ஆவதால் சேதனன் யாராயினும் அவன் குயவன் போல் நிமித்தக் காரணமாக மட்டுமே இருப்பதை காண்கிறோம். எனவே ப்ரஹ்மம் நிமித்தம் மட்டும்தான்.

ஸித்தாந்தம் :- "तदैक्षत बहुस्याम्" என்பதாக ஸ்ருஷ்டி வாக்யங்களில் ''தானே எல்லாமாக ஆகி உலகத்தை படைக்க வேண்டும் என்று ஆலோசனை மட்டும் கூறாமல் ''தானே பலவாக ஆகவேண்டும்'' (மண்ணே குடமாக ஆவது போல்) என்றும் ஒரே பொருளுக்கு இரண்டுவிதமான காரணத் தன்மைகளையும் கூறுகின்றதன்றோ. மேலும் ஒன்றை (காரண வஸ்துவை) உணர்ந்தால் எல்லாம் (கார்யங்கள்யாவும்) உணரப்படுகின்றது என்பதால் ஏக விக்ஞானத்தினால் ஸர்வ-விஞ்ஞானம் நிரூபிக்கப்படுகிறது. ப்ரஹ்மம் உபாதான காரணமாக (மண் போல், நூல் போல்) இருந்தால்தான் இது ஸாத்தியமாகும். ஏனெனில் மண்ணை விட்டு தனியாய் குடம் போன்றவை காணப்படவில்லையே. ஸ்ருஷ்டிக்கு முன்பு சேதனன் வேறு யாரும் இல்லாததால் ப்ரஹ்மமேதான் சேதனனாயிருந்து ஆலோசனை பண்ணும் நிமித்தமாகவும் அமைகிறது. எனவே ப்ரஹ்மம் = जगदुपादानं निमित्तं च". இரண்டு விதமான காரணமும் ப்ரஹ்மமே.

## 1.4.7 V प्रकृतिश्च प्रतिज्ञादृष्टान्तानुपरोधात्

## (6 सूत्राणि)

விஷயம், ஸந்தேஹம் இரண்டும் அத்வைதஸித்தாந்தம் போலவேதான். மாறுபாடு இல்லை.

பூர்வபக்ஷம் :- உலகில் உபாதானம் நிமித்தம் வேறாக இருப்பதால் ப்ரஹ்மம் இரண்டாகவும் இருக்க முடியாது. மேலும் ப்ரஹ்மமானது மண் போல் உலகமாக ஆனால் பரிணாமித்வம் (மாறுபடும் தன்மை) ஏற்படும். அதுஸரியல்ல. ஆகவே ப்ரஹ்மம் ஈக்ஷணஶ்ருதியால் நிமித்தம் மட்டுமே, மாயை உபாதானம் என்று கொள்ள வேண்டும். "मायां तु प्रकृतिं विद्यात् मायिनं तु महेश्वरम्" என்று தனியாக இரண்டும் கூறப்பட்டுள்ளது.

ஸித்தாந்தம் :- "बहुस्याम्" என்று தானே பலவாக ஆகும் சங்கல்பம் நிமித்தமாக மட்டும் இருந்தால் வராது. மேலும் ஒன்று தெரிந்தால் எல்லாம் தெரியும் என்ற ப்ரதிக்ஞையும் ஸரியாகாது. இங்கு உபாதானத்வம் என்பது மண்போல் மாறுபட்டு இருக்கும் தன்மை அல்ல. சித்-அசித் இருவிதமான உலகில் அனுப்ரவேசம் என்பதுதான் உபாதானத்வம். எனவே பரிணாமித்வதோஷம் கிடையாது. ஸ்ருஷ்டிக்கு முன் வேறு யாரும் இல்லாததால் நிமித்தம் இவரே என்று ஏற்க வேண்டும். எனவே ப்ரஹ்மம் உபாதானம் மற்றும் நிமித்தம் இரண்டுமே.

## 1.4.6 D प्रकृतिश्च प्रतिज्ञादृष्टान्तानुपरोधात्

## (5 सूत्राणि)

விஷயம் :- பூர்வாதிகரணத்தில் எல்லா ஶப்தங்களுக்கும் விஷ்ணுவிடம்தான் அதிகமான ரூடியினால் முக்யார்த்தம் என்று

ஸ்தாபிக்கப்பட்டதை ஆக்ஷேபித்து ஸித்தாந்தத்தை கூறுவதற்கு இந்த அதிகரணம்.

ஸந்தேஹம் :- இது ஸரியா? இல்லையா?

பூர்வபக்ஷம் :- எல்லா ஶப்தங்களுக்குள்ளே பெண்பால் சொற்கள் யாவற்றுக்கும் விஷ்ணுவிடம் முக்யார்த்தம் பொருந்தாதே! இவ்வாறு இருக்கையில் அதிகமான weightage விஷ்ணுவிடம் என்று எப்படிக் கூற முடியும்? மேலும் அந்த பதங்களுக்கு வெவ்வேறு பொருட்களில்தான் ப்ரயோகம் ப்ரஸித்தமாய் உள்ளது. எப்படியானாலும் பரமபுருஷனான விஷ்ணுவிற்கு ஸ்த்ரீலிங்க ஶப்தம் எப்படி பொருந்தும்.? "नैनं वाचा स्त्रिया ब्रुवन्" என்பதாக சொல்லியிருப்பதால் ரூபவிஶேஷத்தைக் கொண்டு ஸ்த்ரீத்வம் என்றும் கூற முடியாது. ப்ரஹ்மம் போன்ற நபும்சக ஶப்தங்கள் ஶப்த ஸாதுத்வத்திற்காக விஷ்ணுவிடம் ப்ரயோகத்தினால் பொருந்தினாலும் கூட, இந்த ஸ்த்ரீலிங்கத்தில் அவ்விதம் கூற ப்ரமாணம் இல்லை. மனைவியை வசீகரித்துள்ளவனானாலும் அந்த பர்த்தாவை ஸ்த்ரீலிங்கத்தில் கூறுவது இல்லை என்பதால், விஷ்ணுவிற்கு அதீனமாதலால் ஸ்த்ரீலிங்கத்வம் பொருந்தும் என்பதும் ஸரியில்லை. எனவே பூர்வாதிகரணம் தவறு.

ஸித்தாந்தம் :- "हन्तैतमेव पुरुषं सर्वाणि नामानि अभिवदन्ति" என்ற ஶ்ருதியில் (वत्स: श्रुति:)

ஈஶனுக்கு பொதுவாக எல்லா சப்தார்த்தத்வமும் கூறி, நதீ ஸமுத்ர உதாரணம் கூறப்படுகிறது. மேலும் "मायां तु प्रकृतिं विद्यात्" "प्रकृतिर्वासनेत्येवं तवेच्छाऽनन्त कथ्यते" என்ற ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் இச்சாவை ப்ரக்ருதி பதத்தினால் குறிப்பிடுவதால் "सोऽभिध्या स जूति:" என்று ஶ்ருதியில் இச்சையை ஈஶ-ஸ்வரூபமாக கூறுகிறது. மேலும் "एष स्त्री एष पुरुष एष प्रकृति:"

(பைங்கி ச்ருதி:) என்று நேரடியாக விஷ்ணுவை ப்ரக்ருதி என்று சொல்லப்- படுகிறது. प्रकृष्टा कृतिः = உபாதான முயற்சி உடையவர் என்று யோகத்தினால் பொருள் கொள்ளவேண்டும். மேலும் இடை ஒன்றும் இல்லாமல் ப்ரஸவ ஹேதுத்வத்தைக் கூறும் யோனி ஶப்தம் यद्भूतयोनिं என்று சொல்லப்பட்டுள்ளதால் எல்லா ஸ்த்ரீ ஶப்தங்களும் விஷ்ணுவையே குறிக்கின்றன.

## 1.4.8 A एतेन सर्वे व्याख्याता व्याख्याताः

(1 सूत्रम्)

விஷயம் :- வேதாந்த விஷயங்கள் யாவும் விஷயமாகின்றன.

ஸந்தேஹம் :- வேதாந்தங்களில் கூறும் காரணத்வம் அணு, ஶூன்யம் போன்றவற்றுக்கு பொருந்துமா? ப்ரஹ்மத்திற்கு மட்டுமா?

பூர்வபக்ஷம் :- அணு போன்றவற்றிற்கும் காரணத்வம் வரும். ஏனெனில் சாந்தோக்யத்தில் ஆலம் விதையிலும் ஸூட்சமமான ஒரு அணுவிலிருந்து பெரிய ஆல மரம் வருவது போல் அணுவான பொருளிலிருந்து ஜகத் வரலாம். "असद्वाइदमग्रे" என்று ஶூன்யமான அஸத்திற்கு காரணத்வம் சொல்வதாக தெரிகிறது. மேலும் स्वभावमेके कवयो वदन्ति, कालं तथाभ्ये என்பதாக இயற்கை, காலம் போன்றவற்றிற்கும் காரணத்வம் உரைக்கப்படுகிறது.

ஸித்தாந்தம் :- ஶூன்யாதிகளை காரணமாக கொண்டால் ஏக விக்ஞானத்தினால் ஸர்வவிக்ஞானம் பொருந்தாது. ஶ்ருதியில் ஆலம் விதையை உதாரணம் கூறியது ப்ரஹ்மம் ஸூக்ஷ்மமானது என்பதுதான் பொருள்/கருத்து; அதன் பரிமாணம் அல்ல. ஸ்வபாவம் (இயற்கை), காலம் இவை இரண்டும் பூர்வபக்ஷமாக கூறி நிராகரிக்கப்படுகின்றன. எனவே ப்ரஹ்மம்தான் ஜகத்காரணம் மற்றவை அல்ல.

  

# 1.4.8 V एतेन सर्वे व्याख्याता व्याख्याता:

(1 सूत्रम्)

விஷயம் :- ஆரம்பம் தொட்டு 34 அதிகரணத்தில் கூறிய விஷயம் ஜகத்காரணம் விஷ்ணுதான் என்பதை இங்கு ஆக்ஷேபித்து ஸமாதானம் கூறப்படுகிறது.

ஸந்தேஹம் :- சில உபநிஷத்துக்களில் ருத்ரனாகிற தேவனுக்கும் ஜகத்காரணத்வம், முமுக்ஷு உபாஸ்யத்வம் கூறப்படுவதால், முன்கூறிய பக்ஷத்தில் ருத்ரனா? விஷ்ணுவா? என்ற ஸந்தேஹம்.

பூர்வபக்ஷம் :- ஶ்வேதாஶ்வதர உபநிஷத்தில் ருத்ர தேவதைக்கு ஜகத்காரணத்வமும், முமுக்ஷு உபாஸ்யத்வமும் சொல்லப்படுகிறது. ப்ரளய காலத்தில் ஒரே ருத்ரனிருந்தார். சிவஶப்தமானது ருத்ரனாகிற தேவதையில் ரூடமானது. எனவே ருத்ரன்தான் காரணம். இதே போல் तमीशानं वरदं देवमीड्यम् என்பதாக ஈசான பதத்தின் மூலம் ருத்ரனே கூறப்படுவதால் முமுக்ஷு உபாஸ்யத்வமும் ருத்ரனுக்கே வரும்.

ஸித்தாந்தம் :- பலவாக ஆகவேண்டும் என்ற சங்கல்பம் நாமரூப வ்யாகரணம் போன்ற லிங்கங்களால் நாராயணன் என்பவரிடமே ஜகத்காரணத்வம் என்ற நிர்தாரணம் ஆகிவிட்டதால், சிவ, ஈசான, சம்பு போன்ற ஶப்தங்கள் ரூடியை தள்ளி ஆகாஶ, இந்திர பதங்கள் போல் யோகவ்யுத்பத்தியின் மூலம் நாராயணனையே கூறுவதாக கொள்ளவேண்டும். இங்கு மாறுதலாக ஏன் ஏற்கக்கூடாது என்று கேட்டால் நாராயண பதமானது யோகத்தினாலோ ரூடியினாலோ ருத்ரனை கூற முடியாது. கூறுமாகில் "ண" என்ற "ணத்வம்" வராது. ஸமிஞையில்தான் "ணத்வம்" விதிக்கப்படுகிறது.

இவ்வித ஸித்தாந்தத்தை வைத்துத்தான் ஸூத்ரகாரரான வியாசர் மஹாபாரதத்தில் அறுதியிட்டு கூறுகிறார் -आलोड्य सर्वशास्त्राणि विचार्यच

पुन: पुन: | इदमेकं सुनिष्पन्नं ध्येयोनारायण: सदा || எனவே ருத்ரன் ஜகத்காரணம் இல்லை. முமுக்ஷு உபாச்யனும் அல்ல. விஷ்ணுவான நாராயணன்தான் உபயமும்.

## 1.4.7 D एतेन सर्वे व्याख्याता व्याख्याता: (1 सूत्रम्)

**விஷயம் :-** असद्वा इदमग्र आसीत् போன்ற வாக்யங்கள்.

**ஸந்தேஹம் :-** இந்த வாக்யங்களில் வரும் असत्, शून्य போன்ற வார்த்தைகள் ஶூன்யத்தை குறிக்கின்றனவா? ஈஶனையா?

**பூர்வபக்ஷம் :-** சென்ற அதிகரணத்தில் விஷ்ணுவிற்கு ஸ்த்ரீலிங்க ஶப்தம் பொருந்தலாம் வடிவம் உள்ளதால் ஆயினும், ஆனால் असत् என்ற வார்த்தை ஶூன்யத்தை கூறுவதால் பொருந்தாது. அஸத்திற்கு ஈஶன் நியாமகனும் இல்லை. எனவே ஶூன்யம் -தான்.

**ஸித்தாந்தம் :-** ப்ரஸித்தமான ஶூன்யத்தன்மை ஈஶனிடம் வராவிடினும் "शं ऊनं कुरुते" என்ற ஸ்ம்ருதிப்படி (சுகத்தைத் தாழ்வாக செய்பவர்) என்ற பொருளை கொண்டு ஈஶனைக் குறிக்கும். அஸத்திற்கு அஸத்தன்மையை அளிப்பதன் மூலம் நியமனம் வர முடியும். எனவே அஸத், ஶூன்யம் = விஷ்ணுவேதான்.

# இரண்டாம் அத்யாயம்

## முதல் பாதம்

## 2.1.1 A स्मृत्यनवकाशदोषप्रसङ्ग इति चेन्नान्यस्मृत्यनवकाशदोषप्रसङ्गात् (2 सूत्रे)

[இந்த அத்தியாயத்தில் பூராவும் விஷயம் என்பது ஸமன்வயாத்யாயத்தில் கூறிய ஸித்தாந்தம்; இதற்கு மற்ற மதங்களினாலும் தனக்குள்ளும் பரஸ்பரம் விரோதமிருப்பின் எதை எடுத்துகொள்வது என்று ஸந்தேஹம். விரோதமில்லை என்று கூறி ஸமாதானம். எனவே அவிரோதாத்யாயம் என்று பெயர்.]

ஸந்தேஹம் :- ஸாங்க்ய ஸ்ம்ருதியுடன் வேதாந்த ஸமன்வயத்திற்கு விரோதம் உண்டா? இல்லையா?

பூர்வபக்ஷம் :- ஸாங்க்ய ஸ்ம்ருதியுடன் இதற்கு விரோதம் (contradiction) உண்டு. எனவே இந்த ஸித்தாந்தத்தை சற்றே ஸரி செய்ய வேண்டும். ஏனெனில் ஸாங்க்ய ஸ்ம்ருதியானது மன்வாதி ஸ்ம்ருதிகளைக் காட்டிலும் ப்ரபலமானது. காரணம் இது ஜகத்காரண வஸ்துவை மட்டிலும் கூறுகிறது. மனுஸ்ம்ருதி போன்றவை தர்மம், அதர்மம் போன்ற விஷயங்களையும் போதிக்கின்றன. ஆகையால் ஸாங்க்யஸ்ம்ருதிக்கு ஒரே விஷயமான ஜகத்காரணப் பொருளை நிர்ணயிப்பதில் கூட இடம் இல்லாவிட்டால், முழுமையாக அவை ஒதுக்கப்பட்டு-விடும். வேதம், மனு ஸ்ம்ருதி முதலியன ஜகத்காரண வஸ்துவை கூறுவதில் சற்று ஸரி பண்ணி சங்கோசம் உண்டு பண்ணினாலும், மற்றவைகளில் அவைகளுக்கு இடம் உண்டு.

இவ்விதம் நிரவகாஶமாக இருப்பதால் (வேறு கதியற்று உள்ளதால்) ஸாங்க்ய ஸ்ம்ருதி ப்ரபலமானது. எனவே அதற்கு விரோதமாக உள்ளதால் வேதம் ஸரிசெய்யப்படவேண்டும்.

ஸித்தாந்தம் :- இது ஸரியே இல்லை. ஏனெனில் மனுஸ்ம்ருதி போன்று அனேக ஸ்ம்ருதிகளில் ப்ரஹ்மமே காரணம் என்று கூறப்பட்டுள்ளது. மேலும் மனு ஸ்ம்ருதிக்கு ப்ராமாண்யம் அதிகம். ஏனெனில் நேரடியாக வேதத்தை அடிப்படையாக, மூலமாக வைத்து இவை போதிக்கின்றன. ஸாங்க்ய ஸ்ம்ருதிகளில் இவ்வாறு மூலமான வேதம் காணப்படவில்லை. எல்லா வேதங்களும் ப்ரஹ்மத்தையே ஜகத்காரணமாக கூறுவதை முதல் அத்தியாயத்தில் நிரூபித்தாகிவிட்டது. ஆகையால் வேத சங்கோசம் பொருந்தாது.

## 2.1.1 V स्मृत्यनवकाशदोषप्रसङ्ग इति चेन्नान्यस्मृत्यनवकाशदोषप्रसङ्गात् (2 सूत्रे)

ஸந்தேஹம் :- "सदेव सौम्येदमग्र आसीत्" என்பது போன்ற வாக்யங்களில் ஸ்வதந்திரமான ப்ரதானகாரணத்வம் ஏற்க வேண்டுமா? சித்-அசித் விலக்ஷணமான ப்ரஹ்மகாரணத்வம் ஏற்கவேண்டுமா?

பூர்வபக்ஷம் :- வேத வாக்ய தாத்பர்யத்தை நிர்ணயிக்கும் நோக்கத்துடன் எழுதப்பட்ட காபில ஸ்ம்ருதியை அனுஸரித்து தாத்பர்ய நிர்ணயம் உசிதமானது. இல்லாவிட்டால், அதற்கு முழுமையாக அப்ராமாண்யம் ஏற்படும். இது ஸரியில்லை. வேதாந்தத்தில் ஆப்தராக (நம்பத்தக்கவராக) கூறப்பட்ட கபில மஹரிஷிக்கு ப்ரமை இருக்க முடியாதானதால் அவருடைய ஸ்ம்ருதி அப்ராமாண்யம் ஆகாதே. இப்படி ஏற்றால் மனுஸ்ம்ருதி

போன்றவைகளில் விரோதம் ஏற்படுமே என்று ஆட்சேபணை ஸரியில்லை. ஏனெனில் மனுஸ்ம்ருதி போன்றவைகளுக்கு கர்மகாண்டவிஷயத்தில் ப்ராமாண்யம் வரும்.

ஸித்தாந்தம் :- வேததாத்பர்ய நிர்ணயத்திற்கு ஆப்தப்ரணீத ஸ்ம்ருதியை ஆதரித்தாலும், தன் யோகமகிமையால் பரதத்வ மகிமையை உணர்ந்த மனு, பராசரர் போன்ற பல மகரிஷிகள் ஸ்ம்ருதியை அனுஸரித்து தாத்பர்ய நிர்ணயம்தான் உசிதம். ஒரே ஒரு கபிலரின் (மற்றவர்கள் காணாத புதியதைக் கூறும்) ஸ்ம்ருதியை அனுஸரிப்பது பொருந்தாது. பெரும்பான்மைக்கு வலிமை அதிகமன்றோ! விஷ்ணு புராணத்தில் அறுதியிட்டு கூறப்பட்டுள்ளது - विष्णोः सकाशादुद्भूतं जगत्तत्रैव च स्थितम् । स्थितिसंयमकर्तासौ जगतोस्य जगच्च सः ॥

## 2.1.1 D स्मृत्यनवकाशदोषप्रसङ्ग इति चेन्नान्यस्मृत्यनवकाशदोषप्रसङ्गात् (3 सूत्रे)

[இந்த மதப்படி 2+1 ஆன- இரண்டு அதிகரணங்களும் சேர்ந்து ஒரே அதிகரணம்]

விஷயம் :- முன் அத்யாயத்தில் கூறிய விச்வ கர்த்ருத்வம் விஷ்ணுவிற்கே என்பது பற்றி.

ஸந்தேஹம் :- இந்த ஸித்தாந்தம் ஸரியா? தவறா?

பூர்வபக்ஷம் :-ஸரியல்ல. ஏனெனில் சிவனையே காரணமாக கூறும் ஸாங்க்ய காபில ஸ்ம்ருதிகளுக்கு விரோதம் ஏற்படுகிறது. அந்த ஸ்ம்ருதிகள் ஆப்தர்களால் எழுதப்பட்டவைகள். வேதமானது அபௌருஷேயமானதால் ஆப்தனால் எழுதப்படாதது. மேலும் ஸ்ம்ருதிகளுக்கு (கபில முதலியன) சிவபெருமானே மூலமாக

கொண்டதால் ப்ராமாண்யம், காணாத ஸ்ம்ருதியை விட அதிகம் என்று ஏற்கவேண்டும். ஆகையால் இந்த ஸ்ம்ருதியை கொண்டு ஜகத் சிவனையே கர்த்தாவாக உடையது. வேதங்களை சற்று ஸரி செய்து, பொருளை கூற வேண்டும்.

ஸித்தாந்தம் :- பஞ்சராத்திர ஸ்ம்ருதியில் விஷ்ணுவையே காரணமாக கூறியுள்ளது. இந்த ஸ்ம்ருதி ஸாக்ஷாத் விஷ்ணுவினாலேயே கூறப்பட்டதால் ப்ராபல்யம் அதிகம். மேலும் ஶ்ருதியின் பலம் உள்ளது. மேலும் சைவ ஸ்ம்ருதிகளில் கூறிய கர்மாக்களை பண்ணினால் பயன் ஏற்படுவதில் ஐயமிருப்பதால் ப்ராமாண்யம் குறைவு என்பதால் "ஆப்தரால் கூறப்பட்டதா?" என்பது கேள்விக்கு உரியதாகிறது. ஆகையால் வேதங்களின் பர்யாலோசனை செய்து முடிவு எடுத்த, "விஷ்ணுதான் காரணம்" என்பது அசைக்க முடியாது.

## 2.1.2 A एतेन योग: प्रत्युक्त: (1 सूत्रम्)

ஸந்தேஹம் :- யோக ஸ்ம்ருதியினுடைய விரோதம் உண்டா? இல்லையா?

பூர்வபக்ஷம் :- யோகஸ்ம்ருதியில் கூறும் யோகானுஷ்டானம் பல உபநிஷத்தில் அங்கீகரிக்கப்படுகிறது. எனவே யோகத்திற்கு வேதம் மூலமாக இருப்பதால் ஸாங்க்யத்தைவிட ப்ராபல்யம் உண்டு. இதில் ப்ரதானத்தை காரணமாக கூறுவதால் அதன் விரோதம் உள்ளதால் வேத சங்கோசம் செய்ய வேண்டும்.

ஸித்தாந்தம் :- அஷ்டாங்கயோகத்தின் விஷயத்தில் ஒரு பகுதிக்கு ப்ராமாண்யம் ஏற்பினும், அவைதிகமான ப்ரதான-காரணவாதத்தில் முரண்பாடு உள்ளதால் யோகஸ்ம்ருதி partially invalid. மேலும் யோக ஶாஸ்த்ரத்திற்கு மன அடக்கம்

என்பது மட்டுமே முக்கிய விஷயம். ஹேயத்தைப் (தள்ளவேண்டியதை) பற்றி கூறுமிடத்தில், அனுவாதமாக ப்ரதானம் கூறியிருப்பதால் யோகமாஸ்த்ரத்திற்கே தாத்பர்யம் கிடையாது. ஆகையால் யோகத்தினால் சங்கோசம் கிடையாது.

## 2.1.2 V एतेन योग: प्रत्युक्त: (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- ஸாங்க்ய ஸ்ம்ருதிக்கு கபிலர் கூறியதால் கபிலருக்கு ப்ரமை இருக்கலாம் என்பதால் அப்ராமாண்யம் சொன்னாலும், யோக-ஸ்ம்ருதியானது ஹிரண்யகர்பரால் இயற்றப்பட்டதால், ஹிரண்யகர்பர் வேதாந்த ப்ரவசனத்தில் ஏற்கப்பட்டிருப்பதால் இவர் கூறிய யோக ஸ்ம்ருதியை ஏற்கலாம் என்பதால் யோகஸ்ம்ருதியில் ப்ரதானம் காரணமாக கூறியுள்ளதால், விஷ்ணுதான் காரணம் என்பதை ஏற்பது எப்படி?

ஸித்தாந்தம்:- யார் கூறினாலும் தவறு தவறே! ஹிரண்ய-கர்பருக்கு பெருமை இருப்பினும் வேதக் கருத்திற்கு மாறாகக் கூறும் விஷயத்தில் ப்ராமாண்யம் கிடையாது. எனவே விஷ்ணுதான் ஜகத்காரணம்.

மத்வமதத்தில் இந்த அதிகரணம் முந்தைய அதிகரணத்துடன் சேர்ந்ததே.

## 2.1.3 A न विलक्षणत्वादस्य तथात्वं च शब्दात् (8 सूत्राणि)

ஸந்தேஹம் :- வேதாந்த ஸமன்வயத்திற்கு தர்க்க மாஸ்த்ர விரோதம் உண்டா இல்லையா?

பூர்வபக்ஷம் :- சேதனமான ப்ரஹ்மத்திலிருந்து விலக்ஷணமான ஜடமான உலகம் உண்டானது என்பது ஏற்க முடியாத விஷயம். உபாதான காரணத்திற்கும் கார்யத்திற்கும் ஒற்றுமை தேவையன்றோ. மண்ணிலிருந்து வஸ்திரம் உண்டாவதில்லையே. ஆகையால் சேதனனான பரமாத்மா ஜகத்காரணம் என்று கூறுவது தர்க்கத்திற்கு விரோதமானது, ஏற்க முடியாது.

ஸித்தாந்தம் :- மண் + குடம், நூல் + வேஷ்டி போன்ற இடங்களில் கார்ய காரணங்களுக்கு ஒற்றுமை (ஸமத்தன்மை) இருப்பினும், பசுஞ்சாணத்திலிருந்து தேள் உண்டாவதை காண்கிறோமே! புருஷனிடமிருந்து கேச ரோமங்கள் முளைக்கின்றனவே! மேலும் உலகமே தோன்றாத, ஊகிக்கவே முடியாத நிலையில் தர்க்கம் மட்டுமே வைத்துக்கொண்டு நிர்ணயம் செய்ய முடியாது. சேர்க்கை (நூல்களின் சேர்க்கை) என்ற குணத்திலிருந்து வேஷ்டி என்கிற த்ரவ்யம் உண்டாகிறதே! ஆகையால் வேதத்தை அபேக்ஷிக்காத (वेद निरपेक्ष:) காய்ந்த ஆதாரமற்ற (DRY) शुष्कतर्क ஆனது நிலையற்றது. ப்ரமாணமாகாது. எனவேதான் கூறியுள்ளது - यत्नेनानुमितोप्यर्थ: कुशलैरनुमातृभि: | अभियुक्ततरैरन्यै: अन्यथैवोपपाद्यते ||

மிகவும் முயன்று ஒரு சிறந்த தார்க்கிகரால் ஊகிக்கப்பட்ட ஒரு ஸித்தாந்தமானது மற்றொரு மிகவும் சிறந்த பிற்காலத்தில் தோன்றிய தார்க்கிகரால் முழுமையாக கண்டிக்கப்பட்டு விடுகின்றது. (This is the same case in modern science also!) எனவே தர்க்க விரோதம் பயனற்றது.

## 2.1.3 V न विलक्षणत्वादस्य तथात्वं च शब्दात्

(8 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- ப்ரஹ்மத்திற்கும் ப்ரபஞ்சத்திற்கும் ஒரே ஜாதித்-தன்மை இல்லாததால் எப்படி கார்யகாரணத்தன்மை பொருந்தும்?

ஸித்தாந்தம் :- கார்யகாரணங்களுக்கு ஏகஜாதீயத்வம் ஒரே ஜாதித்தன்மை தேவையற்றது. ஏனெனில் பசுஞ்சாணியிலிருந்து தேள் உண்டாகும் இடத்தில் गोमयत्वम् தொடர்வது இல்லையே! தேளை பார்த்து "பசுஞ்சாணம் இது" என்று யாரும் நினைப்பது இல்லையே! ஆனால் கார்யகாரணங்களுக்கு ஒரே த்ரவ்யதன்மை தேவை. இல்லையேல் அஸத்திலிருந்து ஸத் ஏற்படலாம் என்று ஆகிவிடும். ஏகத்ரவ்யத்வம் ப்ரக்ருதத்தில் ப்ரஹ்மத்திற்கும் ஜகத்திற்கும் உள்ளது. ஸூக்ஷ்ம நிலையிலுள்ள சித்-அசித் ஶரீரகர் ஆக இருந்த ப்ரஹ்மம்தான் காரணம், ஸ்தூலநிலையிலுள்ள சித்-அசித் ஶரீரகமான ப்ரஹ்மம்தான் கார்யம் என்று அங்கீகரிக்கிறோம். எனவே தர்க்க விரோதம் இல்லை.

## 2.1.2 D न विलक्षणत्वादस्य तथात्वं च शब्दात्

(2 सूत्रे)

இந்த அதிகரணத்தை (அத்வைதத்தில் 8 ஸூத்ரங்கள் கொண்டதை) 3 அதிகரணங்களாக பிரித்துள்ளனர்.

ஸந்தேஹம் :- சென்ற அதிகரணத்தில் பயன் ஏற்படுவது ஸந்தேஹம் ஆதலால் மற்ற ஸ்ம்ருதிகளுக்கு (சைவ ஸ்ம்ருதிகளுக்கு) அப்ரமாண்யம் சொன்னதால் ஶ்ருதி - ஶ்ரௌத ஸ்ம்ருதிகளுக்கு ப்ராமாண்யம் உண்டா? இல்லையா? என்ற கேள்வி எழுகிறது.

பூர்வபக்ஷம் :- "वृष्टिकाम: कारीर्या यजेत" = மழை வேண்டுபவன் காரீரி யாகம் செய்யவும் என்றபடி காரீரி யாகம் செய்தும் பயன் சில நேரம் வருவதில்லை என்பதால் சைவஸ்ம்ருதிபோல் வேதத்திற்கும் அபௌருஷேயமாயினும்கூட அப்ராமாண்யம். ஶ்ரௌத ஸ்ம்ருதியும் அப்ரமாணமே.

ஸித்தாந்தம் :- वाचा विरूप नित्यया - அழியாத வேதம் நித்யமானது என்று கூறியிருப்பதால் ஶ்ருதியானது अपौरुषेयं என்பதால் ஶ்ரௌத

ஸ்ம்ருதி அதை அனுஸரித்துள்ளதால் சாக்ஷிபோல் ப்ரமாணம்தான். வேதார்த்தமானது காண முடியாது என்பதால் (கண்ணுக்குப் புலப்படாது) எதையும் (பயன் உண்டாகும் தன்மை) எதிர்பாராமல் ப்ராமாண்யம் தானாகவே என்று அறிய வேண்டும். சில நேரத்தில் பயன் தடைபட்டால் அது அதிகாரியின் கர்த்தாவின் தோஷத்தால் ஏற்படுவது என்று உணர வேண்டும். நல்ல அதிகாரிக்கு பயன் கிட்டுகிறதே. ஆனால் அபஸ்ம்ருதிகளுக்கோ (சைவஸ்ம்ருதி) என்றால் பயன் ஏற்பட்டால்தான் ப்ராமாண்யம் ஏற்க முடியும். எனவே ஶ்ருதி, ஶ்ரௌத, ஸ்ம்ருதி ப்ரமாணம்தான்.

## 2.1.3 D अभिमानिव्यपदेशस्तु विशेषानुगतिभ्याम्, दृश्यते च (2 सूत्रे)

சென்ற அதிகரணத்தில் பயன் முரண்பாடு என்ற யுக்தி மட்டும் நிராகரிக்கப்பட்டது. இங்கு ஶ்ருதிக்கு "தோன்றும் பொருளிலிருந்து நழுவுதல்" என்பதான த்ருடயுக்தி ஆக்ஷேபம் கூறி நிராகரிக்கப்படுகிறது.

விஷயம் + ஸந்தேஹம் :- मृदब्रवीत् आपोऽब्रुवन, तत्तेजऐक्षत (மண் கூறியது, ஜலம் கூறியது, தேஜஸ் ஆலோசித்தது) போன்ற ஶ்ருதிகள் ப்ரமாணமா? இல்லையா?

பூர்வபக்ஷம் :- மண் ஜடமானதால் சேதனனின் செயலான பேச்சு அஸம்பாவிதம். மேலும் பேச்சின் கருவியான "வாக்கு" என்ற கர்மேந்த்ரியம் கிடையாது. ஜடத்திற்கு ஆலோசனை என்பதும் குதிரைக்கொம்பு போன்றது. எனவே இத்தகைய வேதவாக்யம் அப்ரமாண்யமானபடியால் வேதம் பூராவுமே அப்ரமாண்யம்.

ஸித்தாந்தம் :- முன்பு கூறியது, "நித்தியமான வேதம் குற்றமற்றது". இங்கு அப்ரமாண்யம் வர முடியாது. இதே போல் ஜடம் பேச முடியாது என்பதும் ஸரியாகத்தான் உள்ளது என்பதால் இரண்டையும் ஸரி செய்வதற்குத் தேவையான ஸமாதானம் ஒன்றை கல்பிக்கவேண்டும். எனவே

पृथिव्याद्यभिमानिन्यो देवताः प्रथितौजसः (भवि.पुराणं) என்ற வசனத்தில், பெரியோர்களின் ப்ரத்யக்ஷத்தினாலும் மண் போன்றவற்றில் அபிமானி தேவதை உடல் உடையவனாக இருப்பதாக ஏற்கவேண்டும். அவனுக்கு அந்தர்தான சக்தி உள்ளதால் நம் போன்றவர்கள் காண முடியாது. ஆகையால் இவ்வாறு கல்பனை பண்ணி மேற்கண்ட வாக்யங்கள் பொருத்தமானவைகளே. இவ்விதம் வேத வாக்கியம் ஒன்று கூட அப்ரமாணம் ஆகாது. முழுமையான வேதம் ப்ரமாணம்தான்.

## 2.1.4 D असदिति चेन्न प्रतिषेधमात्रत्वात्

## (5 सूत्राणि)

சென்ற அதிகரணத்தில் ஶ்ருதியுடன் இல்லாத யுக்தியின் விரோதத்தை பரிஹரித்து, ஶ்ருதியுடன் கூடிய யுக்தியின் விரோதத்தை தவிர்க்க "அஸத்" போன்ற வார்த்தைகளுக்கு வேறு பொருள் கூறுவதற்காக இவ்வதிகரணம்.

ஸந்தேஹம் :- यतो वा इमानि போன்ற உபநிஷத் வாக்கியம் விஷ்ணுவிற்கு ஜகத்கர்த்ருத்வம் சொல்வது. ப்ரமாணமா? இல்லையா?

பூர்வபக்ஷம் :- அந்த வாக்கியம் (यतो वा इमानि) ப்ரமாணம் ஆகாது. ஏனெனில் ப்ரளயகாலத்தில் உள்ள உலகின் ப்ராகபாவமானது (प्रागभाव:) உலகத்திற்கு காரணம் ப்ராகபாவமாக (प्रागभावत्वात्) இருப்பதால், இப்போதுள்ள घटप्रागभावं போல் என்ற யுக்தியை கொண்டும், असदेव सोम्यमिदमग्र आसीत् என்ற "அஸத்தாக முன்பு இருக்கிறது" ஶ்ருதியை கொண்டும் (= விச்வத்தின் ப்ராகபாவமே விச்வகாரணம்) प्रागभावं தான் ஜகத்காரணம் என்று ஸித்திப்பதால் ப்ரளயத்தில் எந்த ஒரு positive பொருளும் இல்லையாதலால், கார்யமான ப்ரபஞ்சத்திற்கு கர்த்தா காரணம் தேவைப்படுவதால், வேறு வழியில்லாமலும் असदेव सन्मनोऽकुरुत என்ற ஶ்ருதியின் துணைக்கொண்டு ப்ராகபாவம்தான் உபாதானமாக இருப்பதோடு

கர்த்தாவாகவும் ஏற்பதில் பொருந்தாமையில்லை. அல்லது கரை (bank of river) விழுவது போல் அகர்த்ருகமாகவோ குடம் போல் ஜீவகர்த்ருகமாகவோ இருக்கலாம். எனவே விஷ்ணு கர்த்தாவாக முடியாது.

ஸித்தாந்தம் :- விஷ்ணுவானவர் கர்த்தா என்றால் அறிவு, பண்ண வேண்டும் என்ற எண்ணம் இரண்டும் உடைய தன்மைமட்டுமே. எனவே மண்ணினால் குடம், ஜீவனால் குடம் என்பதாக மூன்றாம் வேற்றுமை உடைய தன்மை மட்டும் கர்த்ருத்வமாகாது. எனவே அபாவத்திற்கு (अभावस्य) மேற்கூறிய கர்த்ருத்வம் வரவே முடியாது. மேலும் கார்யங்கள் அழிவது என்பது (ப்ரளயம் என்பது) காரணமாக மிஞ்சுவது என்றுதான் பொருள், ஆனபடியால் भाव- மான (positive) பொருள் ப்ரளயத்தில் இருந்தாக வேண்டும். ஆனால் பூர்வபக்ஷத்தில் கூறிய யுக்திப்படி अभाव சேஷத்வம் கூறப்படுவதால் இந்த இரண்டு அனுமானமும் ஒன்றிற்கு மற்றொன்று இடிப்பதால் (सत्प्रतिपक्षम् ஆனதால்) நாம் ப்ரளயத்தில் भाव-अभाव शेषत्वम् என்ற இரண்டையும் ப்ரமாணமாக ஏற்க முடியாத நிலை. இவ்வாறு शुष्क तर्क என்பது நிலைக்காது என்றிருப்பதால் ''ஈஶன்தான் ஸ்ருஷ்டி செய்தான்'' என்ற வேதவாக்யங்களின் பலமுடைய भावशेषत्वं கூறும் ஸித்தாந்த தர்க்கம் ப்ரபலமாகிறது. எனவே यतो वा इमानि என்ற விஷ்ணு கர்த்ருத்வம் போதிக்கும் வேதம் ப்ரமாணம்தான். இதே போலவே நிஷ்காரணத்வம், ஜீவகாரணத்வம் இரண்டும் தவறானது. असद्वा इदमग्रे आसीत् போன்ற ஶ்ருதிகள் "एतेन सर्वे व्याख्याता: (1.4.29)" என்ற இடத்தில் கூறியப்படி அஸத்= ஈஶன் என்றே பொருள் கொள்ளவேண்டும். எனவே விஷ்ணுதான் ஜகத்கர்த்தா.

  

## 2.1.4 A एतेन शिष्टापरिग्रहा अपि व्याख्याता:

(1 सूत्रम्)

ஸந்தேஹம் :- பரமாணுவை ஜகத்காரணம் என்று கூறும் கணாத மதத்துடன் வேதாந்தத்திற்கு விரோதம் உண்டா? இல்லையா?

பூர்வபக்ஷம் :- "வேஷ்டி தன்னை விட சிறிதான பொருள்களால் - நூல்களால்தான் உண்டாக்கப்படுகிறது. இதை நாம் உலகில் காண்பதால் உலகமும் அணுக்களால்தான் படைக்கப்-பட்டுள்ளன" என்பதாக கணாத முனி கூறுகிறார். விஷ்ணுவின் அவதாரமான புத்தர் அபாவத்தை (अभाव:) காரணமாக கூறுகிறார். விதையின் உள்ளே மரம் இல்லாமை இருந்து அதிலிருந்து அல்லவோ மரம் வருகிறது, உதாரணம் தூக்கத்திலிருந்து ஸ்வப்னம் வருகிறதன்றோ! எனவே ப்ரபலமான கணாத, பௌத்த மத விரோதம் உண்டு.

ஸித்தாந்தம் :- வைதிகசிரோமணிகளான புராணகர்த்தாக்களாகிற கபிலமதங்களையே நிராகரித்த நமக்கு வேத விரோதமான இந்த மதங்கள் எம்மாத்திரம்! கணாதர் போன்றவர்கள் வைதிகர்களால் நிராகரிக்கப்பட்டவர்கள். மேலும் புராணங்களில் கணாத மதம் போன்றவற்றை நிராகரித்துள்ளனர்.

"हैतुकान् बकवृत्तींश्च वाङ्मात्रेणापि नार्चयेत्" தார்க்கிகர்களையும், கொக்கு போல் ஏமாற்றுபவர்களையும் பெயரளவில் கூட (வாயினால் கூட) புகழக்கூடாது". சிறிதிலிருந்து பெரியது வரவேண்டும் என்று நியமம் கிடையாது. பாலிலிருந்து தயிர் வருகிறதே. (சிறு அறையில் யானை, குதிரைகள் கனவில் படைக்கப்படுகின்றனவே.) எனவே இம்மதங்கள் தவறானவை. விதையினுள் உள்ள ஸூக்ஷ்ம பொருளிலிருந்துதான் மரம் வருகிறதே தவிர இல்லாமையிலிருந்து வருவதில்லை. அப்படியாகில் மணலிலிருந்து எண்ணை வரலாமே!

## 2.1.4 V एतेन शिष्टापरिग्रहा अपि व्याख्याता:

விஶிஷ்டாத்வைதத்தில் இந்த ரீதியில்தான் இந்த அதிகரணம்.

விஶேஷம் :- ஒரே ஒரு கபிலருடைய ஸ்ம்ருதி அப்ரமாணமாக ஆனாலும் கணாதர், புத்தர், ஜைனர்- போன்றவர்கள் ஏகோபித்து பரமாணுவை காரணமாக கூறுவதால் விரோதம் ஏற்படலாம். ஆனால் இவர்களுள் பரமாணுவின் நித்யத்வம், அநித்யத்வம் போன்ற பல விஷயத்தில் கொள்கை வேறுபாடு உண்டு. ஆகவே ஒரு நிர்ணயம் வராது. நிலையற்றவைகளே இம்மதங்கள். எனவே வேத மதத்தை அசைக்க முடியாது.

एतेन शिष्टापरिग्रहा अपि व्याख्याता: என்கிற இந்த அதிகரணம் மத்வ மதப்படி தனியல்ல.

## 2.1.5 A भोक्त्रापत्तेरविभागश्चेत् स्याल्लोकवत्

(1 सूत्रम्)

ஸந்தேஹம் :- அத்வைதமதப்படி ஜீவனும், ஜகத்தும் ப்ரஹ்மத்தை தவிர வேறல்ல என்று கூறி அத்வைதம் நிர்ணயிக்கப்படுவது ஸரியா? இல்லையா?

பூர்வபக்ஷம் :- (ஜீவனும் =)போக்தாவும் ப்ரஹ்மமும் ஒன்றேதான் என்றால் ஜீவனோடு ஒன்றான ப்ரஹ்மத்தோடு ஒன்றான போக்யப்ரபஞ்சமும் கூட ஜீவனுடன் ஒன்றாகி விடும் என்பதால் உலகில் நேரடியாக காணப்படும் - அனுபவிப்பவன் + அனுபவிக்கப்படும் பொருள்கள் - வேறுபாடு அழிந்து குழப்பம் உண்டாகும் ஆதலால் அத்வைத மதம்ஸரியல்ல.

  

ஸித்தாந்தம் :- மேலே கூறிய logic ஸரியில்லை. ஏனெனில் அலைகள் நுரை இவைகள் ஸமுத்திரத்தைக் காட்டிலும் வேறாக இல்லாவிடினும் பரஸ்பரம் இவை வேறுபட்டதன்மைகள் உடையவைதான் என்பது போல, ஜீவன், நுகரும் பொருள்கள் இவை இரண்டும் ப்ரஹ்மத்திலிருந்து வேறாக இல்லாவிடினும் பரஸ்பரம் வேறாக இருப்பதில் இடையூறு இல்லை. அதனால், ப்ரஹ்மாத்வைதம் அசைக்க முடியாதது. எந்தக்குழப்பமும் வரவே வராது.

## 2.1.5 V भोक्त्रापत्तेरविभागश्चेत् स्याल्लोकवत्

(1 सूत्रम्)

ஸந்தேஹம் :- ஜீவனைப் போலவே பரமாத்மாவிற்கும் சித்-அசித் ஶரீரமுடைய தன்மையை ஏற்றால், ஜீவனுக்கு ஶரீரஸ்வாமித் தன்மையால் ஸம்ஸாரித்வம் (சுகதுக்கமுடைமை) இருப்பது போல் நாராயணனுக்கும் ஶரீரஸம்பந்தத்தினால் ஸம்ஸாரித்வம் (சுகதுக்க போகம்) ஏற்படும் ஆனதால், ஜீவ ஈஶ்வரர்களுக்கு பேதம் இல்லாமல் போகுமா? போகாதா?

பூர்வபக்ஷம் :- ஶரீரஸம்பந்தம் விஷ்ணுவிற்கு ஏற்பட்டாலும் அவர் எப்போதும் எல்லாவற்றிற்கும் நியாமகராகவும், மற்றவை நியம்யம் ஆனதாயும் உள்ள தொடர்புதான் உண்டே தவிர வேறு தொடர்பு இல்லை. அரசனுக்கும் திருடனுக்கும் ஶரீரம் ஸமமாக இருந்தாலும் தண்டனையை அளிக்கும் அரசனுக்கு திருடன் போல் துன்பம் ஏற்படுமா? மேலும் சுகதுக்கங்கள் ஏற்படுவது என்பது புண்ணிய பாபங்கள் செய்ததால்தான், ஶரீரத்திற்கு ஸ்வாமியானதால் அல்ல. எனவே விஷ்ணுவிற்கு காரணத்வம் சித்-அசித் ஶரீரகத்வம் ஏற்பதால் குறைவில்லை.

## 2.1.5 D भोक्त्रापत्तेरविभागश्चेत् स्याल्लोकवत् (1 सूत्रम्)

**ஸந்தேஹம் :-** ஜகத்கர்த்ருத்வம் விஷ்ணுவிற்கு எப்படியோ அப்படியே ஜீவனுக்கும் பொருந்துமா? பொருந்தாதா?

**பூர்வபக்ஷம் :-** परेऽव्यये सर्व एकीभवन्ति (म.3.27) என்ற வாக்யத்தில் ஈஶனுக்கு முக்தர்களுடன் ஐக்கியம் கூறப்படுகிறது. நிஜமாக வேறான ஒருவன் வேறு காலத்தில் நிஜமாகவே வேறான பொருளுடன் ஐக்கியம் அடைய முடியாதானதால், முன்பே இருவருக்கும் ஐக்கியம் இருந்தாக வேண்டும். முன்பே ஐக்கியம் இருக்குமானால் "இல்லாத ஐக்கியம் இப்போது வருகிறது" என்ற கருத்தில் வரக்கூடிய ச்விஎன்ற விகுதி (प्रत्यय:) ['एकी भवन्ति' என்ற பதத்தில் வரும் ஈ என்பது] எவ்வாறு பொருந்தும் என்ற கேள்விக்கு இடமில்லை. ஏனெனில் முக்திக்கு முன்பு அபேதத்துடன் பேதமும் இருந்ததால் அந்த பேதத்தை விலக்குவதற்காக "ச்வி" வருகிறது. எனவே ஜகத்கர்த்ருத்வம் என்பது ஜீவனிடத்திலும் வருவதால் விஷ்ணுதான் என்பது தவறு.

**ஸித்தாந்தம் :-** "एकीभवन्ति" என்ற ஶ்ருதியில் கூறப்படும் ஐக்கியத்தை பிறகு அந்த உபநிஷத்தில் வரும் "निरञ्जन: परमं साम्यमुपैति दिव्यम्" வாக்கியமானது எதிர்ப்பதால் பரம் ஐக்கியம் கூறவே இல்லை. மேலும் "यथोदकं शुद्धे शुद्धं आसिक्तं तादृगेव भवति" - ஜலத்தில் சேர்த்த ஜலம் ஒரேதன்மையுடையதாகிறது - என்று வேறிடத்தில் கூறப்படுகிறது. பூர்வபக்ஷத்தில் கூறியபடி முக்திக்கு முன்பு பேதாபேதம் இரண்டுமிருப்பின் பின்பும் முழுமையான ஐக்கியம் ஓரிடத்திலும் காணப்படவே இல்லாததால் இம்மதம் ஸரியில்லை. எனவே ஐக்கிய வாக்கியமானது முக்தியை ஒன்றுதான் என்று கூறுவதில் கருத்துக் கொண்டதாக விவரிக்க

வேண்டும். எனவே ஈஶனுக்கு ஜீவ ஐக்கியமோ குதிரைக்கொம்பானதால் பூர்வபக்ஷம் ஏற்கவே ஏற்காது.

## 2.1.6 A तदनन्यत्वमारम्भणशब्दादिभ्य:

**(7 सूत्राणि)**

விஷயம் , ஸந்தேஹம்:- ஜீவ-ஜகத்-ப்ரஹ்மங்களின் பேதம் + அபேதம் இரண்டும் பரமார்த்தமா? அல்லது வ்யாவஹாரிகமா? (பொய்யா) என்பது விஷயம் -ஸந்தேஹம்.

பூர்வபக்ஷம் :- சென்ற ஸூத்ரத்தில் கூறிய உதாரணப்படி ஸமுத்ரம் + அலைகள், நுரை, குமிழ்கள் - யாவும் (பேதம் + அபேதம்) உண்மைதானே ஆகவேண்டும். எனவே ஒரே ப்ரஹ்மத்திலிருந்து வேறுபடாத தத்வமாக போக்தா போக்யன்என்ற இருவித வித்யாசம் சமுத்திர உதாரணத்தால் கூறியிருக்கிறது சென்ற அதிகரணத்தில். எனவே உலகில் கடல், அலைகள், நுரை, குமிழ்கள் யாவும் ஒரே ரகமாக இருப்பது போல் உலகும் ஜீவனும் dualityயாவும் உண்மையாகத்தான் இருக்க வேண்டும் என்று பெரிய ஆக்ஷேபம் எழும்புகிறது.

ஸித்தாந்தம் :- முதன் முதலில் பாமரர்கள் ஏற்பதற்காக ஸமுத்திர உதாரணம் கூறப்பட்டது. உண்மையில் ஆராய்ந்தால் காரணப் பொருளிலிருந்து வேறுபட்டதாக கார்யப் பொருள் ஒரு பொழுதும் யாராலும் பிரித்துக் காண முடியுமா? மண்ணைத்தவிர குடம் என்று கார்யப் பொருள் இருப்பின் எடை (weight) ஏன் double ஆக ஆகவில்லை? [தங்க மோதிரத்தில் 4gm தங்கம் + மோதிரமும் 4gm என்று ஏமாந்தால் தங்கம் விற்கும் கடைக்காரன் காட்டில் மழை தாங்காதன்றோ!] ஒரே பொருள்தான் வெவ்வேறு பெயரால் வடிவத்தின் வேறுபாட்டால் அழைக்கப்படுகின்றது. ஸ்திரமாக நுண்ணிய முறையில் ஆராய்ந்து முடிவு எடுத்தால் தட்டு,

கிண்ணம், சொம்பு, குடம் என்றெல்லாம் பேசப்படினும்கூட காரணமான மண்ணினைப் பிரித்து கார்யங்கள் இருப்பை (ஸத்தா) பெறுகின்றனவா? எனவேதான் वाचारम्भणं विकारो नामधेयम्, मृत्तिकेत्येव सत्यं" என்று அறுதியிட்டு உபநிஷத் கூறுகிறது. கனவில் சிருஷ்டியாகி தோன்றும் காணப்படும் பொருள்களில் போக்தா, போஜ்யம் யாவும் கனவு காணும் வரை தோன்றினாலும் உண்மையா? பொய்யானாலும் கூட அந்த நேரத்தில் பயனைத்தரவில்லையா? விழிப்புநிலை பொருள்களிலும் கூட பணம், வீடு, சாப்பாடு, யாவும் கனவில் பயன்படவில்லையே! எனவே ஜகத் என்பது உண்மையில் கனவுபோன்றதுதான். नेह नानास्ति किञ्चन என்ற அத்வைத தன்மைதான் ஸ்திரம்.

## 2.1.6 V तदनन्यत्वमारम्भणशब्दादिभ्य:

### (6 सूत्राणि) (இரண்டை ஒன்றாக்கி)

சென்ற அதிகரணத்தில் கார்யகாரண அனந்யத்வம் வேறுவிதமாக ஸ்தாபிக்கப்பட்டது. அதே அனந்யத்வம் இந்த அதிகரணத்தில் வைசேஷிக ஆக்ஷேப பரிஹார வழியாக நிரூபிக்கப்படுகிறது. ஸூத்ரார்த்தம் = जगत: என்ற பதம் சேர்க்கப்பட வேண்டும். जगत: = உலகத்திற்கு तदनन्यत्वं = तेन = பரமகாரணமான ப்ரஹ்மத்தோடு अनन्यत्वम् = அபின்னத்வம் आरम्भणशब्दादिभ्य: = அபின்னத்வத்தை கூறும் வாக்கியங்களால் அறியப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- குடத்திற்கும் மண்ணிற்கும் (கார்யத்திற்கும் காரணத்திற்கும்) 1) பெயர் வேறுபாடு 2) வடிவு வேறுபாடு 3) பயன்பாடு வேறுபாடு 4) கால வேறுபாடு 5) (ஒன்றானால்) செய்பவனுடைய முயற்சிக்கு பயனற்ற தன்மை ஏற்படுதல் ஆகிய ஐந்து காரணங்களினால் கார்யமும் காரணமும் வேறுபட்டதே. 1) குடம் மண்2) குட வடிவம் உருண்டை வடிவம் 3) ஜலம்

கொண்டுவருதல் உண்டு இல்லை 4) முதலில் பிண்டம் பிறகு குடம் 5) இரண்டும் ஐக்யமானால் குடம் ஏற்படுத்த குயவனின் தொழில் வீணாகும். எனவே கார்ய காரண அனந்யத்வம் (கார்யகாரண ஐக்யம்) பொருந்தாது.

ஸித்தாந்தம் :- சாந்தோக்யத்தில் மண் குடம் போன்ற உதாரணங்களால் கார்யகாரணங்களுக்கு, ஜகத் ப்ரஹ்மத்திற்கு ஐக்கியம் என்பதை ப்ரதிக்ஞை செய்து, உதாரணத்தில் மண் குடங்களுக்கு "वाचारम्भणं विकारो नामधेयं मृत्तिकेत्येव सत्यम्" = என்ற வாக்கியத்தினால் ஐக்கியம் தெளிவு பண்ணப்பட்டது. विकार: = குடத்தன்மை, மடக்குத்தன்மை போன்ற நிலைகள் नामधेयं = घट:, शराव: என்ற பெயர்களும் वाचा = குடம் என்ற பேச்சுக்கும், ஜலம் கொண்டுவருதல் என்ற பயனுக்கும் சேர்த்து वाक् = என்ற சொல் உபயோகப் படுத்தப்பட்டிருக்கிறது, टा = (आ) என்ற மூன்றாம் வேற்றுமையின் பொருள் = 'காரணம்' = இரண்டிற்காகவும் என்று கருத்து. आरम्भ: = ஏற்படுகிறது என்பது உட்பொருள். எனவே ம்ருத்பிண்டமாகிற ஒரே பொருள் வேறு வடிவத்தையும் பெயரையும் அடைகிறது. எனவே மண் உருண்டைக்கும் குடத்திற்கும் பேதம் கிடையாது, இதேபோல் ஜகத்ப்ரஹ்மங்களுக்கும் ஒரே ப்ரஹ்மமே கார்யகாரணமாகிற நிலைகள் இரண்டைப்பெற்று விளங்குகிறது. இவ்விதம் பேதமில்லாவிடினும் நிலைமாற்றம் என்பதாகத்தான் குயவன் போன்றவரின் தொழில் பயன்படுகிறது. எனவே அது பயனற்றது அல்ல.

## 2.1.6 D तदनन्यत्वमारम्भणशब्दादिभ्य:

(7 सूत्राणि)

ஸந்தேஹம் :- முன்பு விஷ்ணுவிற்கு கூறிய விச்வகர்த்ருத்வம் பிறரை எதிர்பாராமல் தானாகவே உண்டா? ஸாதனத்தை எதிர்பார்த்து வருவதா?

பூர்வபக்ஷம் :- "மஹத்தத்வம் போன்றவற்றின் ஸ்ருஷ்டியானது கர்த்தாவைத்தவிர ஸ்வதந்திரமான வேறொன்றான ஸாதனத்தை எதிர்பார்த்துத்தான் வருகிறது, ஸ்ருஷ்டியானதால், "வேஷ்டி போன்ற ஸ்ருஷ்டி போல்", என்ற அனுமானம் போன்ற பல யுக்திகளால் விஷ்ணுவிற்கு ஸ்வதந்திர கர்த்ருத்வம் கிடையாது. மேலும் "अद्भ्य: सम्भूत: पृथिव्यैरसाच्च" என்ற ஜலம் போன்ற மற்ற ஸாதனங்கள் கூறப்பட்டுள்ளன.

ஸித்தாந்தம்:- விஷ்ணுவிற்கு ஸ்வதந்திரமாகத்தான் ஸ்ருஷ்ட்ருத்வம் ஏனெனில் "किंस्विदासीदधिष्ठानमारंभणम्" என்பதாக ப்ஶ்ருதியில் இருப்பிடம், ஸாதனம் போன்றவைகளை நிஷேதித்தி- ருக்கிறது. ஸாதனத்தைக்கூறும் வேறு ப்ஶ்ருதியோடு இதற்கு விரோதம் வருவதால் இரண்டிற்கும் மதிப்புக் கொடுத்து விஷ்ணு தவிர வேறொரு ஸ்வதந்திரமானஸாதனத்தின் எதிர்பார்ப்பு கிடையாது என்று நாம் கொள்ளவேண்டும். ப்ராணன் போன்றவைகளுக்கு ஈசானு-ப்ரவேசமிருப்பதால் தனியாக ஸ்வாதந்த்ரியம் கிடையாது. ஈப்வரனுக்கும் லீலையினால் ஸ்ருஷ்டி சொல்லும்போது சாதனாந்தரம் வரலாம். எனவே விஷ்ணு ஒருவர்தான் ஸ்வதந்திரமாக படைப்பவர்.

## 2.1.7 A इतरव्यपदेशात्... (3 सूत्राणि)

ஸந்தேஹம் + பூர்வபக்ஷம் :- ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றுதான் என்கிற அத்வைதமதத்தின்படி ப்ரஹ்மம் ஜகத்தை உண்டு பண்ணுவதானால் ஜீவன்தானே உண்டு பண்ணுவதாக ஆகிறது. எனவே ஜீவன் சேதனன் தனக்கு வேண்டியவைகளை மட்டும் ஏன் படைப்பதில்லை? வேண்டாததையும் ஏன் படைக்கிறான்? என்ற கேள்விக்கு பதில் என்ன?

ஸித்தாந்தம்:- உண்மை நிலையில் ஜீவப்ரம்ஹ்ம ஐக்கியம் ஞானம் வந்த பிறகு ஏற்றாலும் ஞானம் வரும்வரை ஜீவனுக்கும் ப்ரஹ்மத்திற்கும் உபாதியினால் பேதம் உண்டு. படைப்பு என்பதே அவித்யாநிலையில்தான் கூறப்படுகிறது. எனவே ஈஶ்வரனுக்கு ஹிதம் அஹிதம் என்று வேறுபாடு கிடையாது. மேலும் ஜீவனின் ஸம்ஸாரம் என்பது பொய்யானது - என்பதை உணர்ந்துதான் ஈஶன் படைக்கிறான். தான் எப்போதும்தான் நிர்லேபன் = எதிலும் ஒட்டாதவன் அஸங்கன் என்பது நன்றாக தெரியும். ஒரே பூமியில் (மண்ணில்) மண்கட்டி, கருங்கல், விலை உயர்ந்த மணிகள், உலோகங்கள் என்று வேறுபாடுபோல் சேதனனிலும் ஔபாதிகபேதம் ஏற்பதால் அத்வைதத்திற்கு விரோதமில்லை.

## 2.1.7 V इतरव्यपदेशात्... (3 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- ஜீவனைக்காட்டிலும் வேறில்லாத ப்ரஹ்மம் ஜீவனுக்கு ப்ரதிகூலமான படைப்பை உண்டுபண்ணினால் தனக்கு அநிஷ்டமானதை உண்டுபண்ணும் தோஷம் வருகிறது.

ஸித்தாந்தம் :- ஜீவாத் என்றும் ப்ரஹ்மமென்றும் இரண்டு பதங்களை சேர்த்துக் கொண்டு अधिकं तु भेदनिर्देशात् என்ற ஸித்தாந்த ஸூத்ரத்திற்கு "ஜீவனைக்காட்டிலும் ப்ரஹ்மம் தனியானது, வேறுபட்ட குணங்களையும் ஸ்வரூபத்தையும் உடையதால்" என்று அர்த்தம். ज्ञाज्ञौद्वावजौ ईशानीशौ என்று ஜீவனுக்கு அல்பஞுத்வம், ஈஶனுக்கு ஸர்வஞுத்வம், என்றும் ஜீவனுக்கு போக்த்ருத்வம், ஈஶனுக்கு அபோக்த்ருத்வம் கூறப்படுவதால் இருவரும் வேறுப்பட்டவர்கள்தான். तत्त्वमसि स आत्मा என்று கூறும் வாக்யங்களுக்கும், ऐतदात्म्यम् என்பதாக ஜகத்திற்கும் ஶரீரஶரீரிபாவம் கூறப்படுகிறது போல இங்கும் சிதசித்ரூபமான

ஜகத்திற்கு தாதாத்ம்யம் போல் ஶரீரஶரீரிபாவந்தான் பொருள். ஜீவனுடைய கர்மாவை அனுஸரித்து ஹித + அஹிதங்களை படைத்தால் ஈஶனுக்கு தோஷம் வராது.

## 2.1.7 D इतरव्यपदेशात्... (6 सूत्राणि)

இங்கு மாத்வரீதியில் அத்வைதத்தின் மூன்று அதிகரணங்கள் (7,8,9) சேர்ந்து ஒரே அதிகரணமாகிறது.

முன்பு கூறியபடி ப்ராணன் போன்றவர்களுக்கு அஸ்வதந்திர கர்த்ருதவம் ஸரியல்ல என்று ஆக்ஷேபித்து இங்கு ஸமாதானம் சொல்லப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- "जीवाद्भवन्ति भूतानि" ஜீவனிடமிருந்து உலகம் தோன்றுகிறது - என்று கூறப்படுவதால், अहमिदं करोमि நான் இதை செய்கிறேன் - என்பதாக யாவருக்கும் அனுபவம் இருப்பதாலும் சுதந்திரமான ஜீவன்தான் கர்த்தா மேலும் "ஜீவன்தான் கர்த்தா, சேதனனாக இருப்பதால், ஈஶன்போல" என்ற அனுமானத்தினாலும் விஷ்ணு கர்த்தா அல்ல. மேலும் விஷ்ணு எங்கும் எப்போதும் இருப்பதாகக் கூறும் தங்கள் மதத்தில் 'தெரியவில்லை' என்ற அனுபவத்தின் பிரமாணத்தால் விஷ்ணுவே என்று ஏற்படுகிறது. எனவே விஷ்ணுதான் ஸ்வதந்திரகர்த்தா என்ற மதம் தவறு.

ஸித்தாந்தம் :- ஜீவன் ஸ்வதந்திரமாக கர்த்தாவானால் உலகில் ஏன் ஹிதம் மட்டும் படைக்கப்படவில்லை. கஷ்டங்கள் ஏன் உலகில் உண்டுபண்ணப்பட்டன? என்ற கேள்விக்கு பதில் இல்லை. ஈஶன் எங்கும் எப்போதும் இருந்தாலும் தேவர்கள், பிசாசுகள் போல அந்தர்தான திறமையுள்ளதால் தெரிவதில்லை. जीवात् भवन्ति भूतानि என்ற வாக்கியம் ஜீவன் வழியாக ஈஶன் படைக்கிறான் என்று கூறுகிறது. நான் செய்கின்றேன் என்ற

அனுபவமானது சார்வாகனுடைய உடலின் ஸ்வாதந்த்ர்யம் போல ப்ரமமானது. ஜீவன் ஸ்வதந்திர கர்த்தா அல்ல, கல் போல அஸ்வதந்திரம் ஆனதால் என்று வேறு அனுமானத்தினால் பூர்வபக்ஷ அனுமானம் அடிபடுகிறது அல்லது பரதந்திர கர்த்தா என்று முடிகிறது. எனவே விஷ்ணுதான் ஸ்வதந்திர கர்த்தா.

## 2.1.8 A उपसंहारदर्शनात् नेति चेन्न क्षीरवद्धि (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- அத்விதீயமான ப்ரஹ்மம் விசித்திர ஜகத்திற்கு காரணம் என்ற மதம் தவறு. ஆகாஶம், வாயு, நெருப்பு போன்ற விசித்ரமான உலகம் ஒரே விதமான மாறுபாடு இல்லாத ப்ரஹ்மத்திலிருந்து எவ்வாறு ஏற்பட முடியும்? இல்லையே ஒரே பாலிலிருந்து தயிர், வெண்ணை போன்ற பல பொருள்கள் வரலாமே! மேலும் முறையாக ஆகாயம், வாயு போன்றவை தோன்றுகின்றன. இந்த சீரான அமைப்பு ஒரு நியாமகம் இல்லாமல் எப்படி வர முடியும்? எனவே அத்விதீயப்ரஹ்மத்திலிருந்து சீராக நானாவித பொருள்கள் வர முடியாது.

ஸித்தாந்தம் :- பரம ஸித்தாந்தப்படி அத்விதீயப்ரஹ்மம் ஒன்றுதான் என்றிந்தாலும் அவித்யாவின் துணை கொண்டு இருப்பதாக ஶ்ருதி-யுக்தி அனுபவங்கள் நிரூபிக்கின்றன. मायां तु प्रकृतिं विद्यात् मायिनं तु महेश्वरम् என்று ஶ்ருதி கூறுகிறது. மாயா = அவித்யா. இரண்டுமே இருப்பதான (கணக்கிடப்படக் கூடியதாகவோ) இல்லாததாகவோ ஆக முடியாத அனிர்வசநீயம் என்பதால் அத்வைதத்திற்கு ஹானி இல்லை. இவ்விதமாக magic மாயையின் உதவியோடு ஒரே விதமான ப்ரஹ்மம் நானாவிதமான ப்ரபஞ்சத்தின் கர்த்தாவாக ஆக முடியும். மேலும் பால் தயிரை உண்டுபண்ண ஸஹாயம் தேவைப்படுவதில்லையே. தேவர்களும் மற்ற உதவி நாடாமல் பல கார்யங்கள் செய்கின்றனர் என்றபோது ஸர்வசக்தரான ப்ரஹ்மம் ஏன் செய்ய முடியாது?

## 2.1.8 V उपसंहारदर्शनात् नेति चेन्न क्षीरवद्धि (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- உலகில் ஒவ்வொரு காரணத்தில் கார்யத்தை உண்டுபண்ணுவதற்கு உதவிக்கருவிகள் பொருள்கள் தேவைப்படுவதால், ஜகத்தை சிருஷ்டிக்கும் ப்ரஹ்மத்திற்கு ப்ரளய காலத்தில் தனித்தன்மைதான் (ஒருவர்தான்) இருப்பதால் உதவிக்கருவிகள் இல்லாமல் எவ்வாறு ஸ்ருஷ்டி செய்ய முடியும். எனவே ப்ரஹ்மம் காரணமன்று.

ஸித்தாந்தம் :- கார்யம் உண்டுபண்ணும் பொருளான காரணத்திற்கு உதவிகள் இருந்தால்தான் கார்யம் உண்டாக முடியும் என்று கட்டாயம் கிடையாது. பால் தயிரை உண்டுபண்ணுவதற்கு எந்த உதவி தேவைப்படுகிறது? மேலும் தேவர்கள், ரிஷிகள் போன்ற அநீச்வரர்களுக்கே பிற உதவி இல்லாமல் பல காரியங்களை படைக்கும் வலிமை காணப்படும்போது ப்ரஹ்மத்திற்கு எம்மாத்திரம்?

## 2.1.9 A कृत्स्नप्रसक्तिर्निरवयत्वशब्दकोपो वा (4 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- கார்யகாரணங்களுக்கு அபேதம் முன்பு ஸ்தாபிக்கப்பட்டதால் தார்க்கிகர்களின் ஆரம்பவாதம் (பேத வாதம்) அத்வைதிகளுக்கு ஸம்மதமில்லை என்பதால் நிரவயவமான ப்ரஹ்மம் உலகமாக பரிணமிக்கும்போது முழுமையாக பரிணமித்தால் பால் முழுவதும் தயிராக பரிணமிப்பது போல் ப்ரஹ்மத்திற்கு அநித்யத்வம் ஏற்படும். ஒரு பகுதி பரிணமித்தால் ப்ரஹ்மம் ஸாவயவமாக ஆகிவிடும். அது ஸம்மதமல்ல. எனவே ப்ரஹ்மம் காரணமாகாது.

ஸித்தாந்தம் :- इन्द्रो मायाभिः என்ற ஶ்ருதி ப்ரஹ்மத்திற்கு மாயா சக்தி (magic powers) இருப்பதால் மாயையினால் பல விதமாக

மாற்றம் தோன்றுகிறது. இது உண்மையல்ல. Magician தன் தலையை வெட்டிக்கொள்வது போல் காட்டினாலும் யானைகள் ஓடுவதாக காண்பித்தாலும் ஒன்றும் உண்மையில் பாதிக்கப்படுவதில்லையே. எனவே முழுமையாகவா பகுதியாகவா என்ற கேள்வியே எழுவதில்லை.

## 2.1.9 V कृत्स्नप्रसक्तिर्निरवयत्वशब्दकोपो वा (6 सूत्राणि)

விஶிஷ்டாத்வைத மத ரீதியாக இந்த அதிகரணம் 6 ஸூத்ரங்கள் கொண்டது. அத்வைத ரீதியாக 4 + 2 (सर्वोपेता च तद्दर्शनात्) 2 ஸூத்ரங்கள் 10ம் அதிகரணம் ஆகும்.

பூர்வபக்ஷம் :- அதே பூர்வபக்ஷம்தான்

ஸித்தாந்தம் :- ப்ரஹ்மத்திற்கு நிரவயவத்வமும், கார்ய வடிவமாக பலவாக ஆவதும் ஶ்ருதியில் சொல்லப்படுவதால் வேதம் மட்டுமே ப்ரஹ்மத்தை அறிய ப்ரமாணம் ஆவதால், நம் யுக்தியால் கேள்வி ஏறாது. பலவாக ஆவதும் ஸாவயவமாக இருப்பதும் சேர்ந்தே வரும் என்ற வ்யாப்தியானது ப்ரஹ்மத்தை தவிர மற்றவற்றிற்குதான் பொருந்தும் என்று நாம் கொள்ளவேண்டும். எனவே ஸாவயவமாக இல்லாததால் பலவாக ஆகும் தன்மை கிடையாது என்று ஆக்ஷேப்பிபது தவறு.

உதாரணம் - மற்ற இடங்களில் ரூபம் ஶப்தம் உணருவதற்கு கண் காது கட்டாயாமானாலும் அதைக்கொண்டு ப்ரஹ்மத்திற்கும் கண் காது உண்டு என்று ஏற்பதில்லை - பஶ்யத்யசக்ஷு: स शृणोति अकर्णः - என்றல்லவா வேதம் கூறுகிறது. அதேபோல் இங்கும் விதிவிலக்கு உண்டு. எனவே உலகின் நியமங்கள் வ்யாப்திகள் ப்ரஹ்மத்திற்கு பொருந்தாது. எனவே நிரவயவமானாலும் ப்ரஹ்மமமானது ஒவ்வொரு பொருளிலும் பூரணமாக இருப்பதாக ஶ்ருதியினால் உணர

வேண்டும். மேலும் இவ்விதமான விசித்திர சக்தியுடைய தன்மை நம்மால் ஊகிக்கப்படுவது மட்டுமில்லை. पराऽस्यशक्तिः विविधैव श्रूयते என்று ஶ்ருதியிலும் கூறப்படுகிறது.

## 2.1.8 D श्रुतेस्तु शब्दमूलत्वात् (5 सूत्राणि)

ஸந்தேஹம் + பூர்வபக்ஷம் :- விஷ்ணுவிற்கு ஸர்வகர்த்ருத்வம் பொருந்துமா பொருந்தாதா? எனில் பொருந்தாது என்று பூர்வபக்ஷம் எழுகிறது. ஏனெனில் சிறு துரும்பை படைப்பதிலும் விஷ்ணு முழுமையாக பிரவ்ருத்தித்தால் அவருக்கு அறிவாளிதன்மை போய்விடும். ஒரு பாகத்தினால் படைத்தால் ஸாவயவர் என்று கேடு வரும். ஏனெனில் नेह नानास्ति किञ्चन என்ற வாக்யத்தில் ஸாவயவத்வம் இல்லை எனக்கூறப்படுகிறது. ஜீவனுக்கு உள்ள நியமம் ஈஶனுக்கு கிடையாது என்றால் அது என்ன ஈஶனுக்கு விஶேஷம் என்பது நிர்யணம் ஆகாததால் இந்த விரோதம் இல்லை என்பது ஆதாரமற்றது. மேலும் ஈஶனுக்கு கண் காது போன்ற உறுப்புகள் இல்லாததால் கர்த்ருத்வம் வராது.

ஸித்தாந்தம்:- योऽसौ विरुद्धोऽविरुद्धो मनुरमनुरवाग्वागिन्द्रोऽनिन्द्रः (பைங்கி ஶ்ருதி) என்ற ஶ்ருதியானது உலகில் விருத்தமாக (முரண்பாடுள்ளதாக) தோன்றுவது ஈஶனிடம் சேர்ந்து முரண்படாமல் பொருந்தும் என்று கூறுகிறது. விஷ்ணு வேதத்தினால் மட்டுமே அறியத்தக்கவர் என்பதால் சுஷ்க தர்க்கம் (வரட்டு logic) இங்கு பயன்படாது. "विचित्र शक्तिः पुरुषः पुराणः" என்பது போன்ற ஶ்ருதியினால் முரண்பாட்டை களைந்து பல விசித்திர சக்தி விஷ்ணுவிற்கு உண்டு. மேலும் விஷ்ணுவிற்க ப்ராக்ருத கண் காது இல்லாவிடினும் ஞானானந்தமயமான கை கால்கள் கொண்ட ஶரீரம் இருக்கிறது என்பதால் ஜகத்கர்த்ருத்வம் பொருந்தும்.

  

## 2.1.10 A सर्वोपेता च तद्दर्शनात् (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- உலகில் மாயாவிகளுக்கு ஶரீரம் இருப்பதால் மகாமாயாவியான ஈஶனுக்கு உடல் இருக்கவேண்டும். ஆனால் அஶரீரனாக உள்ளதாக கூறும் ப்ரஹ்மத்திற்கு மாயை எவ்வாறு பொருந்தும்.

ஸித்தாந்தம் :- சாதாரண மனிதர்களுக்கு கல் மண் சிமென்ட் போன்ற வெளிஸாதனங்களை வைத்துக் கொண்டுதான் வீடு கட்ட முடியும் என்ற நியமம் இருந்தாலும் இந்திரஜால வித்தை உடையவன் வெளிஸாதனங்கள் எதுவும் இல்லாதபடியே பல படைப்புகளை தோற்றுவிப்பதை போல லௌகீக மாயாவிகளுக்கு ஶரீரம் தேவைப்படுவதானாலும் ப்ரஹ்மத்திற்கு ஶரீரமும் தேவையில்லாமலே மாயாவித்வம் வர முடியும். உலகில் மாயாவிகள் வெளிஸாதனங்கள் இல்லாமலேயே படைப்பதை நாம் கண்களால் ப்ரத்யக்ஷமாக பார்ப்பதால் அது ப்ராமாணிகம் ஆகிறது. ப்ரஹ்மம் அஶரீரமானாலும் மாயை உண்டு என்பதற்கு என்ன ப்ரமாணம் என்றால் மாயின் து மஹேஶ்வரம்" என்று கூறும் ஶ்ருதிதான் ப்ரமாணம். எனவே அஶரீர ப்ரஹ்மத்திற்கு மாயை பொருந்தும்.

இந்த அதிகரணம் விஶிஷ்டாத்வைதிகளுக்கு சென்ற அதிகரணத்தின் பகுதியே. தனி அல்ல.

அதேபோலவே மத்வமதத்திற்கும் தனியான அதிகரணமாக ஏற்கவில்லை. எனவே இந்த இரு மதத்திலும் இந்த அதிகரணம் தனியாக கணக்குப்படுத்தப் படவில்லை.

## 2.1.11 A न प्रयोजनवत्वात् (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- ஈஶ்வரனுக்கு நித்யத்ருப்தத்வம் உண்டானால் ஏதோ ஒரு பயனை கருதி படைப்புகளை செய்கிறார் என்பது பொருந்தாது. ஒன்றையும் கருதாமல் பயனில்லாமல் ஏதோ படைப்பை

உண்டுபண்ணுகிறார் என்றால் ப்ரஹ்மம் பைத்தியம் போல் ஆகிவிடும். எனவே ப்ரஹ்மம் ஸ்ருஷ்டிக்கு காரணமாகாது.

ஸித்தாந்தம் :- நல்ல புத்தியுள்ள அரசன் போன்றவர்களும் கூட வேட்டை விளையாடுவதனால் பயன் ஏதும் இல்லாவிடினும் வினோதமாக அந்த செயலை செய்கின்றனர். நாமும் விசேஷமான வெளி பயன் ஏற்படாவிடினும் யாவரும் மூச்சுவிடும் செயலை ஓயாமல் செய்கிறோம் அன்றோ. அதுபோல் நித்யதிருப்த ஸர்வஞனும் படைப்பை செய்யமுடியும். படைப்பு இத்தனை பெரிய தொழிலாக நமக்கு தோன்றினாலும் ஈசனுக்கு இது ஒரு எளிய விளையாட்டாகும். விளையாட்டிற்கு தனிப்பயன் கற்பிப்பது உண்டோ? ஆகையால் ஈசன் உலகை படைப்பதில் குற்றம் யாதும் இல்லை.

விஶிஷ்டாத்வைதமதத்தின்படி இந்த அதிகரணம் அத்வைதமதப்படி वैषम्याधिकरणम्, सर्वधर्माधिकरणम् (2.1.12, 2.1.13) ஆகிய அடுத்த இரண்டு அதிகரணங்களுடன் சேர்ந்து ஒரே அதிகரணமாகிறது. எனவே அதன்படி பார்ப்போம் (பிரயோஜனத்வாதிகரணம்)

## 2.1.10 V न प्रयोजनवत्वात् (5 सूत्राणि)

## (அத்வைதப்படி - 6 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- நாராயணர் நித்யத்ருப்தர் என்பதில் ஸந்தேஹம் மில்லை. எனவே அவருக்கு ஸ்ருஷ்டி பண்ணுவதால் ப்ரயோஜனம் புதியதாக உண்டாக முடியாது. ப்ரயோஜனம் ஏதும் இல்லாமலேயே ஸ்ருஷ்டி தொழில் செய்வார் என்றால் அவருக்கு புத்தி ஸ்வாதீனம் இல்லை (பைத்தியம்) என்றல்லவா ஆகிவிடும்! தனக்கு பயன் இல்லாவிட்டாலும் ஜீவர்களுக்கு பயன் என்றும் கூற முடியாது. ஸ்ருஷ்டியினால் துன்பங்கள் தானே நமக்கு மிகுதியாக ஏற்படுகிறது. பிறப்பை யாரும் விரும்புவதில்லையே! மேலும் இவ்விதம் ஜீவனுக்கு விரும்பாத துன்பத்தை தருவதால்

  

நாராயணருக்கு கருணையே சற்றுமில்லாமல் க்ரூரத்தன்மை ஏற்படுமே! எனவே நாராயணர் ஸ்ருஷ்டி கர்த்தா அல்ல.

ஸித்தாந்தம் :-அரசனானாலும் கூட எவ்வாறு பந்து விளையாட்டு போன்ற செயல்கள் லீலையாக அமைகிறதோ அவ்வாறே ஈஶனுக்கு உலகப்படைப்பு ஒரு விளையாட்டு. இதனால் அவருக்கு பயன் ஏற்பட தேவையில்லையே. விளையாட்டுகளுக்கு பயன் கற்பிப்பது ஸரியன்று. உலகின் தாரதம்யமான சுகதுக்கங்களை ஏன் படைக்கிறார், மனித, தேவ,நாகஶரீரங்களை ஏன் வேறுபட்டதாக தோற்றுவிக்கிறார்? இதனால் இவருக்கு பாரபக்ஷம், க்ரூரத்வம் போன்ற தோஷங்கள் ஏற்படும் என்று எண்ண வேண்டாம். ஏனெனில் சுக்கதுக்க தாரதம்யம், உடற்கூற்றின் வேறுபாடு போன்ற யாவும், அவரவரின் புண்ய பாப செயல்களை அனுஸரித்து தரப்படுகின்றன. விதவிதமான பயிருக்கு (எள்ளு, கொள்ளு, நெல்.. முதலியன) அந்தந்த விதைதான் முக்கிய காரணம், மழை பொதுவான காரணம் என்பது போல் இங்கும் விஷமமான படைப்பிற்கு முக்கிய காரணம் புண்ய பாபங்கள்தான். விஷ்ணு மழை போன்றவர். மேலும் பரமாணு, ப்ரதான காரண வாதங்களில் ஏற்பட முடியாத பற்பல சக்திகள் ஈஶனுக்கு உண்டு. விஷ்ணுதான் ஜகத்கர்த்தா.

## 2.1.9 D न प्रयोजनत्वात् (2 सूत्रे)

(மத்வமதப்படி இது அத்வைதம்போல் தனியான அதிகரணம்தான்.)

பூர்வபக்ஷம்:- நம்மைப் போலவே விஷ்ணுவிற்கு ஸ்ருஷ்டியினால் பயனிருந்தால் நித்யத்ருப்தத்வம் போய்விடும். பயன் இல்லாவிடில் அவருக்கு பயனற்ற தொழிலில் ஈடுபாடு

ஏற்பட்டால் பைத்தியத்தன்மை ஏற்படும். எனவே விஷ்ணு ஜகத்கர்த்தா அல்ல.

ஸித்தாந்தம் :- देवस्यैष स्वभावोयम् என்று விஷ்ணுவிற்கு படைப்பு என்பது இயல்பான தன்மை என்பதாக கூறப்பட்டுள்ளதால், இயல்பான கண்கொட்டுதல் போன்ற செயலுக்கு பயன் கேட்பது பொருந்தாது. மேலும் இவருக்கு ஸ்ருஷ்டி என்பது விரலை அசைப்பது போல் சுலபமானது. எனவே விஷ்ணுவிற்கு ஜகத்ஸ்ரஷ்ட்ருத்வம் பொருந்தும்.

## 2.1.12 A वैषम्यनैर्घृण्ये न सापेक्षत्वात्तथाहि दर्शयति (3 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- உலகங்களில் தேவர்கள், மனிதர்கள், பசுபக்ஷிகள் என்று தராதரமுள்ள சுகதுக்கவேறுபாடுகள் உள்ள விஷமமான படைப்பை ஏற்படுத்தும் கடவுளுக்கு பாரபக்ஷமும், உலகத்தையும் ப்ரளயத்தில் அழிப்பதால் மிகமிக க்ரூரத்தன்மையும் ஏற்படுமே! எனவே ஈசன் துஷ்டனாக (கெட்டவனாக) ஆகிவிடுவார் என்பதால் கடவுள் ஜகத்காரணம் அல்ல.

ஸித்தாந்தம் :- வெவ்வேறு பயிர்களுக்கு அந்தந்த விதைதான் காரணம் என்பதால், பொதுவான காரணமான மழைக்கு பாரபக்ஷம் கூற முடியுமா? (தாரதம்யமாக மதிப்பெண்கள் தரும் பரீக்ஷகருக்கு மாணவர்களிடம் பாரபக்ஷ தோஷம் உண்டா?) ப்ரளயத்திலும்கூட யாவருடைய புண்ணியபாபங்களின் ஸூக்ஷ்ம-நிலை தொடர்வதால், முதன்முதல் படைப்பு எவ்வாறு தாரதம்யம் உடையதாக ஆகும் என்று கேட்க முடியாது. உலகம் அநாதியானது. सूर्याचन्द्रमसौ धाता यथापूर्वमकल्पयत् என்று உலகம் யாவும் ப்ரவாஹம் போல் அநாதியானது என்று கூறப்படுகிறது. எனவே யாதொரு தோஷமும் கடவுளுக்கு இல்லை. ப்ரளயம்

  

என்பது ஒய்வு தருவதுதான்! அருளின் செயலே! க்ரூரத்தன்மை ஆகாது அன்றோ!

விஶிஷ்டாத்வைதப்படி இந்த அதிகரணம் தனியல்ல.

## 2.1.10 D वैषम्यनैर्घृण्ये न सापेक्षत्वात्तथाहि दर्शयति (3 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- விஷ்ணு ஸர்வகர்த்தாவா? இல்லையா? என்று ஸந்தேஹம் ஏற்பட்ட பிறகு அவர் ஸர்வகர்த்தாவானால் (அதன் பயன் தனக்கு இருக்க முடியாது, நித்யத்ருப்தன் அல்லவா?) அதன் பயன் மற்றவருக்கு என்றால் படைப்பின் வேறுபாடு, சுகதுக்க-தாரதம்யம் தன்னிஷ்டப்படி செய்தால் பாரபக்ஷம் வரும், க்ரூரத்வமும் வரும். அவரவர் புண்யபாபப்படி படைத்தாலும் கூட, புண்ய பாபச்செயல்களும் விஷ்ணுவின் அதீனமானதால் மறுபடி பாரபக்ஷம் ஏற்படவே செய்யும். செயல்கள் புண்ணிய பாபங்கள் விஷ்ணுவிற்கு அதீனமல்ல என்றால் விஷ்ணுவிற்கு ஸ்வாதந்த்ரயம் போய்விடும். எனவே விஷ்ணு ஜகத்காரணம் ஆக முடியாது.

ஸித்தாந்தம் :- உலகம், புண்ணிய பாபங்கள் யாவும் அனாதியானது. விஷ்ணு முந்தைய முந்தைய கர்மாவை அனுஸரித்துத் தூண்டிவிட்டு புண்ணிய பாபச்செயல்களை பண்ணுகின்ற ஜீவர்களுக்கு அதற்கேற்ப சுகதுக்க, சரீராதிகளை தருவதால் இவருக்கு பாரபக்ஷம், க்ரூரத்வம் என்ற எந்த தோஷமும் கிடையாது. எனவேதான் समोऽहं सर्वभूतेषु நான் யாவருக்கும் ஸமம் என்று கூறப்படுகிறது. விஷ்ணுவிற்கு ஸ்ரஷ்ட்ருத்வம் பொருந்தும்.

## 2.1.13 A सर्वधर्मोपपत्तेश्च (1 सूत्रम्)

ஸந்தேஹம் + பூர்வபக்ஷம் :- நிர்குணமானப்ரஹ்மத்திற்கு ப்ரபஞ்ச உபாதானகாரணத்வம் பொருந்துமா பொருந்தாதா?

என்ற ஸந்தேஹத்திற்கு பூர்வபக்ஷமாக - குடம் முதலிய கார்யங்களாக பரிணமிக்கும் குணமுள்ள களிமண்தானே உபாதானகாரணமாகிறது என்று பார்த்தால் நிர்குணமான ப்ரஹ்மம் உபாதானகாரணமாக ஆக முடியாது- என்று ஆக்ஷேபம்.

ஸித்தாந்தம் :- அத்வைதத்தில் ப்ரமைக்கு ஆதாரமான (கயிறு போன்றவை) பொருள்தான் உபாதானம் என்று கூறப்படுகிறது. प्रक्रियते = विक्रियते इति प्रकृति: என்ற விவரப்படி மாறுதல் ஏற்படுகிறது ப்ரக்ருதி (உபாதானகாரணம்) என்று பூர்வபக்ஷத்தின் அபிப்ராயம். ஆனால் "தான் மாறாமலேயே வேறு பொருள் போல் மாறிக் காட்சி அளித்தல் என்று ஒரு வகை ப்ரக்ருதித்வம் (உபாதானத்வம்) காணப்படுகிறது. கயிறு பாம்பிற்கு உபாதானம் ஆவது இப்படித்தான் அன்றோ. எனவே நிர்குண ப்ரஹ்மத்திற்கு ப்ரமாதிஷ்டானத்வம் என்ற உபாதானத்வம் பொருந்தும். நிர்குணமான ஜாதியில் ப்ரமை ஏற்படுகின்றதல்லவா "ப்ராஹ்மணரிடத்தில் க்ஷத்திரியன் இவன்" என்று ப்ரமை வருகிறதே!

இந்த அதிகரணம் முந்தியே விஶிஷ்டாத்வைதத்தில் சேர்ந்து விவரிக்கப்பட்டுவிட்டது.

## 2.1.11 D सर्वधर्मोपपत्तेश्च (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- தோஷம் சிறிதும் அற்ற குணபரிபூர்ணத்வம் விஷ்ணுவிற்கு முன்பே கூறப்பட்டது, இந்த அதிகரணத்தில் முடிவாக கூறப்படுகிறது. "விஷ்ணு, தோஷமற்ற குணபூர்ணன் அல்ல, சேதனனாக இருப்பதால், சைத்ரன் போலே" என்ற அனுமானத்தினால் விரோதம் வருகிறதே.

ஸித்தாந்தம் :- "விஷ்ணு எப்போதும் ஸர்வ குணம் பொருந்தியவர், அந்த நிலையை அடைய விரும்பி அதில் திறமை கொண்டதால்"

என்ற அனுமானத்தினால் சதா ஸர்வ குணமும் கொண்டவர் விஷ்ணு. மேலும் " விஷ்ணு ஸர்வதோஷமும் தொடாதவர், தோஷங்களை விலக்குவதை விரும்பி அதற்கு சக்தி இருப்பதால்" என்று அனுமானத்தினால் தோஷ ரஹிதத்வம் ஏற்படுவதோடு "गुणा: श्रुता ह्यविरुद्धाश्च देवे" (ஸௌபர்ண/ஜாபாலி) என்ற ஶ்ருதியும் ப்ரமாணமாகிறது.



## இரண்டாம் பாதம்

இந்த பாதத்தில் 8 அதிகரணங்களிலும் ஸாங்க்ய, தார்க்கிக, பௌத்த, ஜைன, பாசுபத, பாஞ்சராத்ர போன்ற த்வைத மதங்களில் உள்ள குறைகளை கூறி அவைகள் நம்மால் பின்பற்ற வேண்டாம், நம் மதத்திலேயே திடமாக இருப்போம் என்ற கருத்தில் பிறமதங்களை அலசி குறைகள் கூறப்படுகின்றன. பிறரை கண்டிப்பது நமது நோக்கமல்ல.

## 2.2.1 A रचनानुपपत्तेश्च नानुमानम् (10 सूत्राणि)

**பூர்வபக்ஷம் :-** உலகில் சுகம் துக்கம் மோகம் என்று மூன்று தன்மைகள் காணப்படுவதால், இதற்கேற்ற, ஸமமான முக்குணம் (ஸத்வ, ரஜஸ், தமஸ்) கொண்ட ப்ரதானம்தான் ஜகத்திற்கு காரணமாக இருக்க முடியும். குடம் வஸ்த்ரம் போன்றவைகள் பல பயன்களை தருவதால் சுகமளிக்கின்றன. அவைகள் பிறரால் அபகரிக்கப்பட்டால் துன்பம் தருகின்றன. உபயோகப்படாத வேளையில் உபேக்ஷிக்கப்படுகின்றன. எனவே ப்ரதானம்தான் உபாதான காரணம்.

**ஸித்தாந்தம் :-** ப்ரதானம் ஒருகாலும் ஜகத்காரணமாக ஆகவே முடியாது. பல பல விசித்ரமான, ஆச்சர்யமூட்டும் இந்த பரந்த உலகத்தை ஜடம் எவ்வாறு படைக்க முடியும்? படைப்பது இருக்கட்டும்; அதற்கான பூர்வ ஆலோசனை கூட ப்ரதானத்தால் செய்ய முடியாது. ஏனெனில் ஒரு சிறிய பங்களா கூட உலகில் பல நிபுணர்களின் ஆலோசனையினால்தான் கட்டப்படுகின்றன. மேலும் ஆலோசனை, முயற்சி, செயல்பாடு, படைப்பு என்ற வரிசையில் படைப்பிற்கு முன்பான மூன்றுமே சேதனனின் தன்மையன்றோ! இதன் பரிகாரத்திற்காக சேதனனான புருஷன் ப்ரதானத்தை தூண்டுகிறான் - என்று கூறினால் தங்கள்

ஸித்தாந்தத்திற்கு - புருஷன்- அஸங்கன் ஒட்டாதவன்- பட்டுக் கொள்ளாதவன் என்பதற்கு விரோதம் வரும். மேலும் சுகம் துக்கம் மோஹம் என்ற மூன்றும் மனதின் குணம், இவை குடம் வஸ்திரம் போன்ற வெளிபொருளின் பால் சேர்ந்ததன்று. எனவே சேதனனான ப்ரஹ்மம் தவிர, ப்ரதானம் காரணமாக முடியாது.

## 2.2.1 V रचनानुपपत्तेश्च नानुमानम् (9 सूत्राणि) (=அத்வைதம் 10)

பூர்வபக்ஷம் : அதே பூர்வபக்ஷம்தான்

ஸித்தாந்தம் :- இதுவும் அத்வைதம்போல்தான் என்பதால் விரோதம் அதிகம் இல்லை. பரமதநிராகரணத்தில் வேறுபாடு எவ்வாறு வரும்?

மத்வமதத்தில் இந்த அதிகரணமானது ஐந்து அதிகரணங்களாக கணக்கிட்டு விவரிக்கப்படுகிறது. {[4+1+1+2+4] = [सेश्वर साङ्ख्य + निरीश्वरसाङ्ख्य + चार्वाक + जीवोपसर्जन अचेतन + अचेतनोपसर्जन-कर्तृकत्वमतानां निरास:] = ஈஶ்வரனை ஏற்கும் ஸாங்க்யம் + ஏற்காத ஸாங்க்யம் + சார்வாகம் + ஜீவனை துணை கொண்டஶரீரம் + ஶரீரத்துணை கொண்ட ஜீவன் - என்று பிரிவு}

## 2.2.1 D रचनानुपपत्तेश्च नानुमानम् (4 सूत्राणि)

ஸந்தேஹம் :- ஜன்மாதி ஸூத்ரத்தில் கூறிய விஷ்ணுவிற்கு ஸர்வகர்த்ருத்வம் பொருந்துமா? பொருந்தாதா?

பூர்வபக்ஷம் :- 1) மஹத் போன்ற கார்யப் பொருட்கள் ஸ்வதந்திர காரணத்தினால் உண்டுபண்ணப்பட்டன, கார்யமாயிருப்பதால், குடம்போல் என்ற அனுமானத்தால் ஸ்வதந்திர ப்ரதானமே காரணம் 2) ப்ரதானம், ஸ்வதந்திரமாக ப்ரவ்ருத்தி உடையது,

பொருளாக இருப்பதால் ஜலம் போலே (தானே ஓடுவது போல்) 3) ப்ரதானம், தானே மாறும் தன்மை உடையது, த்ரவ்யமாக இருப்பதால், பால் போலே'' என்ற அனுமானங்களாலும் ப்ரதானமே ஜகத்காரணம்.

ஸித்தாந்தம் :- 1) அனுமானம் எங்களுக்கும் விஷ்ணுவானவர் ஸ்வதந்திர காரணம் ஆதலால் விரோதமில்லை 2) + 3) அனுமானங்களுக்கு வேறு விரோதமான அனுமானத்தினால் தடை உள்ளது - 1) ப்ரதானம், தானாகவே முயல முடியாது, ஜடமானதால், குடம் போல் என்றும் 2) உலகமானது சேதனனால் படைக்கப்பட்டது, கார்யமாயிருப்பதால் , குடம் போலே - எனவே பூர்வபக்ஷம் தவறு. மேலும் "एतस्य वा अक्षरस्य प्रशासने गार्गी प्राच्योन्या: स्यन्दमाना: என்று ஜலத்திற்கும் ஓடுவதற்கு சேதனன் தேவை என்றும் "एतेन वाव पयो तण्डं भवति" இவரால்தான் பால் தயிராக மாறுகிறது என்றும் ஶ்ருதி கூறுவதால் பூர்வபக்ஷ காரணம் ஸரியல்ல. ஜடத்தினால் மட்டும் உலகம் படைக்கப்பட்டது இல்லை.

## 2.2.2 D अन्यत्रभावाच्च न तृणादिवत् (1 सूत्रम)

பூர்வபக்ஷம் :- தனியான ஜடமான ப்ரதானத்திற்கு கர்த்ருத்வம் வராவிடினும் ஈஶனை துணையாகக்கொண்டு ஸ்ருஷ்டிக்கலாம். இதற்கு உதாரணம் தனியான பூமியானது புல்லாக பரிணமிக்காவிட்டாலும், பர்ஜன்ய (ஜல தேவதையின்) சகாயத்தால் புல், செடிகளாக மாறுகின்றதன்றோ! எனவே விஷ்ணுமட்டுமே ஸ்வதந்திர கர்த்தா ஆகமாட்டார்.

ஸித்தாந்தம் :- "यच्च किञ्चित्जगत्सर्वं" என்ற ஶ்ருதியில் எல்லாப் பொருள்களிலும் இருப்பை (सत्ता) கொடுப்பவராக ஸர்வகதராக விஷ்ணு இருப்பதாக கூறப்படுகிறது. ஆகையால் ஈஶ்வர

ப்ரேரணை இல்லையேல் எதுவும் இருக்கவேமுடியாது. மேலும் "स एव भूयो निजवीर्यचोदितां" (भा 1.10.23) என்ற ஸ்ம்ருதியில் ப்ரக்ருதியின் ஸத்தாகூட ஈஶ்வரன் என்று கூறப்பட்டுள்ளது. எனவே ஈஶ்வரன் பர்ஜன்யன் புல்லுக்கு போல் அனுக்ரஹம் மட்டும் செய்பவரல்ல. விஷ்ணு ஸர்வகார்ய காரணங்களுக்கும் ஸத்தையை (existence) கொடுப்பவர். ஆகவே ஸாங்க்யமதம் துர்மதமானபடியால் அதனுடைய விரோதம் சாரமில்லை.

## 2.2.3 D अभ्युपगमेऽप्यर्थाभावात् (1 सूत्रम)

பூர்வபக்ஷம் :- முன் கூறியபடி ப்ரதானமோ, ஈஶ்வரனின் துணை கொண்ட ப்ரதானமோ, காரணமாக வேண்டாம். அவை அப்ரமாணமாதலால். ஆனால் விஷ்ணுவும் கர்த்தா இல்லை. ஏனெனில் ஈஶ்வரன் இல்லாமலே முன்னால் இருப்பவர் பின்னால் வருபவருக்கு இயல்பாகவே காரணம் ஆக முடியும். இளநீரிலிருந்து அல்லது மரங்களிலிருந்து தானாகவே கள்ளு உண்டாகின்றதே. ப்ரத்யக்ஷம் ஒன்று தவிர மற்ற ப்ரமாணம் கிடையாது என்பதால் முன் கூறிய அனுமானம், ஶ்ருதி விரோதம் இல்லை. புண்ணியம் பாபம் ஏதும் கிடையவே கிடையாது. ஈஶ்வரன் ஏது? அவருக்கு கர்த்ருத்வம் ஏது? ஸ்வாதந்த்ர்யம் ஏது? என்பதாக சார்வாக மதம் இடிப்பதால் விஷ்ணு கர்த்தா அல்ல.

ஸித்தாந்தம் :- ப்ரத்யக்ஷம் தவிர மற்ற ப்ரமாணங்கள் ப்ரமாணம் ஆகாதபோது, காணாத பொருளோ, அத்ருஷ்டமானதோ இல்லாததாகிறதால், சார்வாக ஶாஸ்த்ரம் வீணாகிவிடும். ஏனெனில் ஶாஸ்த்ரம் காரணத்தையே கூறவந்தது. அதனால்தான் பயன் பெறுகிறது. நாமே கண்டதில் ஶாஸ்த்ரம் எதற்கு? புண்ணிய பாபம் கண்ணுக்கு தெரியாததால் அதை எப்படி ப்ரத்யக்ஷம் நிராகரிக்க முடியும்? சார்வாகமதஸ்தன் "தர்மாதர்மம் இல்லை, கண்ணால் காணாததால்" என்று அனுமானம் கூறமுடியாதன்றோ. இவ்விதமாக

சார்வாக மதத்திற்கு விஷயம், ப்ரயோஜனம் இரண்டும் கிடையாது. பரமதுஷ்டமான இம்மதத்தின் விரோதம் மிகவும் சட்டை-செய்யத்தகாதது!

## 2.2.4 D पुरुषाश्मवदिति चेत् तथापि (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- ஜடமான ப்ரதானம் மட்டும் காரணம் ஆகா-விட்டாலும், சேதனனான புருஷனை துணைகொண்டு ப்ரதானம் காரணம் ஆகலாம். ஜடமான உடலானது கல்லை தூக்கி கொண்டு வருவதால் தனியே காரணம் ஆகாவிட்டாலும், ஜீவஸம்பந்தத்தினால் கல் தூக்கிக்கொண்டு வருதல் நடை-பெறுகிறது அன்றோ! எனவே "ஸ்ருஷ்டி முயற்சியானது ஜீவனை துணைகொண்ட அசேதனனால் ஏற்படுகிறது, ப்ரவ்ருத்தி (முயற்சியாக இருப்பதால்) கல் தூக்கும் முயற்சி போலே" என்ற அனுமானத்தின் மூலம் ஜீவனை துணையுடைய ப்ரதானத்தினால் வரமுடியும் என்பதால் புருஷோபஸர்ஜன-ப்ரதானகாரணவாதம் ஜயிக்கும். அதோடு வேதாந்தம் மோத முடியாது.

ஸித்தாந்தம் :- "न ऋते त्वत्क्रियतेकिञ्चनारे" போன்ற ஶ்ருதிகளில் ஶரீரப்ரவ்ருத்திக்கும் ஈசாதீனத்வம் சொல்லப்படுகிறது. மேலும் ஜீவன் அங்கம் (unimportant) ஶரீரம் அங்கீ (main) என்றால் உலக வ்யவஹாரம் நடைபெறாது. பிரமாணமும் இல்லை. எனவே இம்மதமும் ஏற்கத்தகாததே.

## 2.2.5 D अन्यथानुमितौ च ज्ञशक्तिवियोगात् (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- ஜீவன் அங்கம், உடல் அங்கீ என்பது ஸரியில்லை என்றாலும் மாறாக உடல் உபஸர்ஜனம் ஜீவன் முக்கியன் என்று

  

ஏற்றால் முன் கூறிய உதாரணப்படி ஈஶன் தேவையில்லை. எனவே புருஷனை முக்கியமாக கொண்டு ப்ரதானம் காரணமாகமுடியும் என்பதால் ஈஶனே சித்திக்காதபோது (தேவையற்றபோது) கர்த்ருத்வம் அவருக்கு எப்படிவரும்? முன்கூறிய ஶ்ருதி, ப்ரமாணம் ஆகாது.

ஸித்தாந்தம் :- இவ்வாறு வேறுவிதமாக அனுமானம் சொன்னாலும்கூட, இங்கு வேறு குறை உள்ளது. ஜீவன் உடல் இல்லாமலேயே சக்தனாக இருந்தால் ஶரீரம் தேவையில்லை. அவ்வாறு இல்லையானால், உடலின் தொடர்புக்காக ப்ரவ்ருத்தியிலும் அசக்தனாவான் என்பதால் இவனுக்கு (ஜீவனுக்கு) அங்கித்வம் (முக்யத்வம்) வராது. ஈஶனால் தேஹ ஸம்பந்தம் ஏற்படுத்தப்பட வேண்டும் என்று ஏற்படுவது திண்ணம். இவ்வாறு இருப்பின் கல்லைக்கொண்டு வருவதிலும் இவ்வாறே கூறலாம் என்பதால் பூர்வபக்ஷம் ஏறாது.

## 2.2.2 A महद्दीर्घवद्वा ह्रस्वपरिमण्डलाभ्याम्

(1 सूत्रम्)

சேதனமான ப்ரஹ்மத்திலிருந்து விலக்ஷணமான (அசேதனமான) உலகம் உண்டாவதற்கு ஏதேனும் த்ருஷ்டாந்தம் இல்லாததால் ப்ரஹ்மகாரணவாதம் தவறு என்று தார்க்கிக (கணாதமுனி மதம்) மதத்தினர் கூறுவார் என்றால், அதற்கு பதில் இந்த அதிகரணம். கணாதமதத்திலேயே உதாரணம் காட்டுவதற்காக ஏற்பட்டது.

பூர்வபக்ஷம் :- காரணத்திலிருந்து வேறுஜாதியுடைய கார்யம் ஏற்படுவதில்லை. நூலிலிருந்து எண்ணெய் வருமா? ஸாங்க்யமதப்படி இந்த கேள்விக்கு சாணத்திலிருந்து தேள் வருவதை முன்பு கூறியிருப்பினும் இங்கு வைசேஷிகத்திலேயே உதாரணம் வேண்டும் என்று பிடிவாதம் இருப்பின் அதற்காக

இந்த ஸூத்ரம் வருகிறது. வேறுபட்டதன்மையுள்ள பொருள்கள் ஒன்றுகொன்று கார்யகாரணமாக இருக்க முடியாது. நீலமான வேஷ்டி நீலமான நூலிலிருந்து தானே வரும். சிவப்பு நூலிலிருந்து வருமோ?

ஸித்தாந்தம் :- மிகச்சிறு அளவு (size) உள்ள பரமாணுவிலிருந்து, இரண்டு சேர்ந்து அணுக்கள் வருகின்றன என்பது உங்கள் மதத்திலேயே கூறப்படுகிறது. பரமாணுக்களில் அணுபரிமாணம் கிடையாது. மேலும் த்வயணுகத்திலிருந்து (ஹ்ரஸ்வ-பரிமாணத்திலிருந்து) தீர்க்க பரிமாணம் இல்லாததாயிருந்தும் மூன்று த்வயணுக்களிலிருந்து தீர்க்க பரிமாணம் உள்ள த்ரயணுவும் உண்டாகிறது மற்றொரு உதாரணம். எனவே காரண கார்யங்களுக்கு ஒரே தன்மை அல்லது ஒத்ததன்மை இருப்பது நிர்பந்தமில்லை/ கட்டாயமில்லை.

## 2.2.2 V महद्दीर्घवद्वा ह्रस्वपरिमण्डलाभ्याम् (7 सूत्राणि)

(இங்கு அத்வைத மதப்படி समुदाय उभयहेतुकेपि तदप्राप्तिः என்ற அடுத்த அதிகரணமும் சேர்ந்தது)

ஈஶ்வரனை ஒத்துக்கொண்டு அவரால் தூண்டப்பட்ட பரமாணுக்கள்தான் ஜகத்காரணம் என்ற வைசேஷிக மதத்தை தூஷிப்பதற்காக இந்த அதிகரணம்.

இந்த ஸூத்ரத்தில் முன் ஸூத்ரத்திலிருந்து असमञ्जसं= பொருத்தமற்றது - என்ற பதத்தை அனுவ்ருத்தி பண்ணி, உங்கள் மதம் பொருத்தமற்றது, பரமாணுவிலிருந்து த்வயணுகமும், த்வயணுகத்திலிருந்து த்ர்யணுக்கள் உண்டாவதாக கூறுகிறார்கள் என்பதாலும் பல காரணங்களாலும்

உங்கள் மதம் ஸரியன்று. (ஸரியானால் எங்கள் மதமும் ஸரி). மேலும் உறுப்புகள் இல்லாத பரமாணுக்களிலிருந்து இரண்டு சேர்ந்தால் எப்படி சேர முடியும்? பரமாணுக்கள் ஆகிற உறுப்புகள் ஒத்துக்கொண்டால் அநித்யத்வம் வரும். இவ்வாறு உங்கள் மதத்தில் ஸமவாயம் என்ற ஒரு தொடர்பு கார்யகாரணங்களுக்கு கூறுவதும் யுக்திக்கு உகந்தது அன்று. மேலும் ஸமவாயம் நித்யமாக கூறுவதால் அதோடு தொடர்பு கொண்ட குடமும் நித்யம் ஆகும். இவ்வாறு பல விதத்தில் தார்க்கிகமதம் ஸரியில்லை.

## 2.2.6 D महद्दीर्घवद्वा ह्रस्वपरिमण्डलाभ्याम् - (7 सूत्राणि) (விஶிஷ்டாத்வைதம் போன்று)

**ஸந்தேஹம் :-** விஷ்ணுவிற்கு அனந்தகுணவத்வம் ஸரியா? இல்லையா?

**பூர்வபக்ஷம் :-** அனந்தகுணவத்வம் கிடையாது, பொருந்தாது. ஈஶ்வரன், ஆத்மா இருவருக்கும் த்ரவ்யமாக இருப்பதால் எண்ணிக்கை, பரிமாணம் (அளவு), ஸம்யோகம், ப்ருதக்த்வம், விபாகம்- என்றதான ஐந்து குணங்கள் தேவை. கர்த்ருத்வத்திற்கு தேவையான அறிவு, இச்சை, ப்ரயத்னம்- என்று மூன்ற குணங்கள் தேவை. இவ்வாறு எட்டு குணங்கள் தவிர வேறு குணங்கள் எப்படி வர முடியும்? ஜீவனுக்கு எட்டு தவிர சுகம், துக்கம், த்வேஷம், ஆசை, தர்மம், அதர்மம் என்ற 6 குணங்கள் அதிகம் உண்டு (14 குணங்கள்). இது கூட இல்லாத விஷ்ணுவிற்கு அனந்த குணம் ஏது?

**ஸித்தாந்தம் :-** வைசேஷிகர்கள் பொருத்தமற்றவையே பேசுவார்கள் என்பதால் ப்ராமாணிகர்கள் அல்ல. ஏனெனில் பிரமாணங்களுக்கு ஸரி வராத ஸ்ருஷ்டிப்ரக்ரியையை தருகின்றனர். அவர்களை

நம்பமுடியாது, கூடாது. ஸ்ருஷ்டி விஷயத்தில் அவர்கள் கூறுவது என்றும் பொருந்தாது என்று அத்வைத, விஸிஷ்டாத்வைத மதரீதியால் இங்கு வர்ணிக்கப்படுகிறது. மேலும் परमाणवः, अनित्याः, रूपादिमत्वात्, घटवत् என்ற (நிறம் போன்ற குணங்கள் இருப்பதால், குடம் போலவே பரமாணுக்கள் அநித்தியம்தான்) அனுமானப்படி அவர்களுடைய ஆதாரமான ஆரம்பமே தவறு. மேலும் "आन्वीक्षिकीं तर्कविद्यां अन्वर्त्तो निरर्थिकाम् என்று (भारत शा. 180.47) பாரதம் கூறியது போல் அவர்களின் கொள்கை/மதத்தை பின்பற்றி நம்பினால், மறுபிறவி நரியாக பிறக்க நேரிடும் என்பதால் இம்மதம் முழுமையாக துர்மதமே.

## 2.2.3 A उभयथापि न कर्मातस्तदभाव:(6 सूत्राणि)

தார்க்கிக மதத்தை கண்டிப்பதற்காக இந்த அதிகரணம்.

பூர்வபக்ஷம் :- உலகம் லயிக்கும்போது ஈஶ்வரன் எப்போது ஸ்ருஷ்டி பண்ண விரும்புகிறாரோ, அப்போது பரமாணுக்களில் (atoms) அசைவு ஏற்பட்டு ஒவ்வொன்றாக விஶேஷ ரீதியில் சேர்ந்து இத்தனை பெரிய உலகம் ஏற்படுகிறது. எனவே பரமாணுக்கள்தான் ஜகத்காரணம் என்பது (ஆரம்பவாதம்) ஸரியே.

ஸித்தாந்தம் :- ஸ்ருஷ்டி கால தொடக்கத்தில் பரமாணுக்களில் ஏற்படும் முதல் அசைவிற்கு காரணம் இல்லாவிடில், கட்டுபடுத்தும் காரணம் இல்லாததால் ப்ரளய காலத்திலும் கூட படைப்பு ஏற்படலாம். காரணம் உண்டு என்றால், அது த்ருஷ்டமா? அத்ருஷ்டமா? த்ருஷ்டமான காரணமாக இருக்க கூடியதான முயற்சி (प्रयत्न:) மோதல் (अभिघातम्) இரண்டுமே ப்ரளய காலத்தில் சரீரமற்ற நிலையில் ஏற்படமுடியாது. எனவே காரணம் இருக்க வாய்ப்பு இல்லை. "ஈஶனுடைய யத்னம் காரணமாகலாம் என்று கூறினால்,

அது நித்யமானதால் அதை கட்டுப்பாடு செய்ய யாரும் இல்லாததால், எப்போதும் அசைவு ஏற்பட்டு, ப்ரளயத்திலும் ஸ்ருஷ்டி வரலாம். ஜீவர்களுடைய புண்ய-பாபம் கட்டுப்படுத்தும் என்று கூறினால், அந்த புண்ணிய பாபம் ஆத்மாவில் மட்டுமே சம்பந்தபட்டிருப்பதால் பரமாணுவின் அசைவிக்கு காரணமாக முடியாது. எனவே பரமாணு ஜகத்காரணம் என்பது தவறு. மேலும் பெரியோர்கள் (சிஷ்டர்கள்) இம்மதமான தர்க்கத்தை, சற்றும் சீண்டுவதில்லை என்பதால் இம்மதம் பின்பற்றத் தகுதி இல்லை.

## 2.2.4 A समुदाय उभयहेतुकेऽपि तदप्राप्तिः

(10 सूत्राणि)

பௌத்த மதத்தின் ஒரு பிரிவை - வெளிப்பொருட்களை அங்கீகரிக்கும் பிரிவை கண்டிப்பதாக இந்த அதிகரணம்.

பூர்வபக்ஷம் :- பௌத்தர்களில் வைபாஷிகனின் வெளி பொருளை ஏற்கும் மதத்தில் இரண்டு சமூஹம் 1) பாஹ்யம் (external) 2) அந்தரம் (internal). 1) வெளி உலகமான பூமி, சமுத்ரம் முதலியன 2) சித்தம், சைத்யம். வெளிசமூஹத்திற்கு பரமாணுக்கள் காரணம். நான்குவிதமாக பரமாணுக்கள் 1) ப்ருத்வீ -கடினமானவை 2) ஜலம் - ஒட்டிக்கொள்ளும் த்ரவம் 3) உஷ்ணமானவை - தேஜஸ் 4) அசைதலுள்ள வாயு பரமாணுக்கள். இவைகள் ஒரே ஸமயத்தில் ஒன்றாக சேர்ந்து பூமி, சமுத்ரம் போன்றவைக்கு காரணம்.

II ) உள் சமுதாயத்திற்கு சித்த சைத்யத்திற்கு ஐந்து ஸ்கந்தங்கள் காரணம் 1) ரூப ஸ்கந்தம் 2) விஞ்ஞான ஸ்கந்தம் 3) வேதனா ஸ்கந்தம் 4) ஸம்ஞா ஸ்கந்தம் 5) ஸம்ஸ்கார ஸ்கந்தம். இந்த ஐந்து ஸ்கந்தங்களையும் ஒரேடியாக சேர்த்து உள் சமுதாயம் உண்டு-பண்ணப்படுகிறது. (எனவே ப்ரஹ்மம் காரணம் அல்ல.)

ஸித்தாந்தம்:- இம்மதம் ஸரியல்ல. அணுக்களுக்கும் ஸ்கந்துங்களுக்கும் சேருவதற்கு சேதனனான ஒருவன் தனியாக இருக்கிறானா? அல்லது தானாகவே சேருகின்றனவா? சேதனன் உண்டு என்றால் அவன் ஸ்திரமானவனா? க்ஷணிகனா? ஸ்திரம் என்றால் மதக் கொள்கைக்கு தவறு. (ஸர்வம் க்ஷணிகம் அல்லவா?) க்ஷணிகன் என்றால் இவனால், தான் ஏற்பட்ட பிறகு சமூகத்தை உண்டுபண்ணுவது பொருந்தாது. தானாகவே இவைகள் சேருகின்றன என்றால், இது நடைமுறைக்கு ஒவ்வாது. ஜடமானபடியால் முறையே சேருவது பொருந்தாது. எனவே விசித்ரமான, ஆச்சர்யமான உலகின் படைப்பு ஏற்பட முடியாது.

## 2.2.3 V समुदाय उभयहेतुकेऽपि तदप्राप्ति:

(10 सूत्राणि)

பூர்வபக்ஷ ஸித்தாந்தங்களில் விசேஷம் ஏதும் இல்லை. உலகம் எல்லாம் க்ஷணிகம் என்று கொள்கை உடைய உங்கள் மதத்தில் சமுதாயம், அது உண்டாவது மற்றவை உண்டுபண்ணுவது, மேலும் குடம் போன்ற பொருள் க்ஷணிகம் ஆனால் அவைகளோடு கண் சேர்ந்து ஞானம் உண்டுபண்ணுவது அரிதாகும்; காரணத்வம் பொருந்தவே பொருந்தாது. எனவே இந்த மதத்தில் புருஷார்த்தம் அடைய மனிதர்களின் முயற்சியே வீணாகும். எனவே இம்மதம் சம்மதமானது அன்று. இவ்வாறு பௌத்தத்தின் பிரிவான பாஹ்யவஸ்து ஏற்கும் மதம் நிராகரிக்கப்பட்டது.

## 2.2.7 D समुदाय उभयहेतुकेऽपि तदप्राप्ति:

(8 सूत्राणि)

பூர்வபக்ஷம் : முன் கூறியபடி ஐந்து ஸ்கந்தங்கள் (ரூப, விஞ்ஞான, வேதனா, ஸம்ஞா, ஸம்ஸகார) வடிவமாக உள்ள, பரமாணுக்களின்

கூட்டமான சமுதாயத்திலிருந்து உலகம் தோன்றுகிறது. பரமாணு சமுதாயமே குடம் என்பது, புதியதாக செய்யப்பட்டது அல்ல; எல்லாம் க்ஷணிகமே. தீபஜ்வாலைபோல் வெவ்வேறு ஆனாலும், குடம் போன்றவை "அதே குடம்" என்று தவறாக உரைக்கப்படுகிறது. "எல்லா உலகமும் காலம், கர்மாவினால் உண்டாகலாம் என்பதால் ஈஶன் யாரும் கிடையாது", என்ற பௌத்த மதம் ஸரியே. வைபாஷிகன் ஸௌத்ராந்திகர்களின் கொள்கை.

ஸித்தாந்தம் :- மேற்கூறிய இருவர்களின் வாதம் பொருந்தாது. எனவே விஷ்ணுதான் கர்த்தா. க்ஷணிகமாக எல்லாம் இருப்பதாக கூறும்போது சேருவது, சேர்ந்து சமுதாயம் ஏற்படுவது என்பது முயல் கொம்புதான். எனவே இம்மதம் ஸரியில்லை.

## 2.2.8 D नासतोऽदृष्टत्वात् (4 सूत्राणि)

மத்வமதத்தில் இது தனியான அதிகரணமாக, ஶூன்யவாத நிராகரணம் செய்வதாக கருதப்பட்டு தனியாக கணக்கிடப்பட்டுள்ளது. பிறகுதான் விஞ்ஞானவாதநிராகரணம் (மற்றவர்போல்) செய்யப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- விஷ்ணுவிற்கு ஸர்வகர்த்ருத்வம் கூறியது தவறு. ஶூன்யத்திற்கு எல்லா உலகம் தோற்றமாக மட்டும் உண்டாகின்றது. எனவே இதற்கு ஈஶன் வேண்டாம். வேதங்கள் ப்ரமாணம் ஆகாது. எனவே எல்லாமும் ஶூன்யமே.

ஸித்தாந்தம் :- எந்த ஒரு தன்மையும் இல்லாத ஒன்று இருப்பது பொருந்தாது. எனவே இல்லாத ஒன்றிலிருந்து உலகம் எப்படி உண்டாகும். அப்படி உண்டாகும் என்றால் ஆகாய பூவிலிருந்து நறுமணம் வரட்டுமே. ஜகத்தை பூரணமாக அஸத் என்பது ப்ரத்யக்ஷ விரோதம். எனவே ஶூன்ய மதம் ஶூன்யமே.

## 2.2.5 A नाभाव उपलब्धेः (5 सूत्राणि)

இதில் விஞ்ஞானவாதியான பௌத்த மதம் பரிசீலிக்கப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- உலகு என்று வெளியில் ஒன்றும் இல்லை. மனதினுள் ஞான வடிவமாகவே எல்லாம் உள்ளன. ஸ்வப்னத்தில் வெளிப்பொருள் இல்லாமலேயே எல்லா விதமான செயல்பாடு-களும் நடப்பது போல், ஜாக்ரத்திலும் நடக்கலாம்.

ஸித்தாந்தம் :- ஸ்வப்னம் உதாரணம் ஆகாது; எழுந்திருந்த உடனே கனவு நிஷேதிக்கப்படுகின்றதே. விழிப்புநிலையில் தோன்றுவதற்கு நிஷேதம் இல்லையே! வெளிப்பொருள் இருப்பதற்கு ப்ரமாணம் அவை தெரிவதுதான். குடம், சமுத்திரம், மலை யாவும் வெளியில் நன்கு புலப்படுகின்றன அல்லவா? புத்திதான் தானாகவே இம்மாதிரி வெளிபோல் தோன்றுகிறது என்று கூறமுடியாது. வெளி இல்லாதபோது வெளிபோல் என்று எப்படி கூற முடியும்? எனவே விஞ்ஞானவாதம் (யோகாசாரமதம்) தவறு.

## 2.2.4 V नाभाव उपलब्धेः (3 सूत्राणि)

இந்த அதிகரணத்தை 3+1 என்று பிரித்து सर्वथानुपपत्तेश्च என்ற தனி ஸூத்ரம் சூனியவாதநிராகரணம் பண்ணுவதாக கணிக்கப்-படுகிறது. இந்த அதிகரணம் விஞ்ஞானவாதியின் மறுப்பு.

பூர்வபக்ஷம் :- ஞானம் தோன்றாமல் பொருள் தெரிவது இல்லை. எனவே ஞானம்தான் உள்ளது; குடம் இல்லை; ஞானமேதான் குடம்; குடம் போன்றவை ஞானத்தின் வடிவம். எனவே பொருட்கள் வெளியே தெரிவது ப்ரமைதான். விஞ்ஞான வாதம்தான் ஸரியானது.

ஸித்தாந்தம்:- "நான் குடத்தை அறிகிறேன்" என்பதாக அறிவாளி,

பொருள், அறிவு மூன்றும் கண்கூடாக தெரியும்போது, அறிவாளி குடங்களுக்கு நிஷேதம் வராதபோது ஞானம்தான் உண்மை, குடம் ப்ரமை என்பது தவறு. பொருள் இல்லாமல் "கனவில் போல்" என்பது ஸரியில்லை. இங்கு நிஷேதம் ஏற்படுவதில்லை. எனவே யோகாசாரமதமான விஞ்ஞானவாதம் யுக்தியற்றது.

## 2.2.5 V सर्वथानुपपत्तेश्च (1 सूत्रम्)

ஶூன்யவாதம் தவறு என்று இங்கு நிரூபிக்கப்படுகிறது.

ஸர்வம்-ஶூன்யம் என்று சொல்வதற்கு ஒரு ப்ரமாணம் உண்டானால், ஸர்வஶூன்யத்வம் போயிற்று. ப்ரமாணம் இல்லையென்றால், ஸர்வஶூன்யத்வம் ஒத்துக்கொள்ள முடியாது என்பதால் இந்த மதம் ஸர்வமோசம். மேலும் ஶூன்யம் என்பது இல்லாமை என்று வைத்துக்கொண்டால், "மண் உருண்டை உடைந்த நேரத்தில் அது இல்லை" என்றால், மண் சூர்ணம் அல்லது குடம் இருக்கிறது என்பதுதான் பொருள் ஆகும் என்று ஆரம்பணாதிகரணத்தில் கூறிவிட்டோம். எனவே अभावात् भावोत्पत्तिः = இல்லாமையிலிருந்து இருக்கும் பொருள் உண்டாவது என்ற மதம் அஸம்பாவிதமானது.

## 2.2.9 D न भावोऽनुपलब्धेः (3 सूत्राणि)

"விஷ்ணுவிற்கு காரணத்வம் கிடையாது; நித்தியமான விஞ்ஞானத்திலிருந்தே அதனை தவிர வேறாக இல்லாத ஜகத் தோன்றுகிறது என்பதால் ஈஶன் எதற்கு?" என்று விஞ்ஞானவாதி மதம் ஸரியே.

ஸித்தாந்தம் :- விஞ்ஞானத்தை தவிர ஜகத் வேறாக இல்லை - என்ற இக்கொள்கை மிகத்தவறு. எல்லா ஜனங்களாலும் ப்ரத்யக்ஷமாக அனுபவிக்கப்படுவதான உலகை எவ்வாறு நிராகரிப்பது. மேலும் விஞ்ஞானம் க்ஷணிகம் என்பதால் உலகை எப்படி உண்டுபண்ண முடியும்? ஆகையால் இந்த விஞ்ஞான-வாதம் தவறானது.

# 2.2.6 A नैकस्मिन्नसंभवात् (4 सूत्राणि)

ஜைனமத நிராகரணத்திற்காக இந்த அதிகரணம்.

அவர்மத ஸாரம்: ஜீவன் அஜீவன் என்பதாக உலகில் இரண்டு பொருட்கள். அவைகளில் ஜீவன் சேதனன் சரீரபரிமாணம் உள்ளவன். ஆறுவிதம் -

1) மலை போன்ற பொருட்கள் 2) ஆஸ்வர = இந்திரிய சமூகம் 3) ஸம்வரம் = அவிவேகம் 4) நிர்ஜரம் = காம க்ரோதாதி நாசகமான கொதிக்கும் இரும்பில் ஏறுதல், கேசங்களை ஒவ்வொன்றாக பிய்ப்பது போன்றவை 5) பந்தம் = ஜனனமரண தொடர் 6) மோக்ஷம் = ஶாஸ்த்ரோக்தமான உபாயங்களால் ஜீவன் எப்போதும் மேல் நோக்கி போவது. ஆக மொத்தம் ஏழு பதார்த்தங்கள். இவை ஏழும் ஸப்தபங்கீ நியாயப்படி, “எல்லாம் இப்படித்தான்” என்று அறுதியிட்டுக் கூறமுடியாது. 1) இருக்கலாம் 2) இல்லாமல் இருக்கலாம் 3) இரண்டுமாக இருக்கலாம் 4) சொல்லப்படலாம் 5) அஸ்தி சொல்லப்படலாம் 6) நாஸ்தி சொல்லப்படலாம் 7) இரண்டும் சொல்லப்படலாம் என்பதாக சப்தபங்கீ நியாயம் அல்லது அநேகாந்த-வாதம் உள்ளது.

ஸித்தாந்தம் :- இம்மதத்தில் ஊர்ஜிதமாக ஒன்றை ஏற்காததால் இது துர்மதம். “ஒருவனுக்கு இருக்கலாம், மற்றவனுக்கு இல்லாமல் ஆகலாம்” என்றவாறு கொள்ளும்படியாக கூறும் மதம் தவறன்றோ? மேலும் ஜீவன் உடலளவு உடையவனாக இருப்பின் அநித்யத்வம் வந்து விடுவதால், புண்ணியம் பாபம் வீணாகும். ஆகையால் இம்மதம் சம்மதமன்று.

## 2.2.6 V नैकस्मिन्नसंभवात् (4 सूत्राणि)

அத்வைதத்தைப் போலவேதான்.

இந்த மதம் முரண்பட்டதான இரண்டு தன்மைகளை ஸத்வம், அஸத்வம், நித்யத்வம், அநித்யத்வம் போன்றவற்றை ஒரே பொருளில் ஒரே ஸமயம் இருப்பதாக ஏற்பது மிகவும் முரண்பட்டது. மேலும் ஆத்மா தேஹபரிமாணம் என்றால் பல சிக்கல்கள் ஏற்படும். எனவே இம்மதம் தவறானது.

## 2.2.10 D नैकस्मिन्नसंभवात् (4 सूत्राणि)

முந்தைய இருமதத்தின் பூர்வபக்ஷம், ஸித்தாந்தம்தான் அப்படியே. விஶேஷமாக இல்லை. ஸப்தபங்கீ என்று கூறி அனேகாந்தவாதமான இந்த மதம் சற்றும் பொருந்தாத ஒன்று.

## 2.2.7 A पत्युरसामञ्जस्वात् (5 सूत्राणि)

முந்தைய அத்தியாயத்தின் இறுதியில் ப்ரஹ்மம் நிமித்தகாரணமும் உபாதானகாரணமும் ஆகும் என்ற ஸித்தாந்தத்தை எதிர்த்து தார்க்கிகர்கள், சைவர்கள் முதலியோர் ஈஶ்வரன் நிமித்தகாரணம் மட்டும்தான் என்று கூறுவதை கண்டிப்பதற்காக இந்த அதிகரணம்.

பூர்வபக்ஷம் :- குடத்திற்கு சேதனனான குயவன் நிமித்த காரணமாயிருந்து தண்டம், சக்ரம் முதலிய உபகரணங்களை கொண்டு குடத்தை படைப்பது போல் ஈஶ்வரன் உலகிற்கு நிமித்த காரணம் மட்டுமே. (தடஸ்தம்தான்)

ஸித்தாந்தம் :- இது ஸரியில்லை. பாரபக்ஷம், கொடூரத்தனம், எல்லாம் வருமானதால். அத்வைதிகளுக்கு எப்படி தோஷபரிகாரம்

என்றால் "ப்ராணிகளின் கர்மாக்களை அனுஸரித்து சுகதுக்கம் தருகின்றாரன்றோ", இதற்கு புண்யோ வை புண்யேன கர்மணா என்று ஶ்ருதி ப்ரமாணம். பூர்வபக்ஷீ இவ்வாறு வேதத்தை ஏற்று பதில் கூறுவதனால் வேதம் கூறியப்படி உபாதானத்வத்தையும் ஏற்க வேண்டும் எனவே இந்த மதம் ஸரியன்று.

## 2.2.7 V पत्युरसामञ्जस्वात् (4 सूत्राणि)

संबन्धानुपपत्तेश्च என்ற இரண்டாம் ஸூத்ரம் இவர்களுக்கு இல்லை. இந்த ஸூத்ரத்தில் नैकस्मिन् என்ற ஸூத்ரத்திலிருந்து "न" என்ற வார்த்தை வருகிறது. मतं, आदरणीयम् என்பதாக இரண்டு வார்த்தைகள் சேர்க்கப்படுகின்றன. "எனவே पत्युः मतम् = பசுபதியின் மதமான பாசுபதம், नादरणीयम् = ஆதரிக்க கூடாதது. असामञ्जस्वात् = நிமித்த உபாதான பேதம், வேத விருத்த மோக்ஷோபாய கல்பனை- முதலிய வேத விருத்தமாக. அதிக கல்பனை செய்தால் பொருந்தாது அன்றோ?" என்று ஸித்தாந்தம்.

பாசுபத மதத்தில் சிவன் நிமித்த காரணம், த்ரிகுணத்ரவ்யம் உபாதானம் என்று கூறுவது தவறு. यदा पश्यः पश्यते रुक्मवर्णं कर्तारमीशं पुरुषं ब्रह्मयोनिम् - என்ற ஶ்ருதியில் कर्ता, योनिः என்ற பதங்களால் நிமித்த உபாதானம் இரண்டுமாக விஷ்ணுவை கூறுகிறது. மேலும் ஈஶ்வரனை அனுமானத்தினால் ஸ்தாபிப்பதும் தவறு. வேதத்தை ப்ரமாணம் ஆக்கினால் அதன்படி நாராயணன் காரணமாவான் என்பதற்காக இவர்கள் இப்படி கூறுகின்றனர்.

## 2.2.11 D पत्युरसामञ्जस्वात् (4 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- விஷ்ணு ஜகத்காரணம் இல்லை. ஶ்ருதி, ஸ்ம்ருதிகளில் ஸர்வஞரான பசுபதியாகிய சிவன்தான் மாயையை துணைகொண்டு படைக்கிறார் விஷ்ணு, ஹரன், ஹிரண்ய-

கர்பர்களை அவரே உண்டுபண்ணுகிறார். இந்த மதத்திற்கு விரோதம் வருவதால் விஷ்ணுகாரண வாதம் தவறு.

ஸித்தாந்தம் :- यं कामये तं तमुग्रं कृणोमि என்று பாஷ்யத்தில் கூறிய ஶ்ருதி போன்ற ப்ரமாணங்களால் சிவனுக்கு பாரதந்த்ர்யம் (Dependence) தெரிவதாலும், சிவனுக்கு சரீரம் கிடையாத-தானதால் ப்ருத்வீ போன்றவற்றை படைக்க இயலாததாலும், இந்த மதம் தவறு. விஷ்ணுவிற்கோ என்றால் நித்ய ஸர்வவிஷய விசித்ர சக்தியுடையவரானபடியால், ஞானந்தமயனான சரீரம் உடையவர் ஆதலாலும் விஷ்ணுதான் கர்த்தா. ஸர்வஶ்ருதிகளிலும் விஷ்ணு-கர்த்ருத்வத்தை முன்பே ஸ்தாபித்துவிட்டோம்.

## 2.2.8 A उत्पत्त्यसंभवात् (4 सूत्राणि)

இந்த அதிகரணத்தில் பாஞ்சராத்ர ஆகமமதத்தை கண்டிக்கிறார். அவர்கள் கூறுவதாவது - 1) பகவான் வாசுதேவர் ஒருவரே ஜகத்திற்கு நிமித்தம், உபாதானம், 2) அவரை ஆராதித்து, த்யானித்து, ஞானம் பெற்றால் ஸம்ஸாரம் விலகும். 3) அவரிடமிருந்து ஸங்கர்ஷணன் என்கிற ஜீவன் உண்டாகிறான். 4) ஜீவனிடமிருந்து ப்ரத்யும்னன் எனும் மனம் உண்டாகிறது. 5) மனதிலிருந்து அநிருத்தன் என்னும் புத்தி உண்டாகிறது. இந்த நான்கு - வாசுதேவ, சங்கர்ஷண, அநிருத்த, ப்ரத்யும்னரான வ்யூகங்கள் ஸர்வாத்மகமாகும். இம்மதம் ஏற்பதற்கு தகுதியற்றது.

ஸித்தாந்தம் :- இவர்கள் கூறிய சில விஷயங்களில் 1 - 2 மிகவும் ஸரியே. எனினும் பிறகு கூறும் 3,4,5 ஶ்ருதி விரோதம், ஆதலால் தவறு. மேலும் செய்த கர்மங்கள் வீணாகும், செய்யாதது வந்து சேரும் - என்ற இரட்டை தோஷம் ஜீவாநித்யத்வத்தால் ஏற்படும். மேலும் तन्मनोऽकुरुत என்ற ஶ்ருதியானது ப்ரஹ்மத்தினிடமிருந்து மனம் வருவதாக கூறுகிறது. எனவே இந்த பாஞ்சராத்ரம் தவறு.

## 2.2.8 V उत्पत्त्यसंभवात् (4 सूत्राणि)

இந்த அதிகரணத்தின் முதல் இரண்டு ஸூத்ரங்களினால் பாஞ்சராத்ராகமத்தை கண்டித்து பூர்வபக்ஷமும் 3,4 ஸூத்ரங்களால் பாஞ்சராத்ரம் ப்ரமாணம்தான் என்ற ஸித்தாந்தமும் செய்வதாக விஶிஷ்டாத்வைதிகளின் வியாக்யானம்.

பூர்வபக்ஷம் :- அத்வைதிகள் கூறியபடியே ஜீவனுக்கு உற்பத்தி, ஜீவனிடமிருந்து மனதின் பிறப்பு போன்ற காரணங்களால் பாஞ்சராத்ரம் தவறு என்று கூறப்படுகிறது.

ஸித்தாந்தம் :- विज्ञानादिभावे वा तदप्रतिषेधः என்ற மூன்றாவது ஸூத்ரத்திற்கு வ்யாக்யானம் - वा = பாஞ்சராத்ராகமம் அப்ரமாணம் என்ற கட்சி தவறு; ப்ரமாணம்தான்; ஏனெனில் विज्ञानादिभावे = ஜீவனுக்கு ஞானஸ்வரூபமான பரமகாரணரான ப்ரஹ்மதுல்யத்வம் ஏற்பதால், तदप्रतिषेधः = பாஞ்சராத்ரத்தின் ப்ரமாணத்திற்குத் தடை இல்லை. அல்லது பாஞ்சராத்ரத்திற்கு தடையில்லை. இந்த மாதிரி பாஞ்சராத்ரத்திற்கு ஜீவனுக்கு ஞானஸ்வரூபத்வம்தான் என்பதில் மட்டும் தாத்பர்யம். உற்பத்தியில் தாத்பர்யம் இல்லை என்பது எப்படித் தெரிகிறது என்ற கேள்விக்கு நான்காம் ஸூத்ரம் विप्रतिषेधाच्च என்ற பதில். பாஞ்சராத்ர ஆகமத்திலேயே விஶேஷமாக உற்பத்தியை நிஷேதிக்கிறது என்று பொருள். இவ்வாறு இந்த அதிகரணத்தின் தாத்பர்யத்தை விஶிஷ்டாத்வைதிகள் விஶேஷமாக ஸ்தாபித்து உள்ளனர்.

## 2.2.12 D उत्पत्त्यसंभवात् (4 सूत्राणि)

மத்வ மதத்தில் இந்த அதிகரணம் சாக்தமத நிராகரணத்திற்காக வருகிறது.

  

**பூர்வபக்ஷம் :-** விஷ்ணு கர்த்தா அல்ல. ஸர்வஞத்வம் பொருந்திய சக்திதான் ஜகத் காரணம். இவ்வாறே வேத ஸ்ம்ருதிகள் உள்ளன. "कर्मफलेषुजुष्टाम्"

**ஸித்தாந்தம் :-** புருஷனின் அனுக்ரஹம் இல்லாத ஸ்திரீயினால் மட்டும் படைப்பு வருவது யுக்தமல்ல. சிவானுக்ரஹம் பெற்ற சக்தி காரணம் என்கிற மத்யமவாமமதத்திலும் சக்திக்கு படைப்பிற்கு தேவையான ஞானாதிகள் கிடையாது ஆதலால் சிவனின் அனுக்ரஹம் ஏற்பட முடியாது. சக்திக்கு ஞானம் போன்றவை உண்டு என்கின்ற அனுவாம மதமும் ஸரியல்ல. அனுக்ரஹம் பண்ணி சக்தியின் வாயிலாக படைப்பதை விட நேரடியாக சிவனிடமிருந்தே உலகம் வரலாம் என்பதால் சக்தியை ஏற்பது வீண். எனவே விஷ்ணுதான் கர்த்தா.



## மூன்றாம் பாதம்

இந்த பாதத்தில் முக்கிய விஷயம், மற்ற மதங்கள் ஒன்றுக்கொன்றும், தனக்குள்ளும் முரணான கருத்து உடையதால் தவறு என்று முந்தைய பாதத்தில் கருத்தாக கூறப்பட்டது. அதே கேள்வி வேதாந்தத்திலும் வருவதாக பூர்வபக்ஷம் (ஒன்றுக்கொன்று முரண்பாடு உள்ளதால்) அப்ரமாண்யம் என்று கிளப்பி விரோதம் (முரண்பாடு) இல்லை என்பதை நிரூபிப்பதாக அமைந்துள்ளன. மூன்றாம் பாதம் பூதங்களின் ஸ்ருஷ்டி பற்றியும் நான்காம் பாதம் பௌதிகமான ப்ராணாதி ஸ்ருஷ்டி பற்றியும் முரண்பாட்டை விலக்குகிறது.

## 2.3.1 A न वियदश्रुतेः (7 सूत्राणि)

ஸந்தேஹம் :- ஆகாயம் நித்யமா? உண்டாக்கப்பட்டதா?

பூர்வபக்ஷம் :- ஆகாயம் உண்டாகாத நித்ய பொருள். ஏனெனில் பொருளின் உற்பத்திக்கு தேவையான 1) ஸமவாயீ (நூல்) 2) அஸமவாயீ (நூல்களின் சேர்க்கை) 3) நிமித்தம் (நெய்பவன் முதலிய) என்ற மூன்று காரணங்களும் கூற முடியாது. ஆனால் आकाशः संभूतः என்று கூறுவது இரண்டாம் நிலையான ப்ரயோகம்.

மேலும் தைத்திரீயத்தில் ஆகாயத்திற்கு உற்பத்தி கூறியிருந்தாலும் சாந்தோக்யம் ஆறாம் அத்தியாயத்தில் ஆகாயத்திற்கு உற்பத்தி கூறாமலே நேரடியாக ப்ரஹ்மத்திலிருந்து நெருப்பு (அக்னி) உண்டானதாக கூறப்படுகிறது. இது முரண்பாடாகாதா?

ஸித்தாந்தம் :- ப்ரஹ்மத்தை அறிந்தால் எல்லாம் தெரியும் என்ற கூற்று ஸர்வ வேதாந்த ஸாரம், அனாதி உபதேசம். ஆகாயம் ப்ரஹ்மம் போல் நித்யமாக இருப்பின் "காரண ஞானத்தினால்

  

கார்ய ஞானம்'' என்ற நியாயம் வராது. எனவே ஶ்ருதிக்கு மிகுந்த அப்ரமாண்யம் வரும். மேலும் "ஆகாயம், உண்டாகக்கூடியது, பரிச்சேதம் (limitations by things) இருப்பதால், குடம் போல்'' என்ற அனுமானத்தினாலும் ஆகாயம் படைக்கப்பட்டதுதான். மேலும் உண்டாகியது என்று ஸ்பஷ்டமாக கூறப்படுகிறது. மூன்று காரணங்கள் இல்லை என்பதாக ஆக்ஷேபம் ஸரியல்ல. தார்க்கிகர்களின் ஆரம்பவாதத்திற்கு தேவையானாலும் விவர்த்த வாதத்திற்கு (கனவுப்படைப்பு, magic, கயிறுபாம்பு) இது தேவையில்லை. சாந்தோக்யத்திலும் ஆகாயம் நித்யம் அல்லது உண்டாகவில்லை என்று கூறப்படவில்லை என்பதால் உதாரணத்திற்காக சில பொருட்கள் கூறப்பட்டிருப்பதால் மிகத்தேவையான ஸர்வகாரணத்வம் சித்திப்பதற்கு தைத்திரீய ஶ்ருதியை சாந்தோக்யம் வரவேற்குமே தவிர எதிர்க்காது. எனவே ப்ரஹ்மத்திலிருந்து ஆகாயம் பிறக்கிறது/தோன்றுகிறது.

## 2.3.1 V न वियदश्रुतेः (9 सूत्राणि)

விஶிஷ்டாத்வைதிகளின் மதத்தில் 1,2,3 - ஆகிய மூன்று அதிகரணங்களாக அத்வைதிகள் கூறுவதை ஒரே அதிகரணமாக சொல்கின்றனர்.

ஸந்தேஹம், பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் மூன்றும் ஸமமே. ஆகாயம் போலவே வாயுவும் உண்டாகியது, ஆனால் ப்ரஹ்மம் மட்டுமே உண்டாகாதது - என்ற மற்ற இரண்டு அதிகரணங்கள் இதிலேயே அடக்கப்படுகின்றன.

மேலும் ऐतदात्म्यमिदं सर्वम् என்ற சாந்தோக்ய ஆறாம் அத்தியாயத்தில் உள்ள வாக்யத்தில் உலகம் யாவும் நாரயணனிடம் இருந்தே தோன்றியதாகக் கூறப்படுகிறது. மேலும் நிரவயவத்ரவ்யத்வம் உண்டாகாத தன்மைக்குக் காரணமாக பூர்வபக்ஷி நினைப்பது தவறு.

ப்ரஹ்மம் உண்டாகாததற்க்கு காரணம் "न जायते म्रियते वा विपश्चित्" "अजो नित्य:" என்ற பல ஶ்ருதிகள் இருப்பதால்தான். நாம் காணமுடியாத விஷயத்தில் ஶ்ருதி மட்டுமே ப்ரமாணம். எனவே ஆகாயம் கார்யமே. இதே போல் வாயுவும் உண்டாகியதுதான். ப்ரஹ்மம் மட்டுமே உண்டாக முடியாதது.

## 2.3.1 D न वियदश्रुते: (7 सूत्राणि)

மத்வ மதத்திலும் ஸர்வமும் ஸமமே. ஸந்தேஹம், பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் யாவும் ஒன்று போலவேதான்.

ஆக்ஷேபத்தில் :- ஆகாயம் உண்டாவதில்லை, விபுபரிமாண-மானபடியால் என்று அனுமானம் கூறப்படுகிறது.

ஸமாதானத்தில் :- ஶ்ருதியில் ஸம்பூத: என்று இருப்பதால் அதற்கு இரண்டாம் பக்ஷமான பொருள் கூற முடியாது. எனவே ஆகாயம் விஷ்ணுவினால் உண்டுபண்ணப்பட்டது.

## 2.3.2 A एतेन मातरिश्वा व्याख्यात: (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- சாந்தோக்ய ஆறாம் அத்தியாயத்தில் வாயுவிற்கு உற்பத்தி கூறப்படாததாலும், सैषानस्तमितादेवता यद्वायु: - என்று ப்ருஹதாரண்யகத்தில் அழிவற்றதாக வாயுவைக் கூறுவதாலும் வாயு உண்டாக்கப்பட்டது இல்லை.

ஸித்தாந்தம் :- சாந்தோக்யத்தில் உற்பத்தி கூறாவிடினும் தைத்திரீயத்தைக் கொண்டு சேர்த்து நாம் ஸ்ருஷ்டியைகூற வேண்டுமாதலால் வாயுவிற்கு ப்ரஹ்மத்திடமிருந்து உற்பத்தி உண்டு. ஆகாயத்திலிருந்து வாயு பிறந்தது என்ற வாக்யத்திற்கு விரோதமில்லை. ஏனெனில் ஆகாயவடிவமாக இங்கும்

ப்ரஹ்மத்திலிருந்து வாயு பிறந்தது என்றுதான் பொருள். [தங்கத்திலிருந்து வளையல் பண்ணிய பிறகு காலாந்தரத்தில் வளையலிலிருந்து மோதிரம் உண்டுப்பண்ணபட்டாலும் தங்கத்திலிருந்து தானே வருகிறது] ஏகவிஞ்ஞானத்தினால் ஸர்வவிஞ்ஞானம் போன்ற யுக்திகள் பொதுவானவை.

இந்த அதிகரணம் விஶிஷ்டாத்வைதத்தில் தனியல்ல. முந்தையவைகளோடு சேர்க்கப்பட்டது, அடுத்ததும் கூட.

## 2.3.2 D एतेन मातरिश्वा व्याख्यात: (1 सूत्रम्)

ஸந்தேஹம், பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் யாவும் ஸமமே. ஆனால் முறை வேறாக உள்ளது.

பூர்வபக்ஷம் :- तेजोबन्नानि आकाशः इति तान्यनित्यानि वायुर्वाव नित्यः என்பதான வாக்யத்திற்கு மற்ற நான்கிற்கும் அநித்யத்வம் கூறி வாயுவிற்கு நித்யத்வம் கூறப்படுகிறது. कुविदङ्ग என்ற மந்திரத்தில் ஸர்வதேவதா உபாஸ்யத்வம் வாயுவிற்கு சொல்லப்படுகிறது. नोदयो न निम्लोच: என்று உதயாஸ்தமயம் நிஷேதிக்கப்படுகிறது. எனவே வாயு உண்டாவதில்லை.

ஸித்தாந்தம்:- வாயுவானவர் தேஹஸம்பந்தமாகிற பராதீன விஶேஷமடைவது என்ற பிறப்பை உடையவர்தான் ஏனெனில் प्राणाद्वायु: என்று வேதம் கூறுகின்றது. "वायु: उत्पद्यते अल्पशक्तित्वात्" என்ற அனுமானம் ப்ரமாணம் ஆகும். ஈஶன் போல अजனாக இருந்தால் விருத்த (विरुद्ध) ஸ்வாதந்த்ரயம் ஏற்பட்டுவிடும். எனவே வாயு உண்டானதுதான்.

## 2.3.3 A असंभवस्तु सतोऽनुपपत्तेः (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- "ப்ரஹ்மம் மற்றவைபோல் உண்டாக்கப்பட வேண்டும். (ஜன்மம் இருக்க வேண்டும்)". மற்ற காரணங்களான ஆகாசாதிகள், குயவன் போன்ற யாவருக்கும் பிறப்பு இருப்பதால் "ஆகாயம் போல்" என்ற அனுமானம் மூலம் ப்ரஹ்மத்திற்கும் பிறப்பு உண்டு.

ஸித்தாந்தம்:- இது ஸரியல்ல. ஸத்தான ப்ரஹ்மம் வேறு காரணத்தினால் உண்டாவதாக ஃஸ்ருதி இல்லை. காரணம் ஸத்திற்கு இருப்பின் அது அஸத்தா? ஸத்தா? அஸத்தாக இருக்க முடியாது. அஸத்திலிருந்து ஏதும் தோன்றாது. कथमसतः सज्जायेत என்று கூறப்பட்டுள்ளது. ஸத்தே ஸத்திற்கு காரணம் என்பதும் தவறு. தானே காரணம், தானே கார்யம் என்பது ஆத்மாஃஸ்ரய தோஷம் ஆகும். ஆகாயம் போன்றவை ஸத்திற்கு காரணம் ஆக முடியாது. ஆகாயமே ஸத்திலிருந்து அல்லவா உண்டாகிறது? அனுமானம் கூறியது ஃஸ்ருதியினால் பாதிக்கப்படுகிறது. "स वा एष महानज आत्मा" என்று பிறப்பற்றவன் ஆத்மா என்று ஃஸ்ருதிகள் சொல்லுகின்றன. எனவே ப்ரஹ்மம் உண்டாவது இல்லை.

இந்த அதிகரணம் விஃஸிஷ்டாத்வைதத்தில் தனியானது அல்ல. முதல் அதிகரணத்துடன் சேர்ந்ததே.

## 2.3.3 D असंभवस्तु सतोऽनुपपत्तेः (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- நினைத்தும் பார்க்க முடியாத படி ஆகாயத்திற்கே பிறப்பு உண்டு என்று ஸ்தாபித்ததால் ப்ரஹ்மமும் (விஷ்ணுவும்) பிறப்பு உடையவரா? இல்லையா? என்ற ஸந்தேஹம் ஏற்பட असतः सदजायत என்று அஸத்திலிருந்து ஸத்து உண்டாகியது ஃஸ்ருதி கூறுகிறது. अजोऽयमात्मा என்ற ஜன்மாவை கூறும்

ஶ்ருதிக்கு ஸ்வரூபானாதித்வம் பொருள் என்பதால் ஜன்ம ஶ்ருதிக்கு பராதீன விஶேஷாவாப்தி என்று கொள்வதால் பரஸ்பர விரோதம் இல்லை. சித், ப்ரக்ருதி போல் விஷ்ணுவும் பிறப்பு உடையவரே.

ஸித்தாந்தம் :- ஈஶன் என்பவன் பூர்ண சந்திரன், சித், ப்ரக்ருதி இவ்வாறு இல்லை. மேலும் அஸத்திற்கு காரணத்வம் வரவே வராது. असतः सदजायत என்ற ஶ்ருதிக்கு ब्रह्मवा असत् सद्वाव प्राणः என்று ஈஶனிடமிருந்து வாயு உண்டானது என்று பொருள். எனவே பராதீன விஶேஷ ப்ராப்தியாகிய பிறப்பு விஷ்ணுவிற்கு கிடையாது.

## 2.3.4 A तेजोऽतस्तथाह्याह (1 सूत्रम्)

ஸந்தேஹம் :- "वायोरग्निः" என்ற ஶ்ருதியினால் அக்னிக்குக் காரணம் வாயு என்று ஆகிறது. तत्तेजोसृजत என்ற ஶ்ருதியினால் நெருப்புக்குக் காரணம் ப்ரஹ்மம் என்றாகிறது. அக்னியானது ப்ரஹ்மத்திலிருந்து வந்ததா? வாயுவிடமிருந்து வந்ததா?

பூர்வபக்ஷம் :- "ப்ரஹ்மம் தேஜஸ்ஸை உண்டு பண்ணியது" என்ற வாக்கியப்படி ப்ரஹ்மம்தான் தேஜஸ்ஸிற்கு (அக்னி) காரணம். மற்ற ஶ்ருதியானது வாயுவிற்குப் பிறகு என்ற கருத்தில் வருகிறது.

ஸித்தாந்தம் :- இது தவறு. "आकाशः संभूतः" என்ற வாக்கியத்திலிருந்து संभूतः என்ற (உண்டாகியது) வார்த்தை தொடர்ந்து வருகிறது. எனவே वायोरग्निः संभूतः என்றுதான் அன்வயம். எனவே वायोः என்பதற்கு காரணத்வம் பொருளான ஐந்தாவது விபக்தி என்றுதான் கொள்ளவேண்டும். எனவே

இரண்டு ஶ்ருதிகளையும் அனுஸரித்து வாயுவடிவமாயுள்ள ப்ரஹ்மத்திலிருந்து அக்னி உண்டாயிற்று என்றுதான் பொருள். (Thrilling Idea in combining 7 adikaranas)

## 2.3.2 V तेजोऽतस्तथाह्याह (8 सूत्राणि)

இந்த அதிகரணத்தை விஶிஷ்டாத்வைதிகள் பெரியதான ஒரே அதிகரணமாக கணக்கிட்டு (அத்வைத மதப்படி ஏழு அதிகரணங்களாக உள்ளன) வ்யாக்யானம் பண்ணுகிறார்கள். அத்வைத மதப்படி 7 ஸூத்ரங்கள் ஏழு அதிகரணங்களாக வருகின்றன. அவர்கள் ஏழு ஸூத்ரங்களையே எட்டாகவும் கொண்டு ஒரே அதிகரணமாக விளக்குகிறாகள்.

பூர்வபக்ஷம் :- அத்வைதிகளின் பூர்வபக்ஷம் போலவே ப்ரஹ்மமே அக்னி, ஜலம், ப்ருதிவி, ப்ராணன், மனம் எல்லாவற்றுற்கும் காரணம். எனவே वायोरग्निः अग्नेरापः अद्भ्यः पृथिवी என்றெல்லாம் கூறுவது வரிசையை கூறுகிறது. எனவே ப்ருதிவிக்கு ஜலம், ஜலத்திற்கு தேஜஸ், தேஜஸிற்கு வாயு, வாயுவிற்கு ஆகாஶம், ஆகாஶத்திற்கு அஹங்காரம், அஹங்காரத்திற்கு அவ்யக்தம் - என்று கொண்டு ப்ரஹ்மம் பரம்பரையாகத்தான் உலகின் காரணம், நேர் காரணம் இல்லை. மேலும் ஆகாயம், வாயு, தேஜஸ், ஜலம், ப்ருதிவீ - என்றெல்லாம் வெவ்வேறு பெயர்களால் ப்ரஹ்மத்தையே எப்படி க்ரஹிக்க முடியும். எனவே ப்ரஹ்மம் உலகின் நேர் காரணம் அன்று.

ஸித்தாந்தம்:- வாயுவடிவமான ப்ரஹ்மத்திலிருந்து தேஜோ-வடிவமான அக்னி உண்டாயிற்று... இவ்வாறே கடைசிவரை நாம் அந்தந்த ரூபமாக ப்ரஹ்மத்தைக் கொள்ளவேண்டும். ஜடமான இவைகளுக்கு சேதனனான ப்ரஹ்மரூபத்வம் நேரிடையாக வராது என்பதால் अन्तर्यामि ब्राम्हणத்தில் கூறியபடி அந்தந்த ஆகாஶ, வாயு போன்ற பொருட்களை, தான் உள்ளே இருந்து

  

நியமித்துக் கொண்டு அவைகளைத்தனது சரீரமாக உடையவர் நாராயணன்- என்பதுதான் ஸித்தாந்தம். எனவே எல்லாவற்றிற்கும் தகுந்தரூபமாகிய ப்ரஹ்மம்தான் நேரடி காரணம். பரம்பரையாக காரணமன்று மேலும் एतस्माज्जायते प्राण: मन: என்ற வாக்யத்தில் ப்ராணன், மனம், யாவற்றிற்கும் ஸாக்ஷாத்காரணமாக நாராயணன் கூறப்படுகிறார். மற்ற ஶ்ருதிகள் பொருட்களின் வரிசையை கூறுவதாக நாம் எடுத்துக்கொள்ள முடியாது. வாயுவின் கார்யமான ப்ராணனை முண்டகோபனிஷத் एतस्माज्जायते प्राण: என்று முதலில் கூறிவிட்டு பிறகு एवं वायुर्ज्योतिराप: पृथिवी என்றவாறு வரிசையாக ஐந்து பூதங்களை சொல்வதால் வரிசையை இங்கு கொள்ளவே முடியாதன்றோ. ஆகாயம், வாயு போன்ற வார்த்தைகள் எவ்வாறு நாராயணனை கூற முடியும் என்று கேட்டால் பதில் இவ்வாறு கூற வேண்டும்- सेयं देवतैक्षत आत्मनाऽनुप्रविश्य नामरूपे व्याकरवाणि என்ற வாக்கியத்தில் பரதேவதை பூதங்களில் ப்ரவேசித்து பிறகு நாம ரூபங்களை உண்டுபண்ணுவதாக பொருள் வருகிறது. பரமாத்மாவினால் ஸ்ருஷ்டிக்கப்படுவதால் இவை பரமாத்மா தானே! என்ற ரீதியில் எல்லா சப்தங்களும் பரமாத்மா வரை (पर्यन्तं) சென்றுதான் பொருள் படுகின்றன என்பது ஊர்ஜிதமாகிறது. உலகின் பசு, யானை போன்ற வார்த்தைகள் நமக்கு ஶாஸ்த்ரஞானம் வருவதற்கு முன்பு, விஷயம் புரியாததால் அவை பசு, யானை என்ற வ்யக்தியை மட்டும் குறிப்பதாக தோன்றுகிறது. ஆகையால் சராசரமான (चराचर) அசைபொருள், அசையாப்பொருள் யாவும் அவைகளை கூறும் வார்த்தைகள் எல்லாம் பரமாத்மாபர்யந்தம் உணர்த்துவதால் எல்லா உலகிற்கும் நாராயணர்தான் நேரடியான காரணம். (அந்தந்த வடிவமான வ்யக்தியை வைத்துக்கொண்டு).

எனவே வாயுரூபமான ப்ரஹ்மம் தேஜஸிற்கு காரணம், தேஜோரூபமான ப்ரஹ்மம் ஜலத்திற்கு காரணம் என்று உலகம்

பூராவிற்கும் ப்ரஹ்மம் காரணம் என்று புரிந்து கொள்ள வேண்டும் என்பதாக இந்த அதிகரணம் ஏழாக பிரிந்த அதிகரணங்களை ஒன்று படுத்துகிறது.

## 2.3.4 D तेजोऽतस्तथाह्याह (1 सूत्रम्)

பூர்வபக்ஷம்:- தேஜஸ் என்ற தேவதையின் பூதம் ஈஸ்வரனிடமிருந்தும், வாயு தேவதையிடமிருந்தும் உண்டாகிறதா? ஈஸனிடமிருந்து தானா? वायोरग्निः என்பதால் வாயுவிடமிருந்து மட்டும் என்று கூறமுடியாது. இந்த ஸ்ருதிக்கு வாயு நடுவில் த்வாரம்தான் என்று பொருள். ஏனெனில் தன்னால் முடியாவிட்டால்தானே த்வாரம் தேவை. ஆகவே வாயுவிடமிருந்து மட்டுமே தேஜஸ் உண்டாகிறது.

ஸித்தாந்தம் :- தேஜஸ் எப்படி ஈஸனிடமிருந்து மட்டுமே உண்டாகிறதோ, அதுபோல வாயுவையும் ஏற்கவேண்டும். தானே ஸக்தியுள்ளதாய் இருப்பினும், வாயு என்பவனை த்வாரமாகக் கொண்டு, தன் இச்சைப்படி விளையாட்டாக ஈஸன் ஸ்ருஷ்டிக்கிறான் என்று கொண்டால் விரோதம் இல்லை.

## 2.3.5 A आप: (1 सूत्रम्), வார்த்தை மட்டுமே

ஸந்தேஹம் :- "अग्नेराप:" என்ற வாக்கியப்படி அக்னியிலிருந்து ஜலம் உண்டாவதாக கூறுவது பொருந்துமா? பொருந்தாதா? பரஸ்பரம் விரோதமாதலால் ஸந்தேஹம்.

பூர்வபக்ஷம் :- நெருப்பை அணைக்கும் எதிரியான ஜலம் எவ்வாறு நெருப்பிலிருந்து வர முடியும்? (மேலும் ப்ரஹ்மம்தானே ஸர்வ காரணம்?) எனவே அக்னியிலிருந்து ஜலம் வராது.

  

ஸித்தாந்தம் :- நெருப்பு இருவிதமானது. மற்ற பூதங்கள் கலந்தது पञ्चीकृतम्, கலக்காதது अपञ्चीकृतम्. இவைகளில் பஞ்சீக்ருதமான நம் கண்ணுக்கு புலப்படும் நெருப்புக்குதான் ஜலம் விரோதியானது. இங்கு அபஞ்சீக்ருதமான அக்னி கூறப்பட்டிருக்கிறது. மேலும் ப்ரஹ்மகாரணத்வத்திற்கு விரோதமில்லை. நெருப்பு வடிவத்தில் உள்ள ப்ரஹ்மம்தானே காரணமாகிறது. எனவே இந்த ஃச்ருதி अग्नेराप: ஸரியானதுதான். தவறானது இல்லை.

## 2.3.5 D आप: (1 सूत्रम् 1 பதம்)

ஸந்தேஹம் :- ஜலம் அக்னியிலிருந்து ஸ்வதந்திரமாகவே உண்டாகிறதா? விஷ்ணுவிடமிருந்து தானா?

பூர்வபக்ஷம் :- अग्नेराप: என்று கூறுவதால் அக்னி தேவதையிடமிருந்துதான் ஜலம் வருகிறது / உண்டாகிறது. ब्रह्मैवेदमग्र आसीत् तदपोऽसृजत என்று கூறும் ஃச்ருதிக்கு (ப்ரஹ்மம் ஜலத்தை படைத்தது) விரோதம் என்று எண்ண வேண்டாம். வியர்வை சூட்டிலிருந்து வருவதை கண்கூடாக காண்பதால், ஜலம் தேஜஸிலிருந்து உண்டாகிறது, ஜலமானதால் வியர்வைபோல் என்ற அனுமானம் ப்ரமாணம் இருப்பதால் ப்ரஹ்மம் ஜலத்தை படைத்தது என்பது ஸரியன்று.

ஸித்தாந்தம் :- तदपोऽसृजत என்று விஷ்ணுதான் ஜலகர்த்தா என்பதாலும், தேஜஸ் ஆகிற தேவதையுமே விஷ்ணுவால்தான் உண்டாக்கப்படுவதாலும் ப்ரஹ்மமே ஜலகாரணம். எனவே अग्नेराप: என்பதற்கு அக்னியின் வழியாக ப்ரஹ்மமே ஜலத்தை படைத்தது என்றுதான் பொருள்.

## 2.3.6 A पृथिव्यधिकाररूपशब्दान्तरेभ्य:(1 सूत्रम्)

ஸந்தேஹம் :- ता अन्नमसृजन्त என்ற வாக்யத்தில் ஜலத்திலிருந்து அன்னம் உண்டாயிற்று என்று கூறப்படும் அன்னம் என்பது சாப்பாடு தான்யமா? பூமியா?

பூர்வபக்ஷம்:- உலகத்தில் உணவைத்தான் அன்னமென்று ப்ரஸித்தமாகக் கூறுவதால் உணவுதான் அன்ன பதத்தின் பொருள்.

ஸித்தாந்தம் :- ப்ருதிவீதான் அன்னபதத்தால் கூறப்படுகிறது. இங்கு பஞ்சபூதங்களை வரிசையாக கூறும் பகுதி இருக்கிறது. மேலும் அன்னத்தின் நிறம் கருப்பு என்று (यद्कृष्णं तदन्नस्य) கூறப்படுகிறது. இந்த நிறம் பெரும்பாலும் பூமியில்தான் பொருந்துகிறது, உணவில் அல்ல. மேலும் अद्भ्य: पृथिवी என்ற தைத்திரீய உபநிஷத்தில் ஸ்பஷ்டமாக ஜலத்திலிருந்து ப்ருதிவீ உண்டாயிற்று என்று சொல்லப்படுகிறது. பூமியிலிருந்து அன்னமாகிற தான்யங்கள் உண்டாகின்றபடியால் கார்யத்தை குறிக்கும் அன்னம் என்ற வார்த்தை காரணமாகிற பூமியை குறிப்பிடுவது தவறில்லை.

## 2.3.6 D पृथिव्यधिकाररूपशब्दान्तरेभ्य: (1 सूत्रम्)

ஸந்தேஹம் :- விஷ்ணுவிற்கு ஜலம் என்பது அன்னத்தை உண்டு பண்ண த்வாரமா? பூமியை உண்டுபண்ண த்வாரமா?

பூர்வபக்ஷம் :- तां अन्नमसृजन्त ஜலம் அன்னத்தை உண்டு-பண்ணியது "अद्भ्य: पृथिवी" ஜலத்திலிருந்து பூமி உண்டானது என்பதாக இரண்டு ஶ்ருதிகளும் விரோதமான தகவல் கூறுவதால் இரண்டுமே அப்ரமாணம். எனவே ஜலம் எதற்கும் த்வாரம் ஆகாது. ஆகையால் இரண்டு ஶ்ருதியும் அப்ரமாணம்.

ஸித்தாந்தம்:- வேதம் அபௌருஷேயமானதால் அந்த வாக்யங்களுக்கு அப்ரமாண்யம் கூற முடியாது என்பதால் கருத்து வேறு கொள்ளவேண்டும். இங்கு சாந்தோக்யத்தில் அக்னி, ஜலம், போன்ற பூதங்களை பேசும் வரிசையில் இந்த வாக்கியம் உள்ளது. மேலும் யத்க்ருஷ்ணம் ததன்னஸ்ய என்று அன்னத்திற்கு கருப்பு நிறம் கூறப்படுகிறது. எனவே அன்னம் என்றால் பூமிதான். மேலும் க்ருஷ்ணைவ ப்ருதிவீ ஸ்வத: என்று ஶ்ருதி உள்ளது. ஆபஶ்ச ப்ருதுவீசான்னம் (ஐ 2.3.1) ஶ்ருதியும் உள்ளது. எனவே பூமியை படைக்க மட்டுமே விஷ்ணுவிற்கு ஜலம் த்வாரம்.

## 2.3.7 A तदभिध्यानादेव तु तल्लिङ्गात्स:

(1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- முந்திய அதிகரணங்களில் வாயு முதலிய பூதங்களுக்கு ப்ரஹ்மம்தான் ஆகாயவடிவமாயிருந்தது காரணம் என்று நிர்ணயம் கூறியது தவறு. आकाशात् वायु: என்றவாறு ஆகாஶம் போன்றவற்றை ஸ்வதந்திரமாக வாயு போன்றவற்றிற்கு கர்த்தா என்பதாக ஸ்பஷ்டமாக கூறப்படுகிறதே! எனவே எப்படி முந்திய அதிகரணங்களின் ஸித்தாந்தம் பொருந்தும்?

ஸித்தாந்தம் :- அந்தர்யாமி ப்ராம்ஹணத்தில் य आकाशमन्तरो यमयति என்று ஆகாயம் போன்றவைகளை தூண்டுபவராக பரமாத்மா கூறப்படுகிறபடியால் ஆகாயம் போன்றவற்றுக்கு ஸ்வாதந்த்ரயம் கிடையாது. மேலும் तत्तेज ऐक्षत என்றெல்லாம் ஆலோசனை செய்து அக்னி ஜலத்தை படைத்தது என்பதாக உள்ளது. ஜடமான தேஜஸ் எப்படி ஆலோசிக்கும்? எனவே அந்த அந்த பூதங்களாக விரிவடைந்த ப்ரஹ்மம்தான் மற்றவைகளுக்கு கர்த்தா.

## 2.3.7 D तदभिध्यानादेव तु तल्लिङ्गात्स:

(1 सूत्रम्)

இந்த அதிகரணம் உலக லயத்தைப்பற்றி கூறுவதாக மத்வ ஸித்தாந்தம். உலகம், பூதங்கள், உண்டானபடியால் அழிவு நிச்சயம் (லயம் கட்டாயம் உண்டு)

ஸந்தேஹம் :- அந்த லயகர்த்தா ருத்ரனா? விஷ்ணுவா?

பூர்வபக்ஷம் :- ருத்ரன்தான் ப்ரளய கர்த்தா என்று ப்ரஸித்தி உள்ளது. மேலும் रुद्रो मा विशान्तक: என்ற மஹாநாராயண உபநிஷத்தில் ருத்ரனை நாசகனாக கூறுகிறது. "यत्प्रयन्ति" "यमप्येति भुवनं साम्पराये" என்ற வாக்யங்களில் விஷ்ணுவை லயாதாரமாக கூறினாலும் அது துர்பலமானது. ஏனெனில் "விஷ்ணு, மாரகர் அல்ல. ஜனகரானதால். காப்பாற்றுபவரானதால் தாய், தந்தையர் போல் என்ற அனுமானத்தோடு கூடிய ருத்ர ஸம்ஹர்த்ருத்வம் கூறும் ப்ஃருதியானது ப்ரபலமானது. எனவே ருத்ரத்வாரா ஸம்ஹர்த்ருத்வம் சொல்வதும் தவறு. எனவே விஷ்ணு லயகர்த்தா அல்ல.

ஸித்தாந்தம் :- விஷ்ணுதான் ஸர்வலயகர்த்தா. तस्याभिध्यानात् என்ற வாக்யத்தில் அனாதியான பொருள்களே விஷ்ணுவிற்கு அதீனம் என்று கூறப்படும்போது ஸாதியான விச்வலயம் எம்மாத்திரம் (கட்டாயம் விஷ்ணுவிற்கு அதீனம்தான்). மேலும் "स्रष्टा पाता संहर्ता स एको हरि:" यमप्येति என்ற பல ப்ஃருதிகள் விஷ்ணுதான் லயகர்த்தா என்று கூறுகின்றன. ருத்ரன் ஸம்ஹர்தா என்று கூறும் ப்ஃருதி "निमित्तमात्रमीशस्य" என்ற வாக்யப்படி சில பொருள்களின் அழிவில் ருத்ரன் த்வாரமாக ஆகிறார் என்று பொருள் கொண்டது. பூர்வபக்ஷி கூறிய அனுமானம் தவறு. தாய்தந்தையர் அழிப்பவராக ஆகாததற்கு காரணம் படைத்தது அல்ல. குழந்தைகளிடம் மமதையே (தனது என்ற மோகம்) காரணம் ஆகும். எனவே அனுமானம் தோஷமுடையது. सोपाधिकम् எனவே விஷ்ணுதான் லயகர்த்தா.

## 2.3.8 A विपर्ययेण तु क्रमोऽत उपपद्यते च

(1 सूत्रम्)

இந்த அதிகரணத்தில் ப்ரபஞ்சத்தின் லயக்ரமம் (அழிவு முறை) விசாரிக்கப்படுகிறது.

ஸந்தேஹம் :- ஸ்ருஷ்டி ஏற்பட்ட ஆகாயம், வாயு, அக்னி... போன்ற 1,2,3, வரிசையில் ப்ரளயம் ஏற்படுகிறதா? மாறுதலாகவா?

பூர்வபக்ஷம் :- முன்பே வரிசை அமைப்பை வேதம் ஸ்ருஷ்டியில் நிர்ணயித்து உள்ளபடியால் அதே ரீதியில் லயம் ஏற்படலாம். நாமாக கல்பிப்பதை விட தயாராக உள்ளதை ஏற்பது ச்லாக்யம்.

ஸித்தாந்தம் :- இது தவறு. ஏனெனில் காரணமான பொருள் ஆகாயம் முதலில் லயித்துவிட்டால் வாயு எப்படி தக்க முடியும்? மேலும் "जगत्प्रतिष्टा देवर्षे पृथिव्यप्सु प्रलीयते | ज्योतिष्याप: प्रलीयन्ते ज्योतिर्वायौ प्रलीयते |" என்று புராணத்தில் ஸ்ருஷ்டிக்கு நேர்மாறான க்ரமம் கூறப்பட்டுள்ளது. ப்ருதிவீ ஜலத்திலும், ஜலம் அக்னியிலும், அக்னி வாயுவிலும், வாயு ஆகாயத்திலும், ஆகாயம் அவ்யக்தத்திலும் லயிக்கின்றன. மாடியில் படிக்கட்டு ஏறும் வழிக்கு மாறானது தானே இறங்குவதற்கு பொருந்தும்.

## 2.3.8 D विपर्ययेण तु क्रमोऽत उपपद्यते च

(1 सूत्रम्)

எல்லா ப்ரபஞ்சமும் விஷ்ணுவிடம் லயம் அடையும் பொழுது அதன் முறை சிந்திக்கப்படுகிறது. ஸ்ருஷ்டியின் க்ரமப்படியா? மாறுதலாகவா?

பூர்வபக்ஷம் :- क्रमादुपपद्यते क्रमाद्विलीयते, क्रमेणोत्पत्तिर्विलीयश्च என்று க்ரமமாக (ஆகாயம், வாயு முதலியவை) லயம் கூறும் பல ப்ஃருதிகள் உள்ளதால் ஸ்ருஷ்டியின் வரிசைப்படி லயம். மாறுபட்ட ரீதியில் லயம் என்ற கூற்று ஸரியல்ல. உலகில் உண்டான வரிசையில்தானே பெரும்பாலும் மரணம் ஏற்படுகிறது! என்கிற யுக்தியுடன் கூடிய க்ரமலயசக்தியானது ப்ரபலமானது.

ஸித்தாந்தம்:- व्युत्क्रमाल्लय: (भाल्लवेय) என்ற ப்ஃருதியானது நிரவகாஸமாக (முழுமையாக தள்ளப்பட்டது) ஆகிவிடும் என்பதால் மாறுபட்ட முறைதான் ஸரி. க்ரமபோதனை பண்ணும் ப்ஃருதிகள் க்ரமமானது ஆரோஹணம் அவரோஹணம் இருவிதமாக (நேர்மாறு) இருப்பதால் பொருந்தும். सृष्टावन्यो लयेचान्य: என்று கூறப்பட்டுள்ளது. முன்னால் உண்டானவன் முன்னால் அழிவது சாமர்த்தியம் இல்லாதவர்க்குத்தான். எனவே வ்யுத்க்ரமமாக லயம் ஏற்படுகிறது.

## 2.3.9 A अन्तरा विज्ञानमनसी क्रमेण तल्लिङ्गादिति चेन्नाविशेषात् (1 सूत्रम)

பூர்வபக்ஷம் :- முண்டகோபநிஷத்தில் ஸ்ருஷ்டியின் வரிசை கூறும்போது एतस्माज्जायते प्राण: मन: सर्वेन्द्रियाणि च | खं वायुर्ज्योतिराप: पृथिवी विश्वस्य धारिणी || என்பதாக சொல்லப்படுவதால் (ப்ராணன், மனம், புலன்கள், பஞ்ச பூதங்கள் என்று கூறுவதால்) ஆகாயத்தை முதலில் கொண்ட ஸ்ருஷ்டிக்ரமம் நிரூபித்தது எவ்வாறு பொருந்தும்?

ஸித்தாந்தம்:- अन्नमयं हि सोम्य मन आपोमय: प्राणस्तेजोमयी वाक् என்று மனம் அன்னத்திலிருந்தும், ப்ராணன் ஜலத்திலிருந்தும், வாக்கு தேஜஸ்ஸினுடைய விகாரமாக (கார்யமாக)

  

கூறப்படுகிறது. (சாந். 6) எனவே இந்திரியங்கள், ப்ராணன், மனம் யாவும் பூதங்களுள் அடங்குமாதலால் தனி ஸ்ருஷ்டிக்ரமம் வேண்டாம். முண்டகோபநிஷத்தானது க்ரமத்தைக்கூற வரவில்லை. ஏனெனில் க்ரமம் கூறும் ஐந்தாம் விபக்தி (आकाशात् वायुः) என்பதாக இங்கு இல்லை. உண்டானது மட்டுமே கூறப்படுவதால் இந்த ஶ்ருதிக்கு விரோதமில்லை.

## 2.3.9 D अन्तरा विज्ञानमनसी क्रमेण तल्लिङ्गादिति चेन्नाविशेषात् (2 सूत्रे)

இங்கு மத்வ மதத்தில் இரண்டு அதிகரணங்களை (இதுவும் இதற்கு அடுத்த "चराचर"மும்) சேர்த்து, ஒன்றாக கணக்கிடப்படுகிறது! சென்ற அதிகரணத்தில் லயக்ரமம் விபரீதமாக (ஸ்ருஷ்டிக்கு மாறுதலாக) என்று கூறப்பட்டது முழுமையாக பொருந்துமா? பொருந்தாதா? என்று விசாரிக்கப்படுகிறது. சில பொருட்கள் க்ரமேண (ஸ்ருஷ்டிபோல்) லயிக்கலாம் என்பதால் நிர்ணயம் ஸரியில்லை.

பூர்வபக்ஷம்:- मनसश्च विज्ञानम् என்பதாக மனதிலிருந்து விஞ்ஞானம் வந்ததாக ஸ்ருஷ்டிக்ரமம் உள்ளது. ஆனால், यच्छेद्वाङ्मनसि प्राज्ञः तद्यच्छेज्ज्ञान आत्मनि என்பதாக லயத்திலும் மனதின் லயம் முதலிலும் ஞானத்தின் லயம் பிறகும் (ஸ்ருஷ்டிக்ரமம் படி) கூறியுள்ளது. எனவே மனம்,விஞ்ஞானம், இரண்டைத்தவிர மற்ற லயங்களில் வ்யுத்க்ரமம், இவை இரண்டிலும் ஸ்ருஷ்டிக்ரமம் ஏற்க வேண்டும்.

ஸித்தாந்தம் :- மனம் விஞ்ஞானம் என்ற இரண்டு பதங்களும் இரண்டு பொருள்களை (தத்வாந்தரம்) கூறவில்லை. மனமான இந்திரியம், அறிவு என்ற இரண்டை குறிக்கிறது. எனவே மனம்,விஞ்ஞானம் என்ற தத்வம் ஸ்ருஷ்டிக்ரமத்தில் லயிக்கின்றன என்ற பூர்வபக்ஷம் தவறு. எனவே லயக்ரமத்தில்

choice இல்லை. எல்லாம் ஸ்ருஷ்டிக்ரமத்தின் மாறுபட்ட க்ரமத்தில்தான் லயிக்கின்றன.

## 2.3.10 A चराचरव्यपाश्रयस्तु स्यात्तद्व्यपदेशो भाक्तस्तद्भावभावित्वात् (1 सूत्रम्)

இந்த அதிகரணத்தில் ஜீவனுக்கு (சரீரத்தின் வருகை, போக்கு) ஜன்ம மரணம் உண்டா? இல்லையா? என்று விசாரிக்கப் படுகிறது.

பூர்வபக்ஷம் :- पुत्रो मे जात: पिता मे मृत: என்பதாக குழந்தை பிறந்தான், தந்தை இறந்தார் என்று உலகில் பேசப்படுவதாலும், जातकर्म, अन्त्येष्टि போன்ற ஸம்ஸ்காரங்கள் (பிறந்த இஷ்டி, மரித்த இஷ்டி) ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்படுவதாலும் ஜன்ம மரணம் ஜீவனுக்கு உண்டு.

ஸித்தாந்தம் :- இது ஏற்பது மிக மிக தவறு. அப்படியானால் புண்ணிய பாபங்கள் செய்தவை இவன் அழிவதால் வீணாகிவிடும். மேலும் திடீரென புதிதாக தோன்றும் ஜீவனுக்கு செய்யாத புண்ணிய-பாபங்கள் பயன் ஏற்படும் என்ற குற்றம் உள்ளது. எனவே ஶாஸ்த்ரத்தில் கூறிய ஸம்ஸ்காரங்கள் யாவும் உடலுக்கு சிறப்பு ஊட்டுவதற்காகவே. பிறப்பு, இறப்பு உடலுடையதுதான். ஏமாற்றத்தால் ஆன்மாவான ஜீவனிடம் கூறப்படுகிறது. சரீரம் தோன்றினால் ஜன்மம், சரீரம் மறைந்தால் மரணம் என்கிறோம், மேலும் जीवापेतं वाव किलेदं म्रियते न जीवो म्रियते என்று ஜீவனுக்கு மரணம் இல்லை என்று ஸ்திரமாக கூறப்பட்டுள்ளது.

## 2.3.11 A नात्माश्रुतेर्नित्यत्वाच्च ताभ्य: (1 सूत्रम्)

ஆத்மாவிற்கு உடல் உண்டாகும் போதெல்லாம் பிறப்பும், உடல் மடியும் போதெல்லாம் மரணமும் இல்லை என்று சென்ற ஸூத்ரத்தில் கூறியிருப்பினும், ஸ்ருஷ்டி ஆரம்பகாலத்தில்

  

உற்பத்தியும், கல்பம் முடியும்போது (प्रलयकाल) மரணமும் இருக்கட்டுமே என்று கேட்டு நிராகரிக்கப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- சென்ற ஸூத்ரம் கூறியது போல் அடிக்கடி ஜன்ம மரணம் ஆத்மாவிற்கு வேண்டாம். ஆனால் ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் ஜன்மாவும், ப்ரளயகாலத்தில் மரணமும் ஏற்க வேண்டும். ஏனெனில் ப்ரளயகாலத்தில் एकमेवाद्वितीयम् என்பதாக ப்ரஹ்மத்திற்கு இரண்டற்ற தன்மை கூறப்படுகிறது. இது பொருந்தாமல் ஆகிவிடும். ஏனெனில் ப்ரஹ்மத்திற்கு வேறான ஜீவன் ப்ரளயத்திலும் இருப்பதாக ஆகிவிட்டதே. மேலும் यथाग्नेः क्षुरतो विस्फुलिङ्गाः என்ற ஶ்ருதியில் நெருப்பிலிருந்து பொறிகள் கிளம்பி வெளி வருவதுபோல் ப்ரஹ்மத்திடமிருந்து எல்லா ஆத்மாக்களும் வெளியே வருகின்றன என்பதாக ஆத்மாவின் உற்பத்தி கூறப்படுகின்றது. ஆகையால் கல்பகால ஆரம்பத்தில் ஆகாயம்போல் ஜீவன் உண்டாகி, ப்ரளய காலத்தில் மரணம் அடைகிறான் என்று ஏற்கவேண்டும்.

ஸித்தாந்தம் :- ஜீவன் உண்டாகாவிட்டால் ப்ரஹ்மத்திற்கு அத்வைதத்தன்மை போய்விடும் என்பது தவறு. அத்விதீயமாக உள்ள ப்ரஹ்மமேதான் புத்தி என்கிற கண்ணாடி உதித்தவுடன் ஜீவவடிவத்தில் புத்தியில் (உடலில்) ப்ரவேசிப்பதாகவும். अयमात्मा ब्रह्म என்றும் ப்ரஹ்மமேதான் ஜீவன் என்பதால் பூர்வ பக்ஷி கூறிய தோஷம் கிடையாது. நெருப்பு, பொறி உதாரணம் கூறி ஆத்மாவின் ஜன்மா கூறுவது ஔபாதிகம் (குடம் உண்டாகும்போது குடத்தின் இடைவெளி உண்டாவதாக கூறுவது போல் இரண்டாம் நிலை. ஜீவனுக்கு மரணம் உற்பத்தி ஏற்றால் புண்ணிய பாபங்கள் செய்ததற்கு பயன் வராது. செய்யாத பாபங்களின் பயன் வந்து சேரும். ஸ்ருஷ்டி ப்ரகரணத்தில் எங்குமே ஆத்மா உண்டானதாக கேட்கப்படவில்லை.

# 2.3.3 V नात्माश्रुतेर्नित्यत्वाच्च ताभ्य: (1 सूत्रम्)

பரமாத்மா ஞானத்தினால் எல்லாவற்றின் ஞானமும் ஏற்படும் என்ற ப்ரதிஜ்ஞயை நிர்வஹிப்பதற்காக ஆகாயம் போன்றவைகளின் உற்பத்தி (स्वरूपान्यथाभावरूपविकारो) ஸ்தாபிக்கப்பட்டது. गुहां प्रविष्टावात्मनौहि என்று ஆத்மாவிற்குள் மற்றொருவரான ஜீவாத்மாவிற்கும் ஸர்வவிஞ்ஞானப் ப்ரதிக்ஞை நிர்வஹிக்கும் நோக்குடன் வேறு விதமாக ஜீவாத்மாவிற்கு ப்ரஹ்மகார்யத்வத்தை கூறுவதற்காக இந்த அதிகரணம்.

பூர்வபக்ஷம்:- ஆத்மாவும் ஆகாயம் போல் பிறப்பு உடையவன்தான். ஏனெனில் एकविज्ञानेनसर्वविज्ञानम् ப்ரதிக்ஞை ஜீவோத்பத்தியில்லாமல் நிரூபிக்க முடியாது. "यतो वा इमानि भूतानि जायन्ते" என்ற இடத்தில் அசேதனத்துடன் கூடிய சேதனனைதான் பூதானி என்ற வார்த்தை குறிக்கிறது. மேலும் तोयेन जीवान्विससर्ज भूम्याम् என்பதாக ஜலம், ப்ருதிவீ போன்றவைகளுடன் ஜீவனுக்கும் ஸ்ருஷ்டி கூறப்படுகிறது.

ஸித்தாந்தம்:- न जायते म्रियते वा, अजो नित्य: என்றெல்லாம் ஜீவனுக்கு உற்பத்தியை நிஷேதிக்கிறது வேதம். உற்பத்தியும் நாசமும் இல்லாத தன்மையான நித்யத்வமும் கூறப்படுகிறது. भूतानि जायन्ते என்ற இடத்தில் பிறப்பு கூறப்படுவதன் தாத்பர்யம் ஜீவனின் உடல் உண்டாவதால். அதோடு சேர்ந்து இவனுக்கும் உத்பத்திபோல் தெரிவதால்.

இந்த ஸூத்ரத்தில் ஜீவனுக்கு உற்பத்தி கிடையாது என்று கூறுவது மட்டும் ஸூத்ரகாரரின் ஹ்ருதயமன்று. அதோடு அவனுக்கு ஏதோ ஒருவிதத்தில் ப்ரஹ்மகார்யாபாவத்தையும் ஊர்ஜிதம் பண்ணுவதிலும் தாத்பர்யம். இல்லையேல் ப்ரஹ்மகார்யத்வம் கூறாவிடில் एकविज्ञाने सर्वविज्ञानम् ப்ரதிக்ஞை நிறைவேறாது. காரணம் என்னவென்றால் प्रतिज्ञा अहानि: என்ற ஸூத்ரத்தில் ஆகாயத்திற்கு உற்பத்தியை ஏற்றால்தான் ப்ரஹ்மகார்யத்வம் சித்திக்கும் என்று கூறுகிறார். அதே

  

போல அடுத்த ஸூத்ரத்தில் ஜீவனுக்கு ஞானம் என்பது தனது தர்மபூதமாக (இவனை ஆச்ரயித்து) உள்ளதாகக்கூறுவது ஸூத்ரகாரரின் இந்த விஶேஷ தாத்பர்யத்தை சூசிக்கிறது. ஞான ஆஶ்ரயனாக ஜீவனாவதால் தர்மபூத ஞானமானது உண்டாவதால் அதன் வாயிலாக ஜீவனுக்கும் ப்ரஹ்மகார்யத்வம் பொருந்தும். ஜீவனுடைய தர்மமான ஞானமானது ஸங்கோச விகாஸத்தன்மை உடையது (சுருக்கி விரியும் தன்மை கொண்டது). ஏனெனில் தூக்கத்தில் சுருக்கி விழிப்பில் விரிகிறதன்றோ! ஆனால் இந்த ஞானம் நித்யம் என்றும் யாவदात्म भावित्वाच्च என்று கூறப்படுகிறது. எனவே ப்ரஹ்மத்திற்கு நிர்விகாரத்வம் ஸ்வரூபமானாலும் சரீரபூதா-சேதனத்தின் வாயிலாக விகாராஶ்ரயத்வம் ஏற்றுக்கொண்டு ஜகத்காரணத்வம் ஊர்ஜிதப்படுத்தப்பட்டது - न तु दृष्टान्तभावात् என்பதாக; அதேபோல் ஜீவனுக்கு ஸ்வரூபத்தினால் நித்யத்வமிருப்பினும் தனது தர்மபூதஞானம் வழியாக விகாரத்வமும் ஏற்று ப்ரஹ்மகார்யத்வம் நிர்வஹித்தே ஆகவேண்டும். அதனால்தான் ज्ञोत एव என்ற அடுத்த அதிகரணம் பொருந்தும். ஸபலமாகும்.

## 2.3.10 D नात्माश्रुतेर्नित्यत्वाच्च ताभ्य:(1 सूत्रम्)

இந்த அதிகரணம் விஷ்ணுவிற்கு லயம் உண்டு என்று கேள்வி எழுப்பி பதில் கூறுவதாகும்.

ப்ரஹ்மம் தவிர மற்ற எல்லாவற்றிற்கும் ஸ்ருஷ்டிக்ரமவிபரீத க்ரமத்தில் லயம் நிர்ணயித்த பிறகு விஷ்ணுவிற்கும் லயம் உண்டா இல்லையா என்று விசாரிக்கப்படுகின்றது.

பூர்வபக்ஷம்:- "स इदं सर्वं विलाप्यान्तस्तमसि लीयते" என்று கூறப்படுவதால் விஷ்ணுவும் லயிக்கிறார். नित्यो नित्यानाम् என்ற ஶ்ருதிக்கு துர்பலத்வம். ஏனெனில் "विष्णु:, लयवान्, चेतनत्वात्, जीववत्"

ஜீவன் சேதனனாயிருந்தும் எப்படி லயிக்கிறானோ, அதேபோல் சேதனனான விஷ்ணுவும் லயமுடையவர் என்ற யுக்தியுடன் கூடிய तम स लीयते என்ற பூர்வபக்ஷ ஶ்ருதி ப்ரபலமாய் உள்ளது.

ஸித்தாந்தம் :- விஷ்ணுவானவர் தேகம் அழிவதான நாசம் இல்லாதவர், ப்ரமாணமில்லாததால் என்று உணர வேண்டும். तमसि लीयते என்ற வாக்கியம் तुच्छेनाभ्य पहितं यदासीत् என்ற வாக்யத்திற்கு முன்பு ப்ரளயத்தில் नासदासीत् என்பதாக எதுவும் இல்லை என்று சொல்லிவிட்டு तम आसीत् என்பதாக ப்ரக்ருதிக்கு இருப்பைக் கூறி ப்ரஹ்மத்திற்கு மூடப்பட்ட தன்மையையும், மறுபடி வெளிப்படும் தன்மையையும் கூறுகிறது. மேலும் பைங்கி ஶ்ருதியில் तमसि निलीनः प्रकृतिं पुरुषं कालं चानुपश्यति कश्चन, नैनं पश्यति कश्चन. ப்ரக்ருதியில் மறைந்திருந்து, ப்ரக்ருதி, புருஷன், காலங்களைப் பார்க்கிறார், ஆனால் இவரை யாரும் பார்ப்பதில்லை என்று ஸ்பஷ்டமாக கூறப்படுகிறது. எனவே லயம் என்பதற்கு மறைந்து இருத்தல் என்றுதான் பொருள். இல்லாவிடில் விஷ்ணு நித்யத்வத்தை கூறும் பற்பல ஶ்ருதிகளுக்கு விரோதம் வரும். பூர்வபக்ஷ யுக்தியானது ஶ்ருதிகளுக்கு விரோதமானதால் ப்ரமாணம் இல்லை.

## 2.3.12 A ज्ञोऽत एव (1 सूत्रम्)

ஸந்தேஹம் :- ஜீவன் அசேதனனா? சேதனனா?

பூர்வபக்ஷம் :- தூக்கத்தில் அறிவற்றவனாக இருப்பதால் ஜீவனின் தன்மை அறிவு ஆகாது. ஜாக்ரத்தில் ஏற்படும் அறிவு மனதின் உரசலால் ஏற்படும் ஒன்று.

ஸித்தாந்தம் : சித்ரூபமான ப்ரஹ்மமே ஜீவனாக ப்ரவேசம் செய்ததாக तदेवानुप्राविशत् என்று வேதம் கூறுகிறபடியால் ஜீவன்

ஞானஸ்வரூபன்தான். இவனது சைதன்யம் தூக்கத்திலும் லோபமாவது கிடையாது. உறக்கத்தின் ஸாக்ஷியாக விளங்குகிறான் அன்றோ. இல்லையேல், காலையில் விழித்ததும் ஞாபகம் (ஸ்ம்ருதி) எவ்வாறு வரும். அப்படியானால் தூக்கத்தில் ஒன்றுமே தெரியாதது எப்படி? தெரியவேண்டிய த்வைதம் ஒன்றும் தனக்கு வேறாக இல்லாததால் என்று ஶ்ருதியே கூறுகிறதன்றோ! यद्वै तन्न पश्यति पश्यन् वै तन्न पश्यति । न हि द्रष्टुः दृष्टेः विपरिलोपो विद्यते अविनाशित्वात्; न तु तद्द्वितीयमस्ति ततो अन्यत् विभक्तं यत्पश्येत् என்பதாக ஶ்ருதியானது ஒரு பொழுதும் க்ஷணமும் கூட ஸ்வரூபமான சைதன்யத்திற்கு மறைவு கிடையாது என்கிற தன்னைத்தவிர வேறு ஒன்றும் இல்லாததால் உறக்கத்தில் ஏதும் தெரியவில்லை. நம் முகம் காட்டும் கண்ணாடி இல்லாத பொழுது நம்முகம் காணப்படாவிடில் முகம் விளங்கவில்லை என்று கூறமுடியுமா? (லயித்தது என்று சொல்லலாமா?) எனவே ஜீவன் ஞானஸ்வரூபன்தான்.

## 2.3.4 V ज्ञोऽत एव (14 सूत्रा णम्)

மிகவும் வியக்கத்தக்க முறையில் இந்த அதிகரணமானது விஶிஷ்டாத்வைதத்தில் பதினான்கு (14) ஸூத்ரங்களை கொண்டதாகவும் ஜீவன் ஞானஸ்வரூபன்தான். ஆனால் இவனிடம் தர்மபூதமான ஸ்வரூபமான ஞானம் எப்போதும் உடல் முழுவதும் உணர்வை தொடர்ந்து தந்து ஞானப்ரகாசம் முழுமையாக உடலில் உணரப்படாதது ஏன் என்ற கேள்விக்கு பதிலாக उत्क्रान्तिगत्यागतीनाम् என்று தொடங்கி பதிமூன்று ஸூத்ரங்களில் ஜீவன் அணுபரிமாணன் என்பதாக நிர்ணயம் செய்யப்படுகின்றது - என்பதாக வியாக்யானம் அமைந்துள்ளது!

பூர்வபக்ஷம்:- ஜீவன் ஞானஸ்வரூபமானவன்தான், ஞானாஶ்ரயன்

அல்ல, காண்வ சாகை ப்ரஹதாரண்யகத்தில் यो वज्ञाने तिष्ठन् என்பதாக ஜீவன் என்று கூறவேண்டிய இடத்தில் விஞ்ஞானம் என்று கூறப்படுகிறதன்றோ! மேலும் யக்ஞயாகாதிகர்மாக்களுக்கு கர்த்தாவான ஜீவனை கூறுமிடத்தில் वज्ञानं यज्ञं तनुते என்று விஞ்ஞான என்ற சொல் கூறுப்படுகிறது. ஆகையால் ஞான-ஸ்வரூபனான இவனுக்கு ஞானாஶ்ரயத்வம் வரமுடியாது. மேலும் ஸர்வகதனான ஆத்மா (ஜீவாத்மா) ஞானஸ்வரூபனாகவும் இருந்தால், ஞானம் விஷயத்தை க்ரஹிக்காமல் இருக்காது என்பதால் எப்போதும் எங்கும் விஷயங்களை தெரிந்து கொண்டேயிருக்கும் என்ற ஆபத்து வரும். ஜீவனே அணுபரிமாணன் என்று ஏற்றால் போக்தாவான ஜீவனுடைய அத்ருஷ்டத்தால் (புண்ணியத்தால்) தூரத்திலுள்ள பொருள் உண்டாகும்போது அதை அணுவான ஜீவன் தனது தொடர்பு ஏற்பட முடியாததால் உணர முடியாமல் ஆகி விடும் என்பதால் அணுபரிமாணம் ஸரியில்லை. எனவே விபுபரிமாணனான ஜீவனை ஏற்க வேண்டும் என்பதால் தூக்கத்திலும் எல்லாம் தெரியும்படி ஆகிவிடும். எனவே ஜீவன் ஞானஸ்வரூபன் அல்ல.

ஸித்தாந்தம் :- ஶ்ருதியில் एष हि द्रष्टा स्प्रष्टा என்று ஜீவனுக்கு ஞானஸ்வரூபத்வமும், ஞானாஶ்ரயத்வமும் இரண்டும் கூறப்படுகிறது. எனவே ஜீவன் ஞானஸ்வரூபன், ஞானத்தை உடையவனுமாக ஆகிறான். அப்படியானால் ஜீவன் ஸர்வகதன் (all pervasive) என்பதால் இவனுக்கு எப்போதுமே விஷயங்கள் தெரியட்டுமே என்று கேள்வி கேட்பது தவறு, ஜீவன் அணுபரிமாணன் ஆனபடியால் ஸர்வகதத்வம் கூறுவது ப்ரமாணம் அற்றது. அணுபரிமாணன் ஆனாலும் அத்ருஷ்டம் என்பது ஈஶ்வரனுடைய கொடுக்கும் எண்ணம்தான் (ईश्वरीयदित्सा) என்பதால் அந்த ஈஶ்வர இச்சையினால் கார்யங்கள் தூரத்தில் ஏற்படுவதில் தவறில்லை.

ஜீவனுக்கு அணுபரிமாணம்தான் என்பது "तेन प्रद्योतेन

आत्मानिष्क्रामति" எந்த சிறு ஓட்டையின் வெளிச்சத்துடன் ஆத்மா பரலோகம் போக புறப்படுகிறான் என்ற ஶ்ருதி வாக்யத்தினால், மற்றும் பல உத்க்ராந்தி, போகுதல் வருதல் போன்றவைகளாலும் ஜீவன் அணுபரிமாணன் என்பது திண்ணம். விபுவான ஆகாயம் செல்கை வருகையற்றதன்றோ! ஜீவனும் அவ்வாறானால் எவ்வாறு பரலோகம் போக வர முடியும்.

கேள்வி: "महानज आत्मा" என்ற ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் (6.6) விபுத்வம் கூறப்படுகிறதே?

பதில்:- அது ப்ரஹ்மத்தைப் பற்றியது. ஏனெனில் ஜீவாத்ம ப்ரகரணம் "यस्यानुवित्तः प्रतिबुद्ध आत्मा" போன்ற வாக்யங்களால் ஜீவப்ரகரணம் விச்சின்னமாக ஆகிவிட்டது. மேலும் முண்டகத்தில் एषाऽणुरात्मा என்று ஸ்பஷ்டமாக அணுத்வம் கூறப்படுகிறதே!

ஜீவன் அணுவானால் உடல் பூராவும் சைதன்யவ்யாப்தி (உணர்வு பரவுதல்) எப்படி வரும் என்றால் மார்பின் பகுதியில் சந்தனம் சிறிதாக பூசப்பட்டாலும் முழு உடலில் சுகம் வருகிறதை உதாரணம் கொண்டு பொருந்தும். எனவே எல்லா கேள்விகளுக்கும் பதில் உள்ளதால் ஜீவன் அணுபரிமாணன், ஞானஸ்வரூபன், ஞானாஶ்ரயன் என்பது ஊர்ஜிதம்.

## 2.3.11 D ज्ञोऽत एव (2 सूत्रम)

[युक्तेश्च -அத்வைத மதத்தில் இல்லாத ஸூத்ரம்]

இதுவரை இந்த பாதத்தில் பூதங்களைப்பற்றி விசாரித்தபிறகு இந்த பாதம் பூர்த்திவரை ஜீவனைப்பற்றி விசாரிக்கப்படுகிறது. ஜீவனுக்கு உற்பத்தி உண்டா இல்லையா? என்ற ஸந்தேஹம் தோன்றுகிறது.

பூர்வபக்ஷம் :- உற்பத்தி கிடையாது. नित्यो नित्यानाम् என்ற வாக்யத்தில் ஆறாம் வேற்றுமையில் உள்ள வார்த்தையினால் ஜீவன்கள் நித்யர்கள் என்று கூறப்படுகிறது. सर्व एते चिदात्मानो व्युच्चरन्ति என்ற வாக்யத்தில் உற்பத்தி சொல்லப்படுவது துர்பலமானது. ஜீவனுடைய உற்பத்திக்கு காரணம் இல்லாதபடியால் இவன் உண்டாக முடியாது என்று அனுமானத்துடன் கூடிய "நித்யன்" என்ற ஶ்ருதியானது ப்ரபலமானது. எனவே உற்பத்தி கிடையாது.

ஸித்தாந்தம்:- ते वा एते चिदात्मान: अविनष्टा: परं ज्योति: निविशन्ति अविनष्टा एव उत्पद्यन्ते (काषायण श्रुति:) என்கிற ஶ்ருதியின் மூலம் ஜீவனுக்கு ஸ்வயமாக ஸ்வரூபத்வாரா உற்பத்தி இல்லாவிடினும் உபாதிகளின் உற்பத்தியினால் ஜீவனுக்கு உற்பத்தி உண்டு. உற்பத்தி என்ற வார்த்தைக்கு இருவிதமான பொருள் கொள்வது தவறில்லை. இதன் பயன் ஸித்தாந்தமான விஷ்ணுவிற்கு ஸர்வஸ்ரஷ்ட்ருத்வம் நிலைக்கிறது.

## 2.3.13 A उत्क्रान्तिगत्यागतीनाम् (14 सूत्राणि)

ஜீவன் ஸர்வகதனா, அணுபரிமாணனா? என்று ஸந்தேஹம்

பூர்வபக்ஷம்:- 10 ஸூத்ரங்களினால் கூறப்படுகிறது. பற்பல காரணங்களால் நிரூபித்து, அதற்கு உண்டான ஆக்ஷேபங்களையும் பரிஹரிக்கிறது. एषोऽणुरात्मा என்று ஸ்பஷ்டமாக அணுத்வம் கூறப்படுகிறது. பரலோகம் போய் திரும்புவதாக ஶாஸ்த்ரங்கள் கூறுகின்றன. விபுவாக (ஸர்வகதனாக) இருந்தால் உடலைவிட்டு கிளம்பி போய் வரமுடியாதன்றோ! இதற்காக மத்யம பரிமாணம் (உடலுக்கு ஏற்ப மாறுபட்ட அளவுகள்) உண்டு என்றால் அநித்யத்வம் வந்து சேரும். எனவே ஜீவன் அணுபரிமாணன்தான். ஸர்வ-

சரீரத்திலும் சைதன்யம் வ்யாபிக்க முடியும் ஆதலால் ஸர்வக-தத்வம் ஏற்கத் தேவையில்லை.

ஸித்தாந்தம் :- ஜீவனுக்கு தனது உபாதியின் வாயிலாக (புத்தியின் மூலம்) பரிச்சேதம் ஏற்படுவதால், புத்தியின் செல்கை வருகை என்பதெல்லாம் ஜீவனுக்கு பொருந்தும். ஆகாயம் பாத்திரங்களில் செல்கையில் செல்வது போல் தோன்றுகிறது அல்லவா? உண்மையில் தனது நிலையில் பார்த்தால் ஜீவன் ஸர்வகதன்தான். ஏனெனில் "महानज आत्मा" "सर्वकामी सर्वभूतान्तरात्मा" என்று பல ஶ்ருதிகள் ஸர்வகதத்வத்தை திடமாக கூறுகின்றன. எனவே ஜீவன் ஸ்வயம் ஸர்வகதன்தான். உபாதியினால் ஆகாயத்திற்கு குடம், பாத்திரம், உத்தரணி, ஊசிகளின் வழியாக பரிச்சின்னத்வம் (குறுகியதன்மை) ஏற்படுகிறது, உபாதிகளின் போக்குவரத்து இவனிடம் தோன்றுமென வேதம் அனுவதிக்கிறது, ஸ்வர்காதிகமனங்கள் இதனால் நிர்வகிக்கப்படுகின்றன.

இந்த அதிகரணம் விஶிஷ்டாத்வைதத்தில் தனியானது அல்ல. ज्ञोऽत एव என்ற பூர்வ அதிகரணத்துடன் கணக்கிடப்படுகிறது.

ஆனால் மத்வமதத்தில் இந்த அதிகரணமானது ஐந்து அதிகரணங்களாக கணக்கிடப்படுகின்றது. (7+1+2+1+2=13 सूत्राणि)

## 2.3.12 D (i) उत्क्रान्तिगत्यागतीनाम् (7 सूत्राणि)

ஸந்தேஹம் :- ஜீவன் அணுபரிமாணனா? வ்யாப்தனா?

பூர்வபக்ஷம் :- வ்யாப்தன்தான், அணு அல்ல. व्याप्ताहयात्मानश्चेतना निर्गुणाश्च सर्वात्मन: (काषायण) என்ற ஶ்ருதியில் வ்யாப்தத்வம் கூறப்படுகிறது. ஸர்வதேஹ வ்யாபியான உணர்வு தோன்றுவதாகிய யுக்தியுடன் கூடிய இந்த வ்யாப்தத்வ ஶ்ருதியானது एषोऽणुरात्मा

என்ற ஶ்ருதியை விட ப்ரபலமானது. ஜீவனுடைய அம்ஶங்கள் வ்யாபிக்கின்றன என்று கூறி ஸர்வசரீர வ்யாபியான உணர்வு உண்டாகலாம் என்று கூற முடியாது. சேதனனுடைய அம்ஶங்களும் சேதனன் ஆகும் என்பதால் பல சேதனர்களின் ஒத்த எண்ணம் வராததால் பிறகு ஒவ்வொரு சேதனரும் ஸ்வதந்தரமாக வெவ்வேறு திசையில் இழுப்பதால் ஶரீரம் பிளந்து விடும் அல்லது நகர முடியாமல் நின்றுவிடலாம். எனவே ஜீவன் வ்யாபியானவன்தான், அணு அல்ல.

ஸித்தாந்தம் :- सोऽस्मात् शरीरात् उत्क्रम्यामुम्.. என்று ஜீவன் உடலிலிருந்து கிளம்பி ஸ்வர்கம் சென்று திரும்புவதாக கூறப்படுகிறபடியால் ஜீவன் வ்யாப்தன் அல்ல. அணுதான். ஆனால் உடலின் ஒரு பகுதியில் மட்டும் சந்தனம் இருப்பினும் தனது அம்ஶங்களால் ஸர்வசரீரவ்யாபியான சுகம் வருகிறது போல் உணர்வும் ஏற்படலாம்.

## 2.3.13 D (ii) व्यतिरेको गन्धवत् तथा च दर्शयति (1सूत्रम्)

ஸந்தேஹம் :- ஜீவன் ஒரேவிதமானவனா? பலவான தன்மை உண்டா?

பூர்வபக்ஷம் :- स एकधा न सप्तधा என்ற ஶ்ருதியின் மூலம் ஒரே விதம்தான். விபுவான ஆத்மாவில் யோகப்ரபாவத்தால் பலரூபங்கள் வரலாம் என்றாலும் அணுபரிமாணமானவனிடத்தில் வரவே முடியாது. அணுவானாலும் தனது அம்ஶங்களால் பஹுரூபத்வம் என்று கூறினால் ஈஶ்வரசாம்யம் வந்து சேரும், இது தவறு. எனவே ஒரே வடிவுடையவன்தான்.

ஸித்தாந்தம் :- ஜீவன் அணுவானாலும், பல அம்ஶங்கள் இல்லாத போதிலும் யோகபயிற்சியினால் ஆராதனை செய்யப்பட்ட அபரிமிதஶக்தியுடைய ஈஶனின் அருளால் கந்தர்வர்கள் போல அம்ஶங்களை பிரித்து பலரூபங்கள் ஸம்பவிக்கலாம் என்பதால் ஜீவன் பஹுரூபன்தான். ஏகரூபத்வம் கூறும் ஶ்ருதியானது ஸ்வரூபம் ஒன்று என்ற கருத்துகொண்டது.

## 2.3.14 D (ili) पृथगुपदेशात् / तद्गुणसारत्वात् तु तद्यव्यपदेश: प्राज्ञत्वत् (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- ஜீவனும் ஈஶனும் ஒன்றானதால் எதற்கு அவனருளால் ஶக்தி பெறவேண்டும். இவர்களுடைய அபேதமானது तत्वमसि போன்ற ஶ்ருதியில் கூறப்படுகிறது. இந்த சாந்தோக்யஶ்ருதியில் ஆறுவிதமான தாத்பர்ய (கருத்து) நிர்ணயத்திற்கான லிங்கங்களும் உள்ளன. எனவே द्वा सुपर्णा என்ற ஶ்ருதி துர்பலமானது பாதிக்கப்படுகிறது. இல்லாவிடில் ஐக்கிய ஶ்ருதி வீணாகிவிடும்.

ஸித்தாந்தம்:- ஜீவனும் ப்ரஹ்மமும் வேறுபட்டவர்கள்தான். ஏனெனில் भिन्नोऽचिन्त्य: परमो जीवसङ्घात्पूर्ण: परो जीवसङ्घो ह्यपूर्ण: (कौशिकी) என்பதாக பேத ஶ்ருதி உள்ளது. மேலும் ஒருபோதும் ஐக்கியம் ஏற்க முடியாதபடி பரஸ்பரமுரணான-தன்மைகள் உள்ளவர்களாக இருப்பவர்கள் எப்படி ஒன்றாக முடியும் என்று யுக்தியும் உள்ளதால் பேதஶ்ருதிக்கு அதிக வலிமை (ப்ராபல்யம்) உண்டு என்று அனுவ்யாக்யானத்தில் கூறப்பட்டு உள்ளது. ஆகவே அனுபவவிரோதம் பேதஶ்ருதி விரோதம், பதத்வய (தத்+த்வம்) த்திற்கு லக்ஷணா கூறும் தோஷம் என்றெல்லாம் ஐக்யவிரோதமான குற்றங்கள் உள்ளதால், தத் என்ற பதத்திற்கு மட்டும் லக்ஷணை கூறி संहो

देवदत्त: என்பது (தேவதத்தன் சிம்ஹம்) போல கௌணமாக, ப்ரஹ்ம ஸத்ருஶ ஞானானந்தாதிகளை கொண்டு நிர்வாகம் பண்ணவேண்டும். எனவே "நீ ப்ரஹ்மத்திற்கு ஒத்தவனாக (सदृश னாக) இருக்கிறாய் என்பதுதான் பொருள். ஆறுவித தாத்பர்ய லிங்கங்கள் ப்ரமாணாந்தரவிரோதம் இல்லாத இடத்தில்தான் ஏற்கப்படும். ஈஶனாக முடியாது.

## 2.3.15 D (iv) यावदात्माभावित्वाच्च न दोषस्तद्दर्शनात् - (1 सूत्रम्)

ஸந்தேஹம் :- ஜீவன் நித்யனா? அநித்யனா?

பூர்வபக்ஷம் :- அநித்யன்தான். "ब्रह्मन् लयमभ्युपैति" என்று ஜீவனுக்கு ப்ரஹ்மத்தில் லயம் கூறப்படுகிறதே! "ज्ञोऽत एव" என்ற பூர்வாதிகரணத்தில் உபாதிக்கு ஜன்மா உண்டு என்று கூறப்பட்டதால் ப்ரதிபிம்பமான ஜீவனுக்கும் ஜன்மா வரத்தானே செய்யும்? ஜன்மா இருந்தால் மரிப்பது திண்ணம் என்பதால் ஜீவன் அநித்யன்.

ஸித்தாந்தம்:- नित्यो परो नित्यो जीव: सुख दु:खे तु अनित्ये என்று ஸ்பஷ்டமாக நித்யத்வம் சொல்லப்படுகிறது. ஆகையால் அனாதி-நித்யமான ஒரு உபாதியை கல்பனை செய்கிறோம். ஆகவே ஜீவனும் அனாதியும் நித்யனும் ஆவான். லயம் என்பது பாஹ்யமான வெளி உபாதிக்கு மட்டுமே என்று ஏற்றுக்கொள்ள வேண்டும்.

## 2.3.16 D (V) पुंस्त्वादिवत्त्वस्यसतोऽभिव्यक्तियोगात् (2 सूत्रे)

ஸந்தேஹம் :- ஜீவன் ஆனந்தரூபனா? இல்லையா?

  

பூர்வபக்ஷம் :- ஜீவன் ஞான ஆனந்தரூபன் அல்ல, ஏனெனில் "स दु:खाद्विमुक्त: आनन्दी भवति" துக்கங்களிலிருந்து விடுபட்ட பிறகு ஆனந்தமடைகிறான். என்று ஶ்ருதி கூறுகிறதே! மேலும் ஜீவனுக்கு இப்போது ஞான, ஆனந்தத்தன்மை அனுபவிக்கப்படவில்லையே! 'நான்' என்று ஆத்மா தெரியும்போது ஸ்வரூபமான ஆனந்தம் தடைப்பட காரணமில்லை. பாவரூபமான அக்ஞானம் இடையூறு என்று கூற முடியாது. அவ்வாறு பாவரூபமான அக்ஞானம் கிடையாது. மேலும் ஸ்வயம் ஆனந்தரூபனாயிருந்தால் மோக்ஷத்திற்காக முயற்சி வீணாகும்.

ஸித்தாந்தம் :- "नित्यानन्दो, नित्यज्ञानो नित्यबल: परमात्मा" "नित्यज्ञानबला देवा:" போன்ற ஶ்ருதி, ஸ்ம்ருதிகளால் ஜீவனுக்கு ஞானாதிரூபத்வம் கூறப்படுகிறதே! பால்யத்தில் வெளிப்படாத ஆண்தன்மை வாலிபத்தில் வெளிப்படுவது போல், முன்பே இருந்த ஞானம், ஆனந்தம் எல்லாம் மோக்ஷத்தில் வெளிப்படுகின்றன என்ற கருத்தில்தான் आनन्दी भवति என்று கூறப்படுகிறது. மேலும் மறைவுக்கு காரணமில்லாமல் ஸ்வரூபமான ஞானானந்தம் தடைப்படுவதற்கு வழியே இல்லாததால், ஞானம் ஆனந்தம் ஸ்வரூபமானால் எப்போதுமே ஆவரண விஶேஷம், மறைக்கும் ஒரு ப்ரதிபந்தகம் இருந்தாக வேண்டும். அந்த ஆவரணவிஶேஷத்தை போக்கி, தடை நீங்குவதற்காக மோக்ஷ முயற்சி தேவைதான். ஜீவன் ஞான ஆனந்த ஸ்வரூபன்தான்.

## 2.3.14 A कर्ता शास्त्रार्थवत्त्वात् (7 सूत्राणि)

அத்வைதிகளின் மதப்படி இந்த அதிகரணத்தில் "ஜீவன் போக்தா மட்டுமே, கர்த்ருத்வ ஸம்பந்தமில்லை" என்ற ஸாங்க்ய மதத்தை கண்டித்து போக்த்ருத்வம் உள்ள இடத்தில் கர்த்ருத்வம் இருந்தே ஆக வேண்டும் என்ற நியாயப்படி ஜீவனுக்கு போக்த்ருத்வத்வம்

மட்டும்தான் என்பது இல்லை, கர்த்ருத்வமும் உண்டு என்று ஊர்ஜிதம் பண்ணப்படுகிறது. புத்திதான் கர்த்ரீ என்றும் ஸர்வத்திலும் அஸங்கன் (பற்று இல்லாதவன்) ஜீவன் என்றும் கூறும் ஸாங்க்யம் ஏற்கத்தக்கதன்று.

பூர்வபக்ஷம் :- ஆத்மா அஸங்கன் ஆனதால் புத்திதான் கர்த்ரீ, ஆத்மா கர்த்தா இல்லை. கர்த்ருத்வம் ஏற்றால் விகாரம் வந்து விடும். (ஸாங்க்ய பூர்வபக்ஷம்)

ஸித்தாந்தம்: - புத்தி என்பது நமக்குக் கருவி (கரணம்) என்பதால் எழுவாய்(கர்த்தா)த்தன்மை ஏற்க முடியாது, கோடாலி கருவி மட்டும்தான், வெட்டுபவன் இல்லையே! மேலும் புத்தியை கர்த்ரீ என்று ஒத்துக்கொண்டால் வேறு ஒருகர்த்தா இதற்கு கற்பிக்க நேரிடும். கர்த்தாவே தேவையில்லை என்று கூறமுடியாது. கர்மகாண்டத்தின் யாகாதிகளை செய்யவும் ஞான காண்டத்தின் ச்ரவணம், மனனம் செய்யவோ உலகில் லௌகிக கார்யங்களை செய்யவோ ஒரு சேதனகர்த்தா தேவை ஆயிற்றே, இல்லையேல் வ்யவஹாரலோபம் (அழிவு) வரும். ஆகையால் ஜீவன் கர்த்தா என்பது மறுக்க முடியாது. ஆனால் இந்த கர்த்ருத்வம் ஆத்யாஸிகம், ஸ்படிகத்திற்கு சிவப்பு நிறம் போல் என்பது அத்வைத கருத்து. இது அடுத்த அதிகரணத்தில் விளக்கப்படுகிறது / விவரிக்கப்படுகிறது.

## 2.3.5 V कर्ता शास्त्रार्थवत्त्वात् (7 सूत्राणि)

இந்த அதிகரணத்தில் அத்வைத மதப்படி "विहारोपदेशात्" "उपादानात्" என்ற இரண்டு ஸூத்ரத்தை ஒன்றாக ஆக்கி, यथा च तक्षोभयथा என்ற தனி ஸூத்ரமான அதிகரணத்தை இதோடு சேர்த்து கணிக்கப்படுகிறது. பூர்வாதிகரணத்தில் ज्ञातृत्वम् = அறிவாளித்தன்மை நிர்ணயிக்கப்-பட்டதற்கு உதாரணபூதமாக இந்த அதிகரணத்தில் ஜீவனுக்கு கர்த்ருத்வம் நிரூபிக்கப்படுகிறது.

ஆத்மா என்ற வார்த்தை சேர்த்து கொள்ளப்படுகிறது. ஆத்மாதான், கர்த்தா,கர்மகாண்ட கார்யங்களில் பலனை அனுபவிப்பதால் என்றும், 'யஜேத-உபாஸீத' என்று விதிகளை கடைப்பிடித்து செயல்ப்படுத்துவதான கர்த்தா தேவை அல்லவா? என்றும் ஸித்தாந்தம்.

பூர்வபக்ஷம் :- ப்ரக்ருதி மனம் இவைகள்தான் கர்த்தா, ஸ்வயம் ஆத்மா கர்த்தா ஆக மாட்டார். நிர்விகாரமான ஆத்மாவிற்கு முயற்சி என்கிற விகாரமுடைய தன்மை பொருந்தாது. மேலும் வேதாந்த ஶாஸ்த்ரத்தில் கர்த்ருத்வம் நிஷேதிக்கப்படுகிறது. "हन्ता चेत् मन्यते हन्तुम्" என்று கடோபநிஷத்தில் கொல்லுதல் என்ற க்ரியையை உதாரணமாக கொண்டு எல்லா க்ரியைகளிலும் ஆத்மாவிற்கு கர்த்ருத்வம், கர்மத்வம் (objectness) ஏதும் கிடையாது என்பதாக தெளிவு படுத்தப்படுகின்றது. மேலும் प्रकृतेः क्रियमाणानि गुणैः कर्माणि सर्वशः | अहङ्कारविमूढात्मा कर्तारमिति मन्यते || என்பதாக தன்னை கர்த்தா என்று எண்ணுபவன் மூடன் என்று கூறப்படுகிறது. லௌகிக வைதிக கார்யங்களில் கர்த்தா என்று பேசுவது மனதிலுள்ள கர்த்ருத்வத்தை ஆத்மாவில் ஏமாற்றத்தால் (கயிறில் பாம்புபோல்) அத்யாஸத்தினால் ஏற்றிப் பேசுகிறோம். எனவே ஆத்மா ஸ்வயம் கர்த்தா அல்ல.

ஸித்தாந்தம் :- நீங்கள் கூறியபடி ப்ரக்ருதி அல்லது மனம் கர்த்தாவானால், ஆத்மாவிற்கு பயனை அனுபவிக்கும் தன்மை எவ்வாறு கிடைக்கும், ஶாஸ்த்ரம் எவ்வாறு கர்மாக்களை செய்யத்தூண்டும்? எனவே ஆத்மாதான் கர்த்தா. நிர்விகாரனுக்கு அத்யாஸத்தினால் கர்த்ருத்வம் என்ற மதம் தவறு. ஏனெனில் அத்யாஸம் என்பதும் விகாரமானபடியால் நிர்விகாரமான ஆத்மாவில் எப்படி அத்யாஸம் ஸம்பவிக்கும். எனவே ஶாஸ்த்ரங்கள் பயனற்றதாக போய்விடும். ஆகையால் फलभोक्तृत्वम् - பயனை அனுபவித்தல் போன்றவை ஸரியாக

ஆவதற்கும், கர்த்ருத்வத்தை கூறும் ஶ்ருதி வசத்தாலும் ஆத்மாவிற்கு கர்த்ருத்வம் பரமார்த்தமானதுதான். க்ருதியை உண்டுபண்ணும் ஞானமும் பரமார்த்தமானது. அந்த ஞானம் ஆத்மஸ்வரூப விகாரமாக அல்லாத ஒரு தனி த்ரவ்யம், ப்ரபையும் ப்ரபையை உடைய விளக்குபோல் ஆத்மாவின் தர்மபூதம் என்பதாக ஶ்ருதியின் தெம்பில் ஏற்கவேண்டும்.

हन्ता चेत् मन्यते हन्तुम् என்ற மந்திரமானது, ஆத்மா நித்தியமானபடியால் அர்ஜுனனுக்கு ஹனனக்ரியா கர்த்ருத்வம் வராது என்று கூறுவதற்கான கருத்தில் சொல்லப்பட்டது. பொதுவாக க்ரியாஸாமான்ய நிஷேதம் அல்ல. அப்படியானால் ஶ்ருதியிலேயே க்ரியாகர்த்ருத்வத்தை எப்படி பல இடங்களில் கூறமுடியும். प्रकृतेः क्रियमाणानि என்ற கீதாவாக்கியமானது "ஸம்ஸார தசையில் நம்மால் செய்யப்படுகிறதோ அவை எல்லாம் ஸத்வ, ரஜஸ், தமோ ரூபமான ப்ராக்ருத குண சேர்க்கையால் ஏற்பட்டது என்பதாக ஸாம்ஸாரிக க்ரியாகர்த்ருத்வம் ஆனது ஔபாதிகமானது என்பதைத்தான் தெரிவிக்கிறது. ஏனெனில் शरीरवाङ्मनोभिर्यत् कर्म प्रारभते नरः என்று கீதையிலேயே ஐந்து பொருட்களின் கூட்டினால் க்ரியை நடக்கிறது என்று கூறப்படுகிறதே! ஆத்மா கர்த்தாவானால் எப்போதும் ஏன் ஏற்படுவது இல்லை என்று கேட்க முடியாது. கர்மா பண்ணுவதில் தனது விருப்பம் முக்கியமானதால், இச்சை இருந்தால் கர்மா பண்ணுவான் இல்லை என்றால் பண்ண மாட்டான், தச்சன் போல். ஆகவே ஆத்மா பரமார்த்தமாகவே கர்த்தாதான்.

## 2.3.17 D कर्ता शास्त्रार्थवत्त्वात् (8 सूत्राणि)

மத்வமதத்திலும் அடுத்ததும் இதுவும் சேர்ந்து ஓர் அதிகரணமாக எண்ணப்படுகிறது. இவர்களுக்கு ஸூத்ரவிபாகம் அத்வைதம்

போலவேதான் என்பதால் இந்த அதிகரணத்தில் 8 ஸூத்ரங்கள். பெரும்பாலும் பூர்வ-உத்தர பக்ஷம் ஸமமானது.

பூர்வபக்ஷம் :- எல்லா க்ரியைகளிலும் ஈச்வரன் ஒருவன்தான் கர்த்தா என்று ஏற்றால் லாகவம் என்பதாலும், ஹிதங்களை செய்யாமல், அஹிதங்களை பண்ணுவதால் ஜீவனுக்கு கர்த்ருத்வம் நிஷேதிக்கப்பட்டதாலும், ஜீவன் கர்த்தா அல்ல. ச்ருதியில் ஸ்வதந்திரமான கர்த்ருத்வம் நிஷேதிக்கப்பட்டாலும் ஈசாதீன பரதந்திர கர்த்ருத்வம் இருக்கலாம்.

ஸித்தாந்தம்:- இவ்வாறு கூற முடியாது. ஏனெனில் கர்த்ருத்வ சக்தி ஸ்வாதீனமாயிருந்தாலும் தச்சன் போன்றவருக்கு சம்பளம் தருபவன் தூண்டுபவனாகயிருந்து பராதீனமாகவே தச்சன் வேலை செய்கிறான் அன்றோ! இதை ஏற்றால் आत्मानमन्तरो यमयति என்ற வாக்கியம் முரண்பட்டதாகுமே! பொம்மலாட்டகாரன் பொம்மையை ஆட்டுவது போல் ஈசன் ஜீவனை செய்யவைக்கிறான் என்று கூறினால் இது உண்மையில் அகர்த்தா என்று முடிவதால் கர்மகாண்ட, உபாஸனகாண்ட, ஞானகாண்டமாகிற சாஸ்த்ரம் பயனற்றதாக ஆகிவிடும். எனவே ஆத்மா கர்த்தாதான்; ஆனால் இந்த கர்த்ருத்வம் கூட சுதந்திரம் அல்ல; பராதீனம் என்று ஏற்கிறோம்.

## 2.3.15 A यथा च तक्षोभयथा (1 सूत्रम्)

ஸந்தேஹம் :- சென்ற அதிகரணத்தில் கூறப்பட்ட கர்த்ருத்வம் வாஸ்தவமா? கல்பிதமா?

பூர்வபக்ஷம்:- கர்த்ருத்வம் பாரமார்த்திகம்தான். यजेत என்று யாக கர்த்ருத்வம் ச்ருதிகளில் கூறப்பட்டதால் அதைக்கொண்டு சென்ற அதிகரணத்திலும் நிர்ணயித்திருக்கிறார்களே!

ஸித்தாந்தம் :- असङ्गो न हि सज्जते எதிலும் ஒட்டாதவன் இது இவனது ஸ்வபாவம் என்று வேதம் அடிக்கடி கூறுகிறது. எனவே செம்பருத்தி பூவின் சந்நிதியினால் அருகிலுள்ள ஸ்படிகத்தில் காணப்படும் சிவப்பு நிறம் போல கர்த்ருத்வம் புத்தியிலுள்ளது ஆத்மாவில் அத்யஸ்தம். இதைக்கொண்டு சகல ஶாஸ்த்ரங்களுக்கும் பாதிப்பே இல்லை.

[இந்த அதிகரணம் விஶிஷ்டாத்வைதம் மற்றும் த்வைத மதத்தால் சென்ற அதிகரணத்துடன் சேர்ந்து கணக்கிடப்பட்டு கர்த்ருத்வம் வாஸ்தவமே என்று முடிவு செய்யப்பட்டது.]

## 2.3.16 A परात्तु तच्छ्रुतेः (2 सूत्रे)

ஸந்தேஹம்:- முன் கூறிய கர்த்ருத்வம் உடைய ஜீவன் வேலைகளில் ப்ரவ்ருத்திப்பது இவனது ராகத்வேஷாதி தோஷங்களால் உந்தப்பட்டு நடைபெறுகிறதா? ஈஶ்வரனின் தூண்டுதலால் நடக்கிறதா?

பூர்வபக்ஷம் :- உலகில் உழவு மற்றும் நடை, மற்ற செயல்கள் யாவும் ஈஶனின் தொடர்பில்லாமல் தனது விருப்பு வெறுப்புகளாலேயே தூண்டப்பட்டு நடைபெறுவது போல் தர்மம் அதர்மம் யாவும் ஈஶனின் பிரேரணை இல்லாமல் நடைபெறுகின்றன. இல்லையேல் (ஈஶன் தூண்டுவாரானால்) சிலரை புண்ணியத்திலும் பலரை பாபத்திலும் தூண்டிவிடுவதாக ஏற்பட்டு, ஈஶனுக்கு பாரபக்ஷம் போன்ற குறை வரும்.

ஸித்தாந்தம் :- பயிர்கள் வளருவதற்கு மழை எவ்வாறு காரணமாகிறதோ அதேபோல் ஜீவனுடைய எல்லா ப்ரவ்ருத்திக்கும் ஈஶன் பொதுவானகாரணம், விஶேஷமாகப் பயிர்களுக்கு அந்தந்த விதை காரணம் போல அவனவனது பூர்வ ஸம்ஸ்காரங்கள் விஶேஷகாரணமாகிறது. ஆகையால் ஈஶனுக்கு ஒரு தோஷமும்

  

வராது. ஈஶன் அவனவனுடைய வாஸனைப்படி ராகத்தை ஏற்படுத்தி ப்ரேரகனாகிறான்.

## 2.3.6 V परात्तु तच्छ्रुतेः (2 सूत्रे)

இந்த அதிகரணத்தில் ஜீவகர்த்ருத்வம் பரமாத்மாதீனம் என்று தீர்மானிப்பதால் நியாம்யநியாமகத்தன்மையின் வாயிலாக ஜீவபரமாத்ம பேதம் திடப்படுகிறது. (दृढीभवति). இதற்காகவே இந்த அதிகரணம்.

பூர்வபக்ஷம் :- ஜீவன் செய்யும் வேலைகளில் பரமாத்மா தூண்டுபவரானால் விதிநிஷேதஶாஸ்த்ரம் வீணாகும். ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி இரண்டுதானே விதிஶாஸ்த்ர பயன். இவை இரண்டும் ஈஶனால் ஏற்படுவதனால் ஶாஸ்த்ரம் வீணாகும் எனவே ஜீவன் சுதந்திரமான கர்த்தா.

ஸித்தாந்தம்:- य आत्मनि तिष्ठन् - यमयति என்பதாக ப்ருஹதாரண்யகத்தில் அந்தந்த வேலைகளில் ஜீவனுக்கு ப்ரேரகனாக பரமாத்மா இருப்பதாக தெளிவாகக் கூறப்படுகிறது. ஜீவன் தனது புத்தியினால் வேலைகளில் ப்ரவ்ருத்திக்கிறான் முதலில். அப்போது பரமாத்மா தன் அனுமதி மட்டும் கொடுத்து அந்த வேலையைச் செய்விக்கிறான் என்றும் இரண்டு, மூன்றாம் முறைகளில்தான் பரமாத்மபாரதந்த்ர்யம் கூறுகிறோம். எனவே விதிநிஷேதஶாஸ்த்ரங்களுக்கு பயனற்றத்-தன்மை ஏற்படாது. இங்கு விஶேஷம்

1. முதன் முதல் ப்ரவ்ருத்தியில் ஈஶன் உதாஸீனன்.
2. இரண்டாவதிலிருந்து அனுமதி தருபவன்.
3. பரமாத்மாவிற்கே ப்ரதிகூலமான ப்ரவ்ருத்தியானால் அப்போது ப்ரேரகன். அதுவும் அவனது பூர்வகர்மாக்களை அனுஸரித்து.

परात्तः என்ற இந்த அதிகரணமோ ஸூத்ரங்களோ மத்வர்களுக்கு இல்லை.

# 2.3.17 A अंशो नानाव्यपदेशादन्यथा चापि दाशकितवादित्वमधीयत एके (11 सूत्राणि)

**ஸந்தேஹம் :-** உபநிஷத்தில் तत्त्वमसि போன்ற வாக்யங்கள் ஜீவ ஈஶ்வர்களுக்கு அபேதத்தைக் கூறுகின்றன. ஆனால் आत्मा वा अरे द्रष्टव्यः என்பதான ஶ்ருதியால் இருவருக்கும் அறிபவன் - அறியப்படவேண்டியவன் என்பதாக ஜீவ ஈஶ்வர்களின் பேதம் தெரிகிறது. எனவே தனியாக ஜீவன் கிடையாது என்று கூற முடியாது. அபேதஶ்ருதியினால் ப்ரஹ்மத்தைக் காட்டிலும் தனியாக ஜீவனை ஸ்தாபிக்க முடியாது. இந்த சூழ்நிலையில் இருக்கின்ற ஜீவனுக்கு ப்ரஹ்மத்தோடு பேதாபேதம் வருவதன் மூலம் ஸாங்கர்யம் (கலப்பு இழப்பும்) வருகிறது. தன்னிலும் வேறல்லாத ப்ரஹ்மத்தோடு வேறாகாதவனை மற்ற ஜீவர்களுக்கும் இவனுக்கும் ஸாங்கர்யமும் ஏற்படுவதால் அத்வைதிகளுக்கு ஜகத்வ்யவஸ்தா பாதிக்கப்படும்.

**ஸித்தாந்தம் :-** மாட்டிற்கும் எருமைக்கும் போல் ஜீவ ஈஶ்வர்களுக்கு முழுமையான பேதம் இல்லை. ஆனாலும் வ்யவஹார தசையில் உபாதிகளால் கல்பிக்கப்பட்ட பேதத்தை வைத்துக்கொண்டு ஶாஸ்த்ரங்கள் மூன்றுவிதமாக ஜீவனை நிரூபிக்கின்றன. (i) ममैवांशो जीवलोके போன்றவை என்றவாறு ப்ரஹ்மத்தின் அம்ஶம் (apart) என்று கூறுகின்றன. (ii) स समानः सन् उभौ लोकौ अनुसंचरति என்ற வாக்கியம் ஜீவனுக்கு உபாதியான புத்தியுடன் ஸமான பரிமாணத்தை கூறுவதால் குடத்தின் இடைவெளி போல் பரிசின்னத்வம் (limitation) சொல்லப்படுகிறது. (iii) एक एव हि भूतात्मा...जलचन्द्रवत् என்று சந்திரனுக்கு பாத்திரங்களின் ஜலங்களில் ப்ரதிபிம்பம் போல் ப்ரஹ்மத்தின் ப்ரதிபிம்பங்கள் ஜீவன் என்று கூறப்பட்டுள்ளது. எனவே அத்வைத மதத்தில் ஜீவ ஈஶ்வர்களுக்கு ஔபாதிக-அவாஸ்தவ-பேதம் ஏற்பதால் எல்லா

  

விதமான வ்யவஸ்தைகளும் நன்கு பொருந்தும். ஜீவர்களுக்கும் வெவ்வேறு பாத்திர ஜலங்களில் சந்திரன் காணப்படுவது போல் அவாந்தர வ்யவஸ்தையினால் ஜீவ பரஸ்பரவ்யவஸ்தையும் மிகவும் பொருந்தும். எனவே இதற்காக வாஸ்தவ பேதம் ஏற்க தேவையில்லை. பேத தர்சனம் பலமுறை நிந்திக்கப்பட்டுள்ளது.

## 2.3.7 V अंशो नानाव्यपदेशादन्यथा चापि दाशकितवादित्वमधीयत एके (11 सूत्राणि)

இந்த ஸூத்ரத்தில் आत्मा என்ற பதமும், परात्तु என்ற ஸூத்ரத்தில் உள்ள பராத் என்ற பதத்தை பரஸ்ய என்று வேற்றுமையை மாற்றி சேர்த்து "आत्मा" = ஜீவன், "परस्य"= பரமாத்மாவினுடைய "अंश:" = தனியாக வரமுடியாதபடியான விஶேஷணம் (inseparable adjective) "नाना व्यपदेशात् =" பேதமாக கூறப்பட்டுள்ளதால் என்று ஸூத்ரார்த்தம்.

ஸந்தேஹம் :- பேதாபேதங்களை கூறும் வாக்கியங்கள் உபநிஷத்துக்களில் உள்ளதால் பேதம் ஸத்தியமா? அபேதம் ஸத்தியமா?

பூர்வபக்ஷம் :- இரண்டும் மோதுவதால் இரண்டும் அப்ரமாணம்.

ஸித்தாந்தம் :- பூராவும் தவறு என்று கூறுவது ஸரியில்லை. ஒன்றை மட்டும் ஸத்யம் என்றால் மற்றொன்றிற்கு அப்ரமாண்யம் ஏற்படுவதால், பேதம்-அபேதம் இரண்டுமே ஸத்யம் என்று கூறுவது ச்லாக்யமானதால், ஜீவன் வேறாக இருப்பினும் இவனைத் துதிப்பதற்காக அபேதம் ஔபசாரிகமாக கூறப்படுகிறது என்பதும் தவறு. ஏனெனில் செம்படவன், கூலி ஆள் இவருடன் அபேதம் கூறினால் எப்படி துதியாகும். எனவே இரண்டுவிதமான வ்யவஹாரங்களுக்கும் முக்யத்வம் ஏற்படுவதற்காக "ஜீவன்

ப்ரஹ்மத்தின் அம்ஶம்'' என்று கூறப்படுகிறது. அம்ஶத்தன்மையாவது, தனியாக பிரிக்க முடியாத விஶேஷணமாயிருப்பது, என்று பொருள். விஶிஷ்ட வஸ்துவின் ஏகதேஸமாயிருத்தல் என்று கருத்து. மாட்டுத்தன்மை உடைய மாட்டினுடைய (பிரிக்க முடியாத விஶேஷணமான) மாட்டுத்தன்மை மாட்டின் அம்ஶமாகிறது. அது போல் சித்-அசித்விஶிஷ்டமான ப்ரஹ்மத்திற்கு பிரிக்க முடியாத விஶேஷணமான ஜீவன் அம்ஶமாகிறான். ஆகையால் மாட்டுத்தன்மையை (गोत्व) கூறும் "கோ" ஶப்தத்திற்கு பசுமாடு வரை (வ்யக்தியுட்பட) அர்த்தம் கூறுவது போல், நீ, நான் என்ற அப்ருதக்ஸித்த விஶேஷணத்தை கூறும் வார்த்தைகளுக்கு விஶேஷ்யமாக இருக்கும் பரமாத்மாவைக் கூறும் ஶக்தி உண்டு என்ற விஷயம் மீமாம்ஸாவின் ஆக்ருதி நியாயத்தினால் கிடைப்பதால் तत्वमसि போன்ற அபேத வாக்யங்களுக்கு முக்யத்வ நிர்வாஹம் செய்ய வேண்டும். இதே போல் விஶேஷண விசேஷ்யமாக இருக்கும் ஜீவ பரமாத்மாகளுக்கு ஸ்வரூபம் வேறுபட்டதால் பேத ஶ்ருதிகளுக்கு முக்யத்வ நிர்வாஹம் பொருந்தும்.

## 2.3.18 D अंशो नानाव्यपदेशादन्यथा चापि दाशकितवादित्वमधीयत एके (8 सूत्राणि)

இந்த அம்சாதிகரணம் மத்வமதத்தில் 8+3 என்று பிரித்து இரண்டு அதிகரணங்களாக கணக்கிடப்படுகின்றன.

ஸந்தேஹம் :- ஜீவனானவன் ஈஶனின் அம்ஶம் என்றோ அனம்ஶன் (அல்ல) என்றோ கூற முடியுமா? முடியாதா?

  

பூர்வபக்ஷம் :- இரண்டு விதமாயும் கூற முடியாது. அனம்ஶன் என்று கூறினால் (நிர்ணயித்தால்) "अंशा एव हि मे जीवा:" என்று (கௌபவன) ஶ்ருதியில் அம்ஶம்தான் என்று கூறும் வாக்யத்திற்கு முரணாகிறது. एव = தான் (only) என்று அறுதியிட்டு கூறுவதால் विकल्प: (இப்படியோ அப்படியோ) இருக்கலாம் என்று ஏற்க முடியாது. நெல்லினாலோ, யவையினாலோ ஹோமம் பண்ணலாம் என்பது போல் ஆக முடியாது. எனவே இரண்டு விதமான ஶ்ருதிகளும் அப்ரமாணம்.

ஸித்தாந்தம் :- தந்தையினால் போஷிக்கப்படுவதாலும், அவரது கர்பத்தில் வசிப்பதாலும் அவருக்குள் அடங்குவதினால் அவரை அண்டி புத்திரன் வாழ்வதாலும் அல்லது அவரைச் சேர்ந்தவன் என்பதாலோ “அதைக்காட்டிலும் குறைவாகவும் சிறிது (किञ्चित्) அதுபோலவும் இருப்பது = அதனுடைய அம்ஶம் என்று கூறப்படுகிறது. अंशो ह्येष परस्य பரனுடைய அம்ஶமான இவன் என்று ஆரம்பித்து "नाना ह्येनं व्यपदिशन्ति पितेति पुत्रेति भ्रातेति" என்றவாறு பலவிதமான தொடர்பு கூறுகிறது வேதம். மேலும் "अन्य: परोऽन्यो जीव:" "ब्रह्म दाशा ब्रह्म कितवा:" (செம்படவர்கள், தாசர்கள், வேடர்கள் = ப்ரஹ்மம்) என்ற ஶ்ருதிஜீவ ப்ரஹ்மங்களுக்கு அபேதம் கூறுகின்றது என்பதால் இரண்டுவிதமான அம்ஶத்வம் கிடைக்கிறது. "पादोऽस्य विश्वा भूतानि", "ममैवांशो" என்று ஶ்ருதிஸ்ம்ருதிகள் உள்ளதால் அனம்ஶன் என்ற ஶ்ருதியானது ஸ்வரூபாம்ஶத்தை நிஷேதிப்பதாகக் கொள்ள வேண்டும். தேஜோபிமானியின் அம்ஶங்களான காலாக்னி மினுமினுப் பூச்சிகள் அபிமானிகளுக்குப் போல் एते स्वांशकला: पुंस: என்ற கூற்றுப்படி அஸ்வரூபாம்ஶத்வம் ஸ்வரூபாம்ஶத்வம் என்ற வேறுபாட்டினால் மீன் முதலிய அவதாரத்திற்கும் மீன் ஜீவனுக்கும் ஈசாம்ஶத்வம் ஒன்றானாலும் இரண்டிற்கும் ஸாம்யம் ஏற்படுமோ என்று கேள்விக்கு இடமில்லை. எனவே இரண்டு ஶ்ருதியும் ப்ரமாணமே.

# 2.3.19 D अदृष्टानियमात् (3 सूत्राणि)

**ஸந்தேஹம்:-** ஜீவன் ஈஶனின் ப்ரதிபிம்பமா? இல்லையா?

**பூர்வபக்ஷம்:-** ஈஶனின் ப்ரதிபிம்பமாக ஜீவன் இல்லை. ஏனெனில் न संबन्धो नापेक्ष्यो जीवः परस्य என்ற ஶ்ருதியில் பிம்ப ப்ரதிபிம்பத்தன்மை போன்ற ஸம்பந்தங்களை கண்டித்திருக்கிறது. जीव: न (ईश) एक प्रतिबिम्ब:, सुरासुरनरतिर्यगादिवैचित्र्योये तत्वात् घटादिप्रतिबिम्बवत् பிம்பம் போன்ற தோற்றந்தானே ப்ரதிபிம்பத்திற்கு வரவேண்டும். இங்கே மாறுதலாக ஒரே விதமான ஈஶனுடைய ப்ரதிபிம்பங்களில் தேவன், அசுரன், பசு, பறவை, மனிதன் என்று விதவிதமாக அன்றோ உள்ளது என்ற அனுமானம் ப்ரமாணம். रूपं रूपं प्रतिरूपो बभूव என்ற ப்ரதிபிம்ப ஸத்வ வாதியான ஶ்ருதி துர்பலமானது, யுக்தி இல்லாததால்.

**ஸித்தாந்தம்:-** பிம்பமான ஈஶன் ஒரேவிதமாக இருந்தாலும் ஜீவனுக்கு அனாதிஸ்வரூப உபாதி அவித்யா, காம, கர்மா போன்ற தன் வைசித்ரியத்தால் (வேறுபாடுகளால்) ப்ரதிபிம்பத்தில் விதவிதமாக தோன்றமுடியும். न संबन्ध: என்ற ஶ்ருதியானது भिन्नोपाध्यायत्तत्वरूपமான ப்ரதிபிம்பத்தை கண்டிப்பதாகும். எனவே ஜீவன் ஈஶப்ரதிபிம்பம்தான்.

## நான்காம் பாதம்

இந்த நான்காம் பாதத்தில் இந்திரியங்கள், ப்ராணன்கள் இவைகளின் உற்பத்தி, எண்ணிக்கைகளில் வேறுபாடு, விரோதம் பரிஹரிக்கப்படுகிறது.

## 2.4.1 A तथा प्राणा:(4 सूत्राणि)

ஸந்தேஹம் :- இந்திரியங்கள் அனாதியா? உண்டாகின்றனவா?

பூர்வபக்ஷம் :- ஒரு ஶ்ருதியில் ऋषयो वाव तेऽग्रे आसन् | तदाहु: के ते ऋषय इति | प्राणा वा ऋषय: முதன்முதலில் ரிஷிகள் இருந்தனர். ரிஷிகள் என்றால் ப்ராணன்கள் என்பதாக கூறப்படுகின்றது. எனவே ஸ்ருஷ்டிக்கு முன்பே ப்ராணன்கள் என்று கூறப்படும் இந்திரியங்கள் இருந்திருப்பதால் இந்திரியங்கள் அனாதியானவை.

ஸித்தாந்தம் :- ஒன்றை அறிந்தால் எல்லாம் அறிந்ததாகும் என்ற வேதாந்த ப்ரதிக்ஞை இதனால் பாதிக்கப்படும் என்பதால் முன் கூறிய வாக்கியம் அவாந்திர ப்ரளயத்தைப் பற்றி अग्रे என்று கூறப்பட்டதால் கொள்ளவேண்டும். மேலும் अन्नमयं मन: आपोमय: प्राणा, तेजोमयीवाक् என்று சாந்தோக்யத்தில் மனம், ப்ராணன், வாக்கு மூன்றும் முறையே அன்னம், ஜலம், நெய் போன்ற தைஜஸபொருள்களிலிருந்து தோன்றியவை என்று கூறப்பட்டுள்ளது. एतस्माज्जायते प्राण: मन: सर्वेंद्रियाणि च என்பதாக இந்திரியங்களுக்கு ஸ்ருஷ்டி ஸ்பஷ்டமாக கூறப்பட்டுள்ளது.

## 2.4.1 V तथा प्राणा: (3 सूत्राणि = 4 सूत्राणि அத்வைத்தத்தில்)

ஸந்தேஹம், பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் யாவும் ஸமமே. இருப்பினும் முறை வேறு.

பூர்வபக்ஷம் :- तथा प्राणा: என்ற ஸூத்ரம் பூர்வபக்ஷ ஸூத்ரமாக ஏற்று எவ்வாறு ஜீவன் உண்டாவது இல்லையோ அப்படியே இந்திரியங்கள் உண்டாவதில்லை. ஏனெனில் ऋषयो वै प्राणा: अग्रे आसीत् என்று கூறியுள்ளதால் இந்திரியங்கள் அனாதி.

ஸித்தாந்தம் :- तथा प्राणा: என்று ஸூத்ரத்தை ஆவ்ருத்தி செய்து ஸூத்ரார்த்தமாக பொருள் இவ்வாறு - एतस्माज्जायते प्राण:...एवं वायु: என்ற வாக்யத்தில் ஆகாயம் போன்றவைகளுக்கு ஸ்ருஷ்டி கூறியிருப்பது போல் இந்திரியங்களுக்கும் ஸ்ருஷ்டி கூறியுள்ளது. प्राणा: முன்பே இருந்தன என்ற வாக்யத்தில் (சதபதப்ராம்ஹனம்) ப்ராண என்றால் ப்ரஹ்மம் என்று பொருள். ऋषि: ஸர்வஞர்-என்று விஶேஷணம் கூறியிருப்பதால்.

மேலும் இந்திரியங்கள் தன்தன்கார்யம் (ஶப்த அறிவு, நிற அறிவு) மூலம் கல்பிக்கப்படுகின்றன. ப்ரளயத்தில் ஶப்தாதி பொருட்கள் இல்லாததால் இந்திரிய கல்பனை வீண். प्राणा: என்ற பன்மை अदिति: पाशान् என்ற நியாயப்படி ஏற்க வேண்டும்.

இங்கு மத்வமதத்தில் இந்த ஒரு அதிகரணம் மூன்று அதிகரணங்களாகக் கணக்கிடப்படுகின்றன. மேலும் प्रतिज्ञाऽनुपरोधाच्च என்று ஒரு ஸூத்ரம் அதிகப்படியாக எடுத்துக் கொண்டுள்ளனர். ஆக மொத்தம் 3+1+1=5 (instead of four) ஏற்று மூன்று அதிகரணங்களாக வருகின்றன.

## 2.4.1 D तथा प्राणा: (3 सूत्राणि)

இங்கு ப்ராணன்களுக்கு இந்திரியங்களுக்கு உற்பத்தி உண்டா இல்லையா என்ற ஸந்தேஹத்திற்கு பிறகு

பூர்வபக்ஷம்:- प्राणा एवेदमग्र आस: என்று இந்திரியங்களுக்கு அனாதித்வம் கூறப்படுவதால் ப்ராணன்கள் உண்டாவது இல்லை. स इदं सर्वमसृजत என்று எல்லா பொருட்களையும் ஈஶன் படைத்தான் என்ற ஶ்ருதிக்கு முரணாகுமே என்று கேட்க வேண்டாம். நிரவகாஸமான प्राणा: एव ... என்ற ஶ்ருதி ப்ரபலமானதால் இந்த ஶ்ருதி அடிபடுகிறது. एतस्माज्जायते प्राण: என்ற விஶேஷ ஶ்ருதியானது नोपादानं हीन्द्रियाणां இந்திரியங்களுக்குக் காரணம் கிடையாது என்ற ஸ்ம்ருதி கூறியுள்ளதான நிருபாதானத்வ யுக்தியினால் ஸ்ருஷ்டி கூறும் ஶ்ருதி அடிபடும்.

ஸித்தாந்தம் :- स प्राणमसृजत போன்ற விஶேஷ ஶ்ருதியினால் स इदं सर्वमसृजत என்ற ஸாமான்ய ஶ்ருதியின் பலத்துடன் கூடிய ஆகாய உற்பத்தியை ஸ்தாபித்த நியாயப்படி உபாதானமில்லாமலே ஸ்ருஷ்டி வர முடியுமானபடியால் ப்ராணன்கள் உண்டாகின்றன. नित्यान्येतानि सौक्ष्म्येण (भविष्यत्पर्व) என்ற ஸ்ம்ருதியில் ஸூக்ஷ்ம ரூபேண அனாதித்வம் ஸூக்ஷ்மத்வம் கூறினாலும் ஸ்ருஷ்டிகாலத்தில் பூதங்களுடன் சேர்ந்து வளர்ச்சி ஏற்படுவது நிச்சயமாதலால் ப்ராணன்கள் உண்டாகின்றன என்பது திண்ணம்.

## 2.4.2 D तत्प्राक्श्रुतेश्च (1 सूत्रम्)

ஸந்தேஹம் :- மனம் உண்டாகிறதா? இல்லையா?

பூர்வபக்ஷம் :- மனம் உண்டாவது இல்லை. ஏனெனில் नित्यं मन: अनादित्वात्, न ह्यमना: पुरुषस्तिष्ठति, अनित्यान्यन्यानि என்ற (गौपवन) ஶ்ருதி ப்ரமாணம் மூலம் மனம் நித்யந்தான். இது விஶேஷ ஶ்ருதியானதால் மன ஸ்ருஷ்டி கூறும் ஶ்ருதி அடிபடுகிறது. மேலும் மனதானது ஸாதியானால் அதனால் ஏற்படும் (தோன்றும்) ஸம்ஸாரமும் ஸாதியாகிவிடும். எனவே மனம் உண்டாவதில்லை.

ஸித்தாந்தம் :- "मन: सर्वेन्द्रियाणि च" என்ற ஶ்ருதியில் மற்ற இந்திரியங்களுடன் கூட மனதின் படைப்பு கூறியுள்ளதால் மனம் உண்டாவதுதான். இதற்கு விரிவு குறைவானதால் அल्पोपमयஆதலால் இந்திரியங்கள் போல் ஸாதித்வம் தெளிவாக தெரியாது என்பதால் அனாதித்வம் முழுமையாக நிராகரிக்கப்படவில்லை என்பதால் நித்யத்வமும் பொருந்தும்.

## 2.4.3 D तत्पूर्वकत्वाद्वाच: (1 सूत्रम्)

ஸந்தேஹம் :- வாகிந்திரியம் உண்டாகிறதா? இல்லையா?

பூர்வபக்ஷம்:- वाग्वाव नित्या न ह्येषोत्पद्यतेऽयां हि श्रुतेरवतिष्ठते (पौष्यायण) என்று வாக் நித்யமானதால் உண்டாவதில்லை. வாக்கில் அல்லவா வேதம் நிலைத்துள்ளது? - வாக்கிற்கு உற்பத்தி கிடையாது என்பதாகக் காரணத்தோடு (யுக்தியோடு) கூறுகிறது. எனவே ஸூக்ஷ்மரூபம் உபசிதரூபம் என்றெல்லாம் பிறப்பு பிறப்பின்மைகளை ஸமாளிக்க முடியாது. ஆகையால் வாக்கு உண்டாவதாக கூறும் ஶ்ருதி பாதிக்கப்படுகிறது.

ஸித்தாந்தம் :- मन एव पूर्वरूपं, वागुत्तररूपम् என்ற ஶ்ருதியால் வாக்கானது மனத்தைக் கருவியாக கொண்டுள்ளதாக கூறப்படுகிறது. இந்த ஶ்ருதியில் வாக்கு என்பது பேச்சு என்று அர்த்தம் கொள்ள முடியாது. முன்னும் பின்னும் वाचा व्याहरति என்பதாக பேச்சின் காரணமாக கூறப்படுகிறது. ஆகவே வாகிந்திரியத்திற்கு நித்யத்வம் என்பது ஶ்ருதி ஸன்னிதி யோக்யதை என்று கூறப்பட்டுள்ளது - वागिन्द्रियस्य नित्यत्वम् श्रुतिसंनिधियोग्यता (वायुस्मृति) எனவே உபசாரமாக நித்யத்வம் ஏற்கவேண்டும். ஆகவே வாகிந்திரியம் உண்டாகிறது.

  

## 2.4.2 A सप्त गतेर्विशेषितत्वाच्च (2 सूत्रे)

இந்திரியங்களின் எண்ணிக்கை இங்கு கூறப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- இந்திரியங்களின் எண்ணிக்கை ஏழு. ஏனெனில் सप्त प्राणा: प्रभवन्ति तस्मात् என்ற வாக்யத்தில் ஏழு என கூறப்பட்டுள்ளது. மேலும் सप्त वै शीर्षण्या: प्राणा: என்ற முகத்திலுள்ள ஓட்டைகள் ஏழு என்பதாக விஶேஷமாக சொல்லப்பட்டுள்ளது.

ஸித்தாந்தம் :- முகத்தில் உள்ள இந்திரியங்களை தவிர கை கால் போன்றவை இந்திரியங்கள் ஆவதால் ஏழு என்பது ஸரியல்ல. हस्तौ चादातव्यं च उपस्थश्च आनन्दयितव्यं च என்பதாக தனித்தனி பயனும் புலன்களுக்கு சொல்லப்படுவதால், நமக்கு ஏற்படும் பயன்களைக் கொண்டு பார்த்தால் ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், பொதுவானாலும் ஆலோசனைப் பயனுள்ளதாயும் உள்ள மனம் ஒன்று என்பதாக பதினொன்று புலன்கள் என்பது ஊர்ஜிதம்.

## 2.4.2 V सप्त गतेर्विशेषितत्वाच्च (2 सूत्रे)

இந்த அதிகரணத்தில் அத்வைதிகள் கூறியபடியேதான் பூர்வபக்ஷம் ஸித்தாந்தம் விஶிஷ்டாத்வைதிகளுக்கும், சற்றும் மாற்றமில்லை.

## 2.4.4. D सप्त गतेर्विशेषितत्वाच्च (2 सूत्रे)

அதிகரணத்தின் எண்ணிகையும் இந்திரியங்களில் ஸித்தாந்தப்படி எண்ணிக்கையும் மாத்வர்களுக்கு வேறுபடுகிறது.

பூர்வபக்ஷம் :- இந்திரியங்கள் ஏழு सप्त प्राणा: என்று ஒரு ஶ்ருதி கூறுகிறது. द्वादश वा एते प्राणा: द्वादशमासा:, द्वादशादित्या: என்று

மற்றொரு ஶ்ருதி பன்னிரண்டு என்கிறபடியால் எண்ணிக்கை தீர்மானம் இல்லை.

ஸித்தாந்தம்:- இந்திரியங்கள் பன்னிரண்டு ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், மனம், புத்தி என்பவை. இருப்பினும் गुहाशयां निहिता: என்று விஶேஷமாக ஞானேந்திரியங்களை மட்டும் குறித்து ஞானேந்த்ரியங்கள், கண், காது, மூக்கு, நாக்கு, த்வக்கு, மனம், புத்தி ஆக ஏழு என்று கூறப்பட்டுள்ளது. எனவே எண்ணிக்கை நிர்ணயிக்கப்பட்டதுதான்.

## 2.4.3 A अणवश्च (1 सूत्रम्)

ஸந்தேஹம்:- இந்திரியங்கள் வ்யாபியாக உள்ளனவா (ஸாங்க்யர்கள் கூறுவது போல்) அல்லது அணுபரிமாணமா? என்று ஸந்தேஹம்.

பூர்வபக்ஷம்: - ஸாங்க்யர்கள் सर्वगतानामिन्द्रियाणाम् तत्तत् शरीर अवच्चिन्न प्रदेशेषु वृत्तिलाभो भवति = புலன்கள் வ்யாபிகள்தான் இருப்பினும் அவரவர் கர்மானுஸாரேண அந்தந்த உடல்களின் பாகங்களில் அவைகளின் வெளிப்பாடு உண்டாகின்றது.

ஸித்தாந்தம் :- இது ஸரியில்லை. இதில் நம் கல்பனை மிகுந்துள்ளது என்ற குறை. எல்லா வ்யவஹாரங்களிலும் உடலில் மட்டும் இருந்து கொண்டுள்ள புலன்களால் நடக்க முடியுமாதலால் இந்திரியங்கள் எங்கும் வ்யாபித்து உள்ளன என்று அப்ராமாணிகமாக கல்பனை ஸரியில்லை. வ்யாபியான ஜீவனுக்கு கமனாகமனங்கள் (பரலோக போக்குவரத்து) கூறுவது இந்திரிய உபாதிகளின் வாயிலாக என்று இருக்கும்போது இந்திரியங்களும் வ்யாபியானால் போக்குவரத்து

  

முக்கியார்த்தத்தில் பொருந்தாது. எனவே இந்திரியங்கள் மத்ய பரிமாணம் கொண்டவை. கண்ணுக்கு புலப்படாததால் (ஸூக்ஷ்மமானதால்) அணு என்று ஸூத்ரம் கூறுகிறது.

## 2.4.3 V अणवश्च (2 सूत्रे)

விஶிஷ்டாத்வைதிகள் மதப்படி இந்த அதிகரணமும் அடுத்ததான அதிகரணமும் சேர்ந்து ஒன்று.

பூர்வபக்ஷம் :- இந்திரியங்கள் பதினொன்றும் அணுபரிமாணமா வ்யாபகமா என்றால் வ்யாபகம் என்று பூர்வபக்ஷம்.

ஸித்தாந்தம் :- இந்திரியங்கள் வ்யாபகமன்று. அணுபரிமாணம் உடையவை. இங்கு அணு என்றால் மிகமிகச் சிறியது (iota) என்று அர்த்தமில்லை. பரிச்சின்ன பரிமாணம் என்று அர்த்தம். ஏனெனில் प्राणमनूत्क्रामन्तं सर्वे प्राणा अनुत्क्रामन्ति என்பதாக மரண காலத்தில் இந்திரியங்கள், ப்ராணன் யாவும் உடலிலிருந்து வெளிக்கிளம்பிப் போகின்றன என்று கூறப்படுவதால் வ்யாபகமாக இருந்தால் ஸம்பவிக்காதன்றோ. ப்ராணன், அபானன் போன்றவை (உயிர்) அணுவா வ்யாபியா என்றால், வ்யாபி என்று பூர்வபக்ஷம் ஏற்படுகிறது.

ஸித்தாந்தம் :- இந்திரிய ப்ராண ஸம்வாதத்தில் உபநிஷத்தானது புலன்களை விட ப்ராணன்தான் மிகச்சிறந்தது ச்ரேஷ்டன் என்று கூறப்பட்ட ப்ராணனும் एतस्माज्जायते प्राण: என்று ப்ரஹ்மத்திலிருந்து உண்டானதுதான்.

இந்த அதிகரணத்தின் விஶேஷ ஆசங்கை என்னவென்றால் आनीदवातं स्वधया என்ற ஸூத்ரத்தில் ப்ரஹ்மம் மூச்சு விட்டது = आनीत् என்று ப்ரளயத்தில் கூறுகிறபடியால் ப்ராணன் அனாதி என்று விஶேஷமாக கேள்வி (பூர்வபக்ஷம்).

அந்த ஶ்ருதிக்கு ஜீவனைச் சேர்ந்த முக்ய ப்ராணன் என்று பொருள் கிடையாது. ஏனெனில் अवातम् வாயுவின் தொடர்பு இல்லாதவராக இருந்தார் என்று கூறப்பட்டுள்ளது. எனவே ப்ராணனும் உண்டானதுதான்.

இந்த மத்வ மதத்தில் மற்ற மதம் போலவே பூர்வபக்ஷ ஸித்தாந்தம் என்றாலும் முறை வேறுபடுகிறது.

## 2.4.5 D अणवश्च (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- இந்திரியங்கள் அணுவா? வ்யாபகமானவையா? ஏனெனில் दिवीव चक्षुराततम् என்று கூறப்படுகிறது. ஈஶன் வ்யாபித்துள்ளதற்கு உவமையாக கண் கூறப்படுகிறது. மேலும் வெகுதூரத்தில் உள்ள பொருட்களைப் பார்க்கிறது கண், கேட்கிறது காது. எனவே வ்யாபித்வம் கூறும் ஶ்ருதி ப்ரபலமானது.

ஸித்தாந்தம் :- இந்திரியங்கள் அணுபரிமாணம் கொண்டவை. तद्यथा ह्यणुनश्चक्षुष: प्रकाशो व्याततः एवमेवास्य पुरुषस्य प्रकाशो व्याततः अणुर्ह्येव एष पुरुषो भवति (शाण्डिल्य श्रुति) என்று கண் சிறிதானாலும் வெகு தூரம் பார்வை வ்யாபிப்பது போல். ஆத்மாவும் அணுவானவராயினும் குற்றமில்லை என்பதாக ஆத்மா அணுதான் என்பதற்கு உதாரணமாக கண் கூறப்பட்டுள்ளது. இது விஶேஷ ஶ்ருதியானதால் ப்ரபலமானது. இந்திரியங்கள் அணுவானாலும் தேஜஸ் மூலம் நீளலாம் என்பதால் தூரப்பொருள் தெரிவதில் இடையூறு இல்லை. வ்யாப்தமானாலும் கண் என்று கூறும் ஶ்ருதிக்கு அதன் பார்வைத்திறன் வ்யாபிக்கிறது என்று பொருள். ஸ்வரூபமே வ்யாபியாக இருப்பின் எல்லோருக்கும் எப்பொழுதுமே எல்லாமே

தெரிந்து கொண்டே இருக்கும். ஆதலால் தூக்கம் இல்லாமல் ஆகிவிடும். எனவே இந்திரியங்கள் அணு பரிமாணம் உடையவை.

## 2.4.4 A श्रेष्ठश्च (1 सूत्रम्)

மூக்கின் வழியாக உள்ளே சென்று (ப்ராணன்) உயிர்ப்பிக்கும் முக்கிய ப்ராணன் அனாதியா? உண்டானதா?

பூர்வபக்ஷம் :- மற்ற புலன்கள் போல் உண்டாவதாக ஆகாது. ஏனெனில் ப்ரளயத்திலும் கூட "आनीदवातम्" என்று ஸ்ருஷ்டி முன்பே மூச்சுவிட்டு செயல் புரிந்ததாகச் சொல்வதால் ப்ரளயத்தில் ப்ராணன் இருந்திருக்க வேண்டும். எனவே அனாதி.

ஸித்தாந்தம்:- आनीत् = என்பது ப்ராணனின் செயலை சொல்லவில்லை. अवातम् = வாயு இல்லாமல் இருந்தது என்பதால் ஸ்ருஷ்டிக்கு முன்பாக ப்ரஹ்மத்தின் இருப்பைத்தான் கூறுகிறது. மேலும் एतस्माज्जायते प्राण: என்று ப்ராணனுக்கு ஸ்பஷ்டமாக புலன்களுடன் கூட பிறப்பைக் கூறுகிறது. எனவே புலன்கள் போலவே ப்ராணனும் பிறப்பு உடையது.

இந்த அதிகரணம் விஸிஷ்டாத்வைதிகளின் மதப்படி சென்ற அதிகரணத்திலேயே சேர்ந்து விட்டது.

## 2.4.6 D श्रेष्ठश्च, न वायुक्रिये पृथगुपदेशात् (2 सूत्रे)

இந்த அதிகரணம் மத்வ ஸித்தாந்தப்படி இரண்டு ஸூத்ரங்கள் கொண்டது. ப்ராணன் உண்டாகிறதா? இல்லையா? என்று விசாரித்தால்-

பூர்வபக்ஷம் :- ப்ராணன் உண்டாவது இல்லை. ஶ்ருதியில் நைஷ ப்ராண உதேதி என்று ப்ராணனுக்கு உற்பத்தி இல்லை என்று கூறுகிறது. இந்த ஶ்ருதியானது ப்ரபலமானதாகும். ஏனெனில் "எவருடைய அடைதல் (சேருதல்), விலகுதல் இரண்டும் ஜனனம் மரணம் என்று கூறப்படுகிறதோ, அவருக்கே ஜனனம் எவ்வாறு பொருந்தும்? என்பதாக யுக்தி உள்ளது. எனவே உற்பத்தி கூறும் ஶ்ருதியானது ப்ராண பதத்தின் மூலம் சேஷ்டா (அசைவு) எனபது கூறப்படுகிறது என்று கொள்ள வேண்டும். சென்ற பாதத்தில் வாயுவின் உற்பத்தி கூறிவிட்டபடியால் இது புனருக்தி (repetition) என்று ஆகாது. ஏனெனில் அங்கு வெளி வாயுவின் உற்பத்தி கூறப்பட்டது, இங்கு சரீரத்தின் உள்ளே உள்ள ப்ராணனுக்கு கூறப்படுகிறது. இருப்பினும் ப்ராணன் உண்டாவது என்பது பொருந்தாது. ப்ராணன்தானே அகில உலகிற்கும் (பொருள்களுக்கும்) பிறப்பு இறப்பிற்கு காரணமாகிறார்; அப்பேற்பட்டவருக்கு எவ்வாறு பிறப்பு பொருந்தும்?

ஸித்தாந்தம் :- "सौक्ष्म्येण ह वा एषोऽवतिष्ठते स्थूलवेनोदेति (गौपवन)" ஶ்ருதியில் ப்ராணனுக்கு ஸ்வரூப ரீதியில் அனாதித்வமும் உடலில் தோன்றும் ரீதியில் உற்பத்தியும் பொருத்தமாகக் கூறப்படுகிறது. எனவே உற்பத்தி ஶ்ருதிக்கும் மற்றதிற்கும் விரோதம் இல்லை. ஜன்மாவைக் கூறும் ஶ்ருதியில் ப்ராண பதத்திற்கு சேஷ்டா என்று பொருள் கூற முடியாது. ஏனெனில் அதே வாக்கியத்தில் "तपो मन्त्राः कर्म च" என்று தனியாக கர்ம பதத்தினால் சேஷ்டை சொல்லப்படுகிறது. ஆகவே ப்ராணன் பிறப்பு உடையவன்தான்.

# 2.4.5 A न वायुक्रिये पृथगुपदेशात् (4 सूत्राणि)

ப்ராணனின் ஸ்வரூபம் யாது என்று இங்கு விசாரிக்கப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- ப்ராணன் என்பது தனியான பொருள் அல்ல. வெளிவாயுதான். புல்லாங்குழல் ஓட்டை போன்ற மூக்கின் ஓட்டை வழியே சென்று வரும்போது ப்ராணன் எனப்படுகிறது. அல்லது ஒரு கூண்டில் உள்ள பறவைகள் தாங்களும் அசைந்து, நகர்ந்து, கூண்டையும் மொத்தமான உந்துதலால் தள்ளுகின்றனவோ, அதேபோல் பதினொன்று புலன்கள் தன் தன் செயல் மூலமாக உடலை இயக்குகின்றன என்பதால் ஸர்வபுலன்களின் பொதுவான செயல்தான் ப்ராணன். எப்படியும் தனியான தத்வம் அல்ல. ஸாங்க்யர்களும் இவ்விதமே ஏற்கிறார்கள்.

ஸித்தாந்தம் :- "प्राण एव ब्रम्हणश्चतुर्थ:पाद:" स वायुना ज्योतिषा भाति च तपति च" நான்கு பாதங்கள் உள்ள ப்ரஹ்ம உபாஸனை கூறும் இடத்தில் உடலில் உள்ள ப்ராணனுக்கும் வெளி வாயுவிற்கும் அருள்புரிகிறதாக வாயுவையும் அருள் பெறுகிறதாக ப்ராணனையும் வேறாகக் கூறியுள்ளபடியால் வாயுவே ப்ராணன் ஆகாது. "प्राण: स वायु:" என்ற அபேதம் கூறுவது ஔபசாரம். ஸாங்க்யர்கள் கூறும் விஷயம் இந்திரியங்களின் பொதுவான கிரியை ப்ராணன் என்பது தவறு. இந்திரியங்களுக்கு பொதுவாக தனிக்ரியை (வ்ருத்தி) கிடையாது. பறவைகள் உதாரணத்தில் ஒவ்வொரு பறவையின் நகர்வும் ஒரே மாதிரியான வ்யாபாரம் என்பதால் அங்கு பொது வ்ருத்தி பொருந்தும். இங்கோ என்றால் கண், காது போன்றவைகளின் தொழில்கள் நேர் மாறுபாடு உடையன. மேலும் உடலை அசைக்க இவை அனுகூலமில்லை. ஆகையால் ப்ராணன் என்பது தனியான தத்வம் (பொருள்). அதுவே தனது தொழில் (பயன்) வேறுபாட்டினால் ப்ராணன், அபானன், வ்யானன், உதானன், ஸமானன் என்று ஐந்து பெயர்களை

பெறுகிறது. காமம், ஸங்கல்பம், ஸந்தேஹம், ச்ரத்தை போன்ற வெவ்வேறு மாற்றங்கள், பயன்கள் மனதிற்கு ஏற்பட்டாலும் மனம் ஒன்றுதான் என்பது இதற்கு உதாரணமாகும்.

## 2.4.4 V न वायुक्रिये पृथगुपदेशात् (4 सूत्राणि)

பெரும்பாலும் பூர்வபக்ஷ ஸித்தாந்தம் ஒன்றுதான்.

ஸித்தாந்தம்:- முக்கிய ப்ராணன் வாயுவைக்காட்டிலும், மூச்சு விடுதல், இழுத்தல் என்ற செயலைக்காட்டிலும் வேறுபட்ட ஒரு தனி தத்வம். एतस्माज्जायते प्राण: मन: सर्वेन्द्रियाणि च என்பதாக புலன்கள், மனம், இவைகளைப்போல் ப்ராணன் உண்டானதாக கூறுகிறது. எனவே வேறு நிலையை அடைந்த வாயுதான் ப்ராணன். ப்ராணன் வாயுவின் விகாரமானால் தனி பூதமாகக் கணக்கில் வரவில்லையே என்று கேட்க வேண்டாம். இந்த்ரிய ப்ராண ஸம்வாதம் கூறுமிடத்தில் புலன்களுடன் ப்ராணனைக் கூறுவதால் கண் போன்ற புலன்கள் போல் ஜீவ உபகரணமாக கருதப்படுகிறது. ப்ராணன் சரீரதாரணம் போன்றவற்றால் ஜீவனுக்கு உபகரணம் ஆகின்றது. இந்த ஒரே ப்ராணன் ஐந்து வேலைகளை பண்ணுவதால் ப்ராண, அபான, வியான, உதான, ஸமான என்று கூறப்படுகிறார். மனம் ஒன்றானாலும் அதன் ரூப மாறுபாடுகளான காமம், ஸங்கல்பம், ஸந்தேஹம் போன்ற வெவ்வேறு கார்யங்கள் நடக்கின்றன அல்லவா? எனவே ப்ராணன் ஒன்றே, தனி தத்துவம்தான்.

இங்கு மத்வமதரீதியாக "न वायुक्रिये.." என்ற ஸூத்ரம் சென்ற அதிகரணத்துடன் சேர்ந்துவிட்டது. மேலும் இந்த அதிகரணமாக கூறப்படும் (both advaitham and visishtadhvaitham) மூன்று ஸூத்ரங்களை 2+1 என்று பிரித்து இரண்டு அதிகரணங்களாக கணக்கிடப்பட்டுள்ளன.

  

# 2.4.7 D चक्षुरादिवत्तु तत्सःअशिष्टचदिभ्य: (2 सूत्रे)

**ஸந்தேஹம் :-** முக்கிய ப்ராணன் ஸ்வதந்திரனா? பரதந்திரனா?

**பூர்வபக்ஷம் :-** ப்ராணன் ஸ்வதந்திரந்தான். "न प्राण: किञ्चिदाश्रित:" (ஆக்னிவேஶ்யம்) ஶ்ருதியில் ஆச்ரயமற்றவன் (ஸ்வதந்திரன்) என்று கூறப்பட்டுள்ளது. மேலும் "यदाश्रयादस्य चेष्टा" (भारत) என்ற ஸ்ம்ருதியில் உலகனைத்திற்கும் எதனால் (movement) அசைவு ஏற்படுகிறது அது ப்ராணன் என்றுள்ளது. प्राण: परवशो स्थित: என்ற ஶ்ருதி (அஸ்வதந்திரன் என்ற) துர்பலமானதால் பாதிக்கப்படுகிறது. இதனால் ப்ராணனுக்கு உற்பத்தி கூறியதும் தவறு என்று ஆக்ஷேபம் இப்பொழுது பூர்வபக்ஷத்தில் செய்யப்படுகிறது.

**ஸித்தாந்தம் :-** முக்ய ப்ராணன் பரதந்திரன்தான். सर्वं ह्येवैतत्परमेव तिष्ठते प्राणश्च प्राणाश्च (गौपवन) என்ற ஶ்ருதியில் கண் போன்ற புலன்களுடன் ப்ராணனுக்கும் பாரதந்த்ரியம் சொல்லப்படுகிறது. இந்த ஶ்ருதிக்கு "यतोनैवेश्वरद्वयाम्"- இரண்டு ஈஶன் (ஸ்வதந்திரன்) கிடையாது (ஸரியாகாது) என்ற ஸ்திரமான யுக்தியின் பலம் உள்ளது. மேலும் प्राणस्यैतद्वशं सर्वं प्राण: परवश: स्मृत: (पैङ्गी) ஸ்பஷ்டமாக பரதந்திரன் ப்ராணன் என்று கூறுகிறது. ஸ்வதந்திரன் என்பதற்கான ஶ்ருதி யுக்திகளுக்கு ப்ராணன் அவாந்தர ஈஶ்வரன் என்று கொள்ள வேண்டும். ஈஶ்வர வஸமானவன் ப்ராணனும் புலன்களும் என்று கூறியிருந்தாலும் தூக்கத்தில் ஜீவனின் ப்ரயத்னம் இல்லாமலேயே ப்ராணன் வேலை நடக்கிறது. ஆனால் கண் காது போன்ற புலன்களுக்கு நடப்பதில்லை. புலன்கள் கரண கோஷ்டியில் உள்ளன, ப்ராணன் அவ்வாறு இல்லை என்ற வேறுபாட்டினால் ப்ராணனுக்கு அவாந்தர ஈஶ்வரத்வம் ஏற்க வேண்டும். பூர்ண ஸ்வதந்திரம் இல்லை.

## 2.4.8 D पञ्चवृत्तिर्मनोवद्यव्यप दिश्यति (1 सूत्रम्)

**ஸந்தேஹம்:- பஞ்ச ப்ராணன்கள் முக்யதாஸர்களா? தனிப்பட்டவர்களா? தனிப்பட்டு இயங்குபவர்களா?**

**பூர்வபக்ஷம் :-** இரண்டு விதமான ஶ்ருதிகளும் யுக்திகளும் உள்ளதால் பரஸ்பர விரோதமானதால் இரண்டுவிதமாகவும் நிர்ணயிக்க முடியாது. सर्वे वा एते मुख्य दासा: என்று முக்கிய தாஸத்வம் கூறப்படுகிறது. एष प्राण: इतरान् प्राणान् सन्निद्यते என்ற மற்றொரு ஶ்ருதியில் ப்ராணனுக்கு அடங்கி புலன்கள் உள்ளன என்று கூறப்படுவதாக விரோதம் தோன்றுகிறதல்லவா? இவ்வாறு இரண்டு ஶ்ருதியில் மோதலால் நிர்ணயமில்லை.

**ஸித்தாந்தம் :-** अथ पञ्चवृत्त्या एतत्प्रवर्तते என்ற ஶ்ருதியில் மனதை உதாரணமாக காட்டி முக்யப்ராணனுக்கு பஞ்சதாஸத்வேன, பஞ்சஸ்வரூபத்வேன இருவிதமாயும் ஸித்தாந்தம் கூறப்படுகிறது. எனவே இரண்டு விதமான தன்மையும் ப்ராமாணிகம்தான். இவ்விதம் தாஸத்வம் வ்யக்தஸத்குணத்வம் ஆகிற ஸ்வரூபஸத்வம் இரண்டுமே இருப்பினும் ஸ்வாமி ப்ருத்ய பாவம் (யஜமானன் சேவகத்தன்மை) எவ்வாறு என்றால், தாரதம்யத்தினால் வரலாம் என்று -"अशेषगुणपूर्णानि मुख्यरूपाणि पञ्च च | तद्वा:पञ्च चान्येऽपि प्राणाद्या: सद्गुणैर्युता:" என்று ஶ்ருதியில் கூறப்பட்டுள்ளது. எனவே ப்ராணாதிகள் இரண்டுவிதமாகவும் இருக்க முடியும் என்பதால் விரோதமில்லை.

  

## 2.4.6 A अणुश्च (1 सूत्रम्)

**இந்த முக்கிய ப்ராணன் விபுவா (வ்யாபகரா) அணுவா? என்றால்**

**பூர்வபக்ஷம் :- समा: प्लुषिणासमो मशकेन समो नागेन என்று உபநிஷத்தில் கொசுவைவிட சிறிய ஒரு பூச்சி என்பதாகும். அதற்கு ஸமமாக ப்ராணன் என்று கூறுகிறது. அதோடு யானையோடு ஸமம் என்றும் கூறுகிறது. இப்படியே அந்தந்த ஜந்துக்களோடு ப்ராணன் ஸமம் என்றும் கூறுவதால் ப்ராணன் விபு பரிமாணம்.**

**ஸித்தாந்தம் :- ஸமஷ்டியான ஹிரண்யகர்பரின் ப்ராணன் வ்யாபகமாய் இருக்கட்டும். ஸமஷ்டியாகவும் வியஷ்டியாகவும் இருப்பதால் "वायुरेव व्यष्टि: वायु: समष्टि:" என்று ஶ்ருதி உள்ளது. அதே வ்யாபித்வம்தான் सम:प्लुषिणा...सम: एभि: त्रिभिर्लोकै: என்று கூறப்படுகிறது. ஆனால் நம் சரீரத்தினுள் உள்ள ப்ராணன் புலன்கள் போல் காணமுடியா சிறிதளவுதான் (அணுதான்) மேலும் तमुत्क्रामन्तं प्राणोऽनुत्क्रामति - என்று உடலைவிட்டு ப்ராணன் புறப்பட்டு செல்கிறான் என்று ஸ்பஷ்டமாக கூறியிருப்பதால் விபு அல்ல.**

## 2.4.5 V अणुश्च (1 सूत्रम्)

**பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் எல்லாம் விஶிஷ்டாத்வைதத்திலும் ஸமமே.**

## 2.4.9 D अणुश्च (1 सूत्रम्)

**மத்வ மதப்படியும் எல்லாம் ஸமமானாலும் முறை வேறு**

பூர்வபக்ஷம் :- प्राणा एवाधस्तात् என்று ப்ராணனுக்கு வ்யாபித்வம் கூறப்படுகிறது. यतः सर्वं जगद्व्याप्य तिष्ठति என்ற ஶ்ருதியிலும் உலகை வியாபித்து ப்ராணன் இருப்பதாக கூறப்படுவதால் ப்ராணன் வ்யாபியானவன்.

ஸித்தாந்தம் :- एष प्राणोऽणुर्नाम (कौण्डिन्य) ஶ்ருதியினால் உடலின் உள்ளே இருக்கும் ப்ராணன் அணுவானவன், வெளியே உள்ள ப்ராணன் மஹான் (விபு) என்று விரோத பரிஹாரம். மேலும் முக்கிய ப்ராணன் "अणुर्वै मुख्यः प्राणः यदुत्क्रामति नाडीभिः" என்பதாக தெளிவுடன் அணுபரிமாணம் ஊர்ஜிதப்படுத்தப்படுகிறது.

## 2.4.7 A ज्योतिराद्यधिष्ठानं तु तदा मननात् (3 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- வாக்கு, கண் காது போன்ற புலன்கள் தானாகவே தன் தன் வேலையில் ஈடுபட்டு பயன் தருகின்றனவா? அல்லது அக்னி, ஸூரியன் போன்ற தேவதைகளின் ஸாந்நித்யம் பெற்று அவர்களுடைய துணைகொண்டு வேலை புரிகின்றனவா? என்ற ஐயம் ஏற்பட்ட பிறகு

பூர்வபக்ஷம் :- அததற்கு தேவையான ஶக்தி இருப்பதால் பிறர் துணை தேவையில்லை. தேவதைகளை எதிர்பார்த்து அவர்களின் துணையும் ஸாந்நித்யமும் இருந்தால் பார்த்து, கேட்டு, பேசி வரும் பயன்களிலும் தேவதைகளுக்கு பங்கு ஏற்படும் ஆதலால் ஜீவன் போக்தாவாக ஆகமாட்டான்.

ஸித்தாந்தம் :- வேதத்தில் अग्निर्वाग्भूत्वा मुखं प्राविशत्, आदित्यश्चक्षुर्भूत्वा चक्षुषी प्राविशत् என்பதாக வாக்கில் அக்னியும், கண்ணில் ஸூரியனும் அனுக்ரஹம் பண்ணுவதற்காக உள்ளே உள்ளன என்று ஸ்பஷ்டமாக கூறப்படுகிறது. எனவே தேவதைகளின் பரதந்திரமாகத்தான்

புலன்கள் உள்ளன. இதனால் தேவதைகளுக்கு போக்த்ருத்வம் வந்து விடாது, உயர்ந்த போகம் ஸ்திதியில் உள்ளவர்களுக்கு இது பொருந்தாது. எனவே புலன்கள் தேவதைகளுக்கு பரதந்திரம்தான்.

## 2.4.6 V ज्योतिराद्यधिष्ठानं तु तदामननात्

(2 सूत्रे)

இந்த அதிகரணத்தின் ஸாரம் இவ்வாறு. புலன்களுக்கு அக்னி போன்ற தேவதைகளின் தூண்டுதல் அல்லது துணை-நடத்துவதும் கூட நாராயணனுடைய ஸங்கல்பத்தால்தான். யோऽग्नौ तिष्ठन् என்ற அந்தர்யாமி ப்ராம்ஹணத்தில் அக்னி போன்ற தேவதைகளின் இருப்பு, இயக்கம் யாவையும் ஈஶ்வன் தூண்டுதலால்/ ஸங்கல்பத்தால் என்று கூறியிருப்பதால். இங்கு प्राणवता ஜீவனோடு கூட அக்னி போன்றவர்களுக்கும் செயல்பாடு ஈஶ்வன் அருளால்தான். இங்கு ஜீவனை உதாரணமாக காட்டி தேவதைகளின் பிரேரணையும் நாராயணஸங்கல்பத்தால் என்று நிர்ணயிக்கப் படுகிறது. तदामननात् என்றால் இவனுடைய ஸங்கல்பத்தால் என்று பொருள். Very new idea

## 2.4.10 D ज्योतिराद्यधिष्ठानं तु तदामननात्

(3 सूत्राणि)

புலன்களும் ப்ராணனும் ஜீவனின் கரணங்களா? ஈஶ்வனின் கரணங்களா? என்று விசாரிக்கப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- जीवस्य करणान्याहुः प्राणान् (सौत्रायण) என்கின்ற ஶ்ருதியினாலும், புலன்களுக்கு ஜீவ வசத்வம் இருப்பதாலும் ஜீவனுடைய கரணங்கள்தான் புலன்களும் ப்ராணன்களும்.

ஸித்தாந்தம் :- यश्चक्षुषि तिष्ठन् என்கிற ஶ்ருதியானது கண் போன்ற புலன்கள் ப்ரஹ்மத்தினால் அதிஷ்டிதம் (தூண்டப்படுபவை) என்று கூறுகிறது. அதேபோல यस्तेजसि तिष्ठन् என்று அக்னியும் கூட ப்ரஹ்மத்தினால் தூண்டப்படுபதாக கூறப்படுகிறது. எனவே தேஜோம்ஶமான கண்ணுக்கும் கூட ப்ரஹ்மம் ப்ரயோஜ்யத்வம் (தூண்டப்படும் தன்மை) என்று நிர்ணயமாகிறது. மேலும் எல்லா இந்திரியங்களையும் தூண்டிவிட்டு இயங்குகின்ற ப்ராணனே यः प्राणेतिष्ठन् என்றவாறு ப்ரஹ்மாதீனன் என்று கூறுகிறது. ஈஶனுடைய கரணங்கள் ஆனாலும் இவைகள் மூலம் ஈஶன் ஜீவன்களை பார்க்க வைப்பதால் ஜீவன கரணத்வம் ஔபசாரிகம் இரண்டாம் நிலை. ஜீவனுடைய க்ரியைகளுக்கு ஸாதனம் மட்டுமே புலன்கள். இவைகள் ஈஶனுடையவைகள்தான். தேவதத்தனின் கோடாலியால் யக்ஞதத்தன் விறகு வெட்டுவதில்லையா? करणैर्विन युज्यते என்று ஜீவனுக்கு புலன்களின் தொடர்பு அனாதியானதால் ஜீவனுடையவை என்று ப்ரமம். கரணங்கள் (புலன்கள்) ஜீவவசம் என்பதும் நிஜமன்று, அபிமானம் மட்டுமே (உண்மை அல்ல.)

## 2.4.8 A त इन्द्रियाणि तद्व्यपदेशादन्यत्र श्रेष्ठात् - (3 सूत्राणि)

புலன்கள் யாவும் ப்ராணனின் வ்ருத்திகளா (modifications) தனி தத்வங்களா? என்று விசாரிக்கப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- கண், காது போன்ற புலன்கள் ப்ராணனுடைய உட்பிரிவுகள், modifications மற்றொரு வ்ருத்தி என்று கூற வேண்டும். ஏனெனில் हन्तास्यैव सर्वे रूपमसमामेति என்று இந்திரியங்கள் ப்ராணனின் ரூபமாயிருப்போம் என்று புலன்களே

கூறுவதாக சொல்லப்பட்டுள்ளது. மேலும் புலன்களை प्राणा इत्येव आचक्षते எனவே இந்திரியங்கள் ப்ராணன் தவிர தனியல்ல.

ஸித்தாந்தம் :- "तानि मृत्युः श्रमो भूत्वा उपयेमे.." என்ற ஶ்ருதியில் இந்திரியங்களுக்கு ம்ருத்யுவினால் பிடிக்கப்பட்டு, ச்ரமம் ஏற்படுகிறது என்றும் ப்ராணனுக்கு மட்டுமே ம்ருத்யு ஸம்பந்தம் இல்லை என்பதால் ஸதா ஸதா ஸஞ்சரித்தும் ச்ரமமில்லாமல் இருக்கிறது ப்ராணன் என்றும் கூறப்படுவதால் ப்ராணன் தனிதத்வம், புலன்கள் தனியான தத்வம். மேலும் புலன்கள், ப்ராணன் இவைகளுள் தலைவர், "தான், தான்" என்று பூசல் ஏற்பட்டு ப்ரஹ்மாவின் உத்தரவுப்படி கண் போன்ற இந்திரியங்கள் தனித்தனியே வெளியே சென்றபோதும் வாழ்வு நடப்பதில் ச்ரமம் இல்லாமல் இருந்தது. பிறகு ப்ராணன் கிளம்ப தயாரானதும் எல்லா புலன்களும் ஶக்தி இழந்தன, ப்ராணன் வந்ததும் புலன்களும் நிலைத்தன என்று கூறுப்படுகிறது. ஆகையால் புலன்கள் வேறு ப்ராணன் வேறு. ப்ராண ரூபமே இவைகள் என்பதும் ப்ராணன் என்ற பெயரால் அழைப்பதும் கௌணமே இரண்டாம் நிலை. எனவே இந்திரியங்கள் ப்ராணனை காட்டிலும் வேறானவை.

## 2.4.7 V त इन्द्रियाणि तद्व्यपदेशादन्यत्र श्रेष्ठात्

## (2 सूत्रे) மூன்றை இரண்டாக

श्रेष्ठात् अन्यत्र = முக்கிய ப்ராணனை காட்டிலும் வேறான ते=प्राणाः = इन्द्रियाणि, तद्व्यपदेशात्= அவர்களுக்கு மட்டுமே இந்திரியத்வம் கூறப்பட்டுள்ளது. என்று ஸூத்ரார்த்தம்.

ஸ்ரீகீதையில் इन्द्रियाणि दश एकश्च पञ्च चेन्द्रिय गोचराः பத்து இந்திரியங்கள் மனம் ஆகிய பதினொன்றையும் இந்திரியங்கள்

என்று கூறுவதால் முக்கிய ப்ராணனை காட்டிலும் புலன்கள் வேறுதானே! மேலும் புலன்களின் வேலைகளும், பயன்களும் ப்ராணனின் வேலைகளும் வேறானவை.

## 2.4.11 D त इन्द्रियाणि तद्व्यपदेशादन्यत्र श्रेष्ठात् (3 सूत्राणि)

ஸந்தேஹம் :- இந்திரியங்களும் ப்ராணன்களும் ஒன்றேவா? ப்ராணனை காட்டிலும் இந்திரியங்கள் வேறானவையா?

பூர்வபக்ஷம்:- "प्राणा वा इन्द्रियाणि (பௌத்ராயண)" என்ற ஶ்ருதி எல்லாவற்றிற்கும் இந்த்ரியத்வம் கூறப்படுவதால் ப்ராணன்களுக்கும் இந்திரியத்வம் உண்டு. மேலும் விஷயத்தினை நோக்கி ஓடுவது "इदं द्रवणम्" என்ற காரண பெயர் ப்ராணனுக்கும் இருக்கிறது.

ஸித்தாந்தம் :- பன்னிரண்டுதான் இந்திரியங்கள். முக்கிய ப்ராணன் வேறுபட்டதுதான். द्वादशैवेन्द्रियाणि आहु: प्राणो मुख्यस्तु अनिन्द्रियम् (பௌத்ராயண) ஸ்பஷ்டமாக கூறுகிறது. மேலும் ப்ராணனுக்கு புலன்களோடு ஸாம்யம் கிடையாது. ப்ராணன் ஸர்வேந்த்ரிய நியந்தாவாகவும், ஸர்வகர்த்ரு காரயிதாவாகவும் கூறப்படுகிறார். ப்ராணன் ஈஶனுக்கு வஸமானாலும் மற்ற புலன்கள் போல் ஜீவ ப்ரயத்னத்தை வைத்து கொள்ள ஈஶவஸமாவதில்லை என்ற வேறுபாடும் உள்ளது. எனவே ப்ராணனை காட்டிலும் வேறுபட்டது புலன்கள், ப்ராணனுக்கு இந்த்ரியத்தனமை கிடையாது.

  

## 2.4.9 A संज्ञामूर्तिक्लृप्तिस्तु त्रिवृत्कुर्वतउपदेशात् (3 सूत्राणि)

உலகில் இருக்கும் பெயர்களுக்கும் வடிவங்களுக்கும் ஜீவன் ஸ்ரஷ்டாவா? ஈமனா? என்று விசாரிக்கிறது இந்த அதிகரணம்.

பூர்வபக்ஷம் : ப்ரஹ்மம் பஞ்சபூதங்களை படைத்த பிறகு பௌதிகமான மலை, ஸமுத்திரம் போன்ற பொருள்களுக்கும் பெயர்களுக்கும் படைப்பவன் ஜீவன்தான். ஏனெனில் अनेन जीवेनात्मना अनुप्रविश्य नामरूपे व्याकरवाणि என்று ஜீவ ரூபத்தின் வாயிலாக நாம ரூபங்கள் விரிவுபடுவதாக கூறியுள்ளது.

ஸித்தாந்தம் :- சென்ற வாக்யத்தில் "जीवेनानुप्रविश्य" என்பதாக ஜீவனாக அனுப்ரவேசம் பண்ணி என்பதோடுதான் ஜீவனுக்கு தொடர்பு. நாம ரூபங்களை விரிக்கின்றேன் என்று தொடர்பு கிடையாது. ஏனெனில் व्यकरवाणि என்ற வார்த்தை தள்ளி உள்ளது. மேலும் ஜீவனுக்கு மலை, ஸமுத்ரம் போன்றவற்றை படைக்க மக்தி கிடையாது. ஈம்வரனோவென்றால் ஸர்வசக்தன். परास्य शक्तिः என்று ச்வேதாச்வதர உபநிஷத் சொல்கிறது. மேலும் வ்யாகரவாணி என்பதாக வினையை தன்மையில் கூறியுள்ளது ஈமன் பக்ஷத்தில்தான் பொருந்தும் எனவே ஈமன்தான் நாம ரூப ஸ்ரஷ்டா. குயவன் போன்றவர்கள் ஈமன் தூண்டுதலால் கருவியே. கடவுளே ஸர்வகர்த்தா.

## 2.4.8 V संज्ञामूर्तिक्लृप्तिस्तु त्रिवृत्कुर्वतउपदेशात् (3 सूत्राणि)

இதுவரை 3,4 பாதங்களில் ஸமஷ்டி ஸ்ருஷ்டி யாவும் நாராயணனால் என்று வ்யவஸ்தை (நிர்ணயம்) செய்து இந்த அதிகரணத்தில் வ்யஷ்டியான பௌதிகமான ஸ்ருஷ்டியும்

ப்ரஹ்மம்தான் என்று ஆக்ஷேப ஸமாதானங்களால் நிரூபிக்கப்-படுகிறது.

பூர்வபக்ஷம் :- ஹிரண்யகர்பர் என்கிற ஜீவன்தான் நாம ரூபமாகிற வ்யஷ்டி ஸ்ருஷ்டிக்கு காரணம். ஏனெனில் "अनेन जीवेनात्मना अनुप्रविश्यनामरूपे व्याकरवाणि" என்ற சாந்தோக்ய ஶ்ருதியினால் அனுப்ரவேசம் பண்ணிவிட்டு நாம ரூப விரிவை செய்தார் என்று ஒரே கர்த்தாதான் ப்ரவேசத்திற்கும் நாம ரூப விரிவாக்கத்திற்கும் என்று தெரிகிறது. ஜீவனாக நுழைந்து வ்யஷ்டி ஸ்ருஷ்டி பண்ணியது ஹிரண்யகர்பர் என்ற ஜீவன்தான்.

ஸித்தாந்தம் :- ஸர்வகர்த்தா நாராயணரே. व्याकरवाणि என்று க்ரியாபதத்தினால் கர்த்தா கூறப்பட்டுவிட்டதால் आत्मना என்று மூன்றாம் வேற்றுமை எப்படி வரும் என்ற ஆக்ஷேபம் வேண்டாம். आत्मना என்ற மூன்றாம் விபக்தி கர்த்தாவை கூறவில்லை, கரணத்தை கூறும் மூன்றாம் விபக்தியாகும். நம் எண்ணப்படி விபக்திகள் வரும் என்பதால் கர்த்தாவான பரதேவதைக்கு ஸ்வாதந்த்ரியத்தை விவக்ஷை பண்ணி த்ருதீயா வந்துள்ளது. பரதேவதை தானே ஸாதகதமம் ஆகிறது. எனவே நாராயணனே நாம ரூப கர்த்தா.

## 2.4.12 D संज्ञामूर्तिक्लृप्तिस्तु त्रिवृत्कुर्वतउपदेशात्

(1 सूत्रम्)

இந்த அதிகரணம் மத்வமதத்தில் இரண்டாக பிரிக்கப்பட்டுள்ளது. (1+2 = 3 सूत्राणि)

சரீரம் போன்ற பௌதிகங்கள் (நாம ரூபங்கள்) ஹிரண்யகர்பரால் (முக்யப்ராணர்) படைக்கப்படுகிறதா? விஷ்ணுவினாலா? என்று விசாரிக்கிறது இந்த அதிகரணம். ஒரே ஸூத்ரம்.

பூர்வபக்ஷம் :- ஹிரண்யகர்பர் என்பவரே விரிஞ்சி என்றும் கூறப்படுகிறார். यस्मात्विरेचयेत् सर्वं विरिञ्चस्तेन भण्यते (ப்ராம்ஹ) ஸ்ம்ருதியில் ஸ்ருஷ்டி பண்ணுவதால் விரிஞ்சன் என்று சொன்ன யுக்தியுடன் கூடியதான "विरिञ्चोवा इदं सर्वं विवेचयति (गौपवन) ஶ்ருதியானது ப்ரபலமாக உள்ளது. परस्मात् हयेते नामरूपे व्याक्रियेते (अग्निवेश्ये) ஶ்ருதியானது பாதிக்கப்படுகிறது. எனவே விரிஞ்சிதான் நாம ரூப கர்த்தா.

ஸித்தாந்தம் :- உடல் முதலிவைகளை படைக்க பூமி, ஜலம், நெருப்புகளின் கலவை (த்ருவ்ருத்கரணம்) தேவையாகிறது. அந்த த்ருவ்ருத்கரணம் (முக்கலவை) விஷ்ணுவினால்தான் என்று सेयं देवता ऐक्षत इमास्तित्रो देवताः त्रिवृत् करवाणि என்று கூறுகிறது. எனவே த்ருவ்ருத்கரணம் விஷ்ணுதர்மம்தான் என்பதால் நாம ரூப ஸ்ருஷ்டியும் அவருடையதுதான். பூர்வபக்ஷம் கூறியது அவாந்தர ஸ்ருஷ்டியை பற்றியது.

## 2.4.13 D मांसादि भौमं यथाशब्दं इतरयोश्च

(2 सूत्राणि)

சென்ற அதிகரணத்தில் உடலின் கர்த்தா கூறப்பட்டார். இப்போது உடலின் உபாதான காரணம் கூறப்படுகிறது. இந்த உடல் ப்ருதிவியின் பரிணாமமா? ஜலத்தின் பரிணாமமா? தேஜஸ்ஸின் பரிணாமமா?அல்லது மூன்று பூதங்களின் சேர்ந்த பரிணாமமா? என்று விசாரிக்கப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- 1) கடினத்வம், மாம்சம் நிரம்பியதால் இந்த உடல் பூமியின் கார்யம்தான்.

2) மாம்ஸம் முதலியதில் த்ருப்தி உண்டாக்கும் தன்மை உள்ளதால் ஜலத்தின் கார்யம்தான் (ஜலத்தினால் த்ருப்தி)

3) உடலில் உஷ்ணம் காணப்படுவதால் (தெரிவதால்) தேஜஸ்ஸின் கார்யம்தான் என்பதாக மூன்று பக்ஷங்கள் பூர்வ பக்ஷமாக கிளம்புகிறது. आप एव शरीरम् என்று விசேஷமாக கூறியுள்ளதால் மூன்றின் கலவை உடல் என்று கூற முடியாது.

ஸித்தாந்தம் :- பல பூதங்களின் படைப்பாக இருந்தாலும் அந்தந்த பூத விசேஷ ஸம்யோகம் உள்ளதால் விசேஷமாக கூறலாம். "यत्कठिनं सा पृथिवी, यद्द्रवं तदापः, यदुष्णं तद्तेजः" என்று ஸ்பஷ்டமாக கூறுவதால் மூன்று பூதங்களின் சேர்ந்த பரிணாமம்தான் உடல்.



# மூன்றாம் அத்யாயம்

## முதல் பாதம்

### 3.1.1 A तदन्तरप्रतिपत्तौरंहति संपरिष्वक्त: प्रश्ननिरूपणाभ्यां (7 सूत्राणि)

ஜீவன் இந்த பிறவியை விட்டு மறுபிறவிக்கு ப்ராண உபாதிகனாக செல்லும்போது, பின்னால் வரக்கூடிய சரீரத்திற்கு பீஜமான ஸூக்ஷ்ம பூதங்களுடன் போகிறானா? இல்லை... தான் மட்டும் போகிறானா? என்ற ஸந்தேஹத்தின் பேரில் -

பூர்வபக்ஷம் :- பஞ்ச பூதங்களும் எங்கும் கிடைப்பது சுலபம் ஆதலால் அவைகளை எடுத்துக்கொண்டு போக தேவையில்லை. தனியாகத்தான் போகிறான்.

ஸித்தாந்தம் :- ஸ்தூலமான பூதங்கள் கிடைப்பது சுலபமானாலும் சரீரத்தின் உற்பத்திக்குத் தேவையான ஸூக்ஷமாம்ஶங்கள் துர்லபம். மேலும் புலன்களுக்கு ஆதாரமான பூதங்களின் ஆதாரம் இல்லாமல் புலன்கள் போகாது. மேலும் पञ्चम्यामाहुतावाप: पुरुष वचसो भवन्ति என்று ஶ்ருதியில் புண்ணிய பயனாக விண்ணுலகம் போகும் ஜீவன் ஆங்காங்கு ஐந்து இடங்களில் ஆஹூதி போல் ஹோமம் செய்யப்பட்டு பயணம் போய் திரும்புகிறான். இவன் நீர் வடிவத்தில் (முக்கியமாக) பயணம் செய்வதாக கூறப்படுகிறது. இந்த நீர் என்பது பஞ்சபூத ஸாரம். எனவே ஜீவனுடன் கூட பூத ஸூக்ஷமங்கள் உடன் செல்கின்றன.

## 3.1.1 V तदन्तरप्रतिपत्तौ रंहति संपरिष्वक्त: प्रश्ननिरूपणाभ्याम् (7 सूत्राणि)

பூர்வபக்ஷம் ஸித்தாந்தம் இரண்டும் அத்வைத மதம் போல் ஸமானமே. முறை வேறாகிறது.

பூர்வபக்ஷம் :- சிறிதும் மாறுதலில்லை.

ஸித்தாந்தம் :- இந்த ஸூத்ரத்தில் तत् = அந்த சரீரம் संज्ञामूर्त्ति.. என்று முன்புள்ள ஸூத்ரத்தில் உள்ள மூர்த்தி என்று சொல்லப்பட்ட உடல் (சரீரத்தை) तत् என்ற சொல்லப்படுகிறது ஆறாவது (வரப்போகிற) ஸூத்ரத்திலிருந்து ""इष्टाधिकारी" என்ற சொல் சேர்த்துக்-கொள்ளப்படுகிறது. ஶ்ருதியில் உள்ள पञ्चम्यां आहूतौ आप: என்ற பதம் மூன்றாவது வேற்றுமையாக மாற்றி இங்கு (ஸூத்ரகாரரின் புத்தியில், ) சேர்த்துக்கொண்டு இந்த ஸூத்ரத்தின் அர்த்தம் - इष्टाधिकारी = ஜீவன் (யாகாதிகளை செய்பவன் ) तदन्तरप्रतिपत्तौ = சரீராந்தரத்தை (வேறு உடலை) எடுத்துக்கொண்டு புறப்படும்போது अद्भि: परिष्वक्त: த்ருவ்ருத்க்ருதமான ஜலத்துடன் சேர்ந்துதான் रंहति = போகிறான். प्रश्ननिरूपणाभ्याम् கேள்வி பதில்கள் மூலமாக நிர்ணயித்திருப்பதால் - என்று கிடைக்கிறது. பஞ்சாக்னி வித்யையில் पञ्चम्यामाहुतावाप: पुरुष वचसो भवन्ति என்று ஸ்பஷ்டமாக பூதஸூக்ஷ்மங்களுடன் போவதாக கூறப்பட்டுள்ளது. வேதத்தில் கூறும் அபூர்வமான விஷயத்தில் வேதம் மட்டும்தான் ப்ரமாணம் என்பதால் நமது கேள்விக்கு இடமில்லை.

## 3.1.1 D तदन्तरप्रतिपत्तौ रंहति संपरिष्वक्त: प्रश्ननिरूपणाभ्याम् (1 सूत्रम्)

இங்கு மூன்றாம் அத்யாயம் ஆரம்பத்தில் முதல் அதிகரணத்தில் 7 ஸூத்ரங்கள் சேர்ந்து ஒரே அதிகரணம் என்று மதத்வயம்

 


கூறியிருப்பினும் மாத்வ ஸித்தாந்தப்படி 7 ஸூத்ரங்களும் 7 அதிகரணங்களாக (ஒவ்வொரு ஸூத்ரமும் ஒரு தனி அதிகரணம்) என்று வியாக்யானம் பண்ணப்படுகிறது.

முன்னுரை :- முதல் இரண்டு அத்தியாயங்களில் अथातो ब्रह्मजिज्ञासा என்ற முதல் ஸூத்ரத்திலுள்ள ப்ரஹ்ம ஶப்தத்தின் (முன்பே சித்தமாக உள்ள) பொருள் நிரூபிக்கப்பட்டது. மீதியுள்ள 3-4ம் அத்யாயங்களில் अथ, अत, जिज्ञासा என்கிற மூன்று பதங்களின் பொருளான நம்மால் பண்ணி அடையத்தக்க ஸாத்ய ரூபமான பொருள் சொல்லப்படுகிறது. அதிலும் अत: என்ற பதத்தினால் ஸூசிக்கப்பட்ட பயன் (ஃபல்) மேலும் குறித்து अथजिज्ञासापदाभ्याम्= அத, ஜிக்ஞாஸா என்ற இரண்டு பதங்களினால் கூறப்படும் வைராக்கியம், பக்தி உபாஸனைகளுக்கு காரணமான ஸாதனமானது இந்த அத்தியாயத்தில் கூறப்படுகிறது.

ஸந்தேஹம் :- மோக்ஷ ஸாதனமான வைராக்யாதிகள் கடைபிடிக்கப்பட வேண்டுமா? வேண்டாமா? என்று விசாரிக்கப்படுகிறது. அதற்காக ஜீவனின் மரணத்தில் முழுமையாக பூதங்களின் பிரிவு (தொடர்பின்மை) இருக்கிறதா? இல்லையா? என்று விசாரம். பூதங்கள் பிரிவதில்லை என்றால் அதற்கு ப்ரமாணம் ப்ரயோஜனம் இருக்கிறதா இல்லையா? என்பதாக எழும் ஸந்தேஹ பரம்பரை இங்கு உள்ளது. அதில் முழுமையாக பூதங்களின் பிரிவை ஏற்றால், முழுமையாக பூதங்களின் பிரிவுதான் மோக்ஷம் என்பதால் இயல்பான மரணத்தினாலேயே அது கிடைப்பதால் ஸாதனங்களை கடைபிடிக்க வேண்டாம் என்றாகும். பூதங்கள் பிரிவதில்லை என்றால் மோக்ஷ ஸாதனம் செய்யப்பட வேண்டும் என்று வரும். ஆகவே எது தீர்மானம்?

பூர்வபக்ஷம் :- மோக்ஷஸாதனம் கடைபிடிக்கப்பட வேண்டாம். ஏனெனில் भूतानां विनिवृत्तिस्तु मरणम् (भारत) என்பதாக பூதங்களின் முழுமையான விடுபாடுதான் மரணம் என்று கூறப்பட்டுள்ளது.

ஆகவே மரணம் ஏற்பட்டாலே மோக்ஷம் கிடைத்துவிடும். பூதங்கள் மரணத்திலும் (பிறகும்) தொடர்கின்றன என்பதற்கு ப்ரமாணம் இல்லை, உடலின் போகங்களை கொடுத்து தன் வேலை முடிந்ததால் பூதங்களுக்கு இனி ப்ரயோஜனம் கிடையாதே!

ஸித்தாந்தம் :- பஞ்சாக்னி வித்யா ப்ரகரணத்தில் पञ्चम्यामाहुतौ आप: पुरुषवचसो भवन्ति என்று ஜீவனுடைய மரணத்தில் ஜீவன் ஜலத்தை உபலக்ஷணமாகக் கொண்டு பூதங்களுடன் தொடர்ந்து செல்கிறான் என்று ஶ்ருதி ப்ரமாணமாகிறது. மேலும் ஸ்ம்ருதியும் भूतयुक्त: परं लोकं इमं लोकं च गच्छति என்று பூதங்கள் தொடர்வதாக கூறப்படுவதும் ப்ரமாணம். மற்றொரு சரீரத்தை உண்டுபண்ணுவது என்ற ப்ரயோஜனம் உள்ளது. எனவே மரணத்தினால் பூதங்களின் விடுபாடு இல்லை. ஆகையால் மோக்ஷமாகிற நிஸ்சேஷபூதவிடுபாடு ஏற்பட மோக்ஷ ஸாதனங்கள் பண்ண வேண்டும்.

## 3.1.2 D त्र्यात्मकत्वात् तु भूयस्त्वात् (1 सूत्रम्)

ஸந்தேஹம்:- மரணத்தில் ஜீவனுடன் ஒரே ஒரு ஜலம் என்ற பூதம்தான் செல்வதாக கூறப்பட்டுள்ளதால், ஒரு பூதத்தினால் மறு உடல் உண்டுபண்ண முடியாததனால் மறு சரீரம் ஏற்படாமல் முக்தி கிடைத்து விடும். மரணமே மோக்ஷம். எனவே ஸாதனானுஷ்டானங்கள் வேண்டாம் என்று கேள்வி கிளம்பியது. அதற்கு பதிலாக இந்த ஸூத்ரம்.

பூர்வபக்ஷம் :- ஶ்ருதியில் आप: पुरुषवचसो भवन्ति என்று ஜலம் மட்டுமே கூறப்படுவதால் மற்ற பூதங்கள் ஜீவனுடன் செல்லவில்லை. ஆப: என்ற வார்த்தைக்கு மூன்று பூதங்கள் என்ற பொருள் வர भूतानि पुरुषवचसो भवन्ति என்றல்லவா

  

கூறவேண்டும். எனவே ஜலம் மட்டும்தான் ஜீவன் உடன் போகின்றன.

ஸித்தாந்தம் :- "मिश्राणि हि भूतानि" என்ற ஶ்ருதியினால் மூன்று பூதங்களும் ஒன்றோடு ஒன்று கலக்கப்பட்டுள்ளன. எனவே குற்றம் கிடையாது. எல்லா பூதங்களும் (மூன்றும்) கலந்து இருந்தாலும் மற்ற இரண்டைக்காட்டிலும் ஜலம் மிகுதியான பகுதி உடையதால் ஜலம் என்று கூறுகிறோம். நம் உடலில் பூமி, தேஜஸ்ஸைவிட ஜலம்தானே அதிகம் உள்ளது. எனவே எல்லா பூதங்களும் மரணத்தில் ஜீவனுடன் செல்கின்றன. ஆகையால் ஸாதன அனுஷ்டானம் பண்ணவே வேண்டும்.

## 3.1.3 D प्राणगतेश्च (1 सूत्रम्)

இரண்டு அதிகரணங்களில் ஶ்ருதியின் பலத்தில் பூதங்கள் போவதாக கூறப்பட்டது. இங்கு அனுமானத்தினால் நிரூபிக்கப்படுகிறது. अथ என்ற பதத்தினால் கூறப்பட்ட வைராக்கியம் போன்றவை கடைபிடிக்கப்பட வேண்டுமா? வேண்டாமா? என்ற விசாரம். அதனை நிரூபிக்க பூதங்கள் போகின்றவா? இல்லையா? என்று விசாரம். செல்கிறது என்பதற்கு ப்ரமாணம் உண்டா? என்று இந்த அதிகரணத்தில் நிரூபிக்கப்படுகிறது.

பூர்வபக்ஷம்:- முன்பு முக்கலவையான ஜலம் போவதால் மூன்றும் போகின்றன என்ற தீர்மானம் பொது ப்ரமாணத்தினால் இருந்தாலும் நிர்ணயமாவதற்கு விஶேஷ ப்ரமாணம் வேறு இல்லாததால் நிர்ணயம் ஆக முடியாது. எனவே ஸாதன அனுஷ்டானம் வேண்டாம்.

ஸித்தாந்தம் :- பூதங்கள் யாவும் ஜீவனுடன் போகின்றன. ஏனெனில் ப்ராணனை விட்டு பிரியாத பூதங்கள் ப்ராணன் போகும்போது எவ்வாறு போகாமலிருக்கும். ப்ராணாதீனத்வம் பூதங்களுக்கு தெளிவாக வேறு ஶ்ருதியில் கூறியுள்ளது. எனவே ராஜா செல்லும்போது அவனை விட்டு பிரியாத மந்திரிகள் கமனம் (going) ஸித்தமன்றோ! ஆகையால் இந்த அனுமான ப்ரமாணம் விஶேஷமாக உள்ளது. எனவே மோக்ஷத்திற்கு ஸாதனங்கள் கடைபிடித்தே தீர வேண்டும்.

## 3.1.4 D अग्न्यादिगतिश्रुतेरिति चेन्न भाक्तत्वात्

(1 सूत्रम्)

சென்ற அதிகரணத்தில் ப்ராணனுக்கு செல்கை கூறப்பட்டதால் என்று கூறிய காரணம் ஸரியல்ல என்பதான ஆக்ஷேபம் இங்கு விளக்கப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- மற்றொரு ஶ்ருதியில் मृतस्याग्निं वागप्येति वातं प्राण: चक्षुरादित्यम् என்று கூறப்படுகிறது. ப்ராண ஶப்தத்தினால் கூறப்படும் கண், வாக்கு எல்லாம் அந்தந்த தேவதையில் சென்று லயிப்பதாக கூறியிருப்பதால் ஜீவனுடன் எப்படி போக முடியும்? ஒரு பகுதி போகிறது, மற்றொரு பகுதி ஜீவனை தொடர்கிறது என்று கூறினால் ஒவ்வொரு மரணத்திலும் சிறு சிறு பகுதி போனால் கடைசியில் எல்லாம் இல்லை என்று ஆகிவிடுமே. ஆகவே இந்திரியங்கள் அக்னி போன்றவற்றை அடையும்போது பூதங்களும் செல்ல வேண்டும், ஆதலால் பூதங்கள் ஜீவனுடன் செல்வதில்லை. ஆகையால் மோக்ஷ ஸாதனம் தேவையில்லை.

ஸித்தாந்தம் :- पुरुषस्य मृतौ ब्रह्मन् (ब्राह्म) என்ற ஸ்ம்ருதியில் இந்திரியங்களுக்கு பகுதி பகுதியாக செல்கை கூறப்படுகிறது

என்பதால் அக்னியை அடைகிறது வாக்கு, என்பதும் கருத்துள்ளதுதான். மேலும் அந்த ஸ்ம்ருதியில் மரணத்தில் பிரிந்து சென்ற பகுதிகளுக்கு ஜீவனுடைய மறு உடல் ஏற்படும்போது மறுபடி தன்னிடமே வந்து சேரும் தன்மை கூறப்படுகிறது என்பதால் நாளடைவில் இந்திரியங்கள் முழுமையாக அழிந்துவிடும் என்ற ஸந்தேஹம் இல்லை. ஆகையால் பூதங்கள் இந்திரியங்கள் யாவும் ஜீவனுடன் மரணத்தில் கூடச் செல்கின்றன.

## 3.1.5 D प्रथमेऽश्रवणादिति चेन्न ता एव ह्युपपत्ते: (1 सूत्रम्)

பூதங்கள் ஜீவனுடன் போகின்றனவா இல்லையா என்று நிர்ணயிப்பதால் மோக்ஷஸாதனங்களின் அனுஷ்டானம் நிர்ணயிக்கப்படுகிறது. இந்த ஸூத்ரத்தில் அந்த உபநிஷத்தின் ஆரம்பத்தில் तस्मिन्नेतस्मिन्नग्नौ देवा: श्रद्धां जुह्वति என்ற வாக்யத்தில் ஜீவனுடன் ச்ரத்தை மட்டும் உடன் சேர்ந்து போகிறதா? ச்ரத்தையும் ஜலமும் சேர்ந்து போகின்றனவா?என்று ஸந்தேஹம் வருகின்றது. இந்த நிலையில் ஆரம்பத்தை அனுஸரித்து முடிவில் உள்ள पञ्चम्यां आहुतौ आप: என்ற வாக்யத்திற்கு பொருள் கூற வேண்டுமா? அல்லது மாறுதலாக ஆரம்பத்தை முடிவிற்கு ஏற்ப பொருள் கூற வேண்டுமா? என்ற ஐயம் எழுகிறது. இதன் முடிவின் (தீர்மானத்தின்) பொருட்டு உபக்ரமம் ப்ரபலமா? உபஸம்ஹாரம் ப்ரபலமா? என்ற ஆலோசனை செய்யும்போது, உபக்ரமம் ப்ரபலமானால் ஜலம் முதலிய பூதங்கள் ஜீவனுடன் போவதில்லை என்பதால் மோக்ஷஸாதனம் அனுஷ்டிக்காமலேயே அசேஷபூத வியோக-மாகிய மோக்ஷம் ஏற்படுவதால் தேவையில்லை ஸாதனம் என்று பூர்வபக்ஷம். உபஸம்ஹாரத்தை அனுஸரித்து உபக்ரமம் ஸரி

செய்யப்பட்டால் ஶ்ரத்தா என்பதுடன் பூதங்களும் கூடவே போவதால் பூதங்களின் ஸர்வவினாசத்திற்காக (மோக்ஷ-த்திற்காக) ஸாதனம் அனுஷ்டிக்கவேண்டும் என்று ஸித்தாந்தம் ஏற்படும்.

பூர்வபக்ஷம் :- பூதங்கள் ஜீவனுடன் செல்வதில்லை. ஶ்ருதியில் ஆரம்பத்தில் த்யுலோகம் என்ற அக்னியில் ச்ரத்தையை ஹோமம் பண்ணுகிறான் என்று மந்திரம் கூறப்பட்டது ஸரியல்ல. முடிவில் உள்ள ஆப: என்ற ஜல ஶப்தத்தை அனுஸரித்து உபக்ரமத்தில் உள்ள ஶ்ரத்தை என்பதற்கு ஜலமும் (பூதங்களும்) என்று பொருள் கொள்ளலாமே என்று கேட்பது தவறு. உபக்ரமத்திற்கு பலம் அதிகம் என்று மீமாம்ஸையில் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. எனவே பூதங்கள் போகாததால் மோக்ஷஸாதனம் வேண்டாம்.

ஸித்தாந்தம் :- உபஸம்ஹாரம் ப்ரபலமாக இல்லாவிட்டாலும் பின்னால் வருவது முன்னால் வருவதற்கு விளக்கமாக அமைவதால் பொருளை உணரும் தருவாயில் பின்னால் வருவது -தான் முதன்மையைப் பெறுகிறது என்பதால் உபஸம்-ஹாரத்திற்கு பலம் அதிகம் ஆகவே முதலில் கூறிய ஶ்ரத்தை என்ற சொல்லிற்கு ஶ்ரத்தையும், த்ரயாத்மகமான (பூமி, ஜலம், நெருப்பின் கலவை) பூதங்கள் என்றுதான் அர்த்தம் என்றாவதால் பூதங்களின் கதி (செல்கை) தவிர்க்க முடியாதது. ஆகையால் பூதங்கள் பூர்ண வியோகம் ஏற்பட (மோக்ஷம் ஸித்திப்பதற்கு) மோக்ஷ ஸாதனைகள் அனுஷ்டித்தே தீர வேண்டும்.

  

# 3.1.6 D अश्रुतत्वादिति चेन्नेष्टादिकारिणं प्रतीते:

(1 सूत्रम्)

ஸந்தேஹம் :- ப்ராணனின் கதியாகிய யுக்தியும், ஜலம் என்ற வார்த்தையினால் கருத்தாக பூதங்கள் கூறப்படுகின்றன என்று கூறுவதும் பூதங்கள் யாவும் செல்கின்றன என்பதற்கு ப்ரமாணம் ஆகுமா? ஆகாதா? இவை இரண்டையும் விட நேரிடையாக பூதங்களை கூறவில்லை என்ற ப்ரமாணம் ப்ரபலமா? துர்பலமா என்று விசாரிக்கப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- அக்னியில் வாக்கு அடங்குகிறது என்பதை விட நேரிடையாக பூதங்களுக்கு ஶ்ருதியில்லாதது ப்ரபலம்தான். ப்ராணகதியினால் ஊகிப்பதும் முடியாது. ஏனெனில் விஶேஷமாக கூற்று இருந்தால்தான் ஊகிப்பது ஸரியாகும். எனவே பூதங்கள் ஜீவனுடன் செல்லாது.

ஸித்தாந்தம் :- தில உணவு கூட உணவு (போஜனம்)தான் என்பது போல் சுற்றி வளைத்து கூறினாலும் ஶ்ருதியாகத்தான் எண்ண வேண்டும். ப்ராணகதியானது பூதங்கள் செல்லாமல் நடக்காது என்ற யுக்தியுடன் கூடிய இந்த ஶ்ருதி ப்ரபலம்தான். மேலும் अथ हैनं यजमानं किं न जहाति, भूतान्येव भूतैरेवं गच्छति भूतभुक्ते, भूतैरुत्पद्यते भूतैश्चरति என்பதாக (कौण्डिन्य) நேரடியாக ப்ரத்யக்ஷ ஶ்ருதி பூதங்களின் செல்கையை கூறுவதால் ஜீவன் பூதங்களுடன்தான் போகிறான். ஆகையால் பூதங்களின் முழுமையான விடுதலைக்கு மோக்ஷத்திற்கு ஸாதனம் அனுஷ்டிக்கத்தான் வேண்டும்.

## 3.1.7 D भाक्तं वाऽनात्मवित्त्वात् तथा हि दर्शयति (1 सूत्रम्)

अथ என்பது போன்ற வார்த்தையினால் கூறப்பட்ட வைராக்யாதிகள் அடைய வேண்டுமா இல்லையா? என்று விசாரம். இதற்காக முதலில் अपाम सोममृता अभूम என்று கூறுவதால் கர்மாவினாலேயே ஏற்படும் அம்ருதத்வம் முக்கியமானதா? உபசாரத்திற்காக கூறியதா? கர்மாவினால் வரும் அம்ருதத்வம் முக்கியமல்ல என்பதற்கு என்ன ப்ரமாணம். அது முக்கியம்தான் என்றால் மோக்ஷ ஸாதனம் தேவையில்லை. முக்கியமில்லை என்று ஊர்ஜிதமானால் மோக்ஷ ஸாதனம் தேவை.

பூர்வபக்ஷம் :- வைராக்கியம் போன்றவை தேவையில்லை. இவை இல்லாமலேயே கர்மாவினால் अपाम सोममृता अभूम என்றபடி அம்ருதத்வம் வரும். இங்கு கூறும் அம்ருதத்வம் உபசாரத்திற்காக கௌணம் என்பதோ, முக்கியமன்று என்பதற்கு ப்ரமாணம் இல்லையே!

ஸித்தாந்தம் :- तमेवं विद्वान् अमृतं इह भवति என்று ஞானத்தினால் மட்டுமே மோக்ஷமாகிற அம்ருதத்வம் என்பது ஊர்ஜிதமாகிறது. எனவே இந்த ஶ்ருதி நிரவகாஸமானதால் கர்மாவினால் முக்கிய அம்ருதத்வம் என்பதை இது பாதிக்கிறது. எனவே மோக்ஷத்திற்காக மோக்ஷசாதன அனுஷ்டானம் கட்டாயம் தேவை.

  

# 3.1.2 A कृतात्ययेऽनुशयवान्दृष्टस्मृतिभ्यां यथेतमनेवं च (4 सूत्राणि)

ஸந்தேஹம் :- ஸ்வர்கம் சென்று திரும்பிவரும் மனிதன் தன் பூர்வ கர்ம சேஷத்துடன் வருகிறானா? கர்மசேஷம் அற்றவனாகவா?

பூர்வபக்ஷம் :- யாகாதிகள் பண்ணி ஸ்வர்கம் போனவர்கள் புண்ணிய பயன் முடிந்ததும் திரும்பும்போது கர்மசேஷம் இருக்க முடியாது. अनुशय -என்ற வார்த்தைக்கு ''வினையை அனுஸரித்து போவதால்'' என்று பொருள். ஸ்வர்கத்திலிருந்து அவரோஹணம் கூறும் ச்ருதியில் यावत्संपातमुषित्वा என்பதாக தனது கர்மாக்கள் முழுவதும் தீர்ந்து, அதற்காக அங்கு வாழ்ந்துவிட்டபிறகு திரும்புகிறான் என கூறுகிறது. எனவே திரும்புகிறவனுக்கு கர்ம சேஷமாகிய அனுசயம் கிடையாது.

ஸித்தாந்தம் :- ஸ்வர்க்கத்திற்கான புண்ணியகர்மாவை முழுமையாக அனுபவித்து விடுவது வாஸ்தவம் . ஆனால் முன் பிறவிகளில் வேறு பல பல புண்ணிய பாபங்கள் சேர்த்து வைத்து (ஸஞ்சிதம்) மீதி இருக்கிறது அல்லவா? எந்த வினையும் மீதியில்லாமல் திரும்பினால் மறுபிறவி எடுத்தவுடன் வரும் இன்ப துன்பங்களுக்கு காரணம் இருக்காது என்பதால் சுகதுக்கம் வராமல் போய்விடும். ஒரு பிறவியில் செய்த எல்லா கர்மாக்களும் மற்றொரு அடுத்த பிறவியிலேயே பலன் கொடுத்து முழுவதுமாக தீர்ந்து விடும் என்பதாக (ஒரே பிறவிதான் = ऐकभविक) என்று கூறுவது தவறு. கர்மாக்கள் இந்திர பதவி தருவதாகலாம், சில பாபங்கள் பன்னி போன்ற மிருக பிறவிகளை தருவதாக இருக்கலாம் என்பதால் ஒரே பிறவியில் எவ்வாறு எல்லா

வினைகளின் பயனும் ஏற்பட முடியும்? ஆகவே ஸ்வர்கம் தரும் புண்ணிய கர்மா முழுமையாக தீர்ந்தாலும் மற்ற பாப கர்மாக்கள் இருந்தே தீரும். ஶ்ருதியிலும் ஸ்வர்கத்திலிருந்து திரும்புபவர்கள் தன்தன் முந்தைய எஞ்சிய கர்மாக்களுக்குத் தக்கவாறு ப்ராம்மணர், க்ஷத்திரியன் போன்ற மனித பிறவியையோ, நாய் முதலிய பாப பிறவியையோ அடைகிறார்கள் என்று உறுதியாக கூறுகிறது. ஆகையால் விண்ணிலிருந்து மண்ணுலகத்தில் பிறப்பவர்கள், இறங்கி வருபவர்கள் தன்தன் கர்மசேஷமாகிற अनुशय த்துடன் வருகிறார்கள்.

## 3.1.2 V कृतात्ययेऽनुशयवान्दृष्टस्मृतिभ्यां यथेतमनेवं च (4 सूत्राणि)

அத்வைத பூர்வபக்ஷம் ஸித்தாந்தம் அப்படியேதான் கூறப்படுகிறது- வித்தியாஸம் இல்லை.

## 3.1.8 D कृतात्ययेऽनुशयवान्दृष्टस्मृतिभ्यां यथेतमनेवं च (1 सूत्रम्)

மத்வ மதத்தில் இந்த அதிகரணம் மூன்றாக பிரிக்கப்பட்டு விவரிக்கப்படுகிறது. முதல் ஸூத்ரம் இரண்டாக பிரிந்து விளக்கப்படுகிறது. மற்ற மூன்றும் சேர்ந்து தனி அதிகரணம். ஆக 5 ஸூத்ரம், மூன்று அதிகரணங்கள் (1+1+3)

பூர்வபக்ஷம் :- கர்மாக்கள் பயனை (ஸ்வர்கம் முதலிய) அளிக்கும்போது முழுவினைகளும் சேர்த்தா? பிரித்து பிரித்தா? என்று விசாரித்து முழுமையாகவே பயனைத் தருவதானால் ஸ்வர்கம் போனவனுக்கு எல்லா வினைகளும் தீர்ந்து விடுமாதலால் மோக்ஷத்திற்காக ஸாதனங்கள் தேவையில்லை. கர்மாக்கள் பிரிந்து

  

பிரிந்து வெவ்வேறு பயன்களைத் தருவதானால் அதற்கு ஏற்ற ப்ரமாணம் இல்லை என்று பூர்வபக்ஷம். ஏனெனில் கர்மாக்களின் முழு நாசம்தானே மோக்ஷம் எனவே உபாயம் வேண்டாம்.

ஸித்தாந்தம் :- "ततः शेषेण इमं लोकमायाति" என்பதாக திரும்பிவருபவன் மீதியுள்ள கர்மாக்களுடன் திரும்புகிறான்- என்று ஶ்ருதி கூறுகிறது. மேலும் ஸ்ம்ருதியும் भुक्तशेषानुशयवान् என்று ஊர்ஜிதம் செய்கிறது. மேலும் திரும்பிய பிறகும் இந்த ஊரில் மறுபடி பல கர்மாக்கள் பண்ணுகிறான். எனவே நிஸ்சேஷ (மீதியில்லாத) கர்மாக்கள் வராது. எனவே மோக்ஷத்திற்காக வைராக்கியம் போன்ற ஸாதனங்கள் தேவைதான்.

## 3.1.9 D यथेतमनेवं च (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- ஸ்வர்கம் செல்பவன் போவதற்கு கூறிய வழியாகவே திரும்புகிறானா? வேறு மாறுதலான வழியாகவா? போகும் மார்கம் கூறியிருப்பது வருவதற்கும் சேர்த்தா? இல்லையா? கூறியபடியே வருவதாக புத்தியில் பதிந்து போன வழியாகவே வருவதில் க்லேசம் இல்லை. எனவே ஸ்வர்கம் போக கர்மாக்களில் /பயனில் வைராக்கியம் வராது. வேறு பழக்கமில்லா வழியாக வருவதானால் அந்தவழி பயங்கரமாக இருக்குமானால், ஸ்வர்கம் போய் வருவதில் வைராக்கியம் வரும். இந்நிலையில் பழகிய பழைய போன வழியேதான் திரும்புவான். பழகாத புது வழியில் வருவதற்கு ப்ரமாணம் இல்லை. மேலும் यथेतमागच्छति என்று வழி ஸமமே என்று ஶ்ருதி கூறுகிறது. எனவே போய் வருவதில் ஶ்ரமம் இல்லாததால் வைராக்கியம் வரவே முடியாது. மோக்ஷஸாதன அனுஷ்டானம் வேண்டாம்.

ஸித்தாந்தம் :- போகும்போது ஜீவன் பரதந்திரன். புத்தி முதலியன வேலை பண்ணும் நிலையில் இல்லாததால், அதே நினைவில் வருவது சுலபம் என்ற கட்சி தவறு. மேலும் ஶ்ருதியில்

புகையிலிருந்து மேகம் ஆகிறான் என்பது மட்டுமே போக வர ஸமானம். மற்றவை வேறு பழகாத வழியில்தான் என்று ஶ்ருதி கூறுகிறது. ஆகவே புதிய வழிகள் பரிசயமில்லாததால் பயந்து வைராக்கியம் வர வேண்டும். ஆகையால் மோக்ஷ ஸாதனம் தேவை.

## 3.1.10 D चरणादिति चेन्न तदुपलक्षणार्थेति कार्ष्णाजिनि: (3 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- போக்குவரத்து என்பது காம்யகர்மாவின் பயனா? ஆசாரத்தின் பயனா? "रमणीयचरणा:..." என்ற ஶ்ருதியில் சரண என்ற வார்த்தைக்கு கர்மா என்று பொருளா? ஆசாரம் என்று பொருளா? என்றால் ஶ்ருதியில் சரண பதம் மட்டும்தான் உள்ளதால் கர்மா கூறப்படவில்லை. சரணமும் கர்மாவும் ஒரு பொருள் கொண்ட சொற்கள் என கூறமுடியாது. ஏனெனில் யதாகாரி யதாசாரி என்று தனித்தனியாக கூறப்பட்டுள்ளது. சரண என்றால் லக்ஷணையினால் கர்மா பொருள் என்றால் சரண பதமே தேவையில்லை. யாகம் போன்ற கர்மாவினால் போனவர்கள் கர்மாவினால்தானே வரவேண்டும். எனவே ஸ்வர்க்கம் புண்ணிய கர்ம பலன்தான் , போவதும் வருவதும் கர்ம பலன்தான்.

ஸித்தாந்தம் :- इष्टापूर्तं मन्यमाना वरिष्ठम् என்று ஶ்ருதியிலும், त्रैविद्या मां सोमपा: पूतपापा: கீதையிலும் கமனத்தை (போவதை) புண்ணியப் பயனாகவே கூறியுள்ளது. யாகாதிகள் போக வர காரணமானாலும் ஆசாரத்துடன்தான் இருக்க வேண்டும் என்பதை ஸூசிப்பதற்காக ஶ்ருதியில் "रमणीयचरणा:" என்று கூறப்பட்டுள்ளது, வீண் அல்ல. மேலும் धर्मं कुरुत, धर्मं चरत என்று ஸமானமாக ப்ரயோகம் உள்ளது. எனவே காம்யகர்மாக்களில் நமக்கு வைராக்கியம் தேவை.

  

# 3.1.3 A अनिष्टादिकारिणामपि च श्रुतम्

## (10 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- சந்திரலோகம் போய் திரும்பி பிறப்பவர்கள் புண்ணியம் பண்ணியவர்கள் மட்டுமா? யாவருமா? என்ற விசாரிப்பில் யாவரும் சந்திரலோகம் போகின்றனர், பாபிகளும் கூட. ஏனெனில் ஐந்தாவது ஆஹூதியில் மனிதர்கள் பிறப்பார்கள் என்றும் "ये वै केच अस्माल्लोकात्प्रयन्ति चन्द्रमसमेव ते सर्वे गच्छन्ति" என்பதாக மண்ணில் இறப்பவர்கள் யாவரும் சந்திரனிடம் போகின்றனர் என்று ஃச்ருதி கூறுகின்றது. பாபிகளுக்கு அவ்வுலக சுகபோகம் கிடையாது என்றாலும் ஐந்தாவது ஆஹூதியில் மறுபிறவி ஏற்படுகிறது என்ற கணக்கிற்காக ஏறி இறங்குகிறார்கள்.

ஸித்தாந்தம்:- மேல் உலகிற்கு போகின்றவர்கள் இன்பத்தை அனுபவிப்பதற்காக தானே போகிறார்கள்? கணக்கில் ஐந்தாவது ஆஹூதிக்காக யாரும் போவதில்லை, பொருந்தவில்லை. ஆஹூதிகள் ஐந்து என்பது பொதுவானது. விதிவிலக்காக துரோணர் போன்றவர்களுக்கு பெண்ணிடம் ஏற்படும் ஆஹூதி கிடையாது. ஸீதை போன்றவருக்கு புருஷ ஆஹூதியும் இல்லையே! ஆகையால் सर्वे चान्द्रमसं गच्छन्ति என்ற இடத்தில் ஸர்வ என்பதற்கு புண்ணியம் பண்ணிய யாவரும் என்றுதான் பொருள். பாபம் செய்தவர்களுக்கு யம லோகம் போவது என்பதும் ஃச்ருதியிலேயே ஸ்பஷ்டமாக உள்ளது. वैवस्वतं संगमनं जनानाम् என்று. எனவே பாபிகள் சந்திரலோகம் போவதில்லை.

# 3.1.3 V अनिष्टादिकारिणामपि च श्रुतम्

(10 सूत्राणि)

விஶிஷ்டாத்வைதிகள் மதத்திலும் பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் ஸமமானதுதான். ஆனால் முறை வேறுபடுகிறது.

பூர்வபக்ஷம் :- "ये वै केच" என்ற ஶ்ருதியில் இறப்பவர்கள் யாவரும் (புண்ணியாத்மா, பாபாத்மா) சந்த்ரலோகம் போயாக வேண்டும். கடோபநிஷத்தில் பாபிகள் என்னிடம் வருகிறார்கள் - पुनःपुनर्वशं आपद्यते मे என்ற வாக்கியம் உள்ளதால் முதலில் பாபிகளுக்கு நரகானுபவம் பிறகு யமனின் அனுமதியினால் சந்த்ரலோகம் போவதும் உண்டு என்று கொள்ள வேண்டும்.

ஸித்தாந்தம்:- இந்த மதம் ஸரியல்ல. தேவயானம், பித்ருயானம் என்ற தக்ஷிண உத்திர மார்கங்களுக்கு உபாஸனை, கர்மா செய்தவர்கள்தான் அதிகாரி என்று ஶாஸ்த்ரம் நிர்ணயித்துள்ளது. புண்ணிய கர்மா செய்தவர்கள்தான் சந்த்ரலோகம் போக முடியும். பாபிகளுக்கு போக இயலாது. மற்ற ஸித்தாந்த யுக்திகள் அத்வைதிகள் போலவே.

இந்த ஒரே அதிகரணமானது மத்வமதத்தில் ஐந்து அதிகரணங்களாக 3.1.11-3.1.15 என்பதாக கணக்கிடப்படுகின்றது. (3+1+1+1+4)

# 3.1.11 D अनिष्टादिकारिणामपि च श्रुतम्

(3 सूत्राणि)

अथ பதத்தினால் கூறிய வைராக்கியம் காம்யமான புண்ணிய கர்மாக்களில் மட்டுமா? அல்லது பாப கர்மாக்களிலுமா? விண்ணுலகம் போய் திரும்பும் இந்த கஷ்டம் புண்ணியத்திற்கு

  

மட்டுமா? பாபிகளுக்கும் உண்டா? போக்குவரத்து என்பது ப்ரத்யவாய பயம் (குற்ற செயலில் பயம்) பயனைக்கருதுவது இவைகளில் ஏற்படுகிறதா? கர்மாவினாலா? தவறில் பயமற்று பலகாமனை இல்லாதவர்களுக்கும் சந்த்ரலோக கமனம் உண்டா? புண்ணிய கர்மவான்களுக்கு மட்டுமா? என்றெல்லாம் விசாரிக்கப்-படுகிறது.

பூர்வபக்ஷம்:- புண்ணியவான்களுக்கு மட்டுமே போக்குவரத்து துக்கம் பாபிகளுக்கு கிடையாது. ஏனெனில் பின் விளைவில் பயமற்று இவர்கள் இருக்கிறார்கள். “பயப்படுபவன்தான் மரத்திலிருந்து விழுவான்” என்று பழமொழி உள்ளது. மேலும் பாபிகளுக்கு பின்னால் வரும் பயனில் காமனை (ஆசை) இல்லை. எனவே பயனில் ஆசையுள்ள புண்ணியவான்களுக்கு மட்டுமே போக்கு வரத்து உண்டு. எனவேதான் "स कामभिर्जायते तत्र तत्र" என்று கடோபநிஷத்தில் ஆசை உடையவர்கள்தான் மறுபிறவிக்கு திரும்புவது கூறப்படுகிறது. பாபிகளுக்கு வைராக்கியம் தேவையில்லை.

ஸித்தாந்தம் :- तद्य इह शुभकृतो ये चाशुभकृतः ते शुभमनुभूय आवर्तन्ते (भाल्लवेय) புண்ணியவான்களை போலவே பாபிகளுக்கும் போய் திரும்புவது கூறப்பட்டுள்ளது. ஆனால் गच्छन्ति पापिनः என்றதான ஸ்ம்ருதியில் புண்ணியாத்மாவைத் தவிர மற்றவர்களுக்கு நித்ய நரகம் போன்ற பெரும் கெடுதல் கூறியிருக்கிறது. எனவே பகவானை புரிந்து கொள்ளாத யாவருக்கும் போக்கு வரத்து உண்டானதால் யாவருக்கும் வைராக்கியம் தேவை.

## 3.1.12 D अपि च सप्त (1 सूत्रम्)

**பூர்வபக்ஷம்:-** பகவத் த்வேஷம் போன்றவைகளில் வைராக்கியம் தேவையா? இல்லையா? பகவத்த்வேஷத்தால் வரும் நரகம் புனராவ்ருத்தி உடையதா இல்லையா? அத்தகைய நரகம் ஒன்றா பலவா? என்று ஸந்தேஹங்கள்விசாரிக்கப்படுகின்றன. நரகங்கள் வெவ்வேறு உள்ளன என்பதில் ப்ரமாணம் இல்லாததால் பகவத் த்வேஷியின் ஒரு நரகமானது பதினான்கு இந்திரர்கள் காலம் தொடரும் என்று கூறியுள்ளதால், அது முடிந்து திரும்பி விடலாம் என்பதால் கடவுள் த்வேஷத்தில் வைராக்கியம் தேவையில்லை.

**ஸித்தாந்தம்:-** "रौरवोऽथ महांश्चैव" (भारत) அநித்யமான நரகங்களையும், நித்தியமான இரண்டு நரகங்களையும் சொல்லியிருப்பதால் பூர்வபக்ஷத்தில் கூறியது அநித்திய நரக விஷயம். எனவே பகவத் த்வேஷியின் நரகம் முடிவற்றது. அதில் விசேஷ வைராக்கியம் தேவை.

## 3.1.13 D तत्रापि च तद्व्यापारादविरोध: (1 सूत्रम्)

பாபங்களில் வைராக்கியம் வேண்டுமா வேண்டாமா? பாப பயனான நரகம் துக்கரூபமானதா? துக்கமற்றதா? நரகம் துக்கரூபமானால் அதில் தூண்டிவிடும் ஈசனுக்கும் துக்கத்தின் போகம் வருமா? வராதா? போகம் என்பது துன்பத்தின் அனுபவமா? அல்லது துக்கத்தினால் நீசத்தன்மை மட்டுமா? என்று தொடர் ஸந்தேஹம்.

**பூர்வபக்ஷம் :-** துக்க போகம் என்பது துன்பத்தை அனுபவிப்பதுதான். நரக வாசிகள் துன்பத்தை அனுபவிப்பார்கள். ஆனால் ஈஶ்வரனுக்கும் துக்க சாக்ஷியாக இருப்பதான துக்க போகம் வரும் என்பதால் நரகம் துக்க ரூபம் அல்ல. இதை

  

தவிர்ப்பதற்காக ஈஶன் நரகத்திற்கு போக தூண்டுபவன் அல்ல என்று சொன்னால் ஈஶன் ஸர்வப்ரேரகன் என்ற ஸித்தாந்தம் தவறாக ஆகிவிடும். எனவே வைராக்கியம் வேண்டாம்.

ஸித்தாந்தம் :- துக்கத்தின் மேல்கீழ்தன்மைதான் துக்கத்தின் போகம் என்று (பாகவத தந்த்ரம்) கூறுவதால் கீழ்தன்மை போகம் என்பதற்கு பொருள் என்பதால் அதில் பிரேரணை பண்ணும் பகவானுக்கு, அசிந்த்யஶக்தி உடையதால், துக்கம் வராது. எனவே துக்கமான நரகம், அதன் காரணமான பாபத்தில் வைராக்கியம் கட்டாயம் தேவை.

## 3.1.14 D विद्याकर्मणोरिति तु प्रकृतत्वात्

(1 सूत्रम्)

பூர்வபக்ஷம்:- தேவயானம் (உத்தராயண மார்க்கம்) பித்ருயானம் தக்ஷிணாயனமார்கத்திலும் ஸ்வர்காதி போய் வருபவனுக்கு போவது வருவதில் ஸ்வதந்திரம் உண்டா இல்லையா? இவை இரண்டில் செல்லாதவன் அல்பமான யமலோக மார்கத்தில் போய் திண்டாடுகிறான் என்கிற ஶ்ருதியின் மூலம் ஜீவன் தன் இச்சைப்படி ஸ்வதந்திரமாக நல்வழியை தேர்ந்தெடுக்கும் திறமை உள்ளவன். எனவே வைராக்யத்திற்கு கஷ்டப்பட்டு முயல வேண்டாம்.

ஸித்தாந்தம் :- இது தவறு. ஶ்ருதியில் ஜீவனுக்கு தேவையான பித்ருயானங்களில் செல்லும் ஸ்வதந்திரம் கூறப்படவில்லை. ஆனால் அந்த வழிகளிலும் போவதற்காக உபாஸனையும் கர்மாவுமா அல்லது வெறும் காம்ய கர்மா மட்டுமா என்றுதான் ஜீவனுக்கு தேர்ந்தெடுக்கும் ஸ்வாதந்த்ரியம் அதுவும் கூட அவனருளால்தான். எனவே ஜீவன் தன் வாழ்நாளில் காம்ய கர்மாக்களின் பயனை நன்கு ஆராய்ந்து அதனின்று வைராக்கியம்

பெற்றால்தான் மோக்ஷம் பெற முடியும். ஆகையால் வைராக்கியம் கட்டாயம் பெறுவதற்கு தீவிர முயற்சி தேவை.

## 3.1.15 D न तृतीये तथोपलब्धे: (4 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- தக்ஷிண மார்க்கம் உத்திர மார்க்கம் இரண்டிலும் செல்ல தகுதியற்றவர்கள் தன் விருப்பப்படி எல்லாம் துணிச்சலாக பாபங்களை பண்ணியவர்கள், பகவானை த்வேஷித்தவர்கள் போன்றவர்கள் வெவ்வேறு கஷ்டமான யோனிகளை (ஜன்மாக்களை) அடைகின்றார்கள் என்று மூன்று விதமான -i) பசு, பக்ஷிப் பிறவி, ii) நரகம், iii) தாமிஸ்ரம் என்பதாக- வகுக்கப்பட்டிருப்பினும் கூட, அந்த இடங்களில் சிறிது இன்பம் (சுகம்) கிடைக்கும் என்பதால் தமஸ் கதியாயிருந்தாலும் வைராக்கியம் வர தேவையில்லை.

ஸித்தாந்தம் :- பகவத் த்வேஷிக்கு ஏற்படும் தாமிஸ்ரம் (தமஸ்) நரகத்திலும் இன்பம் சிறிது இருந்தாக வேண்டும் என்று சொல்லும் கற்பனை அடிப்படையற்றது. ஸ்ருதி, ஸ்ம்ருதிகளினால் இதற்கு बाध: மறுப்பு கூறப்பட்டுள்ளது. பகவான் தன்னை விடாது த்வேஷிப்பவர்களுக்கு சுகத்தை எவ்வாறு தர முடியும், புண்ணிய வாசனை கூட இல்லையே? எனவே மிக மோஸமான நிலைகள் வராமல் இருக்க, தற்கால சுகம் கருதி வேண்டாத கார்யங்களில் ஈடுபடாமல் இருக்க வைராக்கியம் தேவை.

## 3.1.4 A साभाव्यापत्तिरुपपत्ते: (1 सूत्रम्)

ஸந்தேஹம் :- ஸ்வர்கத்திலிருந்து திரும்பும் ஜீவனின் வழியை கூறுமிடத்தில் अथैतमेवध्वानं पुनर्निवर्तन्ते यथेतमाकाशमाकाशाद्वायुम् भूत्वा धूमो भवति.. என்று ஆகாயம், வாயு, புகை, மேகம் (நீரையுடையது), வர்ஷிக்கும் முகில், முகிலாகி மழையாகி கொட்டுகிறது'' என்று வரிசையாக கூறப்பட்டுள்ள விஷயத்தில்

அந்தந்த ஸ்வரூபமாக ஜீவன் மாறுகிறானா? அல்லது அது போல் இருந்து அதில் ஒட்டிக்கொண்டு வருகிறானா?

பூர்வபக்ஷம் :- வாயுர்பூத்வா, அப்ரம்பூத்வா என்பதாக அந்தந்த பொருளாக மாறுவதாக சொற்கள் பூத்வா என்று கூறப்படுவதால் அந்தந்த பொருளின் தன்மையை பெறுகிறான்.

ஸித்தாந்தம் :- ஒரு பொருள், வேறு ஒரு பொருளாக ஆவது பொருந்தாது. எனவே ஆகாயம் முதலியவற்றை அடைந்து திரும்பும் ஜீவனுக்கும் அந்தந்தப்பொருளுக்கும் தொடர்பு மட்டும்தான் உண்டு.

## 3.1.4 V तत् स्वाभाव्यापत्तिरुपपत्ते: (1 सूत्रम्)

விஶிஷ்டாத்வைதத்திலும் பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் ஸமமே. ஸித்தாந்த முறை சற்று வேறுபடுகிறது. வாயுர்பூத்வா என்று கூறுமிடத்தில் முன்னமே வாயு சரீரம் உடைய ஜீவனுடன், திரும்பி வரும் மனிதன் அவனாகவே ஆவது அஸம்பாவிதம். எனவே ஆகாயம், வாயு போல் சுத்தமாக கலந்து தனிப்பட்டு தெரியாமல் இருந்து வரிசையாய் திரும்புகிறான்.

மாத்வமதத்தில் இது 16வது அதிகரணம் ஆகும். ஒரு ஸூத்ரம் கொண்டது.

## 3.1.16 D तत्स्वाभाव्यापत्तिरुपपत्ते: (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- திரும்பிவரும் ஜீவனுக்கு ஆகாயம், வாயு , மேகம் போன்றவைகளின் தேவதைகளின் தன்மை அல்லது பதவி ஏற்படுவதாக வாயுர்பூத்வா என்று கூறப்படுவதால் காம்ய கர்மாக்களில் துன்பம் இல்லாததால் (திரும்பும்போதும் சுகம்தான்)

காம்யகர்மங்களில் வைராக்கியம் வர தேவையில்லை. திரும்புகையிலும் தேவதா post (பதவி) கிடைக்கிறதே!

ஸித்தாந்தம்:- இது பொருந்தாது. மற்றவனின் தன்மையை வேறு ஒருவன் பெற முடியாது. அவனது பதவியையும் இறங்கும் ஜீவன் பெற முடியாது. அந்த பதவிக்கான கர்மா இவனிடம் ஏது? எனவே मेघोभवति वायुर्भूत्वा என்ற வார்த்தைகள் கூடிய வாக்யத்தில் அதுவாகவே ஆகிறான் என்ற முக்யார்த்தத்தை தள்ளி அததனுடைய ஒற்றுமை (ஸாத்ருஶ்யம்) பெற்று திரும்புகிறான் என்றுதான் பொருள். ஆகவே பெரிய சுகத்திற்கு ஸாதனமாக காம்ய கர்மங்களில் வைராக்கியம் கட்டாயம் தேவை/ஏற்பட முடியும்.

## 3.1.5 A नातिचिरेण विशेषात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- ஸ்வர்கத்திலிருந்து இறங்கி வரும் ஜீவன் ஆகாயம், வாயு, மேகம், ஜலம் - என்றெல்லாவற்றிலும் கலந்து (வழியாக) வந்து உணவு தான்யங்களில் ஒட்டிக்கொண்டு புருஷனால் உண்ணப்பட்டு புருஷகர்பம், பிறகு ஸ்த்ரீகர்பம் சென்று பிறக்கிறான்- என்று பஞ்சாக்னி வித்யை கூறப்படும் திரும்பும் பயணத்தில் உணவு தான்யங்களில் ஒட்டிக்கொள்வதற்கு முன்பு ஆகாயம் முதலியவைகளுடன் சேர்ந்து தாமதமாக இறங்குவானா? வேகமாக இறங்குவானா? என்ற உறுதிக்கு ப்ரமாணம் இல்லாததால் எப்படியும் இருக்கலாம்.

ஸித்தாந்தம் :- நெல் முதலிய தான்யத்துடன் கலந்து வருகிறான் என்று கூறும் இடத்தில் अतो वै खलु दुनिष्प्रपतरम् என்பதாக இனிமேல் பயணம் சுலபமல்ல/தாமதமாகும் என்று விஶேஷமாக கூறப்படுவதால் இதற்கு முன்னால் நடந்த பயணம் வேகமானது என்று உணர வேண்டும்.

  

## 3.1.5 V नातिचिरेण विशेषात् (1 सूत्रम्)

விஶிஷ்டாத்வைத மதரீதியாக இந்த அதிகரண பூர்வபக்ஷ ஸித்தாந்தங்கள் அத்வைதத்திற்கு ஸமமானதே. தான்யத்தில் சேருவதற்கு முன்பு சிறிதுதான் தாமதம் பின்னால் ரொம்ப தாமதம் என்று கூறியிருப்பதால் என்கிற மாற்றம்.

## 3.1.17 D नातिचिरेण विशेषात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- ஸ்வர்கம் சென்று திரும்பும் ஜீவன் ஆகாயம், வாயு, மேகம் போன்ற தேவதைகளுடன் கலந்து இன்பத்தை தன்னிஷ்டப்படி சிறுகாலம் அனுபவிக்க முடியும் என்பதாக वायुर्भूत्वा என்ற ஶ்ருதியின்படி தெரிகிறது. எனவே வெகுகாலம் மற்ற தேவதைகளோடு கலந்து மகத்தான சுகம் கிடைப்பதால் காம்ய கர்மங்களில் வைராக்கியம் வரவே வராது / முடியாது. இந்த நாளுக்குள் மனித உலகம் வந்தாக வேண்டும் என்று காலக்கெடு இல்லாததால் தன்னிஷ்டப்படி தேவதைகளின் இன்பம் இவனுக்கு திரும்பும்போதும் கிடைப்பதால் வைராக்கியம் பெறுவது வீண். கல்பகாலம் கூட இன்புற்ற பிறகு திரும்பலாமே!

ஸித்தாந்தம்:- இது தவறு. இறங்கும் ஜீவன் தன் பழைய புண்ணிய பாபங்களை பெறுவதற்காக விரைவாகத்தான் திரும்புவதாக ஶ்ருதி, ஸ்ம்ருதி கூறுகிறது "अभ्याशो ह" தாமதமின்றி வருவான் என்று ஶ்ருதியும், स्वर्गाल्लोकादवाक्प्राप्तो वत्सरात्पूर्वमेव तु என்று ஸ்ம்ருதியிலும் ஒரு வருஷத்திற்குள் திரும்ப பிறக்கிறான் என்று கூறுகிறது. இவனுக்கு விருப்பமானாலும் கர்ம, ஈஶ்வர பரதந்திரனான ஜீவன் ஸ்வதந்திரமாக நினைத்தப்படி இன்புற முடியாது. தாமதமின்றி

இறங்கியே ஆகவேண்டும். எனவே காம்ய கர்மங்களில் வைராக்கியம் ஏற்படுவது தீர்மானம்.

## 3.1.6 A अन्याधिष्ठितेषु पूर्ववदभिलापात् (4 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- ஸ்வர்கத்திலிருந்து இறங்கி மறுபிறவிக்கு இங்கு வரும் ஜீவன் உணவு தான்யங்களில் வந்து சேருகிறான் என்ற இடத்தில் நெல், உளுந்து, பயறு போன்ற பயிராகவே பிறந்து வருகிறானா? அல்லது தான்யங்களில் தொடர்பு மட்டும் அடைகிறானா என்று விசாரிக்கும்போது - நெல் போன்று தான்யமாகவேதான் பிறக்கிறான் என்றுதான் கூறவேண்டும். ஏனெனில் व्रीहियवा ओषधिवनस्पतयस्तिलमाषा इति जायन्ते என்று ஸ்பஷ்டமாக ஜன்மா கூறப்படுகிறது. புண்ணியம் பண்ணியவனுக்கு தாவரப்பிறவி எப்படி பொருந்தும் என்று கேட்கவேண்டாம். புண்ணியத்துடன் பசு ஹிம்ஸை என்ற பாபம் சற்று சேருகிறதே!

ஸித்தாந்தம் :- இவ்வாறு கூறுவது மிக மிகத் தவறு. வேதம் "செய்" என்று ஆணையிட்ட விஷயத்தில் அதர்மம் என்ற பேச்சுக்கே இடமில்லையே! வேதம்தானே நமக்கு தர்மம் எது அதர்மம் எது என்று உணர்த்துகிறது. எனவே "जायन्ते" என்பதற்கு கௌணமாக சேர்ந்து சிறிது நேரம் / பெருநேரம் வசிக்கிறான் என்றே பொருள்.

  

## 3.1.6 V अन्याधिष्ठितेषु पूर्ववदभिलापात्

(4 सूत्राणि)

இந்த அதிகரணத்திலும் அத்வைதிகளின் கூற்றுப்படியேதான் பூர்வபக்ஷமும் ஸித்தாந்தமும். முழு ஒற்றுமையாய் அமைந்துள்ளது.

## 3.1.18 D अन्याधिष्ठितेषु पूर्ववदभिलापात्

(2 सूत्रे)

இந்த அதிகரணத்தில் த்வைதமதத்திலும் பூர்வபக்ஷ ஸித்தாந்தங்கள் ஸமமாக உள்ளது.

## 3.1.19 D रेत:सिग्योगोऽथ (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- ஸ்வர்கத்திலிருந்து திரும்புபவன் மறுபிறவிக்காக இங்கு அன்னம் வழியாக நேராக தாயாரின் வயிற்றில் போகிறான். தந்தையின் தொடர்பு தேவையில்லை. தந்தையின் வயிற்றில் நுழைய தேவையில்லை.

ஸித்தாந்தம் :- இது தவறு. மறு உடல் உருவாவதற்கு தந்தையின் வீரியமும் தேவை. எனவே கடவுளின் விருப்பப்படி ஶ்ருதி கூறியபடி தந்தையின் வழியாக தாயின் கர்பத்தில் நுழைகிறான்.

## 3.1.20 D योने: शरीरम् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம்:- தந்தை, பிறகு தாய் இருவரின் வயிற்றிலும் நுழைவது கூறப்பட்டுள்ளது. இது வைராக்கியம் வருவதற்காக. இந்த வரிசை தேவையில்லை. மாந்தாதாவின் பிறப்பு தாயாரிடம் செல்லாமலேயே

நடந்தது. த்ருபதன் தந்தை ஸம்பந்தமில்லாமலேயே பிறந்தான். எனவே இரண்டு கர்பவாசம் தேவையில்லை.

ஸித்தாந்தம்:- மேலே கூறிய உதாகரணம் மிக அதிசயமான விதிவிலக்குதான். பொதுவாக யாவருக்கும் தந்தை கர்பம் இரண்டு மாதம், தாய் கர்பம் பத்து மாதம் இருப்பதாக ஶ்ருதி ஸ்ம்ருதியில் உள்ளதால் பஞ்சாக்னி ஆஹுதி பொதுவான முறையில் மிகவும் தேவை.



# இரண்டாம் பாதம்

## 3.2.1 A संध्ये सृष्टिराह हि (6 सूत्राणि)

பூர்வபக்ஷம்:- கனவில் தேர், குதிரைகள், வழிகள் போன்றவை காணப்படுகின்றன. அவை அந்த நேரத்தில் படைக்கப்-படுகின்றன. எனவே விழிப்பில் தோன்றும் ப்ரபஞ்சம் போல் கனவும் உண்மையே. स हि कर्ता என்று வேதமே கடவுள் படைப்பதாக கூறுகிறதே.

ஸித்தாந்தம்:- கனவு பொருட்கள் பொய்யானவை. தேவையான இடம், காலம், பொருள் யாவும் இல்லாமலும், இரவும் பகலும், பிறப்பும் இறப்பும் என்றெல்லாம் மாறி மாறி தோன்றுகின்றன. தன் உடலினுள் நாடிகளில் குறுகிய இடங்களில் குதிரை, யானை, மனிதர்கள் இருக்க முடியுமா? மேலும் க்ஷணத்தில் குதிரையாக தெரிந்தது யானையாகிறது. பொருட்களின் படைப்புக்கு உரிய மூலப்பொருள்களும் இல்லை. மேலும் விழித்தவுடன் எதுவும் தெரிவதில்லை, பாதிக்கப்படுகின்றன. விழிப்பில் உள்ள பொருட்களின் வடிவஒற்றுமை வெறும் கற்பனையே. स हि कर्ता என்பது ஜீவனைத்தான் குறிக்கிறது. தனது பழைய ஸம்ஸ்கார வசத்தால் இவன்தான் படைத்துப்-பார்க்கிறான். வேதம் இவைகள் யாவும் இல்லை என்றும் படைக்கிறான் என்றும் न तत्र रथा: என்று தெளிவாக கூறுகிறது. எனவே கனவுப்பொருட்கள் பொய்யானவையே.

## 3.2.1 V संध्ये सृष्टिराह हि (6 सूत्राणि)

பூர்வபக்ஷம்:- கனவு நிலையில் தோன்றும் பொருட்கள் தேர், குதிரை, வழிகள் - யாவும் ஜீவனால் படைக்கப்படுகின்றனவா? ஈசனாலா? ஜீவனுக்கு ஸ்வரூபம் இயல்பாக ஸத்யஸங்கல்பம்

உடையதுதானே! அந்த தன்மை விழிப்பு நிலையில் மறைந்திருந்தாலும் கனவில் வெளிப்படுவதால் உடனடியாக தெரியும் பொழுதில் படைக்க முடியும். மேலும் ஜீவன் இந்நிலையில் "उभे स्थाने पश्यति इदं च परलोक स्थानं च" என்று கூறிவிட்டு கனவைப் பார்ப்பவனையே स हि कर्ता என்பதாக கூறுவதால் கனவு ஜீவனுடைய படைப்பு.

ஸித்தாந்தம்:- ஜீவனுக்கு ஸ்வபாவமாக ஸத்யஸங்கல்பத்வம் இருப்பினும் அது ஸம்ஸார தசையில் வெளிப்படாது. எனவே எப்போதும் தடையின்றி நினைத்ததை செய்யும், படைக்கும், அபாரஶக்தி வாய்ந்த பகவான்தான், கனவில் சுகதுக்கங்களை அனுபவிப்பதற்காக கனவில் பொருட்களை நொடியில் படைத்து அதன் மூலம் ஜீவனுக்கு இன்ப துன்பம் ஏற்படுத்துகிறார். ஒன்றுமில்லாத இடத்தில் திடீரென எவ்வாறு யாவும் படைக்க முடியும் என்பதை விளக்குவதற்காக स हि कर्ता என்று கூறும் பதிலில் ஸ: என்ற சொல் ப்ரசித்தமான ஸர்வசக்தனான பகவானையே குறிக்கும்.

## 3.2.1 D संध्ये सृष्टिराह हि (4 सूत्राणि)

மத்வமதத்தில் இந்த அதிகரணம் மூன்று அதிகரணங்களாக கணக்கிடப்படுகிறது. (4+1+1=6 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- अथातो ब्रह्मजिज्ञासा என்ற ஸூத்ரத்தில் अथ என்ற வார்த்தையால் ஸூசித்தனான அதிகாரி விஶேஷமான ஹரிபக்தி செய்ய வேண்டுமா? வேண்டாமா? கனவுப்பொருட்கள் ஈஶனின் அதீனமா? இல்லையா? இவை (கனவுப்பொருட்கள்) உண்மையா பொய்யா? உண்மை என்பதற்கு சாதகமான ப்ரமாணம் இல்லாததோடு, பாதகம் இருக்கிறதா? அல்லது நேர் மாறுதலாக

ஸத்யத்வத்தில் ப்ரமாணம் உண்டா? என்று இவ்வாறு ஆலோசனையின் பிறகு-

கனவுப்பொருட்கள் ஈஶனின் ஆதீனம் அல்ல, அவைகள் அஸத்தானதால். ஈஶாதீனமாயின் யோகக்ஷேமத்திற்கு பயன்பட வேண்டுமே. கனவுப்பொருள் உண்மை என்பதற்கு ப்ரமாணம் இல்லை. மேலும் படைக்கும் கர்த்தா, மூலப்பொருள் யாவும் இந்நிலையில் இல்லை. காரணம் இல்லாமலே தோன்றினால் கிளிஞ்சல் வெள்ளி போல் அஸத்வம் தானே வரும்.

ஸித்தாந்தம் :- "यदा कर्मसु काम्येषु स्त्रियं स्वप्नेऽभिपश्यति" என்ற வாக்யத்தில் கனவில் கூறும் பொருள்களில் சுமங்கலீதர்சனம் ஏற்பட்டால் பார்ப்பவனுக்கு விரைவில் நன்மை, வெற்றி ஸூசிக்கப்படுகிறது என்று ஸ்பஷ்டமாக கூறப்பட்டுள்ளது. எனவே கனவுப்பொருட்கள் ஶகுனஶாஸ்த்ர பொருட்களான கருடதரிசனம், போன்றவை போல் உண்மையே. உடனே தோன்றி மறைவதால் கனவுப்பொருள் பிறகு காணப்படுவதில்லை. ஜீவனின் ஸூக்ஷ்ம, மனோ வாஸனைகளைக் கொண்டு கடவுள் க்ஷணத்தில் கனவைப் படைக்கிறான். எனினும் விழிப்புப்பொருளின் தன்மை இல்லாததால் விழித்தவுடன் மறைவதும் பொருந்தும். எனவே கனவும் பொருட்களும் உண்மையே. இவைகளைப் படைத்து, அழிக்கும் அபரிமிதஶக்தி நாராயணனுக்கு உண்டு. ஆகையால் கனவும் ஈஶாதீனம்தான்.

## 3.2.2 D पराभिध्यानात्तु तिरोहितं ततो ह्यस्य बन्धविपर्ययौ (1 सूत्रम्)

अथ பதத்தினால் ஸூசித்த பக்தி தேவையா? இல்லையா? கனவு தோன்றுவதும் மறைவதும் கூட ஈசாதீனமா? இல்லையா? வெளிப்பொருள் தெரியாதது, தெரிவது இரண்டும் கனவின் தோற்றம் மறைவிற்கு

ஸ்வதந்திர காரணமா? நிமித்தம் மட்டுமா? என்பதாக விசாரத்தொடர் வருகிறது.

பூர்வபக்ஷம் :- வெளிப்பொருள்களை காண்கிற, 'தான்' தெரியாத -தால் கனவின் தோற்றம் ஏற்படுகிறது; 'தான்' தெரிந்துவிட்டால் மறைந்துவிடுகிறது என்று நமது அனுபவம் இருப்பதால் கடவுளுக்கு இங்கு என்ன தேவை? அறிவும் அறிவின்மையும் பொருள்களை தெரிவிக்கவும் மறைக்கவும் மற்றொன்றை எதிர்பார்ப்பது எப்படி?

ஸித்தாந்தம் :- உலக பந்தம், மோக்ஷம் இரண்டும் ஈஶனின் அஞ்ஞானத்தினாலும், ஞானத்தினாலும் என்று இருந்தாலும் பந்த மோக்ஷங்கள் கடவுளினால்தான் வருகின்றன, ஞானமும், அஞ்ஞானமும் ஜடமானதால், கடவுளின் அதீனம்தான். बन्धको भवपाशेन भव पाशाच्चमोक्षक: என்று வசனம் உள்ளது. ஞான அஞ்ஞானங்கள் நிமித்தம் மட்டுமேதான்.

## 3.2.3 D देहयोगाद्वासोऽपि (1 सूत्रम्)

கனவு என்பது பொய்யானது என்று ஆனாலும் கூட விழிப்பு நிலை जाग्रदवस्था பலருடைய ஆக்ஷேபணை என்ற பாதகம் (बाधकाभावात्) இல்லாததால் நிஜம்தான். ஒரு சிலருக்கு தெரிந்தாலும் அது नाभाव उपलब्धे: = வெளிப்பொருள் நிராகரிக்க முடியாதது, கண்ணுக்கு தெரிகிறது என்பதால் वैधर्म्याच्चन स्वप्नादिवत् கனவைக்காட்டிலும் வேறுபாடு அதிகம் உள்ளதால் கனவை உதாரணம் காட்டி பொய்த்தன்மை கூற முடியாது- என்று ஸூத்ரமுள்ளதால். இங்கு பகவானின் அதீனம்தான் விழிப்பு நிலையும் என்பதுதான் விசாரிக்கப்படுகிறது.

பூர்வபக்ஷம்:- சரீரத்தில், தான் என்று அபிமானத்துடன் கூடிய விழிப்பு நிலை பகல் போன்ற காலத்தின் அதீனம்.

ஸித்தாந்தம் :- காலமும் ஜடம், அஸ்வதந்திரம் என்பதால் பூர்வபக்ஷம் ஸரியல்ல. எனவே காலம் என்பது நிமித்த-மாத்திரம்தான். மேலும் स एव जागरिते स्थापयति என்று ஈசாதீனத்வம் ஶ்ருதியில் கூறப்படுகிறது. ஆகையால் ஜாக்ரத் நிலையும் ஈசாதீனம். எனவே பகவத்பக்தி மிகத்தேவை.

## 3.2.2 A तदभावो नाडीषु तत् श्रुतेरात्मनि च (2 सूत्रे)

தூக்கநிலை பற்றி விசாரிக்கப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- 1. நாடிகளில் அப்போது ஒடுங்குகிறான் என்றும் 2. நாடிகளின் வழியாக புரீதத் என்ற இடத்தில் படுக்கிறான் என்றும் 3. இவன் ஹ்ருதயத்தின் நடுவே உள்ள ஆகாசத்தில் = ப்ரஹ்மத்தில் படுக்கிறான் என்றும் 1. आसु तदा नाडीषु सृप्तो भवति 2. ताभिः प्रत्यवसृप्य पुरीतति शेते 3. य एषो अन्तर्हृदय आकाशः तस्मिन् शेते - என்பதாக கூறப்பட்டுள்ளது. எனவே தூக்கத்தின் பயன் அல்லது தூக்கம் என்ற பயன் ஒன்றானதால் "பலன் ஒன்றானால் ஸாதனம் ஒன்றுதான், choiceல் மாறி மாறி வரும்" என்ற ந்யாயத்தினால் இங்கும், சில நேரம் நாடிகளிலும், சில நேரம் புரீதத்திலும், சில நேரம் ப்ரஹ்மத்திலும் உறங்குகிறான்.

ஸித்தாந்தம்:- ஒரே பயன் என்பது ஸரியல்ல. தனித்தனிப் பயன்கள் கூற முடியும். புலன்கள் வழியே வெளியே ஸஞ்சரிக்கும் ஜீவனுக்கு ப்ரஹ்மத்தை (ஹ்ருதயாகாசத்தை) அடைவதற்கு நாடிகள்தான் வழியாகப் பயன்படுகின்றன. இதயத்தை சுற்றி

உள்ள புரீதத் என்பது மறைவாகப் பயன்படுகிறது (room போல்). ப்ரஹ்மம் என்பது கட்டில்போல் தூங்குவதற்கு ஆதாரம். எனவே மூன்று சேர்ந்து தூக்கத்திற்கு ஸமுச்சயம்தான். இங்கு ஜீவனுக்கு தூக்க நிலையில் ப்ரஹ்மம் ஆதாரமாக தனியாக எப்படி ஆகும் என்றால் ஜலம் நிரம்பிய குடத்தை, குளத்தினுள் அமுக்கினால் குடஜலம் தனியாகவும் அதன் ஆதாரம் குளஜலம் என்றும் எப்படி தெரியவில்லையோ, அதேபோல் அஞ்ஞானஸஹிதமாய் ஜீவன் ப்ரஹ்மத்தினில் கலந்துவிட்டதால் ஆதாரமாய் தெரியவில்லை. எனவேதான் மற்றொரு ஶ்ருதியில் "सता सोम्य तदा संपन्नो भवति स्वमपीतो भवति" - தூக்கத்தில் ப்ரஹ்மத்துடன் லயித்து விடுவதால்தான் 'தன்னில் மறைதல்' என்ற பொருள் படும்படியாக "स्वपिति" என்ற பெயர் வந்துள்ளது என்று கூறப்பட்டுள்ளது. பூர்வபக்ஷத்தில் கூறியபடி choice (இதுவோ, அதுவோ) என்று ஏற்றால் மீமாம்ஸையில் கூறியபடி எட்டு குற்றங்கள் வரும். (இதன் விளக்கம் சற்று கடினம் என்பதால் விவரிக்கவில்லை). எனவே ஸ்தானங்கள் சேர்ந்துதான் அமைகின்றன.

## 3.2.2 V तदभावो नाडीषु तत् श्रुतेरात्मनि च (2 सूत्रे)

விஶிஷ்டாத்வைதத்தில் இந்த அதிகரணத்தில் பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் இரண்டும் அத்வைதத்திற்கு ஸமமே. ஸித்தாந்தத்தில் மட்டும் முறை சற்று வேறுபடுகிறது. - இதுவோ அதுவோ என்று choice கொடுத்தால் கூறப்பட்டுள்ள ஸ்தானத்தன்மை (மூன்றிற்கும் பொதுவானதாக உள்ளது) சில நேரம் பாதிக்கப்படும். இது தவறு. மூன்றும் சேர்ந்து அணுவான ஜீவனுக்கு வெவ்வேறு விதத்தில் பயன்படுகின்றன. நாடிகள் = பங்களா, புரீதத் = கட்டில், ப்ரஹ்மம் = படுக்கை. எனவேதான் सत आगत्य न विदुः என்று ப்ரஹ்மத்திலிருந்து (படுக்கையிலிருந்து) எழுந்தவன், புரிந்து கொள்வதில்லை என்று கூறுகிறது.

# 3.2.4 D तदभावो नाडीषु तत् श्रुतेरात्मनि च

(1 सूत्रम्)

மத்வமதத்தில் இந்த அதிகரணம் இரண்டாக கணக்கிடப்படுகிறது.

தூக்கத்தில் ஜீவனுக்கு நாடிகள், பரமாத்மா இவைகள் இரண்டும் ஸ்தானமா? ஏதாவது ஒன்றா? ஒன்றானால் பரமாத்மா மட்டுமா? நாடிகள் மட்டுமா? ஃப்ருதிகள் இரண்டு விதமாக இருப்பதானது ஸரியாவதற்கு இரண்டு இடத்திலும் தூங்குவது முடியுமா? முடியாதா? முடியாது என்றால் ஒன்று என்று கிடைக்கும்போது பரமாத்மா மட்டுமா? நாடிகள் மட்டுமா? நாடி மட்டுமானால் தூக்கத்திற்குப் பிறகு "நான் சுகமாக தூங்கினேன்" என்று வரும் அறிவு சுகத்தின் நினைப்பா (ஸ்ம்ருதியா?) அல்லது துக்கமின்மையின் அனுமானமா? ஸ்ம்ருதியானால் தூக்கத்தில் சுகானுபவம் பரமாத்மாவிடம்தான் வரும் என்பதால் பரமாத்மாதான் ஸ்தானம் என்று ஆகும். இவ்விதம் விசாரம் (வரிசையாக) செய்யப்படுகிறது.

பூர்வபக்ஷம்:- நாடிகளிலும் ப்ரஹ்மத்திலுமாக இரண்டிலும் தூங்குவது பொருந்தாது என்பதால் ஃப்ருதிகள் இரண்டையும் ஸமுச்சயமாக கூற இயலாததாகிறது. எனவே ஏதேனும் ஒரு இடத்தில் என்று கட்டாயம் கூறவேண்டும். தூங்கி எழுந்தவனுக்கு "இன்பமாக தூங்கினேன்" என்ற ஒரு அனுபவம் துக்கமின்மையை அனுமானத்தால் கூறுகிறது என்று கூற முடியாது. ஏனெனில் "தூக்ககாலம், துக்கமின்மையுடையது" என்று அனுமானம் கூற முடியாது. "தூக்ககாலம்" என்று ஒன்றை பக்ஷமாக கூறமுடியும். ஆகையால் "இத்தனை நேரம் சுகமாக தூங்கினேன்" என்று எழுந்தவுடன் வரும் அறிவு ஸ்ம்ருதிதான் என்பதால் தூக்க நேரத்தின் சுகானுபவம் என்பது பகவானைத் தவிர வேறு இடத்தில் சம்பவிக்க முடியாது. ஆகையால் தூக்கம் பரமாத்மாவிடத்தில்தான் நடக்கிறது. "सता सोम्य तदा संपन्नो

भवति" என்று ஸ்பஷ்டமாக ஶ்ருதி கூறுகிறது. "நாடிகளில் தூங்குகிறான்" என்ற ஶ்ருதி யுக்தியற்றது. எனவே ப்ரபலமான யுக்தியை உடைய 'பரமாத்மா தூக்க இடம்' என்னும் ஶ்ருதியினால் அது நிராகரிக்கப்படுகிறது.

ஸித்தாந்தம்:- நித்யமாகவும், நிர்தோஷமாகவும் உள்ள ஶ்ருதிகளில் (இரண்டில்) ஒன்றை துர்பலம் என்று தள்ளுவது ஸரியில்லை. பரம்பரையாகவும் நேராகவும் (indirectly and directly) இரண்டுமே தூக்க ஸ்தானம் ஆக முடியும். எனவே நாடியில் உள்ள பரமாத்மாவே ஸ்தானம்.

## 3.2.5 D अत: प्रबोधोऽस्मात् (1 सूत्रम्)

இந்த தூக்கத்திலிருந்து எழுந்திருத்தல் என்பது சில நேரம் பேரி வாத்ய சத்தம் போன்ற காரணத்தினாலா? அல்லது ஈசாதீனமாகத்தானா? சில ஸமயம் பேரி வாத்ய முழக்கம் கேட்டு எழுந்திருப்பதை கண்கூடாக பார்ப்பதால், அவை வெறும் நிமித்தம்தான் என்று கூற காரணம் உண்டா? இல்லையா? என்ற விசாரத்தில் -

பூர்வபக்ஷம் :- வாத்யங்களின் சத்தத்தாலும் சில நேரம் விழிப்பு ஏற்படுகையில் ஈசாதீனத்வம் கல்பிக்க காரணமில்லை. காரணங்கள் வாத்திய முழக்கம் போன்றவை இல்லாதபொழுது விழிப்பு வருவது வேண்டுமானால் ஈசாதீனமாக இருக்கட்டும். வாத்திய முழக்கம் போன்றவை கேட்டு எழுந்திருத்தல் நடைபெறும் இடத்தில் இவைகளே ஸ்வதந்திரமான காரணமாகலாம். எனவே இவை நிமித்தமாத்திரம்தான் என்பது தவறு.

ஸித்தாந்தம்:- एष एव सुप्तं प्रबोधयति (कौण्डिन्य) என்ற ஶ்ருதியில் "கடவுள்தான் எழுப்புகிறான்" என்று அடித்து கூறியுள்ளதால், மற்றவை நிமித்தம் மட்டும்தான். எனவே தூங்குபவனை எழுப்புவது ஈஶனே.

# 3.2.3 A स एव तु कर्मानुस्मृतिशब्दविधिभ्य:

(1 सूत्रम्)

தூக்கத்தில் ப்ரஹ்மத்துடன் கலந்த ஜீவர்கள் விழிக்கும்போது அந்தந்த ஜீவன்தான் விழிக்கிறானா, மாறுவதில்லையா? மாறுதலும் உண்டா? என்று விசாரம்.

பூர்வபக்ஷம் :- கடலில் கலந்த ஜலத்துளியானது திரும்ப எடுத்தால் அதுவேதான் வருகிறது என்பது ஊர்ஜிதமாகாது அல்லவா? அதே போல் கடலாகிய ப்ரஹ்மத்தில் கலந்த ஜீவர்கள் ஆகிற ஜலத்துளிகளும் மாறியும் வரலாம் என்பது போல் இங்கும் குழப்பமே.

ஸித்தாந்தம் :- உதாரணம் கூறியது ஸரியல்ல. நீர்த்துளியானது நேராக கடலில் கலக்கின்றது. ஆனால் ஜீவன் என்பவன் ஸம்ஸ்காரங்கள், அறியாமை இவைகளாகிற பெட்டியில் அடைக்கப்பட்டு (கங்காஜல சொம்பு போல்) ப்ரஹ்மத்திடம் கலக்கிறான் என்பதால் இங்கு அவனவன் அந்த அந்த நிலையில் தன் தன் மனம், ஸம்ஸ்காரம் எல்லாம் அடங்கிய பெட்டியுடன் வெளி வந்துவிடுவான். எனவேதான் ஶ்ருதியும் கூறுகிறது- "त इह व्याघ्रो वा सिंहो वा वृको वा.." என்று அந்தந்த ஜீவன் அந்தந்த நிலை மாறாமல் திரும்புகிறான். இல்லையேல் நம் தினஸரி அனுபவத்தில் குழப்பம் வருமே! குழம்பாமல் தன் தன் வேலையை தொடர்ந்து செய்கிறோமாதலால் அவனே விழித்து எழுகிறான். முக்தியில் கலக்கும்போதோ என்றால் ஜீவ உபாதிகளான கர்மா, ஸம்ஸ்காரம் யாவும் அழிந்து விடுவதால் திரும்ப வருவது இல்லை.

## 3.2.3 V स एव तु कर्मानुस्मृतिशब्दविधिभ्य:

(1 सूत्रम्)

விஶிஷ்டாத்வைத மதத்தில் பூர்வபக்ஷம் ஸித்தாந்தம் அத்வைதத்திற்கு ஸமமே.

தூக்கத்தில் ப்ரஹ்ம ப்ராப்தி கூறுவது உபசாரமாகத்தான். முழு ஓய்வு எடுக்கும் இடத்தில் சென்றான் என்று கருத்து. தூக்கம் முக்தி அல்ல.

## 3.2.6 D स एव तु कर्मानुस्मृतिशब्दविधिभ्य:

(1 सूत्रम्)

இதற்கு முன்பு கனவு போன்ற நிலைகள் ஈசாதீனம் என்று கூறப்பட்டது. கனவு போன்றவைகளுக்கு ப்ரேரகனாக விஷ்ணு அவ்வப்போது அந்தந்த நிலைகளில் மட்டும் பிரேரகனா? அல்லது எல்லா ஜனங்களுக்கும் எல்லா நேரத்திலும் ப்ரேரகனா? இதன் விஷயத்தில், உலக உதாரணம் தீர்மானிக்கும் ப்ரமாணமா? இல்லையா? அரசன் போன்றவர்களின் பிரேரணைக்கு விதிவிலக்காக ப்ரமாணம் உண்டா இல்லையா? என்பதாக விசார வரிசையில் –

பூர்வபக்ஷம் :- உலகில் ராஜா போன்றவர்கள் சில இடங்களில், சிலபேருக்கு, சிலநேரத்தில் தூண்டுபவராக (ப்ரேரகராக) இருப்பது காணப்படுகிறது. இது ஆதாரமற்றது. எல்லாவற்றிலும், தூங்கி விழிப்பதிலும்கூட ஈஶன்தான் ப்ரேரகன் என்றால் விழிக்கும் நேரத்தில் பேரிவாத்யம் போன்ற காரணங்கள் (alarm முதலியவை) தேவையற்றவை ஆகிவிடும். உலகதிருஷ்டியை (ப்ரத்யக்ஷத்தை) பொருட்படுத்தாமல் ஶாஸ்த்ரமாத்திரத்தினால் ஆகாயப்படைப்பு ஏற்பதுபோல் இதையும் (ஸாதன ஸாபேக்ஷத்தையும்) ஏற்கவேண்டும் என்றால் அதற்கு ப்ரபலப் ப்ரமாணம் வேண்டும். எல்லாவற்றிலும்

ஈமன்தான் ப்ரேரகன் என்று. அந்த ப்ரமாணம் இல்லாததால் உலக த்ருஷ்டிப்படி அரசனை போல் ஈமன் சிலவற்றிற்குத்தான் ப்ரேரகன்.

ஸித்தாந்தம் :- விஷ்ணுதான் எங்கும் எல்லோருக்கும் எல்லாவற்றிலும் ப்ரேரகன், எந்த ஒரு இடத்திலும் வேறு யாரும் ப்ரேரகன் இல்லை. "एष ह्येव साधु कर्म कारयति" என்று புண்ணியாதிகளின் ப்ரவ்ருத்திகூட விஷ்ணுவினால் என்று ஶ்ருதி கூறுகிறதே! மேலும் "आत्मानमेव लोकमुपासीत"- என்று தன்னையேதான் உபாஸிக்கும்படி கூறும் ஶ்ருதியின் வாயிலாகவும் अन्यथानुपपत्ति ஸர்வப்ரேரகன் ஈமன். வேறு ப்ரேரகன் யாரும் இருப்பான் என்றால் "ஏவ" என்று கூறமுடியாது. உலகில் காண்பதற்கு முரணாக இருக்கலாமா என்றால் அதுவும் முடியும் / ஏற்கத்தான் வேண்டும். உலகில் பசுமாடு பால் மட்டும் தருவதாக கண்டுள்ளோம் எனிலும் காமதேனு வேண்டியவற்றை எல்லாம் தருவதாக ஏற்கிறோமே.

## 3.2.4 A मुग्धेऽर्धसंपत्तिः परिशेषात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம்:- மூர்ச்சை (மயக்கம்) என்பது தனியா? அல்லது மூன்றில் அடங்குமா? என்றால் விழிப்பு நிலை, கனவுநிலை, உறக்கநிலை என்ற அவஸ்தாத்ரயம்தான் ப்ரசித்தமானதால் மயக்கம் ஏதேனும் ஒன்றில் அடங்கும்.

ஸித்தாந்தம் :- இது தவறு. மூன்றிலும் வேறுபட்ட தன்மை காணப்படுவதால் இது வேறு தனியாகத்தான் ஏற்கவேண்டும். விழிப்பிலும், கனவிலும் இது சேராது. ஒரு பொருளும் தெரியவில்லையே. தூக்கத்திலும் சேர்க்கமுடியாது. மயக்கம் - உறக்கம் வேறுபட்ட தன்மை கொண்டுள்ளதே. உறங்குபவனின் முகம் தெளிவாக உள்ளது. மயக்கமுற்றவனுக்கு மாறுபடுகிறது. மூச்சுக்காற்று உறக்கத்தில் ஸமமாக நடை பெறுகிறது. மயக்கத்தில் தாறுமாறாக உள்ளது. உறக்கத்தில் உடல் ஆடாமல்

இருக்கின்றது. மயக்கத்தில் ஆடுகிறது. எனவே தனிப்பட்ட நிலை மயக்கம். தினஸரி நியமமாக ஏற்படுவதில்லை என்பதால் தினம் தோன்றும் மூன்றினுள் கணக்குப்படுத்தப்படவில்லை. மரணம் - உறக்கம் இரண்டிற்கும் நடுநிலையாகக்கருத வேண்டும். சிகித்ஸை செய்து குணப்படுத்தக்கூடிய ஒரு நிலை மயக்கம்.

## 3.2.4 V मुग्धेऽर्धसंपत्तिः परिशेषात् (1 सूत्रम्)

விஶிஷ்டாத்வைதத்தில் பூர்வபக்ஷம் ஸித்தாந்தம் அத்வைதத்திற்கு ஸமமே.

## 3.2.7 D मुग्धेऽर्धसंपत्तिः परिशेषात् (1 सूत्रम्)

மயக்கம் (மூர்ச்சை) தனி அவஸ்தையா? மூன்றினுள் (விழிப்பு, உறக்கம், கனவு) ஒன்றா? பகவத்ப்ராப்தி, மற்ற இடத்தில் இருத்தல், இரண்டில் ஒன்றா? இரண்டைக்காட்டிலும் வேறா? வேறானது என்றால், ப்ரமாணம் உண்டா இல்லையா? முதலாவதானால், இது தனி அவஸ்தைதான் என்று ஸ்பஷ்டம். இரண்டில் ஒன்றானால், பகவத்ப்ராப்தி ரூபமா? வேறு இடத்தில் ஸ்திதியா? என்று விசார வரிசை.

பூர்வபக்ஷம் :- மூன்றினில் ஒன்றுதான், வேறானது அல்ல, ப்ரமாணம் இல்லாததால். ப்ரஹ்மத்தில் இருந்தல் வேறு இடத்தில் இருத்தல் தவிர மூன்றாவது இருக்க முடியாதன்றோ. மேலும் வெளிப்பொருள் தெரியாததால் தூக்கத்தில் அடங்கும். முழுமையாக பகவத் ப்ராப்தியாகிய உறக்கம்தான்.

ஸித்தாந்தம் :- மோஹத்திலிருந்து (மயக்கத்திலிருந்து) "வேறு ஒன்றும் தெரியாமல் துக்கம் மட்டும் பட்டேன்" என்று கூறுகிறான். தூக்கமாக இருந்தால் ஆனந்தமாக ஒன்றும்

தெரியாமல் தூங்கினேன் என்றல்லவா கூற வேண்டும். தனியான அவஸ்தையாக இருக்க முடியாது என்று எண்ண வேண்டாம். வராஹ ஸ்ம்ருதியில் பரமாத்மாவிலிருந்து தள்ளியிருத்தல், அருகில் இருத்தல், கலந்து விடுதல் (அடைதல்) என்று கூறியிருப்பதால் परमात्मविदूरत्वसाम्युपवेशानाम् மயக்கம் அல்லது மோஹம் அரைப்ரவேசம் என்று கொள்ளவேண்டும். (விழிப்பு, கனவு)= தூர ஸ்திதி, மயக்கம் = அரைப்ரவேசம், தூக்கம் = நுழைதல். எனவே இது தனியான அவஸ்தை அல்ல.

## 3.2.5 A न स्थानतोऽपि परस्योभयलिङ्गंसर्वत्र हि (11 सूत्राणि)

ஸந்தேஹம் :- வேதாந்தங்களில் ப்ரஹ்மத்தைப்பற்றி கூறும் இடங்களில் ஸகுண ஸரூபமாகவும், நிர்குண, நீரூபமாகவும் இரண்டுவிதமாக கூறப்பட்டுள்ளது. (चतुष्पात्, षोडशकलं सत्यकाम முதலியன, अशब्दमस्पर्शम्) எனவே ப்ரஹ்மம் ஸரூபமா? நீரூபமா? (ரூபமற்றதா?) இரண்டு விதமானதும் ஆகிறதா?

பூர்வபக்ஷம் :- இரண்டுவிதமான ஶ்ருதிகள் இருப்பதால் ப்ரஹ்மம் ஸகுண நிர்குண, ஸரூப, நீரூப உபயாத்மகம்தான்.

ஸித்தாந்தம் :- நீரூபமாகத்தான் (ரூபமற்றதாகத்தான்) ப்ரஹ்மத்தை வேதாந்த ஶாஸ்த்ரம் போதிக்கிறது. வேறு ப்ரமாணத்தால் கிடைக்காதது அதுதானே. ஜகத்காரணத்வாதி ஸஹித ப்ரஹ்மத்தை நாம் அனுமானாதிகளினாலும் உணரலாமல்லவா? எனவே வேதாந்தங்களில் ஸகுணஸரூபப்ரஹ்மமானது நாம் உபாஸனை செய்வதற்காக அனுவாதம் (தெரிந்ததை கூறுதல்) செய்யப்படுகிறது. முழுக்கருத்துடன் கூறப்படவில்லை. இரண்டுவிதமாகவும் ஒரே பொருள் இருப்பது அஸம்பாவிதம். எனவே முக்கிய தாத்பர்யம் இல்லாமல் கூறப்பட்ட வேறு ஒன்றுக்காக (உபாஸனைக்காக)

கூறப்பட்டது பரமார்த்தம் அல்ல. வ்யாவஹாரிகம்தான். எனவேதான் மாயா ह्येषा मया सृष्टा यन्मां पश्यति नारद, என்று கூறப்பட்டுள்ளது. பலவாறான தோற்றம் வாஸ்தவம் இல்லை.

## 3.2.5 V न स्थानतोऽपि परस्योभयलिङ्गंसर्वत्र हि (15 सूत्राणि)

இந்த அதிகரணத்தை அத்வைதிகள் 11 ஸூத்ரங்களாகக் கொண்டு ஒரே அதிகரணமாக கூறியுள்ளதையும், प्रकृतैतावत्वं हि என்ற அத்வைதிகள் அடுத்த அதிகரணத்தின் 5 ஸூத்ரங்களையும் சேர்த்து, விஶிஷ்டாத்வைதிகள் ஒரே அதிகரணமாக கொண்டுள்ளனர். (அத்வைதிகளின் பத்தாவது, பதினொன்றாவது ஸூத்ரங்கள் ஒரே ஸூத்ரமாக கூறப்படுகிறது.)

பூர்வபக்ஷம் :- பரமாத்மாவிற்கு எல்லா ஜீவர்களின் சுகதுக்க போகத்திற்கான உடம்பில் அந்தர்யாமியாய் உள்ளே இருந்தால் சரீரத்தின் தொடர்பினால் ஏற்படும் கெடுதல்கள் (அபுருஷார்த்-தங்கள்) வந்துசேருமே என்ற கேள்விக்கு பதிலாக இந்த அதிகரணம் விஶேஷமாக விளக்கப்படுகிறது. கர்மவஶ்யமான ஜீவனுக்குத்தான் அபுருஷார்த்தம் ஈஶனுக்கு கிடையாது என்று கூற முடியாது. கெடுதலான உடலில் தொடர்பு வந்தால் கெடுதல் ஒட்டுமே என்ற விஶேஷ ஆக்ஷேபம் உள்ளது.

ஸித்தாந்தம் :- பரனுக்கு அபுருஷார்த்த (கெடுதல்) சம்பந்தம் கிடையாது. பரஸ்ய = குகையினுள் உள்ள இருவர்களில் ஒருவரான பரமனுக்கு स्थानतोऽपि= ஸ்வபின்ன ஜீவாதிஷ்டிதமான உடலில் இருப்பதனால்கூட न = அபுருஷார்த்த சம்பந்தம் இல்லை. பூர்வ அதிகரணங்களில் அவஸ்தைகளான அபுருஷார்த்தம் குறிக்கப்பட்டதால் न என்பதால் அது விலக்கப்படுகிறது. उभयलिङ्ग

सर्वत्र हि = ஏனெனில் , பரம் = பரமாத்மா, ஸர்வத்ர = எல்லா ஶ்ருதி ஸ்ம்ருதிகளிலும் உபயலிங்கம் = தள்ள வேண்டிய தோஷங்கள் அற்ற ஸகல கல்யாணகுணகணங்கள் உடைய தனியான தர்மவிஶிஷ்டனாக போதிக்கப்படுகிறான் என்று ஸித்தாந்தம். தள்ளத்தக்க தோஷமுள்ள சரீரத்தின் தொடர்பினாலும் தோஷம் ஒட்டாதபடி செய்யும் ஶக்தி பகவானிடம் உள்ளது அல்லவா? பொருள்கள் யாவிலும் தானாக (ஸ்வத:) அனுகூலத்வம் - ப்ரதிகூலத்வம் இருப்பதில்லை. இருக்குமானால் எல்லாம் எப்போதும் அனுகூலமாகவோ ப்ரதிகூலமாகவோ அமையவேண்டுமே. ஆகையால் கர்மாவை அனுஸரித்துதான் அனுகூல-ப்ரதிகூலத்தன்மை ஏற்படுகிறது. எனவே பரமாத்மாவிற்கு அபுருஷார்த்தம் வராது. ஜலம் முதலியவற்றில் ப்ரதிபிம்பமாகும் ஸூரியனுக்கு ஜலதோஷம் வருவதில்லையே. இதி ந இதி ந என்ற வாக்கியம் मूर्त, अमूर्त என்று இருவிதமாகத்தான் ப்ரஹ்மம் இருக்கவில்லை. மேலும் பற்பல குணங்கள் நிரம்பியது. எனவே இதைக்காட்டிலும் வேறொரு உயர்ந்த பொருள் இல்லை. ஸர்வ கல்யாணகுணங்களும் நிரம்பியவர் விஷ்ணு.

(3+4+1+1+2=11 सूत्राणि)பஞ்ச अधिकरणानि

மத்வமதப்படி இந்த அதிகரணமானது ஐந்தாக கணக்கிடப்-படுகிறது.

## 3.2.8 D न स्थानतोऽपि परस्योभयलिङ्गंसर्वत्र हि (3 सूत्राणि)

ஸர்வ அவஸ்தைகளுக்கும் ப்ரேரகன் விஷ்ணு என்று முன்பு கூறியதன் மேல் அவரால் ப்ரவ்ருதிக்கப்படுகிற விஶ்வன், தைஜஸன், ப்ராக்ஞன் என்ற மூன்று அவஸ்தைகளின் அபிமானிகளுக்கு பேதம் உண்டா? இல்லையா? இவர்களுக்கு பேதத்தை சாதிக்கும்

வெவ்வேறு ஸ்தானத்திலிருப்பது என்பதும் கார்யத்தினால் கட்டுப்பட்டவன், காரணத்தினால் கட்டுப்பட்டவன் என்று கூறப்படும் பேதம் நிரவகாசம் (என்பதால்) முக்கியமா? அல்லது கௌணமா? (ஸாவகாஸமா) என்று விசார வரிசை.

பூர்வபக்ஷம் :- விழிப்பு, கனவு, தூக்கம் மூன்றிலும் அனுபவிப்பவர்களான விச்வ - தைஜஸ - ப்ராக்ஞர்கள் ஒருவருக்கு ஒருவர் வேறுதான். வெவ்வேறு இடத்தில் உள்ள குடம்போல. ஆகாயத்தைப்போல வெவ்வேறு இடங்களில் இருப்பது விஷ்ணுவிற்கு பொருந்தும் என்று கூறமுடியாது. ஆகாயத்தின் அம்பத்தினால் பல இடங்களில் இருப்பது பொருந்தினாலும், இங்கு ஒவ்வொருவரையும் सप्ताङ्ग एकोनविंशतिमुख: (7 அங்கம், 19 முகங்கள் அறியும் த்வாரங்கள்) உடையவராக பூர்ணரூபமாக கூறப்படுவதால். மேலும் कार्यकारणबद्धौ तौ इष्येते विश्वतैजसौ என்ற வாக்யத்தால் விச்வாதி ரூபங்களுக்கு விழிப்பு, கனவு என்று இருப்பதால் கார்யங்களால் கட்டுப்பட்ட தன்மையும், உறக்க நிலையில் ப்ராக்ஞனுக்கு காரணத்தினால் கட்டுப்பட்ட தன்மை என்றெல்லாம் ஸ்தூலத்தை அனுபவிப்பவன், ஸூக்ஷ்மத்தை அனுபவிப்பவன் என்றும் கூறுவதால் மூவரும் வேறுபட்டவர்களே. இந்த வேறுபாடு பேதமில்லாமலே வேறு ஒன்றால் ஏற்பட்டது என்று கூற முடியாது. அதற்கு ப்ரமாணம் இல்லை.

ஸித்தாந்தம் :- ஆங்காங்கு பரஸ்பரம் உள்ள ரூபங்களுடன் ஒரே பகவான்தான் உள்ளார். सर्वेषु भूतेषु एतमेव ब्रह्म इत्याचक्षते (ऐ 3.2.3) எல்லா ப்ராணிகள் இடத்திலும் கண் முதலிய ரூபங்களிலும் இவரையே ப்ரஹ்மம் என்று கூறுகிறார்கள். अयमेव स योऽयमात्मा, एष त आत्मा अन्तर्याम्यमृत: என்றெல்லாம் பாஷ்யத்தில் கூறிய ஶ்ருதிகளில் அங்கங்கே இரண்டும் பகவத் ரூபங்களுக்கு பரஸ்பரமும் மூலரூபேணவும் அபேதம் கூறப்பட்டுள்ளது. பேதத்தை அனுமானம் செய்வது அபேதஶ்ருதி பாதிதமாக

உள்ளதால் அப்ரமாணம். பேதத்தை கூறுவது "भिन्नो भिन्नेषु संस्थितेः" (வேறு இடங்களில் தோற்றத்தால் வேறு போல்) ऐश्वर्याद्रूपमेकं च सूर्यवद्बहुधेयते - ஜலபாத்திரங்களில் ஸூர்யன் போல் தனது ஐஸ்வர்யத்தினால் பலவாறாகத் தோன்றுகிறார்.

## 3.2.9 D अरूपवदेव हि तत्प्रधानत्वात् (4 सूत्राणि)

उभयलिङ्गम् என்ற பூர்வ அதிகரணத்தில் லிங்க என்ற வார்த்தையினால் கூறிய பகவத் குணங்களுக்கு அப்ராக்ருதத்வம் நிர்ணயிக்கப்படுகிறது. பக்தியானது விஷ்ணுவிடம் செய்யப்பட வேண்டுமா? (பொருத்தமா? பொருத்தமில்லையா?) அவருக்கு கூறிய மாஹாத்ம்யம் ஸரியா? இல்லையா? ரூபத்வம் அரூபத்வம் இரண்டில் தோஷம் உள்ளதா? இல்லையா? ரூபமுடைய தன்மை ரூபமற்றதன்மை இரண்டும் ஒன்றா? வேறுவேறா? என்ற விசார வரிசை.

பூர்வபக்ஷம் :- விஷ்ணுவிடம் பக்தி தேவையில்லை. அவருக்கு ரூபம் உண்டு இல்லை என்ற இரண்டு பக்ஷங்களிலும் தோஷம் வரும் என்பதால் மாஹாத்ம்யம் கிடையாது. ரூபத்வம் இருந்தால் சைத்ரனைபோல அநித்யத்வம் வரும். நித்ய தேஹம் என்று "नात्मा अश्रुतेः" என்று ஸ்தாபித்ததையும் ஆக்ஷேபிக்கிறோம். "अरूपमव्ययम्" என்ற ஶ்ருதிக்கு அப்ராமாண்யம் வரும். அரூபியானால் ஸௌந்தர்யம், ஸுலக்ஷணத்வாதி குணங்கள் வராதே. இரண்டுவிதமான ஶ்ருதிகளில் ப்ராக்ருதரூபம் கிடையாது, அப்ராக்ருதரூபம் உண்டு என்பதாக பரிஹாரம் கூறமுடியாது. ப்ரமாணம் இல்லை. ஆதலால் பக்தி வேண்டாம்.

ஸித்தாந்தம் :- एकात्म्यप्रत्ययसारम्, आनन्दमात्रमजरम्, आनन्दरूपममृतम् என்பதாக பாஷ்யம் கூறிய ஶ்ருதி ஸ்ம்ருதியின் ப்ரமாணத்தினால் ஞானானந்தாத்யாத்மகமூலம் கூறப்படுகிறது. எனவே ரூபவத்வம்

உண்டு. "भौतिकानीह रूपाणि.."என்ற (மாத்ஸ்ய) வசனத்தால் ப்ராக்ருதரூபம் இல்லை என்பது உணர வேண்டும். அப்ராக்ருத ரூபம் நித்தியமானதுதான். எனவே சௌந்தர்யம், சுலக்ஷணத்வம் கட்டாயம் பொருந்தும். மாஹாத்ம்யம் உள்ளதால், பக்தி தேவைதான்.

## 3.2.10 D अत एव चोपमा सूर्यकादिवत् (1 सूत्रम्)

விஷ்ணுபக்தி யுக்தமா? அயுக்தமா? ஜீவன் பரமாத்மாவை காட்டிலும் பின்னாபின்னனா? பின்னனா? ஜீவன்களுக்கு பரமாத்மாவுடன் ஸமுதாய ஸமுதாயீ பாவமா? பிம்ப ப்ரதிபிம்ப பாவமா? ப்ரதிபிம்பத்வம் என்பது உபாதிக்ருத்வமா? தததீனத்வமா? அனாதி நித்யனான ஜீவன்களுக்கு ஔபாதிக ப்ரதிபிம்ப பாவம் வராது. எனவே ஸமுதாய ரூபமான ஈஶனுடன் ஸமுதாயியான ஜீவனுக்கு பேதாபேதங்கள் வரும் என்று விசார வரிசை.

பூர்வபக்ஷம் :- पृथगुपदेशात् என்ற இடத்தில் ஜீவ ஈஶர்களுக்கு பேதம் கூறியிருந்தாலும், ஸர்வ சேதன ஸமுதாயமான ஈஶனுக்கு ஜீவர்களுடன் பேதாபேதம் இருப்பினும் பேதம் விருத்தமில்லை. (இடையூறு இல்லை) ஔபாதிக பேதத்திற்கு ஸ்வாபாவிக அபேதகார்யத்தைத் தடுக்கும் தன்மை கிடையாது. ஆதலால் தன்னோடு அபின்னரான ஈஶனிடம் பக்தி வர முடியாது. பிம்ப ப்ரதிபிம்ப வாதம் அநித்யனான ஜீவனுக்கு பொருந்தாது.

ஸித்தாந்தம் :- जीव: न ईशाभिन्न: तत्प्रतिबिम्बत्वात् जलसूर्यवत् ஜீவன் ஈஶனின் ப்ரதிபிம்பமாக இருப்பதால் ஜலஸூரியன் ஸூரியனைக் காட்டிலும் வேறுபட்டது போல் ஈஶனைக்காட்டிலும் வேறுபட்டவன்தான். ஜீவன் ஈஶ்வராம்ஶமானால் ஞான ஐஸ்வர்யாதிகள் ஏற்பட வேண்டுமாதலால் அம்ஶம் இல்லை. (ஸமுதாயீ அல்ல). रूपं रूपम् என்ற ஶ்ருதியாலும் बहव: सूर्यका यद्वत्

  

सूर्यस्य सदृशा जले என்ற ஸ்ம்ருதியாலும் ப்ரதிபிம்பம் ப்ரமாணிகம். அனாதியானாலும் ஜீவனுக்கு தத்பின்னத்வ, தததீனத்வ, தத்ஸத்ருஶத்வங்கள்தான் ப்ரதிபிம்பத்வம்.

## 3.2.11 D अम्बुवदग्रहणात् तु न तथात्वम्

(1 सूत्रम्)

பக்தி யுக்தமா? அயுக்தமா? ஈஶனின் ஞானம் ப்ரஸாதங்களால் ஞானானந்தாதிகளாகிய ப்ரஹ்ம ஸாத்ருஶ்யம், வெளிப்படுவது என்ற பயன் வருமா? வராதா? என்று விசாரம்.

பூர்வபக்ஷம் :- ஞானம், ஆனந்தம் என்றதான ப்ரஹ்மஸாத்ருஶ்யம் (ஸாம்யம்) ஜீவனுக்கு பும்ஸ்த்வம் போல் ஜீவஸ்வரூபமாதலால், நித்ய ஸித்தம். எனவே அந்த ஸாத்ருஶ்யம் வெளிப்படுவது பயனாகாது. தூக்கத்தில் போல அபிவ்யக்தி தானாகவே வரலாம். பக்தி தேவையில்லை.

ஸித்தாந்தம்:- ஸாத்ருஶ்யம் நித்யஸித்தமாயினும், சற்று வெளிப்படையாகத் தெரிவது பக்தியில்லாமல் தூக்கத்தில் ஏற்பட்டாலும் முழுமையான வெளிப்பாடு என்கிற முக்தியானது यमैवेषवृणुते என்று கூறியபடி பக்தியால்தான் வரும். எனவே பக்தி தேவை.

## 3.2.12 D वृद्धिहासभाक्त्वमन्तर्भावादुभयसामञ्जस्यादेवम्

(2 सूत्रे)

பக்தி என்பதனால் அதோடு கூடிய வேறு சாதனங்களுக்கு தராதரம் உள்ளனவா? இல்லையா? பக்தி முதலிய எல்லாம் பக்தர்கள் யாவரிடமும் ஒரே விதமா? வெவ்வேறு விதமா? இதன் பயனான முக்தி ஒரே விதமா? வெவ்வேறா?

**பூர்வபக்ஷம் :-** ஆனந்ததாரதம்யம் "सैषाऽऽनन्दस्य मीमांसा" என்று கூறியது வைராக்யத்திற்கு மட்டுமே. ஆதலால் ஆனந்த தாரதம்யத்திற்கு ப்ரமாணம் இல்லை. எனவே பக்தி போன்றவைகளும் பக்தர்களிடத்தில் ஒரே ரகம்தான். ஒருவேளை பயனில் வேறுபாடு இருப்பினும் ஸாதனம் ஒரே விதமாக இருப்பதில் தவறில்லை.

**ஸித்தாந்தம்:-** ஆனந்தமீமாம்ஸா வைராக்யத்திற்காக மட்டும் கூறப்படவில்லை என்பது பல நூல்களில் நிரூபிக்கப்பட்டுள்ளது. எனவே பயன்களின் வேறுபாடு, ஸாதனங்களின் வேறுபாடு இல்லாமல் பொருந்தாது. எனவே பக்தி போன்ற சாதனைகள் பக்தருக்கு பக்தர் வேறுபடும்.

## 3.2.6 A प्रकृतैतावत्त्वं हि प्रतिषेधति ततो ब्रवीति च भूय: (9 सूत्राणि)

**விஷயம்:-** "अथात आदेशो नेति नेति" என்ற ப்ருஹதாரண்யக உபநிஷத்தின் வாக்கியம் மூர்த்தாமூர்த்தமாகிற இரண்டு பொருட்களை (ஸத்+த்யத்) கூறிய பிறகு, இவை எதனுடைய வடிவங்களோ அதைக்கூறவேண்டும் ஆதலால் உபதேசம் இதுவாகியது - இப்படி அன்று, இப்படி அன்று.

**ஸந்தேஹம் :-** இங்கு ரூபியான ப்ரஹ்மமும் ரூபங்களான மூர்த்தாமூர்த்தங்களும் இரண்டுமே தள்ளப்பட்டுள்ளனவா? ஒன்று மட்டுமா? ஒன்றானால் ப்ரஹ்மம் தள்ளப்படுகிறதா? ஸத்-த்யத்தான ரூபங்கள் தள்ளப்படுகின்றனவா?

**பூர்வபக்ஷம் :-** इति न इति न என்று இரண்டுமுறை நிஷேதம் கூறும் வார்த்தை வருவதால் ஒன்றை தள்ள ஒரு வார்த்தை (ஒரு

  

முறை) போதுமானதால் எல்லாவற்றையுமே (ரூபீ + ரூபத்வயம்) நிஷேதிக்கப்படுகிறது. அல்லது வடிவம், நிறம் முதலிய இல்லாத ப்ரஹ்மம் தள்ளப்படுகிறது. கண்கூடாகத்தெரியும் ப்ரபஞ்சத்தை (சத்தியத்தை) தள்ளுவது பொருந்தாது.

ஸித்தாந்தம் :- இங்கு இரண்டு தடவை ஏ கூறப்படவில்லை. ஒன்றையே "வீட்டிற்கு வீடு அலைகிறான்" என்பதுபோல் எல்லாவற்றை வ்யாபிப்பதற்காக வீப்ஸா ஏற்பட்டுள்ளது. மேலும் இரண்டையும் தள்ளினால் ஶூன்யவாதம் ஆகிவிடும். இரண்டுமுறை नेति என்பது வீண் என்று எண்ண முடியாது. இருமுறை கூறினால்தான் வீப்ஸா கிடைக்கும். எதெல்லாம் நம்மால் உணரப்படுகிறதோ (காணப்படுகிறதோ) அவையாவும் இல்லை, அதன் அதிஷ்டானமான ப்ரஹ்மமே உள்ளது. வீப்சையினால் ப்ரஹ்மமும் இல்லை என்று கூறமுடியாதா? என்றால் ப்ரஹ்மமானது த்ருச்யமாக ஆகாததால், இதி = இப்படிப்பட்டது என்ற வார்த்தையால் அதைக்கூற முடியாது. மேலும் ப்ரஹ்மத்தைக்கூற வந்ததான வேதாந்தம் எப்படி அதையே நிஷேதம் செய்யும்? மேலும் வாக்யத்தின் தொடர்பில் இவைகளைக்காட்டிலும் (மூர்த்தம் அமூர்த்தம்) வேறான, பெரிய ஒன்று உள்ளது- "अन्यत् परं अस्ति" என்று கூறுகிறது. எனவே ப்ரஹ்மம் ஒன்றே பரமார்த்தமாக உள்ளது. மற்றவை கானல்நீர்போல் என்ற கருத்து உருவமற்ற ப்ரபஞ்சத்தை புரியவைப்பதற்காக "கிளையின் நுனியில் சந்திரன்" என்பது உண்மை சந்திரனை காண்பிப்பதுபோல் மூர்த்தாமூர்த்த ப்ரபஞ்சத்வாரா நிர்விஶேஷப்ரஹ்மம் போதிக்கப்படுகிறது. எனவேதான் "मृत्यो: स मृत्युमाप्नोति" என்று த்வைதத்தை ஸத்யமென்று எண்ணுபவன் ஸம்ஸார சாகரத்தில் மூழ்குகிறான் என்று பலமுறை த்வைதத்தை நிஷேதிக்கிறது வேதம்.

## 3.2.6 V उभयव्यपदेशात्त्वहिकुण्डलवत् (4 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- மூர்த்தாமூர்த்தமான ப்ரபஞ்சமானது ப்ரஹ்ம ஸ்வரூபத்வம் கூறப்பட்டதால் ப்ரஹ்மத்திற்கு அசித்தினுடைய சம்பந்தத்தால் தோஷம் வருமே என்பதற்காக பதில் கூறுவதற்கு இந்த அதிகரணம் தனியாக கணக்கிடப்படுகிறது, இதில் இரண்டு பக்ஷங்கள் கூறப்பட்டுள்ளன.

1. பாம்பு சில நேரம் குண்டலமாக சுற்றிக்கொண்டு இருக்கும். இங்கு எப்படி குண்டல வடிவம் பாம்பின் அம்ஶமோ அதுபோல் ப்ரஹ்மத்தில் அவஸ்தாவிஶேஷம் ப்ரபஞ்சமாகிற மூர்த்தா மூர்த்தங்கள். ब्रह्मैवेदम् என்று அசித்திற்கு ப்ரஹ்மத்தோடு சம்பந்தமும், अहं इमास्त्रिस्तो देवता: என்று ப்ரபஞ்சத்தை தன்னைக்காட்டிலும் வேறாகவும் ப்ரஹ்மம் கூறுவதால் அசித்-ப்ரஹ்ம பேதமும் இரண்டும் பொருந்தும்.

2. ஸூரியனுக்கும் அதன் ப்ரபைக்கும் எவ்வாறு தேஜஸ்த்வம் என்ற ரீதியில் அபேதம், தனித்தனி வ்யக்தி என்ற ரீதியில் பேதமும் உண்டோ அது போல அசித்திற்கும் ப்ரஹ்மத்திற்கும் ப்ரஹ்மத்வேன அபேதமும், தனித்தனியாக பேதமும் பொருந்தும்.

ஸித்தாந்தம் :- पूर्ववद्वा: முன்பு அம்ஶாதிகரணத்தில் ஜீவனுக்கும் ப்ரஹ்மத்திற்கும் अपृथक् सिद्धविशेषणविशेष्यभावम् = பிரிக்க முடியாத உரிச்சொல் விஶேஷணம் பெயர்ச்சொல் விஶேஷ்யம் என்ற தொடர்பு உள்ளதால் ஜீவ வாசகமான சொற்கள் விசேஷ்ய ப்ரஹ்மத்தை கூறுவது போல் அசித்தான ப்ரபஞ்சத்திற்கும் ப்ரஹ்மத்திற்கும் ब्रह्मैवेदम् என்று கூறப்படும் இடத்தில் अपृथक् सिद्धविशेषणता என்ற தொடர்பினால் ப்ரபஞ்சத்தையும் குறிக்கும் என்ற ரீதியில்தான் பேதாபேதம் கூறவேண்டும் இல்லையேல் ப்ரஹ்மத்திற்கு நிர்விகாரித்வம் என்ற தன்மை போய் விடும்.

எனவே ஸ்வரூபத்தில் அசித்தும் ப்ரஹமும் வேறானாலும் अचित्शरीरक ப்ரஹ்மத்தோடுஒன்றாகவும் கணக்கிடப்படும்.

மத்வமதத்தில் இந்த அதிகரணம் மூன்றாக கணக்கிடப்படுகிறது.

## 3.2.13 D प्रकृतैतावत्वं हि प्रतिषेधति ततो ब्रवीति च भूय: (1 सूत्रम्)

விஷ்ணுவிற்கு பாலனம் (காப்பாற்றுபவரின் தன்மை) என்ற தொழில் (முயற்சி) உண்டா இல்லையா என்று விசாரிக்கப்படுகிறது.

பூர்வபக்ஷம்:- உலகை ரக்ஷிப்பது என்ற குணம் விஷ்ணுவிற்கு கிடையாது. படைத்த பொருளானது அழியும் வரை இருப்பது ஸ்வபாவம் ஆதலால் ஸம்ஹாரம் செய்பவரின் ஸம்ஹார முயற்சியின்மை தவிர இதற்கு (பாலனதிற்கு) பாலனம் என்ற வ்யாபாரம் தனியே தேவையில்லை.

ஸித்தாந்தம் :- விஷ்ணுவிடம் பக்தி கட்டாயம் தேவை. படைத்த உலகை காக்கும் கருணை என்ற குணம் உள்ளபடியால் ஸம்ஹாரத்திற்கு முயற்சியின்மை தவிர தனி குணம் தேவையற்றது என்று கூற முடியாது. नैतावादेवापरोऽन्यदस्तिउक्षा स द्यावापृथिवी (10.31.8) என்ற ச்ருதியில், முன்பு (இரண்டு மந்திரம் முன்பு) கூறபட்ட ஸ்ருஷ்டி ஸம்ஹாரகத்வம் மட்டுமல்ல என்று கூறி மேலும் ஒரு வ்யாபாரம் உண்டு என்று கூறப்படுகிறது. அன்னம் முதலியன கொடுத்து போஷணம் போன்ற வ்யாபாரம், பாலனம், கட்டாயம் விஷ்ணுவிற்கு உண்டு. எனவே பக்தி தேவை.

# 3.2.14 D तदव्यक्तमाह हि (5 सूत्राणि)

ஜன்மாதி ஸூத்ரத்தில் கூறிய ஜன்ம முதலிய எட்டு கார்யங்களில் காத்தல் என்பதை நிரூபித்துவிட்டு இந்த அதிகரணத்தில் ஸ்வஞானப்ரதத்வம் ஸ்தாபிக்கப்படுகிறது. அதற்காக பகவத்பக்தி ஸபலமா? விபலமா? (பயனற்றதா?) அந்த பக்தியானது ஈசன் வ்யக்தனானாலும் அவ்யக்தனானாலும் பரமபுருஷார்த்தமான மோக்ஷத்தின் காரணமான ஈசபரோக்ஷத்தின் ஹேதுவா? அல்லது அவ்யக்தமானாலும் ஈசப்ரஸாத த்வாராதான் அபரோக்ஷ ஹேதுவா? என்று விசார வரிசை.

பூர்வபக்ஷம் :- ஹரியானவன் தூண்போன்றது போல் ப்ரத்யக்ஷத்திற்கு யோக்யமானால் பக்தி இல்லாமலேயே தெரியலாம். ஈசன் அவ்யக்தமானால் தர்மம், அதர்மம் போல் பக்தி போன்ற சாதனங்களினாலும் காண முடியாது. காணலாம் என்றால் ஸமாராதனத்தினாலும் காணலாமே. ஆகவே பக்தி வீண்.

ஸித்தாந்தம் :- "अरूपमक्षरं ब्रहम सदाऽव्यक्तम्" (कौण्ठरव्य) ஶ்ருதியினால் அவ்யக்த ஸ்வபாவம் இருப்பவரானாலும் "आत्मा वा अरे द्रष्टव्यः" போன்ற ஶ்ருதியின் பலத்தினால் பக்தியுடன் கூடிய ஶ்ரவணாதிகளை அப்யசிப்பதால் ப்ரசன்னமடைந்த சிந்திக்க முடியாத ஶக்தி பொருந்திய ஈஶ்வரனாலேயே தனது காணப்படும்தன்மை ஏற்படும் (अपरोक्षम्) அதன் மூலமாக மோக்ஷம் கிட்டும். எனவே பக்தியில்லாத ஆராதனையினால் ப்ரஸாதம் ஏற்படாது. ஆகையால் ஶ்ரவணாதியுடன் கூடிய பக்திதான் மோக்ஷதாயிநீ.

# 3.2.15 D उभयव्यपदेशात् तु अहिकुण्डलवत्

(4 सूत्राणि)

அவ்யக்தமானாலும் பக்தியால் ப்ரசன்னமான ஈஶன் கண்ணால் காணப்படுவான் என்று கூறிய பிறகு குணஸ்வரூபனாகவும் குணபூர்ணனாகவும் கூறும் இரண்டுவித ஶ்ருதியால் குணஸ்வரூபமனாலும், குணங்கள் நிரம்பியவன் என்று கூறப்படுகிறது. ஹரி பக்தி தேவையா இல்லையா? அவருக்கு குணவத்வம் உண்டா இல்லையா? குணவடிவாகவுள்ள விஷ்ணுவிற்கு குணங்கள் நிரம்பிய தன்மை பொருந்துமா? பொருந்தாதா? என்று விசார வரிசை.

பூர்வபக்ஷம் :- "அதாகவே இருப்பவருக்கு அதை உடையதன்மை" என்பது உலகில் காணப்படுவதில்லை என்பதால் குணமாக உள்ள ஹரிக்கு குணவத்வம் பொருந்தாது. ப்ரமாணமும் இல்லை. ஹரிக்கு குணரூபத்வம் समवायाऽभ्युपगमाच्च என்ற ஸூத்ரத்தில் ஸமவாயத்தை நிராகரிக்கும் ஸந்தர்பத்தில் ஏற்றுக்கொண்டு இருக்கிறோம். எனவே குணவானாக இல்லாத ஹரியை பக்தி பண்ண வேண்டாம்.

ஸித்தாந்தம் :- குண்டலவடிமாயுள்ள பாம்பிற்கு விஶேஷத்தின் பலத்தினால் குண்டலித்வம் எவ்வாறு ஏற்றுக்கொள்கிறோமோ, ப்ரகாசவடிவமான ஸூர்யனுக்கு ப்ரகாசத்வம் எப்படி ஏற்றுக் கொள்கிறோமோ, காலத்திற்கு பூர்வத்தோடு அபேதமானாலும் பூர்வ: கால: என்று விஶேஷண விசேஷ்ய பேதம் எப்படி கூறுகிறோமோ (पूर्वहा= என்ற ஸூதிரத்தினால்) அதேபோல குணாத்மகரான விஷ்ணுவிற்கு குணவத்வம் ப்ரதிநிதி விஶேஷபலத்தால் பொருத்தமற்றதாகாது. எனவே குணபூர்ணராக ஹரியை பஜிக்க வேண்டும்.

# 3.2.7 A परमत: सेतून्मानसंबन्धभेदव्यपदेशेभ्य: (7 सूत्राणि)

ஸந்தேஹம் :- ப்ரஹ்மத்தை தவிர வேறு பொருள் உண்மையா இருக்கிறதா? இல்லையா?

பூர்வபக்ஷம் :- ப்ரஹ்மத்தை தவிர வேறு பொருளை கட்டாயம் ஏற்கவேண்டும். ஏனெனில் 1) ப்ரஹ்மமானது சேது (அணை) என்று கூறப்பட்டுள்ளது. உலகில் அணையை தவிர அதன் வழியாக சென்று அடையும் பொருட்கள் உள்ளனவே! உலகை சிதறாமல் தாங்கும் அணையானதால் உலகம் ஸத்யம். ப்ரஹ்மத்தை தவிர வேறுதானே.

2) சதுஷ்பாத் ப்ரஹ்மம். ஷோடஶகலம் ப்ரஹ்மம். - என்றெல்லாம் நான்காகவும், பதினாராகவும் கூறப்பட்டுள்ளது.

3) தூக்கத்தில் ஜீவன் ப்ரஹ்மத்தோடு சேருகிறான் (सता सोम्य तदा संपन्नो भवति) என்று தொடர்பு கூறப்படுகிறது.

4) ஆத்மாவை நீ அறியவேண்டும் என்று பேதம் கூறப்படுகிறது.

ஸித்தாந்தம் :- 1) அணை என்று கூறியதால் முழுமையாக ஒற்றுமை கூற முடியாது. அணை மரத்தால் அல்லது கல்லால் கட்டப்பட்டது என்பதற்காக ப்ரஹ்மம் அப்படியாகுமா? ஆதாரம் மட்டும்தான் ஸாம்யம்.

2) உபாஸனைக்காக சதுஷ்பாத்,ஷோடஶகலம் என்று கூறப்பட்டது. உண்மை ஸ்வரூபமல்ல.

3) தூக்கத்தில் ப்ரஹ்மத்தின் தொடர்பு என்பது கிண்ணம் ஜலத்தில் இருந்த சந்திர பிம்பம். ஜலம் இறைத்ததும் சந்திரனில்

சேருவது, குடம் உடைந்தால் குடஇடைவெளி வெட்டவெளியில் சேருவது போல்தான் கொள்ள வேண்டும்.

ஆகையால் एकमेवाद्वितीयम् என்ற அத்வைத நிலைக்கு மாறுதலாக இரண்டாம் பொருள் தனியாக இல்லவே இல்லை.

## 3.2.7 V परमत: सेतून्मानसंबन्धभेदव्यपदेशेभ्य: (7 सूत्राणि)

விஶிஷ்டாத்வைத மதப்படி இந்த அதிகரணம் பெரும்பாலும் அத்வைதத்திற்கு ஸமமே. ஆனால் பரம் = என்ற வார்த்தைக்கு வேறு என்பது அத்வைதிகள் கூறும் பொருள். விஶிஷ்டாத்வைதிகள் கூறும் மேலானது என்பது ஒரு பெரிய வேறுபாடு.

பூர்வபக்ஷம் :- பரமாத்மாவான விஷ்ணுவைக்காட்டிலும் உத்க்ருஷ்டமான பெரிய பொருள் இருந்தாக வேண்டும். இவரை அணை என்றும், சதுஷ்பாத் என்றும் अमृतस्य परं सेतुम् என்று ப்ராப்ய ப்ராபக ஸம்பந்தமும், ततो यदुत्तरतरं तदरूपमनामयम् என்று ரொம்ப பெரியது என்னும் மற்றொன்றை குறிப்பிடுவதாலும் பரமாத்மாவைக்காட்டிலும் பெரியவர் உண்டு.

ஸித்தாந்தம்:- அணை என்பதற்கு ஜலத்தை சிதற விடாமல் தடுப்பது என்று மட்டும் பொருள். எனவே இதனால் அடைய வேண்டிய வேறு பெரிய பொருள் இருப்பதாக ஆகாது. உபாஸனைக்காக சதுஷ்பாத் என்று குறித்து சொல்லப்படுகிறது. தன்னை அடைய தானே உபாயம் என்று சேது என்று கூறப்பட முடியும். மேலும் ஸர்வஜகத்திற்கும் நியந்தாவாக விஷ்ணு கூறப்படுவதால் அவரினும் பெரியது பற்றி கேள்வியே எழாது.

மத்வமதத்தில் இந்த அதிகரணம் நான்கு அதிகரணமாக கணக்கிடப்பட்டு விளக்கப்படுகிறது.

# 3.2.16 D परमत: सेतून्मानसंबन्धभेदव्यपदेशेभ्य: (3 सूत्राणि)

ஹரியினிடத்தில் மிகசிறந்த अतिशयितभक्ति - பக்தி செய்ய வேண்டுமா? வேண்டாமா? அவருடைய குணக்குவியல் லௌகீகமா? அலௌகீகமா? அது அலௌகீகமானால் ஞானம், ஆனந்தம் போன்ற வார்த்தைகளால் சொல்லப்படுவது பொருந்துமா?பொருந்தாதா? என்று விசார வரிசை.

பூர்வபக்ஷம் :- குடத்தைக்காட்டிலும் விலக்ஷணமான பொருளை குடம் என்று எவ்வாறு கூற முடியும். பகவான் ஆனந்தமானவன் என்றால் அது லௌகீகமான ஆனந்தமாகத்தான் இருக்க முடியும். எனவே எல்லா குணவாசகபதங்களும் லௌகீக பொருள்களைத்தான் உரைக்கின்றன.

ஸித்தாந்தம் :- விஷ்ணுவினுடைய ஆனந்தத்தன்மையை உலகில் கூறமுடியாத அணை, அளவற்றது. லோக விலக்ஷணத்வம், பிம்பம் என்றெல்லாம் உலக ஆனந்தத்திற்கு பொருந்தாத வார்த்தைகளால் விவரிப்பதால், விஷ்ணுவின் ஆனந்தம் அலௌகீகமானதுதான். இந்த ஆனந்தத்தையே अदृष्टाव्यवहार्यमलक्षणम् என்றெல்லாம் கூட வர்ணிப்பதால் விஷ்ணு குணங்கள் யாவும் லௌகீகம் அன்று. இருப்பினும் அந்தந்த வார்த்தையை உபயோகிப்பது (விஷ்ணுவிடம் ப்ரயோகம் பண்ணுவது) ஜீவனும் ஈஶனும் அம்சாம்சித்தன்மை உடையவர்கள் என்பதை உணர்த்துவதற்காகவேதான் என்று கொள்ள வேண்டும். இதற்கு உதாரணம் - ப்ரஸித்தமான பாதத்தைக்காட்டிலும் விலக்ஷணமான ஜீவனை पादोऽस्यविश्वा भूतानि என்ற இடத்தில் "ஸர்வ ஜீவர்களும் பாதமே" என்பதாகும்.

  

எனவே ஈஶ குணங்கள் அலௌகீகமே. ஆகையால் விஷ்ணுவிடம் விஶேஷமான பக்தி தேவை.

## 3.2.17 D स्थानविशेषात् प्रकाशादिवत् (2 सूत्रे)

முன்பு கூறிய குணங்கள் பிம்பம் சேது என்பது போன்ற அலௌகீக பதங்களால் கூறப்படுவதால் அலௌகீகங்கள் என்று கூறுவது ஸரியா? இல்லையா? பகவானுடைய ஆனந்தத்திற்கு ப்ரம்ம சிவாதிகளின் ஆனந்தங்களின் பிம்பத்வம் பொருந்துமா? பொருந்தாதா? ப்ரதிபிம்பானந்தத்தில் உள்ள விசித்திர தன்மைதான் காரணமா? வேறு காரணமும் உண்டா? என்று விசார வரிசை.

பூர்வபக்ஷம் :- वृद्धिहासभावत्वम् என்ற ஸூத்ரத்தில் கூறியபடி ப்ரம்மா, ருத்ரன், மற்றைய தேவர்கள் போன்றவர்களின் ஆனந்தத்தில் வேறுபாடுகள் (gradations) உள்ளதால், அவைகள் ஈஶ குணங்களின் ப்ரதிபிம்பம் என்றால் இவைகளின் பிம்பம் ஈஶ குணங்கள் என்றால் ஈஶ குணத்தில் வைசித்ரியம் ஏற்படும். பிம்பத்தில் வேறுபாடுகள் இல்லாமல் ப்ரதிபிம்பத்தில் வேறுபாடுகள் எப்படி வரமுடியும்? ஆகவே பிம்பத்வம் வர முடியாததால் அலௌகீகத்வம் கிடையாது என்பதால் விஶேஷபக்தி தேவையில்லை.

ஸித்தாந்தம் :- பிம்பத்தில் பலரகப்பட்டத்தன்மை (वै चत्र्यम्) இல்லாவிடினும் ஸூரிய பிம்பத்தில் வேறுபாடுகள் இல்லாவிடினும் ஸூர்யகாந்த கல்லின் இயல்பினால் ஸூரியகிரணங்களுக்கு அக்னி உண்டுபண்ணும் தன்மை ஏற்படுவது போல் ப்ரம்மன் முதலியவரின் பக்தியின் வைசித்ரியத்தாலும் பகவானின் ஐஸ்வர்ய பெருமையாலும் ஒரே விதமான பகவத் ஆனந்தத்தின் ப்ரதிபிம்பங்களில்

வேறுபட்டதன்மை ஏற்பட முடியும். எனவே ஈசுர குணங்களுக்கு பிம்பத்வம் பொருந்தும் ஆதலால் அவரிடம் மிகுந்த பக்தி தேவை.

## 3.2.18 D तथाऽन्यत्प्रतिषेधात् (1 सूत्रम्)

அத (अथ) பதத்தினால் ஸூசிக்கபட்ட ஈசுர பக்தி தேவையா? இல்லையா? ப்ரஹ்மம் வ்யக்தமா? அவ்யக்தமா? த்யானத்தில் தெரிவதுதான் ப்ரஹ்மமா?அல்லது வேறு உள்ளதா? என்று விசார வரிசை.

பூர்வபக்ஷம் :- ப்ரஹ்மம்தான் ஸர்வ கர்ம பலனையும் தருபவர் என்று ஸ்தாபிக்கப்பட போகிறபடியால் பக்தர்கள் எந்தெந்த விதத்தில் உபாஸிக்கின்றனரோ அவ்விதமே ப்ரஹ்மம் फलदाता ஆகிறார் என்பதால் த்யானிக்கப்பட்டவர் ப்ரஹ்மம் இல்லை என்றால் அவரை பலதாதா என்று உபாஸிக்க தேவையில்லை (வீண்). த்யானம் செய்பவர்களின் பன்மையைக்கொண்டு த்யேயனான ஈசுரனின் பன்மையும் இன்றியமையாதது என்பதால் த்யானகாலத்தில் அறிந்த ப்ரஹ்மமே பக்தியில்லாமலேயே புருஷனின் முயற்சியால் வ்யக்தம் ஆகலாம் என்பதால் பக்தி தேவையில்லை.

ஸித்தாந்தம்:- ஈசுரனின் குணங்கள் அலௌகிகமானவை. அப்ராக்ருத, நிர்தோஷ ஸர்வசுலக்ஷண திவ்ய ஸ்வரூப-விக்ரஹனான ஹரிக்கு பலவிதமான துர்லக்ஷண த்யானங்களால் அறியப்படும்போது அது உண்மையாகாது என்ற காரணத்தினால் த்யாதமான ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறுதான் ப்ரஹ்மம் என்பது திண்ணம். மேலும் "तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते" என்ற ஶ்ருதியில் த்யானத்தில் தெரிவதைக்காட்டிலும் ப்ரஹ்மம் வேறுபட்டது என்று கூறப்பட்டுள்ளது.

## 3.2.19 D अनेन सर्वगतं आयामशब्दादिभ्य:

(1 सूत्रम्)

ஹரி பக்தி தேவையா இல்லையா? ஹரிதான் ஸர்வகர்த்தாவா? சில நேரம் மற்றவருமா? ஹரி தனது ஸ்வாதந்த்ரியத்தை சில நேரம் மற்றவருக்கு தருவாரா? இல்லையா? என்று விசார வரிசை.

பூர்வபக்ஷம் :- ஹரியின் கிருஷ்ணாதி அவதாரங்களில், பிறரால் ஏவப்படும் தன்மை போன்ற நினைக்க முடியாத பலவித லீலைகள் காணப்படுவதுபோல் எங்காவது எப்பொழுதாவது தனது ஸ்வாதந்த்ரியத்தையும் தானம் தரலாம் என்பதால், ஹரிதான் ஸர்வஸ்ருஷ்டியிலும் கர்த்தா என்பதற்கு ப்ரமாணம் இல்லை. எனவே ஹரியிடம் மட்டுமே விஶேஷமான பக்திபண்ணத் தேவையில்லை.

ஸித்தாந்தம் :- स्वातन्त्र्यात् क्रीडते विष्णु: न हि स्वातन्त्र्यमन्यगम् | करोति क्वापि... என்ற (न्यायविवरणम्) வாக்கியத்தால் ஸ்வாதந்த்ரியத்தை துளியும் கூட மற்ற இடத்தில் தராமல் தன் லீலை பண்ணுகிறார். எனவே ஸர்வகர்த்தாவான ஹரியை பக்தி பண்ணியே தீர வேண்டும்.

## 3.2.8 A फलमत उपपत्ते: (4 सूत्राणि)

ஸந்தேஹம் :- நமக்கு இன்பதுன்பங்களை அளிப்பது நமது புண்ணிய பாபங்களா? கடவுளா? (கர்மாவால் ஆராதிக்கப்பட்ட கடவுளா?

பூர்வபக்ஷம்:- கர்மங்கள் நொடியில் அழியும் தன்மை கொண்டன. நமக்கு மறுஜன்மாவில் ஸ்வர்க்கம் போன்ற சுகம் தருவதற்கு அந்த

நேரத்தில் கர்மங்கள் இல்லாமல் போவதால், எவ்வாறு மறுமைக்காக புண்ணியம் செய்யமுடியும்? என்று கேட்டால் கர்மங்கள் யாகம், தானம், கோபுரம் கட்டுதல், குளம் வெட்டுதல் போன்றவைதான் உடனடியாக முடிந்துவிட்டாலும் உடனடியாக கர்மங்களிலிருந்து அபூர்வம் (கண்ணால் காண முடியாத) புண்ணியம், பாபம் என்று ஒன்று உண்டாகி அவை ஸ்வர்க்கம் நரகம் ஏற்படுவதை நீடித்து நின்று பயனைத்தருகின்றன. எனவே கடவுளை நாம் கற்பனை செய்ய வேண்டாம். கர்மாவே பலனை தரும்.

ஸந்தேஹம் :- கர்மாவானாலும் அபூர்வமானாலும் அவை ஜடம் ஆனதால் அவரவர்க்கு அந்தந்த நேரத்தில் வெவ்வேறு பயனைத் தருவதற்கு தேவையான ஸாமர்த்யம் இவைகளுக்கு கிடையாது. ஆகையால் நம்மால் சேவிக்கப்பட்ட அரசன் போன்றவர்கள் தக்க தருணத்தில் பயன் தருவதை காண்கிறோம். அது நமது கர்மங்களால் ஆராதிக்கப்பட்ட ஈஶ்வரன்தான் தக்க நேரத்தில் தங்களுக்கு தக்கப்படி இன்பதுன்பங்களை அளிக்கிறான். ஈஶ்வரனை நாம் கற்பனை பண்ணத் தேவையில்லை. ஶாஸ்த்ர நூல்கள் ஈஶ்வரனைக்கூறுகின்றன. மேலும் अन्नादो वसुदानो.. என்ற ஶ்ருதியானது கடவுளை பயன் தருபவராகக் கூறுகிறது. எனவே ரொம்பவும் ஆலோசித்தால் பூர்வபக்ஷியின் கூற்றுப்படி அபூர்வம் என்பதை காணாத ஒன்றை கற்பனை செய்வது தேவையில்லை என்று முடியும். எப்படியோ, கர்மா அல்லது அபூர்வம் மூலம் ஆராதிக்கப்பட்ட ஈஶ்வரன்தான் பயனைத்தருகிறார்.

## 3.2.8 V फलमत उपपत्ते: (4 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- நமது இன்பதுன்பபயன்களை நமது புண்ய பாபங்களே தருகின்றன. உழவுத்தொழிலின் பயனை நாம் மற்ற எந்த உதவியும் இல்லாமலேயே பெறுவதால், கர்மாக்களும்

ஸ்வர்கம், ஐஸ்வர்யம் போன்றவற்றை தர முடியும். வேதம் यजेत स्वर्गकाम: என்று ஸ்வர்க்கம் விரும்புபவன் யாகத்தினால் அதை அடையட்டும் என்பதாகக் கூறுகிறது. நொடியில் க்ரியை முடிந்தாலும் பயன் ஏற்படும்வரை அபூர்வம் (புண்ணியம் பாபம்) என்று ஒரு இடைப்பொருள் உண்டாகிறது. அது ஸ்வர்கம் தந்த பிறகுதான் அழியும். எனவே கர்மாவேதான் பயன் தருவதாகும்.

ஸித்தாந்தம்:- यजेत என்றாலேயே தேவதையை ஆராதிக்கவும் என்றுதான் பொருள். யாகத்தினால் ஆராதிக்கப்பட்ட தேவதைகள் (பகவான் இவர்கள் வழியாக) பயனைத் தருகின்றனர். மேலும் वायव्यं श्वेतमालभेत भूतिकाम: என்று ஐஸ்வர்யம் வேண்டுபவன் வாயுவைக்குறித்து யாகம் செய்தால் வாயு த்ருப்தி அடைந்து ஐஸ்வர்யம் தருவார் என்று சொல்லப்பட்டுள்ளது. இவ்விதம் யாகங்கள் தேவதைகளின் த்ருப்தி ஏற்படுத்தி அவர்கள் வழியே பயன் ஏற்படுவதால் நடுவே இடைப்பொருள் அபூர்வம் கற்பனை வேண்டாம்.

## 3.2.20 D फलमत उपपत्ते: (4 सूत्राणि)

ஹரிதான் ஸர்வகர்த்தா என்றால் அவருக்கு பாரபக்ஷம் போன்ற குறை வராமல் இருக்க கர்மாபேக்ஷை கூறுகிறோம். இப்பொழுது பயனானது கர்மாவினாலேயே வரட்டுமே, கர்மாதான் பயனுக்கு கர்த்தா என்பதால் ஸர்வகர்த்ருத்வம் விஷ்ணுவிற்கு எப்படி? என்று விசாரிக்கப்படுகிறது. கர்மாவே பயனைத்தருகிறது, ஹரி பேருக்கு துணையா? அல்லது ஹரி பயனைத்தருவதற்கு கர்மா துணையா? உபநிஷத்தில் கூறும் रातिर्दातु: परायणम् -என்று கர்ம பலதாதா கடவுள் என்பது கௌணமா? நிஜமா? "கர்மா இருந்தால் பயன், இல்லையேல் இல்லை" என்ற அன்வயவ்யதிரேகம் கர்மாவிற்கு துணைத்தன்மையை கூறுவதா? முக்கிய காரணத்வத்தைதெரிவிப்பதா? என்று விசார வரிசை.

பூர்வபக்ஷம்:- ஈஶ்வரன் பயனைத்தருகிறான் என்றாலும் அவருக்கு பாரபக்ஷாதிகளான குற்றம் வராமலிருக்க நாம் கர்மாவிற்கு காரணத்வம் ஏற்றே ஆக வேண்டும் என்பதால் கர்மாதான் பலனை தருவது. கடவுள் பலனைத்தரும் வேலையில் ப்ரேரக- தூண்டுபவன் மட்டுமே என்று கொள்ளவேண்டும். மேலும் மிகவும் ஆப்தரான ஜைமினி முனிவரின் மதம் கர்மாதான் பயனைத் தருவது என்று கூறுகிறது. ஹரியானவர் கர்மாவிற்கு துணை புரிபவர். எனவே ஈஶ பக்தி வேண்டாம்.

ஸித்தாந்தம்:- கர்மாக்கள் ஜடமானவை என்பதால் நேரான பலதாத்ருத்வம் பொருந்தாது. ஈஶன் சேதனன் ஆனதால் இவர்தான் அவரவர் வினைக்கு ஏற்றப்படி பயனைத் தருகிறார். இவ்வாறு இருப்பினும் கர்மாவானது காரண கோஷ்டியில் உள்ளதால் அன்வயவ்யதிரேகம் (கர்மா உண்டேல் பயன், இல்லையேல் இல்லை) தவறு இல்லை. எனவே ப்ரஹ்மம்தான் பயன் தருவது. கர்மா உபகரணம் மட்டுமே.



## மூன்றாம் பாதம்

ப்ரஹ்மஸூத்ரத்திலேயே மிகப்பெரிய பாதம். இந்த பாதத்தில் குணோபஸம்ஹாரம் கூறப்படுகிறது. அத்வைதத்தின்-படி 36 அதிகரணங்கள், விஶிஷ்டாத்வைதத்தின்படி 26 அதிகரணங்கள், த்வைதத்தின்படி 42 அதிகரணங்கள் என்று வேறுபாடு உள்ளது.

## 3.3.1 A सर्ववेदान्तप्रत्ययं चोदनाद्यविशेषात् (4 सूत्राणि)

வேதாந்தங்களில் பல பல உபாஸனைகள் விதிக்கப்படுகின்றன. இந்த உபாஸனைகள் வெவ்வேறு ஶாகைகளில் (branches) கூறப்பட்டுள்ளன. ஒவ்வொன்றும் அந்தந்த ஶாகைகளின் முறைப்படி செய்யப்படுகின்றன. எனவே இவை தனித்தனியே ஶாகா வேறுபாட்டினால் வேறுபட்டனவா? ஒன்றா? என்று ஸந்தேஹம்.

பூர்வபக்ஷம் :- கௌதமம், காடகம், வாஜஸனேயம் என்றெல்லாம் தனி பெயர்கள் உள்ளதால் (விஷயம் ஒன்றானாலும்) வேறு வேறு உபாஸனைதான். மேலும் அந்தந்த ஶாகையில் நியமங்கள் வேறு வேறாக கூறப்படுகின்றன. அதர்வவேத உபாஸனைக்கு தலையில் நெருப்பு செட்டியை வைத்துக்கொள்ள வேண்டும். மற்றொரு ஶாகையில் தரையில் உணவு உண்ண வேண்டும் - என்று இதனாலும் உபாஸனை தனித்தனியே. ஶாகா பேதத்தினால்.

ஸித்தாந்தம் :- ஶாகைகள் வேறுபட்டாலும் உபாஸ்யம் (அதன் தேவதை) ஒன்றுதான் என்பதால் உபாஸனை ஒன்றுதான். ப்ராணனை உபாஸித்தல் சாந்தோக்யம், ப்ருஹதாரண்யகத்தில் ஒரே விதமாக விதிக்கப்படுகிறது. இதே போல் பஞ்சாக்னி வித்யா

என்ற உபாஸனை வெவ்வேறுஶாகையிலும் ஒரேபோல்தான் விதிக்கப்படுகிறது. அதேபோல் அந்தந்த உபாஸனையின் பயனும் ஒரே விதமாகவே கூறப்படுகிறது. கௌதமம், காடகம்,வாஜஸனேயம் - என்ற பெயர்களின் வேறுபாடு ஶ்ருதியில் உபாஸனைக்கு கொடுக்கப்படவில்லை. ஶாகையை ஒட்டி நாமாக சூட்டியபெயர். நெருப்பு சட்டியை தரித்தல் என்ற நியமம் உபாஸனைக்கு அல்ல. அந்தப் பகுதியை அத்யயனம் பண்ணுவதற்காக விஶேஷமாக அங்கு சொல்லப்பட்டுள்ளது. எனவே ஏக தேவதாகமான உபாஸனை எங்கு (எந்த ஶாகையில்) கூறப்பட்டாலும் அவை ஒன்றே.

## 3.3.1 V सर्ववेदान्तप्रत्ययं चोदनाद्यविशेषात्
## (5 सूत्राणि)

விஶிஷ்டாத்வைதத்தில் இந்த அதிகரணமும் அடுத்த அதிகரணமும் சேர்ந்து ஒன்றாக கணக்கிடப்பட்டு (4+1) விளக்கப்படுகின்றது.

ஸந்தேஹம் :- வைஶ்வானர, தஹர உபாஸனாதிகளில் வெவ்வேறுஶாகையில் கூறிய குணங்கள்வேறுபட்டால் எல்லாம் ஒன்று சேர்ந்து உபாஸிக்க வேண்டுமா? அந்தந்த ஶாகைகள் மட்டும்தானா?

அநேகமாக அத்வைத ஸித்தாந்தம் போலவேதான்.

பூர்வபக்ஷம் :- ஶாகா பேதத்தினால், மறுபடி கூறல் என்ற இரண்டு யுக்திகளால் வைச்வானர உபாஸனை வேறுப்பட்டதுதான். மேலும் உபாஸனைக்கான நியமங்கள் வேறுப்படுகின்றன. எனவே குணங்களுக்கு உபஸம்ஹாரம் சேர்ப்பது தேவையில்லை.

ஸித்தாந்தம் :- நியமங்கள் வேறுபாடு உபாஸனைக்கு அல்ல.

அந்தப்பகுதியை அத்யயனம் பண்ணுவதற்குத்தான். ஶாகா-பேதத்தில் புனருக்தி தேவைதான். இதனால் வேறுபாடு வராது. எனவே ஒரு ஶாகையில் சில குணங்கள் கூறியிருப்பின், மற்றொரு ஶாகையில்கூறிய குணங்களை சேர்த்துதான் உபாஸிக்க வேண்டும்.

## 3.3.1 D सर्ववेदान्तप्रत्ययं चोदनाद्यविशेषात्

(4 सूत्राणि)

ஜிக்ஞாஸா என்று கூறிய உபாஸனை இந்த பாதத்தில் கூறப்படுகிறது.

जिज्ञासा - என்று கூறிய ஸர்வ ஸச்ஶாஸ்த்ர ச்ரவணம், மனனங்கள் வேண்டுமா? வேண்டாமா? ப்ரஹ்மமானது தன் தன் ஶாகையில் கூறியபடி அறியவேண்டுமா? ஸர்வவேதங்களிலும் கூறியபடியா? ஹரியை அறிவதில் சாதக ப்ரமாணம் இல்லை, பாதகம் உள்ளதா? மாறுதாலா? ப்ரதி ஶாகையிலும் பொருள் வேறுபாடு உண்டா? இல்லையா? என்று விசார வரிசை.

பூர்வபக்ஷம் :- ப்ரஹ்மம் என்பது இப்படித்தான் அறியப்பட வேண்டும் என்பதற்கு ப்ரமாணம் இல்லை. காண்வ, மாத்யந்தின - போன்ற வெவ்வேறு ஶாகைகளை ஒருவன் கற்க முடியாதானதாலும், இதற்காக ப்ரஹ்ம ஞானத்தில் மாந்தர்களை விலக்குவது ஸரியில்லை என்பதாலும் அந்தந்த ஶாகையில் கூறியபடி அவரவர் அறிய வேண்டும் என்பதால் எல்லா விதமான சாஸ்த்ரங்களினும் ச்ரவணம், மனனாதிகள் பண்ண தேவை இல்லை.

ஸித்தாந்தம் :- பகவத் ஞானத்திற்காக இயற்றப்பட்ட "आत्मेत्येवोपासीत" என்ற காண்வ போன்ற ஶாகைகளில்

கூறப்படும் விதிகளை அறிவதற்காக ஏற்பட்ட अत्र ह्येते सर्वे एकं भवन्ति (இதில் எல்லாம் ஒன்றாகின்றன) என்ற அர்த்தவாதங்களுக்கும் स्वाध्यायोऽध्येतव्यः, वेदः कृत्स्नोऽधिगन्तव्यः (வேதம் யாவும் கற்கப்பட வேண்டும்) என்ற கட்டளை யாவருக்கும் பொதுவானதாகும். மேலும் सर्ववेदोक्तमार्गेण कर्म कुर्वीत என்ற ஸ்ம்ருதியில் எல்லா வேதங்களிலும் கூறிய கர்மாக்களில் யாவருக்கும் உரிமை இருப்பதாலும் மற்றும் சில ப்ரமாணங்களாலும் शाखाभेदो ह्यशक्तिजः, முடியாதவனுக்குத்தான் ஶாகாபேதம் என்று சொல்லியுள்ளதாலும், ப்ரஹ்மமானது ஸர்வ வேதாந்தரீதியாய்த்தான் அறியப்பட வேண்டும். எனவே ஸ்வஶக்தியை அனுஸரித்து கூடியமட்டில் ஸர்வஶாஸ்த்ர மனனங்களை செய்ய வேண்டும்.

## 3.3.2 A उपसंहारोऽर्थाभेदाद्विधिशेषवत्समाने च (1 सूत्रम्)

ஒரே உபாஸனை வெவ்வேறு ஶாகையில் விதவிதமாக கூறப்பட்டுள்ளதால் மற்றதில் கூறிய குணங்களை சேர்த்து உபாஸிக்க வேண்டுமா? வேண்டாமா? என்ற விசாரத்தில் -

பூர்வபக்ஷம் :- ப்ராண வித்யையில் "रेतोहोच्चक्राम" என்று ஒரு விஶேஷம் கூறப்பட்டிருக்கிறது. (வாஜஸனேயத்தில்). ஆனால் சாந்தோக்யத்தில் கூறப்படவில்லை. இந்நிலையில் சாந்தோக்யத்தில் கூறாததால் இவர்கள் அதை சேர்த்துக்கொள்ள தேவையில்லை.

ஸித்தாந்தம் :- மற்றொரு ஶாகையில் கூறப்பட்டிருப்பதால் சேர்த்துக் கொள்ளத்தான் வேண்டும். கர்மகாண்டத்தில் அக்னிஹோத்ராதிகளில் ஶாகாந்தரத்தில் கூறியவற்றை சேர்த்து தானே அனுஷ்டானம் செய்கிறோம். தன் ஶாகையில் கூறிய குணங்களாலேயே

உபாஸனை பூர்த்தி பண்ணலாம் என்றாலும் குணம் ஏற ஏற பயன் ஏறும் ஆதலால் சேர்த்துத்தான் உபாஸிக்க வேண்டும்.

இந்த அதிகரணம் சென்ற அதிகரணத்திலேயே விஶிஷ்டாத்வைதத்தில் சேர்க்கப்பட்டது.

## 3.3.2 D उपसंहारोऽर्थाभेदाद्विधिशेषवत्समाने च

(4 सूत्राणि)

மத்வ மதத்தில் இந்த அதிகரணமும், அடுத்த அதிகரணமும் சேர்ந்து ஒன்றாக கணக்கிடப்படுகிறது.

முன்பு கூறிய ஸர்வவேதாந்தஜ்ஞானம் தேவையா? இல்லையா? அதற்காக ஸர்வஉபாஸனைகளிலும் குணங்களின் உபஸம்ஹாரம் (மற்ற ஶாகைகளிலிருந்தும் குணங்களை சேர்ப்பது) பண்ணி ப்ரஹ்மத்யானம் பண்ண வேண்டுமா? வேண்டாமா? என்று விசாரம்.

பூர்வபக்ஷம் :- ஸர்வகுண உபஸம்ஹாரம் பண்ணி த்யானம் செய்வது நடைமுறையில் ஒவ்வாது. ஒரே நேரத்தில் ஸர்வ ஶாகோபஸம்ஹாரம் செய்து மனதில் நொடியில் த்யானிப்பது முடியாத ஒன்றல்லவா?முடிந்த மட்டில் சேர்த்து த்யானம் என்ற பக்ஷம் ப்ரமாணம் அற்றது. மேலும் "आत्मेत्येव उपासीत" என்று ஆத்மாவை மட்டும் உபாஸிக்கவும் என்று கூறுவதற்கு இது இடையூறு. இதற்கு ஸமாதானமாக குணோபஸம்ஹாரம் வேண்டாம் என்றால் இதற்கும் ஸ்பஷ்டமாக ப்ரமாணம் இல்லை. ஆத்மேத்யேவ உபாஸீத என்ற வாக்யத்திற்கு ஆத்மாவை விட கூடாது என்பதற்காக ஏவ என்று கூறியது, மற்றதை சேர்க்கலாம் என்றும் கூற முடியுமே. இப்படியாக இருவிதமான த்யானமும் ஸரியில்லை என்பதால் சென்ற அதிகரணத்தில் கூறிய

சக்தர்களுக்கு ஸர்வவேதஞானம், அசக்தர்களுக்கு யதாஶக்தி ஞானம் என்ற ஸித்தாந்தம் தவறு.

ஸித்தாந்தம் :- இரண்டுவித த்யானமும் ஸரியே, என்பதால் முன்பு கூறிய அதிகரண ஸித்தாந்தம் குற்றமற்றது. उपास्य: एक: என்று (भाल्लवेय) ஶ்ருதிப்படி ஸர்வவேதோக்த குணங்களை சேர்த்து த்யானமானது விதிக்கப்பட்டுள்ளது. सर्वगुणा: सर्वदैव ह्यास्या: என்றும் (न्यायविवरणे उक्त) ஶ்ருதி உள்ளது. இல்லையேல் இந்த விதி வீணாகிவிடும். மேலும் நாரதர் சாந்தோக்ய உபநிஷத்தில் தன்னை எல்லா வேதங்களையும் அறிந்தவர் என்றும், ஒரு இடத்தில் सोऽहं नामविदेवास्मि என்றபாடத்தில் எல்லாம் பகவன்நாமா என்றும் கூறப்பட்டுள்ளது. (ஸர்வவித்யை-களும் பகவன்நாமமே). "नाम वा एता ब्रह्मण: सर्वविद्या:, तस्मादेक: सर्वगुणै: विचिन्त्य:" என்றும் கூறப்படுகிறது. आत्मेत्येव என்ற இடத்தில் ப்ரஹ்மத்தை விடாமல் இருந்து த்யானம் என்றுதான் பொருள். எனவே ஸர்வகுணோபஸம்ஹாரம் பொருந்தும். முடியாதவர்களுக்கு அனுஸம்ஹாரம் என்பதும் ஸரியே. எனவே சென்ற அதிகரணமும் இதுவும் ஸரியே.

## 3.3.3 A अन्यथात्वं शब्दादिति चेन्नाविशेषात्

(3 सूत्राणि)

ஸந்தேஹம் :- ப்ருஹதாரண்யகத்திலும் சாந்தோக்யத்திலும் கூறப்பட்டுள்ள உத்கீத வித்யை (उद्गीथविद्या) ஒரே விதமா? வேறா?

பூர்வபக்ஷம் :- இரண்டிலும் பெயர் ஒன்று, ப்ராணனின் பெருமை (புலன்களை விட) அதிமாகக் கூறப்பட்டுள்ளது. எனவே இரண்டும் ஒன்றே என்று கொள்ள வேண்டும்.

ஸித்தாந்தம் :- இவை பெயர் ஒன்றானாலும் வெவ்வேறுதான். உபாஸ்ய ஸ்வரூபம் வேறாக உள்ளது. சாந்தோக்யத்தில் உத்கீத என்பதான ஸாமபாகத்தை உபாஸிக்குமாறு கூறப்படுகிறது. ஆனால் ப்ருஹதாரண்யகத்தில் உத்கீதத்தை கானம் பண்ணக் கூடிய உத்காதா என்பவரை ப்ராணனாகஉபாஸிக்கும்படி கூறியுள்ளது. சிற்சில கதாபாகங்கள், தேவாசுரர்களின் சண்டை, தேவர்களின் வெற்றி போன்று ஸமமாக இருப்பினும் அது உபாஸனாபேதத்தை கூறமுடியாது, இந்த பகுதி அர்த்தவாதம் ஆகும். எனவே இந்த உத்கீத வித்யை உபாஸனை தனித்தனிதான்.

## 3.3.2 V अन्यथात्वं शब्दादिति चेन्नाविशेषात् (4 सूत्राणि)

இங்கு விசிஷ்டாத்வைத மதத்தில் இந்த அதிகரணத்தையும் அடுத்த அதிகரணத்தையும் சேர்த்து கணக்கிட்டு ஒன்றாக விளக்கப்படுகிறது.

இங்கு பூர்வபக்ஷம் ஸித்தாந்தம் இரண்டும் அத்வைதத்திற்கு ஸமமாக உள்ளது. வேறுபாடு இல்லை.

மத்வ மதத்தில் இந்த அதிகரணம் சென்ற அதிகரணத்துடன் விளக்கப்பட்டுவிட்டது.

## 3.3.4 A व्याप्तेश्च समञ्जसम् (1 सूत्रम्)

ओमित्येतदक्षरमुद्गीथमुपासीत என்று சாந்தோக்யத்தில் வரும் வாக்யத்தில் "உத்கீதம் ஓங்காரம்" என்று இரண்டு வார்த்தைகளும் ஒரே விபக்தியில் கூறப்படுகிறது. எனவே இங்கு நான்கு விதமான ஸந்தேஹம். 1) நாமத்தை ப்ரஹ்மமாக

உபாஸனை போல இங்கு உத்கீதத்தை ஓங்காரமாக எண்ணி உபாஸிக்கலாமா?

2) உத்கீதமும் ஓங்காரமும் ஐக்யமானதா? (जीवो-ब्रह्म மாதிரி)

3) தவறான அறிவை கண்டிப்பதற்காக "பாம்பு என்பது கயிறு" என்பது போல் உத்கீதம் என்பது இல்லை ஓங்காரம் என்று இரண்டில் ஒன்றை விலக்குவதா?

4) நீலமான பூ என்பது போல ஓங்காரத்திற்கு உத்கீதம் என்பது விஶேஷணமா?

பூர்வபக்ஷம்:- நான்கு விதமாகவும் ஸாமானாதிகரண்யம் ஸம்பவிக்கலாம் என்பதால் இங்கு தீர்மானம் இல்லை. அதற்கு காரணம் கிடைக்காததால்.

ஸித்தாந்தம் :- நான்காவதான விஶேஷணபக்ஷம்தான் என்பது நிர்ணயம். ஏனெனில் ஓங்காரம் எத்தனையோ இடங்களில் கூறப்படுகிறது. எந்த ஓங்காரத்தை உபாஸனை பண்ண வேண்டும் என்று கேள்வி வரும்போது உத்கீதத்தின் உறுப்பான ஓங்காரத்தை குறிப்பிடுவதற்காக உத்கீத என்ற பதம் கூறப்படுகிறது. எனவே இங்கு விஶேஷண-விசேஷ்ய பாவத்தில்தான் ஸாமானாதிகரண்யம் கூறப்பட்டுள்ளது. ஒரே விபக்தியில் नीलं उत्पलम् என்பது போல் என்று கொள்ளவேண்டும்.

விஶிஷ்டாத்வைதப்படி இந்த ஸூத்ரம் தனி அதிகரணம் அன்று. போனதில் சேர்ந்தது.

## 3.3.3 D प्राप्तेश्च समञ्जसम् (1 सूत्रम्)

மத்வமதத்தில் प्राप्तेश्च என்று பாடம்.

பூர்வபக்ஷம் :- ஸர்வகுணோபஸம்ஹாரம் செய்து உபாஸிப்பது அல்லது முடிந்தமட்டில் சேர்த்து உபாஸிப்பது என்ற இருவிதமான உபாஸனம் அதிகாரியின் பேதத்தினால் வரலாம்

என்பதற்கு வ்யவஸ்தை பண்ண ப்ரமாணம் உள்ளதா இல்லையா என்று விசாரிக்கப்படுகிறது. இவருக்கு இதில் அதிகாரம் இவருக்கு வேறொன்றில் அதிகாரம் என்பதற்கு நியாமக ப்ரமாணம் இல்லாததால் இரண்டுவிதமான த்யானமும் தவறு.

ஸித்தாந்தம் :- இது தவறு. यस्य यावत् गुणाः स्पष्टं प्रतिभासन्ते उपासने என்ற (நியாயவிவரணத்தில் கூறிய) ஶ்ருதிப்படி த்யானகாலத்தில் ஒரே நொடியில் ஸ்பஷ்டஸர்வகுணப்ரதீதி வரும் அளவிற்கு இருவிதமான அதிகாரிகள் தனக்கு முடிந்த மட்டில் குணவானான ஹரியை உபாஸனை பண்ண வேண்டும்.

## 3.3.5 A सर्वभेदादन्यत्रेमे (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- ப்ராணவித்யையானது ப்ருஹதாரண்யகத்திலும் சாந்தோக்யத்திலும் கூறப்படுகிறது. ஆனால் சில குணங்கள் ப்ருஹதாரண்யகத்தில் வசிஷ்டத்வம் ப்ரதிஷ்டத்வம் போன்றவை, சாந்தோக்யத்தில் கூறப்படவில்லை. இந்நிலையில் வசிஷ்டத்வம் போன்ற குணங்களை சாந்தோக்ய வித்யையில் சேர்க்க வேண்டியது இல்லை. ஏனெனில் य एवं वेद என்பதாக ஒவ்வொரு ஶாகையிலும் அங்கு கூறப்பட்டபடி (एवं= இவ்வாறு) என்று பொருள்படும்படி ஏவம் என்ற சொல் உள்ளது.

ஸித்தாந்தம் :- அந்தந்த ஶாகையில் கூறப்பட்ட, கூறப்படாத இருவிதமான குணங்களையும் “ஏவம்” என்று குறிப்பிட முடியும். குணங்களை உடைய ப்ராணன் ஒருவன்தானே என்பதால் ப்ராணன் வழியாக எல்லா குணங்களும் புத்தியில் இருப்பதால் ஏவம் என்று கூற முடியும். எனவே ஓரிடத்தில் கூறிய குணங்களை உபாஸ்யன் ஒன்றானதால் மற்ற எல்லா இடங்களிலும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

## 3.3.3 V सर्वभेदादन्यत्रेमे (1 सूत्रम्)

விஶிஷ்டாத்வைதிகளுக்கு இங்கு பூர்வபக்ஷம் ஸித்தாந்தம் அத்வைதிகள் போலவே. சாந்தோக்யம், ப்ருஹதாரண்யகம் கௌஷீதகீ - உபநிஷத்துகளில் பொதுவாக ப்ராணன் ஜ்யேஷ்டனும், ஸ்ரேஷ்டனுமாக இருப்பதை விவரிப்பது, வாக்கு, மனம், போன்றவைகளின் சிறப்பு ப்ராணாதீனம்தான் என்று ஸமமாக கூறப்படுவதால் ஓரிடத்தில் கூறப்படாத குணங்கள் உபாஸ்யனின் வழியாக மற்ற இடத்தில் சேர்த்துத்தான் உபாஸிக்க வேண்டும்.

## 3.3.4 D सर्वभेदादन्यत्रेमे (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- முன்பு கூறிய ஸர்வகுணத்யானம் செய்யப்பட வேண்டுமா? இல்லையா? அதனால் பயனில் விஶேஷம் உண்டா இல்லையா? இதற்கு ப்ரமாணம் இருக்கிறதா இல்லையா? என்று விசார வரிசை. மோக்ஷமாகிற பயன் அஸர்வகுண த்யானத்தினாலும் கிடைக்கலாம் என்பதால் ஸர்வகுண த்யானத்தின் பயன் அதிகம் என்பதற்கு ப்ரமாணம் இல்லை. ஸர்வகுணத்யானம் வீண் என்பதால் அது வேண்டாம்.

ஸித்தாந்தம் :- சாதன தாரதம்யத்தினால் சாத்ய (ஸாத்⁴ய) தாரதம்யம் கட்டாயம் உண்டு. அக்னிஹோத்ரத்தை விட வாஜபேயத்திற்கு அதிகமான பயனன்றோ! மேலும் உபகோசலவித்யையில் संपूर्णोपासनात् ब्रह्मा संपूर्णानन्दभाग्भवेत् (பாத்மம்) ஸ்ம்ருதியிலும் பயனின் தாரதம்யம் கூறப்படுகிறது. எனவே ஸர்வகுணத்யானம் கட்டாயம் பண்ண வேண்டும்.

## 3.3.6 A आनन्दादय: प्रधानस्य (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- "आनन्दो ब्रह्म" "सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म" ஆனந்தம், ஸத்யம், ஞானம், அனந்தம் என்றெல்லாம் கூறப்படும் குணங்கள் எல்லா இடத்திலும் சேர்த்துக்கொள்ளத் தேவையில்லை. ஐதரேயத்தில் "प्रज्ञानं ब्रह्म" என்று மட்டும் கூறப்பட்ட இடத்தில் இவைகளை சேர்க்க வேண்டாம். சகுண உபாஸனையில் वामनीत्वं, भामनीत्वम् - இஷ்டத்தை அளிப்பவர், பெருமை தருபவர் போன்ற குணங்கள் கூறப்பட்டிருப்பதால் மற்ற இடத்தில், தஹரவித்யையில் सत्यकाम: सत्यसंकल्प: போன்றவை கூறும் இடத்தில் சேர்க்க வேண்டாம் என்பது இதற்கு உதாரணம்.

ஸித்தாந்தம் :- உதாரணம் தவறானது. வாமனித்வம் போன்ற குணங்கள் த்யானம் செய்யப்பட வேண்டியவைகளாக விதிக்கப்படுகின்றன. எனவே அந்தந்த விதிப்படி வ்யவஸ்தை ஸரியே. ஆனால் ஆனந்த, ஸத்ய போன்றவை புரிந்து கொள்ளப்பட வேண்டியவை மட்டுமே. விதி கிடையாது. எனவே தனித்தனியாக பிரிக்கும் விதி இங்கு இல்லாததால் இங்கு எல்லாம் சேர்த்து புரிந்து கொள்ள வேண்டும்.

இந்த அதிகரணம் விஶிஷ்டாத்வைதத்தில் அத்வைதப்படி அடுத்த இரண்டு அதிகரணங்களுடன் சேர்த்து ஒன்றாக கணக்கிடப்பட்டு விளக்கப்படுகிறது.

## 3.3.4 V आनन्दादय: प्रधानस्य (7 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- ஸத்யம், ஞானம், ஆனந்தம் போன்ற ப்ரஹ்மகுணங்களை வேறிடத்தில் கூறியதை மற்றொரு உபநிஷத்தில் சேர்க்க தேவையில்லை. ஏனெனில் ப்ரஹ்மகுணங்கள் முடிவு இல்லாத அனந்தமானது. ஒரு

ப்ரகரணத்திலிருந்து மற்றொரு ப்ரகரணத்தில் கொண்டு சொல்ல ப்ரமாணம் இல்லை. இதற்கு உதாரணம் ஆனந்தமய கோசத்தில் तस्यप्रियमेवशिरः = ப்ரியசிரஸ்த்வம் போன்ற தன்மைகள் வேறிடத்தில் சேர்க்கப்படுவதில்லை. அதுபோல் இங்கும் குணோபஸம்ஹாரம் வேண்டாம்.

ஸித்தாந்தம் :- குணம் எல்லாம் ப்ரதானதிற்கு அமைவதால், குணவானான, ப்ரதானமான ப்ரஹ்மம் எல்லா உபநிஷத்துக்களிலும் ஒன்றே என்பதால், ஆனந்தம்,ஸத்யத்வம், போன்ற குணங்கள் வெவ்வேறு உபநிஷத்தில் கூறப்பட்டிருந்தாலும் எங்கும் சேர்த்துக் கொள்ள வேண்டும். ஆனால், तस्यप्रियमेवशिरः = ப்ரியசிரஸ்த்வம் போன்றவைகள் ப்ரஹ்மத்தின் ஸ்வபாவ ரூபகமான தன்மைகள் அல்ல. எனவே அவைகள் சொன்ன உபநிஷத்தில் மட்டுமே ஏற்கப்பட வேண்டும். ஸத்ய, ஞான, அனந்த, ஆனந்த போன்றவைகள் ஸ்வரூபத்தில் அமைந்தன. எனவே இந்த குணங்கள் எங்கும் சேர்த்துக்கொள்ளப்பட வேண்டியவை.

## 3.3.5 D आनन्दादयः प्रधानस्य (1 सूत्रम्)

மத்வ மதத்தில் இந்த அதிகரணம் (மூன்று ஸூத்ரங்களை கூடியதாக அத்வைதிகள் விளக்கினாலும்) ஒவ்வொரு ஸூத்ரம் ஒரு அதிகரணமாகக் கொண்டு மூன்று அதிகரணங்களாக கணக்கிடப்படுகின்றன.

பூர்வபக்ஷம் :- ப்ரஹ்மத்தின் த்யானமானது ஸரியா? இல்லையா? ஸர்வமுமுக்ஷுக்களாலும் த்யேயமான குண நிர்ணயம் ஸம்பவிக்குமா? ஸம்பவிக்காதா? ஸர்வ ஜனங்களாலும் த்யேயமான குணங்களின் எண்ணிக்கையும், பெயரும் தீர்மானிக்கப்பட்டுள்ளதா? இல்லையா என்று விசார வரிசை.

இப்போது பூர்வபக்ஷம் இவ்வாறு எண்ணிகையிலும், பெயரிலும் தீர்மானிக்கப்பட்ட குணங்கள் இருந்தால் அவை எத்தனை? ஆனந்தம் முதலிய நான்கு ஐந்து குணங்கள் என்று கூறினால் இவைகளை மட்டும் ஸமுச்சயித்து மற்றதை விடுவது எவ்வாறு பொருந்தும்? மேலும் இந்த 4,5, தவிர மற்றவைதான் என்று ஏன் கூறக்கூடாது? இவ்வாறும் ஸர்வமுமுக்ஷுக்களால் நிர்ணயம் இல்லாததால் பகவத் த்யானம் வேண்டியதில்லை.

ஸித்தாந்தம் :- எல்லா ஜனங்களாலும் மிக அதிகமான குணங்களை மனதில் வாங்கி த்யானம் செய்வது முடியாது என்பதால் நிர்தோஷப்ரஹ்மானுபவமாகிற மோக்ஷத்திற்கு இன்றிமையாதவை நிர்தோஷத்வ, ஞான ஆனந்தங்கள் மட்டும் "सच्चिदानन्द आत्मा" (ब्रह्मतर्क) என்று கூறப்பட்டுள்ளதால், ஸத், சித், ஆனந்த, ஆத்மா என்ற நான்குதான் ஸர்வமுமுக்ஷுத்யேயம் ஆகின்றன. எனவே பகவத் த்யானம் மிகத் தேவை.

## 3.3.6 D प्रियशिरस्त्वाद्यप्राप्तिरुपचयापचयौ हि भेदे (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- முன்பு கூறிய நிர்ணயம் ஸரியா? தவறா? प्रयमेव शर: - என்று கூறப்பட்ட ப்ரியசிரஸ்த்வம் போன்றவை ஸர்வோபாஸ்யமா இல்லையா? இவை உபாஸ்யமாகாவிட்டால் நமக்கு பயன் கிடைக்குமா? கிடைக்காதா? என்று விசார வரிசை. ப்ரியசிரஸ்த்வம் போன்றவைகளும் ஆனந்தத்தின் பிரிவுதான் என்பதால் இவைகளும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

ஸித்தாந்தம் :- ஆனந்த விஶேஷம் என்று கூறியதாலேயே ப்ரியசிரஸ்த்வம் ஸர்வோபாஸ்யமானால் மற்ற எல்லா குணங்களுமே நான்கு குணங்களின் உட்பிரிவானதால் எல்லோராலும் எல்லா

இடங்களிலும் உபாஸிக்கப்பட வேண்டும் என்று ஆகிவிடும். மேலும் दर्शनाञ्च (3.2.21) என்ற இடத்தில் கூறியபடி பயனில் வேறுபாடு இல்லாமல் போய்விடும். எனவே பயனில் வேறுபாடு சித்திப்பதற்காக உபாஸனையில் தாரதம்யம் தேவை. என்பதால் எல்லோராலும் ப்ரியசிரஸ்த்வம் போன்றவை உபாஸிக்கப்பட வேண்டியதில்லை. இதனால் பயன் இல்லாமல் போகாது. "यथा योग्यान् गुणपूर्णान् उपास्यफलं भवेत् (वाराह)" என்ற ஶ்ருதிப்படி, தன் தனக்கு முடிந்த குண உபாஸனையாலேயே மோக்ஷபயன் ஏற்படும். எனவே நான்குதான் ஸர்வ உபாஸ்யங்கள் என்ற நியமம் தவறல்ல.

## 3.3.7 D इतरेत्वर्थसामान्यात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- யோக்யதையை அனுஸரித்து உபாஸனையாலேயே பயன் ஏற்பட்டால் தேவதைகள் நான்கைவிட அதிகமான குணங்களை உபாஸிக்கலாம் என்று நிச்சயம் பண்ண முடியாததால் அதிககுண உபாஸனை ஸரியா? இல்லையா? தேவதைகளுக்கு யோக்யதா நியம நிர்ணயம் முடியுமா? முடியாதா? த்யான நேரத்தில் தோன்றும் குணங்களின் எண்ணுதலுக்கு யோக்யதை நிர்ணயிக்கும் தன்மை உண்டா? இல்லையா? என்ற விசார வரிசை. த்யானத்திற்கு முன்பே யோக்யதா நியமம் தெரியாவிட்டால், அயோக்ய உபாஸனை ஏற்படலாம் என்பதால், அந்த நிலையானது கெடுதலைத் தரும் என்று ஸங்கர்ஷண ஸூத்ரத்தில் கூறியுள்ளதால் (= अचेतनासत्यायोग्यानि अनुपास्यानि अफलत्वविपर्ययाभ्याम्) அதிக உபாஸனம் கூடாது.

ஸித்தாந்தம் :- அவரவர் அடையவேண்டிய பலன்களின் வேறுபாட்டினால் உபாஸனா யோக்யதையை நிர்ணயிக்க முடியும். அதிக குணங்களும் முடிந்தால் உபாஸிக்கலாம்.

# 3.3.7 A आध्यानाय प्रयोजनाभावात् (2 सूत्रे)

**விஷயம் :-** கடோபநிஷத்தில் "इन्द्रियेभ्यः पराहयर्था: अर्थेभ्यश्च परं मन:" என்ற இடத்தில், மனமானது ரூபாதி விஷயங்கள் விரும்பி பிறகு ரூபாதி விஷயங்களை வ்யாபிக்கிறது. எனவே வெளி விஷயங்களை விட இந்திரியங்களுக்கு உள்ளே இருப்பதால் சிறப்புத்தன்மை. இந்திரியங்களைக் காட்டிலும் அபிலாஷைப்படுகிற பொருள்கள் அந்தநேரத்தில் உள்ளேயிருப்பதால் ரூபாதிகள் உள்ளே இருப்பதாக வைத்து அவைகள் சிறந்தவை. இவைகளைக் காட்டிலும் அபிலாஷயாகிற வ்ருத்தியுள்ள மனம் சிறந்தது (பெரிது) மனதைக்காட்டிலும் புத்தி பெரியது. புத்திக்கும் காரணமான ''மஹத்'' என்கிற ஹிரண்யகர்பரின் புத்தி சிறந்தது (பெரியது). இந்த மஹத்தைவிட அவ்யக்தம் என்கிற மாயாஶக்தி(காரணமாதலால்) பெரியது. அந்த அவ்யக்தத்தைக் காட்டிலும் இதற்கு அதிஷ்டானமாக ஆத்மா பெரியவர். இவ்வாறு பெரியது பெரியது என்று செல்லும் வரிசையில் முற்றுபுள்ளியாக (பூர்த்தியாக) ஆத்மா உள்ளதால் இவரை நாம் உணர வேண்டும்'' என்பதாக கூறப்படுகிறது.

**ஸந்தேஹம் :-** இந்திரியங்கள், பொருள்கள் என்பதாக இங்கு பெரியதின் வரிசை கூறப்பட்டுள்ளதால் இந்த பரம்பரையை இவ்வாறே ஒன்றின் ஒன்றின் பெரியது என்றே நாம் சிந்தனை பண்ண வேண்டுமா? அல்லது ஆத்மாதான் ரொம்ப பெரியவர் என்று மட்டும் சிந்திக்க வேண்டுமா?

**பூர்வபக்ஷம் :-** பரம்பரையை வேதம் கூறுவதால் இவ்வாறே நாம் சிந்திக்க வேண்டும். இல்லையேல் கூறியது வீணாகும்.

**ஸித்தாந்தம் :-** புருஷன் (ஆத்மா) மட்டுமே உபநிஷத்தில் கூறியபடி அறியபட்டால் அசேஷ சம்சார காரணமான அறியாமை விலகுமாதலால் அது மட்டுமே (ஆத்மஞானம் மட்டுமே) விவக்ஷிதம். எனவேதான் அந்த ஆத்மாவை உணருவதற்காக

புலன்களை மனதில் அடக்கி, மனதையும் புத்தியால் அடக்கி ஸூக்ஷ்மதமமான ஆத்மாவை உணர வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. அப்படியானால், பரம்பரையைக் கூறியது, வெளியே சுற்றும் மனதை உள்ளே நிறுத்த வழியானதால் ஸாதனமாக பயன்படுகிறது.

## 3.3.8 D आध्यानाय प्रयोजनाभावात् , आत्मशब्दाच्च (2 सूत्रे)

மந்த மத்யம உத்தம அதிகாரியின் தரப்படி குணங்களின் உபஸம்ஹாரம், அனுபஸம்ஹாரம் முன்பு கூறியது தவறு என்று ஆக்ஷேபித்து ஸமாதானம் கூறப்படுகிறது. முன் கூறிய குண உபஸம்ஹாரமும் அனுபஸம்ஹாரமும் ஸரியா இல்லையா? இவைகளுக்கு ப்ரமாணம் இருக்கிறதா? இல்லையா? முன் கூறிய இரண்டிற்கும் ப்ரமாணம் ஸரியா? இல்லையா? (ஸம்ஜ்ஞாதச்ச 3.38 உபஸம்ஹாரதிற்கு ப்ரமாணம். प्रकरणभेदात् - அனுப- ஸம்ஹாரத்திற்கு ப்ரமாணம்) என்று விசார வரிசை.

பூர்வபக்ஷம் :- ஸர்வவித்யைகளும் ப்ரஹ்மத்தின் நாமமாதலால் அவருடைய குணாபிதானம் (குணத்தை கூறுவது) உப- ஸம்ஹாரத்திற்கு என்றால் எல்லா குணங்களையும் ஒரே இடத்தில் கூறியிருக்க வேண்டும். ஆனால் தனித்தனியே விக்ஷிப்ய கூறியுள்ளது என்பது வீணாகும். மோக்ஷம் அனுப- ஸம்ஹாரத்தினாலும் கிடைக்குமாதலால் உபஸம்ஹாரம் வீண். எனவே வ்யர்த்த விதியானது நம்பத்தக்கது அன்று. எனவே அந்தந்த வித்யாவின் ப்ரகரணத்தில் இவ்வளவுதான் உபாஸனம் என்று கூறப்பட்டதால் ப்ரகரண பேதமானது அனுப- ஸம்ஹாரத்திற்கு காரணமான ப்ரமாணம் ஆகாததால் இந்த உபஸம்ஹார அனுபஸம்ஹாரங்கள் இரண்டும் செய்ய வேண்டியதில்லை.

  

ஸித்தாந்தம்:- குணங்கள் கூறுவது என்பதே உபஸம்ஹாரத்திற்காகத்தான், வேறு பயனில்லை. வெவ்வேறு இடங்களில் கூறப்பட்டுள்ள குணங்களின் உபஸம்ஹாரம் பண்ணுவதால் முக்தியில் விஶேஷப்பயன் உண்டு என்பதால் இது வீணல்ல. "आत्मेत्येवोपासीत" என்பதற்கு மற்றதை விலக்கும் தாத்பர்யம் அல்ல. அதிகாரியின் யோக்யதைக்கு (தகுதி) ஏற்றவாறு உபஸம்ஹார அனுபஸம்ஹாரங்கள் அமைய வேண்டும்.

## 3.3.8 A आत्मगृहीतीरितरवदुत्तरात् (2 सूत्रे)

இந்த அதிகரணத்தில் இரண்டு வர்ணகம் உள்ளன.

1) பூர்வபக்ஷம்:- आत्मा वा इदमेक एवाग्रे आसीत् என்ற ஐதரேய உபநிஷதாரம்பத்தில் கூறிய ஆத்மா ஹிரண்யகர்பர்தான். ஐந்து பூதங்களின் ஸ்ருஷ்டியைக் கூறாமல் "सलोकानसृजत"- உலகங்களை படைத்தார் - என்று கூறியுள்ளது அல்லவா? பரமாத்மாவைக் கூறுமிடத்தில் ஐந்து பூதங்களின் படைப்பு கூறப்படுகின்றது. மேலும் ப்ரஜைகளுக்கு பசுவைக் கொண்டுவந்தார் - போன்றதான உடலுடையவரின் தன்மை கூறப்படுகிறது.

ஸித்தாந்தம் :- "एक एवाग्रे आसीत्" என்று ஒன்றே ஒன்றுதான் எனக் கூறப்பட்டுள்ளது. எனவே ஆத்மா பரமாத்மாதான் இங்கு கூறாத பூதஸ்ருஷ்டிகளைப் பண்ணி பிறகு உலகைப்படைத்தார் என்று கொள்ளவேண்டும் (ஶ்ருத்யந்தரத்தை உபாஸம்ஹாரம் பண்ணிக் கொண்டு). பசுவைக் கொண்டுவந்தது போன்றவை கருத்தற்றது. அல்லது விராட் போன்றவரின் மூலமாகக் கொண்டு வந்தார் என்றும் கொள்ளலாம். ஜீவ ப்ரஹ்ம ஐக்கியம் மட்டுமே இங்கு கருத்தாகக் கூறப்படுகிறது. இதனால்தானே (ஐக்கிய ஞானத்தினால்) மோக்ஷ பயன். ஆகவே ஆத்மா = பரமாத்மா)

2) பூர்வபக்ஷம் :- ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் कतम आत्मा என்று ஆத்மவிசாரம் தொடங்கியுள்ளது. சாந்தோக்யத்தில் सदेव सौम्य என்று ஆரம்பித்து ஸத்வஸ்து கூறப்பட்டுள்ளது. உலகில் ஸத், ஆத்மா என்ற இரண்டு சொற்கள் ஒரு பொருளுடையதாகாது. எனவே இரண்டிலும் வேறு வேறு கூறப்படுகிறது.

ஸித்தாந்தம் :- ஸத் என்பது ஆத்மா,அனாத்மா இரண்டிற்கும் பொதுவான வார்த்தை. "स आत्मा तत्त्वमसि" என்பதாக அந்த ஸத் உனது ஆத்மஸ்வரூபம். எனவே நீயும் அதுவும் ஒன்றே - என்று உபதேசிக்கப்படுகிறது. எனவே இரண்டும் ஒன்றே.

விஶிஷ்டாத்வைதத்தில் இந்த அதிகரணம் முன்னதிகரணத்துடன்.

## 3.3.9 D आत्मगृहीतीरितरवदुत्तरात् (1 सूत्रम्)

மத்வமதத்தில் இது இரண்டாக பிரிக்கப்படுகிறது. (அடுத்த ஸூத்ரம் தனி அதிகரணம்)

பூர்வபக்ஷம் :- आत्मेत्येव என்ற வாக்யத்தில் ஸ்வாமித்வம் தவிர மற்றவைகளை விலக்குவதற்காக "ஏவ"= only தான் எனக் கூறப்பட்டுள்ளதால் ஞான, ஆனந்தம் போன்றவை வர முடியாது. முன்பு கூறிய நான்கு குண உபாஸனம் ஸரியா? தவறா? இது (நான்கு குண உபாஸனம்) முன் கூறிய ஶ்ருதியினால் விரோதம் உண்டா? இல்லையா? "ஆத்மேத்யேவ" என்ற இடத்தில் உள்ள ஆத்மஶப்தம் ஸ்வாமித்வ மாத்திரத்தை கூறுகின்றதா? அல்லது ஞானாதி குணங்களையும் கூறுமா? என்று விசார வரிசை.

பூர்வபக்ஷம்:- ஆத்மத்வத்தை மட்டும் (ஸ்வாமித்வம்) உபாஸிப்பது சுலபமாக முடியக்கூடியதாலும், உடனடியாக அபரோக்ஷத்வத்தை உண்டுபண்ணுவதாலும் எவகாரத்தின்

மஹிமையால் ஸ்வாமித்வம் மட்டும் என்று கிடைப்பதாலும் சதுர்குண உபாஸனம் ஸரியன்று.

ஸித்தாந்தம் :- மிகவும் சிறந்த பரமபுருஷார்த்தத்தின் ஹேதுவான ஆபரோக்ஷ்யத்தில் ஸுலபத்தன்மை குணமாகாது (நிர்ணாயகமன்று). குணமானாலும் ஸர்வ முமுக்ஷுக்களுக்கும் ஸர்வாபேக்ஷிதமான ஞான, ஆனந்த முதலிய பயனை பெறுவதற்காக ஞானா-னந்தங்களும் உபாஸ்ய குணமாகவே ஆகவேண்டும். ஆத்ம குணத்தில் ஆனந்தாதி குணங்கள் அந்தர்பூதமாகின்றன. எனவே 'ஆத்மா'என்ற சொல்லே நான்கு குணங்களையும் உரைக்கும். எனவே ஸர்வாதிகாரிகளுக்கும் சதுர்குண உபாஸனம் தேவை.

## 3.3.10 D अन्वयादिति चेत् स्यादवधारनात्

(1 सूत्रम्)

ஆத்மஶப்தமானது முன் கூறியபடி நான்கு தவிர மற்ற குணங்களை விலக்கும் ப்ரமாணமாக எப்படி ஆகும்? இது யுக்தமா இல்லையா? ஆத்மபதத்தினால் கூறப்படும் குணங்கள் உபஸம்ஹர்த்தாக்களால் மட்டும் உபாஸ்யமானவையா? அனுப-ஸம்ஹர்த்தாக்களாலும் உபாஸ்யமானவைகளா? ஆத்ம-ஶப்தமானது அகிலமான அனந்த குணங்களையும் தெரிவிப்பதாக ஆனால் அனுபஸம்ஹர்த்தாக்களுக்கு குழப்பம் (ஏமாற்றம்) வருமா? அல்லது அந்தந்த யோக்ய குணங்களை மட்டும் தெரிவிப்பதாக ஆகுமா? என்று விசார வரிசை.

பூர்வபக்ஷம் :- அகிலகுணங்களையும் த்யானிக்க வல்லவர்களான ஹிரண்யகர்பாதிகளையும் குறித்து, "ஆத்மேத்யேவ உபாஸீத" என்ற விதி ப்ரவ்ருத்திக்கிறது. இந்த நிலையில் அனுபஸம்ஹர்த்ருத்துக்கு மட்டும் யோக்யமான குணங்களை

போதிப்பதனால் 'ஏவ' என்ற அவதாரணம் பொருந்தாது. எனவே இது அனுபஸம்ஹாரத்திற்கு ப்ரமாணம் ஆகாது.

ஸித்தாந்தம் :- ஆத்ம ஶப்தமானது ஸர்வகுண வாசகமான போதிலும்,அந்தந்த குணங்களை உபாஸிக்கதகுந்தவர்களுக்கு அந்தந்த குணங்களை மட்டும் குறிக்கும். இது நமது அனுபவ ஸித்தம். எனவே சதுர்குணங்கள் ஸர்வோபாஸ்யம், மற்றவை யோக்யதையை அனுஸரித்து என்பது நிர்ணயம்.

## 3.3.9 A कार्याख्यानादपूर्वम् (1 सूत्रम्)

விஷயம் :- ப்ராண வித்யையில் अशिष्यन्त आचामन्त्यशित्वा चाचामन्त्येतमेव तदनमनग्नं कुर्वन्तो मन्यन्ते = சாப்பிடும் முன்னும் சாப்பிட்ட பின்னும் ஆசமனம் செய்ய வேண்டும். இதுதான் ப்ராணனுக்கு வஸ்திர ஸமர்ப்பணம் ஆதலால் ப்ராணனை நக்னமாக ஆக்காமல் செய்கிறது என்ற இடத்தில் கூறிய ஆசமனம், பொதுவாக சுத்திக்காக செய்யவா? ஆசமனம் வேறாகவும் செய்ய வேண்டுமா? ஒன்றேதானா? அதில் வஸ்திர த்யானம் மட்டும் போதுமா என்று ஸந்தேஹம்.

பூர்வபக்ஷம் :- ஶாஸ்த்ரமானது வேறு எதனாலும் (அறியப்படாத, செய்யும்படி கூறப்படாத) புதிய விஷயத்தில்தான் ப்ரவ்ருதிக்கும் என்ற (अप्राप्ते शास्त्रमर्थवत्) நியமப்படி சுத்தத்திற்காக செய்யும் ஆசமனமே போதும். அதில் ஜலத்தை வஸ்திரமாக த்யானம் மட்டும் இங்கு விதிக்கப்படுகிறது. அந்த ஸ்ம்ருதிக்கு இந்த ஶ்ருதி மூலமன்று, வர்ணாஸ்ரம தர்ம ப்ரகரணத்தைவிட இது வேறுபட்டது. எனவே ஆசமனத்தில் வஸ்திரம் என்ற த்யானம் மட்டும் செய்ய வேண்டும் ப்ராண உபாஸகன்.

## 3.3.5 V कार्याख्यानादपूर्वम् (1 सूत्रम्)

விஶிஷ்டாத்வைத மதத்தில் பூர்வபக்ஷம் ஸித்தாந்தம் இரண்டும் முழுமையாக அத்வைதம் போலவேதான்.

## 3.3.11 D कार्याख्यानादपूर्वम् (1 सूत्रम्)

முன் அதிகரணத்தில் கூறிய விஷயம் தவறு (ஆத்ம ஶப்தத்தினால் தன்தனக்கு யோக்ய குணங்களை தவிர மற்ற குணங்களுக்கு அனுபஸம்ஹாரம் என்பது ) யோக்ய குணங்களும் அலௌகீகம் ஆனதால் ஆத்மஶப்தத்தினால் தெரியாதன்றோ! என்று விசாரம் தொடர்கிறது. ஈஶ்வரனிடம் த்யேய குணங்கள் லௌகீகங்களா? அலௌகீகங்களா? லௌகீகங்களுக்கு த்யானம் வேண்டாம் என்றால் குண த்யானமே இல்லாமல் ஆகிவிடுமா? இல்லையா? அலௌகீக குணங்களுக்கு அனுபவம் வருமா? வராதா? என்று விசார வரிசை.

பூர்வபக்ஷம் :- அலௌகீக குணங்களில் ப்ரத்யக்ஷம், அனுமானம் வராது. ஸங்கதிக்ரஹம் சொல்லுக்கும் பொருளுக்குமான தொடர்பின் அறிவு அலௌகீக குணங்களுக்கு வராது என்பதால் ஶப்தப்ரமாணமும் கிடையாது. (அலௌகீக குணங்களுக்கு). எனவே த்யான காலத்தில் அவை உணர முடியாதவை-யானபடியால் த்யானம் பண்ண முடியாது. லௌகீக குணங்களையும் த்யானிக்காவிட்டால் த்யானமே போய்விடும். எனவே லௌகீக குணங்கள்தான் த்யேயம். பகவத் குணங்களுக்கு அலௌகீகத்வம் கிடையாது.

ஸித்தாந்தம்:- अलौकिकास्तस्य गुणा ह्युपास्या इति श्रुतौ (அலௌகீ-கங்களான குணங்கள் உபாஸ்யங்கள்) என்ற ஶ்ருதியில் மோக்ஷம் அலௌகீக குணமாக கூறப்பட்டுள்ளது. அலௌகீக

மோக்ஷமானது அலௌகீக குண உபாயம் இல்லாமல் கிடைக்காது. எனவே அலௌகீக குணங்கள்தான் உபாஸ்யங்கள். அவைகள் தெரியாது என்ற தோஷம் கிடையாது "शास्त्रोक्तवस्तुनश्चैव व्युत्पत्तिः शास्त्रलिङ्गतः" என்று சுதா வ்யாக்யானத்திலும் அனு-வ்யாக்யானத்திலும் கூறியுள்ளப்படி "यः सहस्राक्षः स इन्द्रः" என்பதுபோல் வாக்யார்த்த மரியாதையால் வ்யுத்பத்தி வர முடியும். அனுகூல வேதனீயோ भगवद्गुणो यः स आनन्दः என்று பகவானைக்கண்ட ரிஷிகளின் வாக்யத்தினால் புரியும். எனவே முன்கூறிய குணங்களுக்கு அலௌகீகத்வம் பொருத்தமே.

## 3.3.10 A समान एवं चाभेदात् (1 सूत्रम्)

சாண்டில்ய வித்யை, (சாமவேதத்திலும் காண்வ ஶாகையில் இரண்டு இடத்திலும் கூறப்பட்டது, ஒன்றா? வேறா?

பூர்வபக்ஷம் :- காண்வர்களின் அக்னிரஹஸ்ய ப்ராம்ஹணத்தில் स आत्मानमुपासीत, मनोमयं प्राणशरीरम् என்று கூறப்படுகிறது. இப்படியே ப்ருஹதாரண்யகத்திலும் मनोमयोऽयं पुरुषो भाः सत्यः என்று கூறப்படுகிறது. இங்கு புனருக்திவராமலிருப்பதற்காக இவை தனித்தனிதான் ஒன்றல்ல.

ஸித்தாந்தம் :- மனோமயத்வம்போன்ற குணங்கள் இரண்டிலும் ஒன்றாகவே உள்ளன. எனவே இரண்டும் ஒன்றுதான். ஓரிடத்தில் வித்யையை விதித்து மற்ற இடத்தில் அனுவாதம் பண்ணி குணங்கள் விதிப்பது ஸஹஜம். अग्निहोत्रं जुहोति,दध्ना जुहोति என்று கர்மகாண்டத்தில் ப்ரஸித்தமானது. சாண்டில்ய வித்யை ஒன்றே.

## 3.3.6 V समान एवं चाभेदात् (1 सूत्रम्)

இரண்டிலும் பெரும்பாலும் ஸமமே.

மனோமயன் என்ற தர்மீ ஒன்றானதால் வெவ்வேறு இடத்தில் கூறிய குணங்கள் வேறுபட்டாலும் தர்மிபேதம் கிடையாது. மேலும் உபாஸனையின் ரூபபேதமில்லை. எனவே இரண்டும் ஒன்றே.

## 3.3.12 D समान एवं चाभेदात्, संबन्धादेवमन्यत्रापि (2 सूत्रे)

பயன்கள் உபாஸனானுஸாரமாகத்தான் என்று உண்டா? இல்லையா? ஸமவிஷம பயனுடைய உபாஸனமும் ஸமவிஷம-ரூபம் முடியுமா? முடியாதா? த்ரிவிக்ரமத்வம் போன்ற க்ரியா-விஶேஷணங்களுக்கு ப்ரஹ்ம-ப்ரம்ஹாணீகளால் முறையாக உபாஸ்யத்வம் அனுபாஸ்யத்வம் பொருந்துமா பொருந்தாதா? என்று விசார வரிசை.

பூர்வபக்ஷம் :- த்ரிவிக்ரமத்வம் போன்ற க்ரியாவிஶேஷணங்கள் அநித்யமானதால் த்யானகாலத்தில் இல்லாததால், இல்லாதது நிந்திக்கப்படுவதால், ब्रह्माणीब्रह्मणोरपि க்ரியாவிஶேஷ அனுபாஸனம் கூறப்பட வேண்டும் ஆதலால், ஸமவிஷமத்வம் வராது என்பதால், இரண்டினாலும் ப்ராப்ய பயனானது ஸ்தானம் ஒன்றானாலும் குண தாரதம்ய ரூபமாக ஸமவிஷமமாகத்தான் வரும் என்பதால் முன் கூறியது தவறு.

ஸித்தாந்தம் :- गुणक्रियादमो विष्णोः स्वरूपं नान्यदिष्यते என்று தத்வ நிர்ணயத்தில் கூறியபடி, யாவும் விஷ்ணுவுடன் தாதாத்ம்ய ரூபமான தொடர்பு உடையவை எல்லா குணங்களும். எனவே த்யான காலத்தில் இல்லை என்பது கிடையாது. மேலும்

ஸ்பஷ்டமாக கூறப்பட்டுள்ளது. गुणास्त्रैविक्रमाद्याश्च संहर्तव्या न संशय: विरिञ्चस्यैव नान्येषाम् (बृहत्तन्त्र)

## 3.3.11 A संबन्धादेवमन्यत्रापि (3 सूत्राणि)

விஷயம் :- ப்ருஹதாரண்யகத்தில் ஸத்யவித்யையில் ஆதிதைவிக-புருஷனுக்கு ஆதித்யனிலுள்ளவருக்கு "अहः" என்று பெயர் த்யானத்திற்காக கூறப்படுகிறது. அத்யாத்மத்தில் கண்ணில் உள்ளவருக்கு "अहम्" என்று கூறப்படுகிறது. இங்கு புருஷவித்யை ஒன்றானதால் பரஸ்பரம் குணோபஸம்ஹாரம் உண்டா இல்லையா என்ற விசாரத்தில் -

பூர்வபக்ஷம் :- உபஸம்ஹாரம் உண்டு.

ஸித்தாந்தம் :- य एष एतस्मिन्मण्डले पुरुष: - இந்த ஸூர்ய-மண்டலத்தில் உள்ள புருஷன் என்று ஆரம்பித்து तस्योपनिषदहः அவருக்கு ரஹஸ்யமான பெயர் "अहः" என்று சொல்லப்படுகிறது. இவ்வாறே 'योऽयं दक्षिणेऽक्षन् पुरुष:' என்று ஆரம்பித்து तस्योपनिषदहम् என்று கூறப்படுகிறது. எனவே வித்யை ஒன்றாக இருந்து ஸத்யம் என்று பெயர் ஒன்றானாலும் ஸ்தானவிஶேஷத்தில் நாம விஶேஷம் கூறப்படுவதால் இந்த நாமங்களுக்கு உபஸம்ஹாரம் கிடையாது. எவ்வாறு உபாஸ்யமான குரு ஒன்றானாலும் நிற்கின்ற குருவிற்கு கூறிய உபசாரம் உட்கார்ந்திருக்கும் குருவிற்கு பொருந்தாதோ, அவ்வாறே இது கொள்ள வேண்டும். உட்கார்ந்திருப்பவருக்கு காலில் எண்ணை தேய்ப்பது உபசாரம், இது நிற்பவருக்கு வருமோ? எனவே நாமாக்கள் வெவ்வேறாகத்தான் அமையும்.

## 3.3.7 V संबन्धादेवमन्यत्रापि (3 सूत्राणि)

பெரும்பாலும் விஶிஷ்டாத்வைதத்தில் பூர்வபக்ஷ ஸித்தாந்தங்கள்

ஒன்றேதான். ஆதித்யமண்டலத்தில் உள்ளவருக்கு अहः, என்றும் கண்ணில் உள்ளவருக்கு अहम् என்றும் விஶேஷமாக குறிப்பிட்டு இருப்பதால் உபாஸ்யர் ஒன்றானாலும் நாமாக்களுக்கு உப-ஸம்ஹாரம் கிடையாது. உபாஸ்யபேதத்தால் ஸ்தான-பேதத்தினால் பேதம் இல்லாமலிருந்தால் அக்ஷ்யாதித்யபுருஷ த்யானத்தில் அதிதேசம் கூறியிருப்பது பொருந்தாது. எனவே நாமாக்கள் வ்யவஸ்திதமே.

## 3.3.13 D न वा विशेषात्, दर्शयति च (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- முன்பு கூறிய ஸர்வகுண உபஸம்ஹாரம் பொருந்தாது என்று ஆக்ஷேபித்து பரிஹரிக்கப்படுகிறது. आत्मेत्येवोपासीत என்று கூறிய ஆத்ம ஶப்தமானது அனுப-ஸம்ஹாரத்தினால் ப்ரமாணம் என்பது பொருந்துமா? இல்லையா? ஆத்ம ஶப்தத்தினால் கூறப்பட்ட குணங்கள் ஸர்வோபாஸ்யமா? இல்லையா? ஆத்மஶப்தம் குணத்தைக் கூறினாலும் அந்தந்த அதிகாரிகளின் வேறுபாட்டால் அவரவரின் தகுதிக்கு ஏற்ப குணங்களை மட்டும் கூறுகிறது என்ற நியமம் பொருந்துமா? பொருந்தாதா? என்ற விசார வரிசையில் -ஆத்மஶப்தமானது ப்ரஹ்மாவைகுறித்து ஈஶ்வரரின் ஸர்வதர்மங்களையும், ப்ரஹ்மாணியை குறித்து அஶேஷ- குணங்களையும், க்ரியாஸாமான்யங்களையும், மற்றும் அந்த உபாஸனைக்கு யோக்யமானகுணங்களை மட்டும் ந்யூனாதிகம் ஆனவைகளை கூறுகிறது என்று தனிப்பட்ட (प्रातिस्विक) நியமம் இல்லாதலால், முன்பு கூறிய அந்தந்த அதிகாரிகளுக்கு தகுந்த குணாபிதாயகத்வம் (गुणाभिधायकत्वम्) பொருந்தாது. ஆத்ம-ஶப்தத்தினால் கூறப்பட்ட குணங்கள் எல்லோராலும் உபாஸிக்கத் தக்கதல்ல - என்பதாக அனுபஸம்ஹாரமானத்வம் பொருந்தாது.

ஸித்தாந்தம் :- ஆத்மஶப்தமானது ஸர்வகுணங்களையும் கூறும் தகுதி உடையதாயினும் அவரவருக்கு யோக்யமான குணங்களையும் குறிப்பதால் ந்யூனாதிக (ஏற்றதாழ்வு) வரலாம் என்றாலும், அதிகாரிகளின் வேறுபாட்டினால், (ஸாமர்த்ய வேறுபட்டினால்) எத்தனை குணங்கள் அவரவருக்கு புரிகின்றனவோ, அங்கு அவர்களால் அத்தனை குணங்கள் உபாஸிக்கப்பட வேண்டும் என்பதால் आत्मेत्येवोपासीत = அனுபஸம்ஹாரமானதே.

## 3.3.12 A संभृतिद्युव्याप्त्यपिचात: (1 सूत्रम)

பூர்வபக்ஷம் :- ராணாயணீயர்களின் கிலங்களில் (खिल) "ब्रह्मज्येष्ठा वीर्या संभृतानि..=" ப்ரம்மா, விஷ்ணு, ஶிவர்களிடம்காணப்படும் சிறப்புகள், வீர்யங்கள் யாவும் ப்ரஹ்மத்தை முன்னிட்டே ஏற்பட்டுள்ளன,ஶக்திமானான ப்ரஹ்மத்தை அனுஸரியாமல் பொருட்படுத்தாமல் வீர்யங்கள் வராதன்றோ. அந்த ப்ரஹ்மம் த்யு லோகத்தில் வ்யாபித்துள்ளது என்று கூறப்படுகிறது. இங்கு ப்ரஹ்மத்திற்கு ஸம்ப்ருதி, த்யுவ்யாப்தி - போன்ற குணங்கள் உபாஸ்யமாக தெரிகின்றன. ஶாண்டில்ய, தஹர வித்யைகளில் ஆத்யாத்மிகமாக ஹ்ருதயாந்தர்வர்த்திப்ரஹ்ம உபாஸனம் ஒன்றானதால் ஸம்ப்ருதி, த்யுவ்யாப்தி குணங்கள் ஶாண்டில்யாதி வித்யையில் உபஸம்ஹரிக்கப்படவேண்டும்.

ஸித்தாந்தம் :- இது தவறு. ஏனெனில் இந்த குணங்கள் ஶாண்டில்யாதி வித்யைகளில் சிறிதும் ஸூசிக்கப்படவில்லை. எனவே வித்யை ஒன்றுதான் என்பதற்கு ப்ரமாணம் கிடையாது. எனவே உபஸம்ஹாரம் கிடையாது. ப்ரஹ்மம் ஒன்றுதான் என்பதால் வித்யைக்யம் கூறினால் எல்லா குணங்களுக்கும் உபஸம்ஹாரம் மட்டுமே வரும், அனுபஸம்ஹாரம் என்ற பேச்சே அற்று போய்விடும்.

  

## 3.3.8 V संभृतिद्युव्याप्त्यपि चातः (1 सूत्रम्)

விஶிஷ்டாத்வைதத்தில் பூர்வபக்ஷம் ஸித்தாந்தம் ஸமானமே. ப்ரஸக்தமான பராக்ரமங்கள் ப்ரஹ்மத்தினால் நன்கு வ்யவஹரிக்கப்படுகின்றன. அந்த ஜ்யேஷ்டமான ப்ரஹ்மம் தேவலோகத்தில் வ்யாப்தமானது என்று காட்டும் த்யுவ்யாப்-தத்வாதி குணங்கள் ஶாண்டில்ய தஹர வித்யைகளில் உபஸம்ஹரிக்க முடியாதவை. பரிச்சின்ன தேஶ வ்ருத்தியாக உபாஸிக்கும் ப்ரஹ்மத்திற்கு த்யு வ்யாப்தி வராதன்றோ. எனவே உபஸம்ஹாரம் கிடையாது. எனவே எங்கு உபாதி விஶேஷ பரிச்சின்னமாக உபாஸனை கூறப்படவில்லையோ அங்கு த்யுவ்யாப்தி உபஸம்ஹரிப்பதில் தவறில்லை. அங்கேயே அத்துடன் இங்கு கூறிய ஜ்யேஷ்டத்வ, வீர்யஸம்ப்ருதத்வங்களும் உபாஸிக்கலாம்.

## 3.3.14 D संभृतिद्युव्याप्त्यपि चातः (1 सूत्रम्)

उक्षा स द्यावापृथिवी ஸம்ப்ருதி, த்யுவ்யாப்தி போன்ற குணங்கள் எல்லோராலும் எல்லா உபாஸனைகளிலும் வரலாம் என்ற ஆக்ஷேபமும் பரிஹாரமும் கூறப்படும் இந்த அதிகரணத்தில்

பூர்வபக்ஷம் :- आनन्दादयः என்ற இடத்தில் கூறிய சதுர்குண உபாஸனம் ஸரியா இல்லையா? ஸம்ப்ருதி த்யுவ்யாப்திகள் ஸர்வோபாஸ்யங்களா? இல்லையா? குணோபாஸனையில் உபாஸனாஜன்யமான பலாபேக்ஷைதான் காரணமா?யோக்யதா விஶேஷமும் காரணமா? என்று விசார வரிசைக்கு பின்-பூர்வபக்ஷம் இது- எல்லா முமுக்ஷுக்களுக்கும் மோக்ஷத்தில் ஞான, ஆனந்தங்களை போல் ஸ்வாவரஸம்பரணத்திற்கு ப்ரகாஶ-

வ்யாப்தியானது எதிர்பார்க்கப்படுவதால், பயனை எதிர்பார்ப்பது-தான் ஸாதனத்தை அனுஷ்டித்தலின் நியாமகம் ஆகவேண்டும். யோக்யதா விஶேஷமும் ஹேதுவானால் எல்லோருக்கும் யோக்யதாவிஶேஷம் இருந்தாலும் இல்லா-விட்டாலும் ஸாதனானுஷ்டானத்திற்கு ஏற்ப பலாபத்தி வருமாயின் அது ஸரியாகாது என்பதால், அபேக்ஷிதமான ஸம்ப்ருதி போன்ற பயனுக்கு यादृशो भावित: तादृशो जीव: आभवेत् (தனது பாவனைக்கேற்ப ஜீவன் பயனடைவான்) (भाग. III तात्पर्य) ஸ்ம்ருதியினால், ஸம்ப்ருதி போன்றவை ஸர்வோபாஸ்யங்களே. எனவே சதுர்குண உபாஸனம் தவறு.

ஸித்தாந்தம் :- பயன்தான் ஸாதனைக்கு காரணமானால் த்ரைவர்ணம் (ப்ராம்ஹண, க்ஷத்ரிய,வைஶ்யர்கள்) தவிர மற்றவர்களும் யாகானுஷ்டானத்தினால் ஸ்வர்கம் பெறலாம் என்ற ஆபத்து வரும். अन्यथा अनर्थकृद्भवेत् (அயோக்யனால் செய்யப்பட்டது பயனற்றது) என்று கூறியுள்ளதால் யோகய்தா விஶேஷம்தான் உபாஸனா நியாமகம். देवादीनामुपास्यास्तु भृतिव्याप्त्यादयोगुणा: (ब्रह्मतर्क) என்று கூறியபடி தேவர்கள் உபாஸகர்கள். ஆனால் அவர்களுக்குத்தான் ஸம்ப்ருதி த்யுவ்யாப்தி குணங்கள் உபாஸ்யமாகும். எனவே முன்பு கூறிய சதுர்குண உபாஸனம் பொருந்தும்.

## 3.3.13 A पुरुषविद्यायामिव चेतरेषामनाम्नात्

(1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- தைத்திரீய உபநிஷத்தில் तस्यैवं विदुषो ... என்று (மஹாநாராயணீயத்தில்) ஆரம்பித்து புருஷ வித்யா கூறப்படுகிறது. இவ்வாறே தாண்டி ஶாகையில் (சாந்தோக்யத்தில்) "पुरुषो वाव यज्ञ:" என்று புருஷ வித்யை

வருகிறது. இவை இரண்டும் ஒன்றே; "यन्मरणं तदवभृथ:" என்று தைத்திரீயத்திலும், "मरणमेवाभृथ:" என்று தாண்டி யாகையிலும் பொதுவான ஒற்றுமை இருக்கிறதல்லவா?

ஸித்தாந்தம் :- இந்த இரண்டிலும் வேத்யமான ஸ்வரூபம் மிகவும் வேறுபடுகிறது. தைத்திரீயத்தில் வித்வானுடைய யாதொரு யாகமுண்டோ அதற்கு யஜமானன் = ஆத்மா, என்று ஆறாம் வேற்றுமைகள் வெவ்வேறான பொருள் கொண்டதால் வ்யதிகரணமானவைகள். புருஷனே யக்ஞம் என்று கூறப்பட்டு, அவனே யஜமானன் என்பது எப்படி பொருந்தும். ஆனால் 'தாண்டியத்தில்' புருஷனே யாகமாக உருவகப்படுத்தப்-படுகிறான். மூன்று ஸவனங்களாக புருஷனின் ஆயுளைக்கூறும் விஷயம் தைத்திரீயத்தில் கிடையாது. மரணமே அவப்ருதம் என்று ஒரே ஒற்றுமையை வைத்து இரண்டும் ஒன்று என்று கூறுவது தவறு. மேலும் தைத்திரீயத்தில் இது உபாஸனை அல்ல, ப்ரஹ்மஞானத்தின் ஸ்துதி. எனவே வித்யைக்ய ஸந்தேஹமே கிடையாது.

## 3.3.9 V पुरुषविद्यायामिव चेतरेषामनाम्नात्

(1 सूत्रम्)

இங்கும் அத்வைத விஸிஷ்டாத்வைத பூர்வபக்ஷ ஸித்தாந்தங்கள் ஸமானமே.

தைத்திரீய புருஷ வித்யைக்கு ப்ரஹ்மப்ராப்தியே பரம்பரையாக பயன். தாண்டியத்தில் தீர்காயுஷ்யத்வம் பயன் என்று பலபேதமும் உள்ளது. எனவே இவை தனித்தனியேதான், ஒன்றல்ல.

# 3.3.15 D पुरुषविद्यायामिव चेतरेषामनाम्नात्

(1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- மந்த, மத்யம, உத்தம என்று மூன்றுவிதமான அதிகாரிகளுக்கு தன்ஶக்திக்கு ஏற்ப ஸர்வபரிஞானம் கூறப்பட்டது ஸரியா? இல்லையா? தன் தன் யோக்யதையை அனுஸரித்து குணங்களை உபாஸிப்பதற்கு அங்கங்கிருந்து குணங்களை சேர்க்க வேண்டுமா? வேண்டாமா? தன் தன் யோக்யதைக்கு உரிய குணங்கள் அந்தந்த வித்யையில் கூறப்படுகின்றனவா? இல்லையா? ஒவ்வொரு இடத்திலும் அவரவருக்கு யோக்ய குணங்கள் கூறப்படவில்லை என்பதற்கு அறிகுறி உள்ளதா? இல்லையா? என்று விசார வரிசையில் - ஒவ்வொரு இடத்திலும் யோக்யதைக்கு ஏற்ப குணங்கள் கூறப்படவில்லை என்பதற்கு ஸூசகம் இல்லை என்பதால், ஒவ்வொரு இடத்திலுமே அவரவருக்குத் தேவையான குணங்கள் கூறுவது பொருந்தும் என்பதால் அதை மட்டும் அறிந்து தன்தனக்கு யோக்ய குணங்களை புத்தியில் ஏற்றிக் கொள்ள முடியும். எனவே ப்ரயோஜனம் இல்லாததால் ஆங்காங்கே கூறப்பட்ட த்யேய புருஷகுணங்கள் உபஸம்ஹரிக்கத் தேவை-யில்லை. எனவே மந்த, மத்யம, உத்தமர்களுக்கு யதாஶக்தி ஸர்வ -பரிஞானம் போதும்.

ஸித்தாந்தம் :- "सर्वत: पौरुषे सूक्ते" (ब्रहमतर्क) என்ற ஸ்ம்ருதியினால் ஸர்வவித்யைகளிலும் கூட சில குணங்கள் மட்டுமே கூறப்படு-கின்றன. இந்த நிலையில் மற்ற வித்யைகளில் பூர்ண குணங்கள் கூறப்படவில்லை என்பது ஸித்தம். உத்தம அதிகாரிகளுக்கு எல்லா இடத்திலிருந்தும் குணோப- ஸம்ஹாரம் தேவையான-தால், மத்யமாதிகாரிகளுக்கும் மஹதல்ப குணங்களைக் கூறும்படியான வித்யைகளில் எண்ணிக்கை ஸமமானாலும்,

தன்தனக்கு பிடித்தமான குணங்களை ஒரே இடத்தில் கூறியிருக்கிறது என்று நியமம் கூற முடியாது. எனவே ஆங்காங்கே இருந்து ஶக்திக்கு ஏற்ப குணங்களை உபஸம்ஹாரம் செய்யவேண்டும் என்பதால் எல்லோருக்கும் யதாஶக்தி ஸர்வபரிஞானம் தேவை.

## 3.3.14 A वेधाद्यर्थभेदात् (1 सूत्रम)

அதர்வண ஶாகையில் உபநிஷத்தின் ஆரம்பத்தில் "सर्वं प्रविध्य हृदयं प्रविध्य धमनीः" என்று சில மந்த்ரங்கள் கூறப்படுகின்றன. காண்வர்களின் ப்ருஹதாரண்யக ஆரம்பத்தில் ப்ரவர்க்யம் என்ற கர்மா கூறப்படுகிறது (ப்ராம்ஹணம் உள்ளது). இவைகள் வித்யையின் அருகாமையில் உள்ளதால் ஸன்னிதி ப்ரமாணத்தினால் வித்யைக்கு அங்கமாகும் என்று பூர்வபக்ஷம் ஏற்படுகிறது.

ஸித்தாந்தம் :- முன் கூறிய மந்த்ரங்களின் பொருளை (லிங்கம்) ஆலோசித்தால் அவை அபிசார கர்மாவின் அங்கம் என்று தெரிகிறது. (ஶத்ருவதகர்மாவிற்கு அங்கம்) அப்படியே ப்ரவர்க்ய கர்மாவும் अग्निष्टोम யாகத்தில் விநியோகம் பெறுகிறது. अग्निष्टोमे प्रवृणक्ति எனவே ஸன்னிதி ப்ரமாணத்தை லிங்க ப்ரமாணத்தி -னால் ஒதுக்கிவிட்டு இந்த மந்த்ரங்கள் வித்யைக்கு அங்கமாகாது என்று ஸித்தாந்தம் ஏற்படுகிறது.

## 3.3.10 V वेधाद्यर्थभेदात् (1 सूत्रम)

ஶத்ருஹ்ருதயபேதனம், அத்யயனம் போன்ற கர்மாக்களில் விநியோகம் தெரிவதால் வித்யா ஸன்னிதியில் கூறப்பட்ட போதிலும் இவைகள் வித்யைக்கு அங்கம் இல்லை என்று விஶிஷ்டாத்வைதிகளின் ஸாரம்.இதில் இவர்கள் "शन्नोमित्रः"..

"ஸஹநாவவது".. என்ற மந்த்ரங்களுக்கு எல்லாம் ப்ரஹ்மவித்யா ஸன்னிதியிருப்பதால் ப்ரஹ்மவித்யாங்கத்வம் பூர்வபக்ஷித்து, இவை அத்யயன பாடத்திற்கு மட்டுமே உபயோகப்படுவதால் வித்யாங்கத்வம் இல்லை என்றும் கூறப்படுகிறது. மற்றவை ஸமமே.

## 3.3.16 D वेधाद्यर्थभेदात् (1 सूत्रम्)

அபேக்ஷித குணோபஸம்ஹாரம் கூறியபடியால் ஹ்ருதயவேத்யம் போன்றவைகளுக்கும் உபஸம்ஹாரமென்று ஆக்ஷேபம் கிளம்பிய -தற்கு பதிலாக இந்த அதிகரணம்.

பூர்வபக்ஷம்:- எல்லோருக்கும் சதுர்குண-உபாஸன நியமம் கூறியது ஸரியா? இல்லையா? तं प्रपञ्चमर्चिषाऽऽविध्य मर्मन् என்று கூறப்பட்ட வேதம் (அடித்தல் அல்லது அழித்தல்) போன்ற குணங்கள் ஸர்வோபாஸ்யமா? இல்லையா? அந்தப்பயனில் அபேக்ஷையும் யோக்யதையும் இருக்கின்றனவா? இல்லையா? என்ற விசார வரிசை- वेध: (அடித்தல்) போன்ற பகவத்குண உபாஸனையின் பயனாக ஶத்ரு ஸம்ஹாரமானது ஸர்வ ஸஜ்ஜனங்களாலும் அபேக்ஷிக்கப்படுகிறது. प्राणास्त्वा "वंशो हास्यति - इत्येनं ब्रूयात्" "आततायिनमायान्तं हन्यादेवाविचारयन्" என்றெல்லாம் ஶத்ரு ஸம்ஹாரம் கர்த்தவ்யமாக கூறப்படுகிறது என்பதால் யோக்யதாவத்வம் தெரிகிறது. எனவே वेधாதிகள் ஸர்வ உபாஸ்யம் ஆனதால் சதுர்குண-உபாஸனம் என்பது தவறு.

ஸித்தாந்தம் :- யதிகளுக்கு ஶத்ரு ஸம்ஹார ரூபமான பயன் நிஷேதிக்கப்பட்டுள்ளது. எனவே யதிகளுக்கு அபேக்ஷையோ யோக்யதையோ கிடையாது. எனவே ஸர்வோபாஸ்யத்வம் எப்படி பொருந்தும்? பொருந்தாது. பூர்வபக்ஷத்தில் கூறிய ஶ்ருதிதேவர்கள் விஷயம், ஸ்ம்ருதி க்ஷத்ரிய விஷயம் என்று கொள்ள வேண்டும்.

(அங்கு ப்ரகரணம் அப்படியே உள்ளது). எனவே ஸர்வோபாஸ்யத்வம் சதுர்குணங்களுக்குத்தான் என்பதில் ஸந்தேஹம் இல்லை.

## 3.3.15 A हानौ तूपायनशब्दशेषत्वात्कुशाच्छन्दस्तुत्युप - गानवत्तदुक्तम् (1 सूत्रम्)

விஷயம் :- விஶேஷமான சில உபாஸகர்களுக்கு மரணத்திற்கு பின் நடக்கும் விஷயத்தைப்பற்றி (அவரது புண்ணிய-பாபங்களின் நிலை என்ன என்பது பற்றி) வெவ்வேறு ஶாகைஉபநிஷத்தில் விதவிதமாகக் கூறப்படுகிறது. ஶாட்யா-யனிகள் -"तस्य पुत्रा दायमुपयन्ति.." என்பதாக அவரது பிள்ளைகள் சொத்தை பெறுகிறார்கள், நண்பர்கள் புண்ணியத்தை அடைகிறார்கள், எதிர்ப்பவர்கள் அவரது பாபங்களை பெறுகின்றனர் என கூறுகின்றனர்.

தாண்டிகள் இவ்வாறு கூறுகிறார்கள் - अश्व इव रोमाणि विधूय पापम्... குதிரை (மணலில் புரண்டு ) ரோமங்களை உதிர்ப்பது போல் பாபங்களை உதறி(உபாஸகன் போகிறான்).

ஆதர்வணிகள் (அதர்வ வேதக்காரர்கள்) கூறுவதாவது तदा विद्वान् पुण्य पापे विधूय = அப்போது (மரணத்திற்குப்பின்) புண்ணிய பாபங்களை உதறித்தள்ளிஒன்றிலும் ஒட்டாதவனாக மிகுந்த ஸாம்யத்தை அடைகிறான் என்கின்றனர்.

பூர்வபக்ஷம் :- இவ்விதமாக தத்வஞானியின் (உபாஸகர்களின்) புண்ணிய பாபங்களை விடும் முறையானது ஶ்ருதிகளில் விதவிதமாக கூறப்பட்டுள்ளது. விடப்பட்ட புண்ணிய பாபங்களை மற்ற புருஷர்கள் அடைவது என்பது உபஸம்ஹாரம் செய்ய வேண்டியதில்லை, ஏனெனில் த்யாகம் பண்ணுகிறான் என்று கூறும் ஶ்ருதிகளில் மற்றவர் பெறுவது கூறப்படவில்லை.

கூறாவிட்டாலும், தானாகவே கிடைக்கிறது என்று சொல்ல முடியாது; ஏனென்றால் மற்றவர்கள் பெறாமலே புண்ணிய பாப த்யாகம் நடக்க முடியும். மேலும் மற்றவர்கள் பெறுவது என்பது ஸகுணவித்யையில் கூறப்படுகிறது, த்யாகஶ்ருதிநிர்குண-வித்யையில் வருகிறது. எனவே ''விடுகிறான்'' (தாண்டி ஶ்ருதியில்) என்று கூறியதில் உபாயனம் (மற்றவர் பெறுவது) என்பது உபஸம்ஹரிக்க வேண்டாம்.

ஸித்தாந்தம் :- இங்கு வித்யையின் வேறுபாடு உள்ளது வாஸ்தவம். அதனால்தான் ஸித்தாந்திகளும் உபாயனத்தை (மற்றவர் பெறுவதை) அனுஷ்டிக்க வேண்டியதாக சொல்லவில்லை, ஆனால், ஸ்துதி விஶேஷத்திற்காக மட்டும் கூறுகின்றோம். புண்ணியபாபத்யாகமானது ப்ரஹ்மவித்யையின் ஸ்துதிக்காக எவ்வாறு கூறுகிறோமோ அவ்வாறே மற்றவர் பெறுகிறார் என்பதும் ஸ்துதிக்காகவே கூறுகிறோம். இந்த வாக்யம் அர்த்தவாதமானபடியால் தனது பொருளில் (meaning) தாத்பர்யம் கிடையாது என்று எண்ணக்கூடாது. ப்ரமாணாந்தரத்-தினால் பாதிப்பு மற்றும் அறியப்படுதல் இரண்டும் இல்லாததால் இந்த அர்த்தவாதம் பூதார்த்தவாதம் ஆகிறது, எனவேதான் தேவதைகளுக்கு உடல் உண்டு என்று நிர்ணயிக்கப்-படுகின்றதல்லவா? ஹானியைக் கூறுமிடத்தில் உபாயனம் (மற்றவர் பெறுதல்) எங்குமே கூறப்படவில்லை என்பது தவறு, கௌஷீதகீஶ்ருதியில், "तत् सुकृतदुष्कृते विदूनुते...प्रियाज्ञातय: सुकृतमु -पयन्ति, अप्रिया दुष्कृतम्" என்று ஸ்பஷ்டமாக உதறிய புண்ணிய பாபங்களை இவரிவர் பெறுவதாகக் கூறப்பட்டுள்ளது. எனவே கௌஷீதகியில் கூறியதான உதறுதல் (हानम्) தாண்டி, ஆதர்வணிகளின் ஶ்ருதியில் உணரப்படுவதால் (=प्रत्यभिज्ञा), உபாயனத்திற்கும் உபஸம்ஹாரம் உண்டு என்பது ஸரி. ஒரு அர்த்தவாதத்தில் மற்றொரு அர்த்தவாதத்தின் அபேக்ஷை

கிடையாது (எங்கும் காணப்படவில்லை) என்று கூறமுடியாது; ஸாம உபாஸனையின் ஸ்துதியாகக் கூறப்பட்ட असावादित्य एकविंश: - என்ற (ஸூர்யன் இருபத்தி ஒன்றாமவன்) அர்த்தவாதத்தின் பொருளை நிர்ணயம் பண்ணுவதற்கு, தைத்திரீயத்தில் ஸத்ரப்ரகரணத்தில் உள்ள " द्वादश मासा: पञ्चर्तव:, त्रय इमे लोका: असावादित्य एकविंश:" (12 மாதங்கள், 5 ருதுக்கள், 3 உலகங்கள் =20, 21வது ஸூர்யன்) என்ற அர்த்தவாதம் தேவைப்படுகிறதன்றோ. எனவே அர்த்தவாதமானாலும் உபாயனம் உபஸம்ஹரிக்கப்படவேண்டும்.

இதிலேயே மற்றொரு வர்ணகம் பாஷ்யத்தில் கூறியிருக்கிறது-

பூர்வபக்ஷம் :- सुकृतदुष्कृते विधुनुते" = புண்ணிய பாபங்களை உதறுகிறான் (அசைக்கிறான்) என்று பொருள் கொள்ள வேண்டும். दोधूयन्ते पताकाग्रा: கொடிகளின் நுணிகள் அடைகின்றன என்பது போல். எனவே த்யாகம் அர்த்தம் கிடையாது.

ஸித்தாந்தம் :-மேற்கூறிய வாக்யத்தின் முடிவில் "மற்றவர் பெறுகிறார்" என்று கூறுவது பூர்வபக்ஷத்தில் (அசைத்தல் என்று பொருள் கூறினால் ) பொருந்தாது. எனவே அசைதல் என்று பொருள் உள்ள विधूनुते என்ற க்ரியாபதத்திற்கு பரித்யாகம்தான் பொருள்.

## 3.3.11 V हानौ तूपायनशब्दशेषत्वात्कुशाच्छन्दस्तुत्युपगानवत्तदुक्तम् (1 सूत्रम)

விஶிஷ்டாத்வைதத்தில் பெரும்பாலும் அத்வைத ஸித்தாந்தம்தான். விதூனனம் (உதறுதல், அல்லது விடுதல் அல்லது த்யாகம்) என்பதெல்லாம் அர்த்தவாதரூபம் என்றாலும் உபஸம்ஹாரம் ஸ்துதிப்ரகர்ஷத்திற்காகத் தேவை என்று அத்வைத கருத்து. ஆனால் விஶிஷ்டாத்வைதிகள் ஸ்துதி மட்டும் என்பதை

ஏற்கவில்லை. ஒருவர் செய்த புண்ணிய பாபங்கள் மற்றொருவருக்கு எப்படி ஸங்க்ரமிக்கும் எனபதற்கு பதில் இவ்விதம் கூறுகின்றனர் - “புண்ணிய பாபங்கள் என்பது -அந்தந்த பயனைத் தருவதற்காக பகவானின் எண்ணமே. (இச்சா). ப்ரஹ்மவித்தானவனின் ப்ரஹ்ம உபாஸனமான ப்ராயச்சித்தத்தினால் ப்ரீதியடைந்த பரமாத்மா “இந்த ப்ரஹ்மவித்திற்கு அந்த கர்ம பயனை கொடுக்க மாட்டேன்” என்று ஸங்கல்பிக்கிறார். இந்த ஸங்கல்பம்தான் புண்ணிய பாபங்களின் த்யாகம் என்பது. அதோடு பகவான் இவ்விதம் ஸங்கல்பிக்கிறார்- த்வேஷிகளிடம் த்வேஷபயனாக ப்ரஹ்மவித்தின் பாப பயனையும் அளிப்பேன்- என்று ஸங்கல்பம்தான் பாப ஸங்க்ரமம். இதே போல் புண்ணிய ஸங்க்ரமமும். இது இரண்டும் ஶாஸ்த்ர ஸித்தமானதால் தாத்விகம்தான். (உண்மைதான்). எனவே ஹானி (விடுதல்) மட்டும் கூறிய இடத்தில் மற்றவரால் பெறுதல் உபஸம்ஹரிக்கப்படவேண்டும்.

## 3.3.17 D हानौ तूपायनशब्दशेषत्वात्कुशाच्छन्दस्तुत्युप - गानवत्तदुक्तम्, साम्पराये... (2 सूत्रे)

[த்வைதமதத்தில் இரண்டு ஸூத்ரங்கள் கொண்டது இந்த அதிகரணம். அடுத்த அதிகரணத்தின் ஒரு ஸூத்ரம் சேர்க்கப்படுகிறது.]

பூர்வபக்ஷம் :- குணோபஸம்ஹாரத்துடன் செய்யப்பட வேண்டிய உபாஸனையானது முக்தனால் செய்யப்படுகிறதா? இல்லையா? செய்யப்படுகிறது என்பதற்கு ப்ரமாணம் இருக்கிறதா? இல்லையா? एतत् सामगायन्नास्ते = ப்ரஹ்மத்தை கானம் செய்துக்கொண்டிருக்கிறேன் - என்ற ஶ்ருதிகௌண முக்திபராவா? பரம முக்தி பராவா? உபாஸனை செய்யும் பக்ஷத்திலும் விதித்திருப்பதால் செய்கிறானா? ஈஶ்வரனின் க்ரியைபோல் தன்னிஷ்டப்படி லீலை வடிவத்தில் செய்கிறானா? உபாஸனை விதிகள் முக்தனிடமும் ப்ரவ்ருத்திக்கின்றனவா?

இல்லையா? முக்தியில் அடையப்பட வேண்டிய பயன் இருக்கிறதா? இல்லையா? என்ற விசார வரிசையில் முதலில் இவ்வாறு ஶங்கை (शङ्का) வருகிறது - முக்தன் நிஷ்க்ரியனாதலால், ஸாமகானாதி-க்ரியைகள் பொருந்தாது என்பதால் एतत्साम गायन् - என்ற வாக்யம் கௌணமுக்திபரம். எனவே முக்தனுக்கு உபாஸனை உண்டு என்பதற்கு ப்ரமாணம் இல்லை. மேலும் இந்த உபாஸனை நிஷ்பலமானால் செய்ய வேண்டியதே இல்லை. ஸபலமானால் முக்தனுக்கு அபூர்ணத்வம் ஏற்படும் எனவே முக்தனுக்கு உபாஸனை கிடையாது.

ஸித்தாந்தம் :- अस्माल्लोकात्प्रेत्य -என்று ப்ரஹ்மஞானிக்கு சரம தேஹ த்யாகம் கூறிவிட்டு, கூறப்பட்ட ஸாமகானம் என்பது கௌணமுக்திபரம் ஆகாது. மேலும் "कृष्णो मुक्तैः इज्यते" (भारत) பகவான் முக்தர்களால் யஜிக்கப்படுகிறார் என்று மஹாபாரதம் கூறுவதால், ஸாமகான கர்மா கட்டாயம் (கைமுதிக நியாயத்தால்) கிடைக்கும். எனவே முக்தனால் உபாஸனம் செய்யப்படுகிறது. ஆனால் விதிக்கு கட்டுபட்டு இவன் செய்வதானால் பத்தனுக்கும் இவனுக்கும் வேறுபாடு வராமல் போகுமாதலால் ஸ்வேச்சயா பகவான் போல் லீலா ந்யாயேன உபாஸனை செய்யப்படுகிறது. "तीर्णतर्तव्यभागश्च स्वेच्छयोपासते परम्" (வாயு) ஸம்ஸாரத்தைக் கடந்தவர்களும் தன் விருப்பத்தினால் உபாஸனை பண்ணுகிறார்கள்.

## 3.3.16 A साम्पराये तर्तव्याभावात्तथा ह्यन्ये (2 सूत्रे)

பூர்வபக்ஷம்:- முன் அதிகரணத்தில் கூறப்பட்ட புண்ய பாபங்களின் த்யாகம் ப்ரஹ்மலோகம் போகும் வழியில் ஏற்பட வேண்டும். ப்ரஹ்மலோகத்திற்கு அருகில் உள்ள நதியை கடந்தவுடனே கூறப்படுகிறதன்றோ! "स आगच्छति विरजां नदीं तां मनसैवात्येति तत्सुकृतदुष्कृते विधूनुते" = "ப்ரஹ்மலோகம் போகிறவன்

விரஜா நதியை மனதினால் தாண்டுகிறான், அப்போது புண்ணிய பாபங்களை உதறுகிறான்'' - என்று கூறப்பட்டு உள்ளது.

ஸித்தாந்தம் :- ப்ரஹ்மலோகம் போகும் வழியில் இவனுக்கு அங்கு செல்லும் கர்மாவைத் தவிர வேறான கர்மபலன் இல்லையென்பதால், அப்படிப்பட்ட கர்மங்களை எடுத்துப் போகவே தேவையில்லை. மேலும் மரணத்திற்கு முன்பே விடப்பட்ட புண்ணிய பாபங்களுக்குமறுபடி விடுவதற்கு கருவி இருக்க முடியாது. தாண்டி ஶ்ருதியில் (சாந்தோக்யத்தில்) "अश्व इव रोमाणि विधूय पापम्" என்றுள்ளது. எனவே கௌஷீதகியில் கூறியதான கர்மம் = வரிசை அமைப்பு நதியை தாண்டி என்பதை எடுத்துக்கொள்ளக் கூடாது. ஆகவே உபாஸ்ய ஸாக்ஷாத்காரம், ஏற்பட்ட உடனே புண்ணிய பாபங்களின் த்யாகம் நடக்கிறது.

## 3.3.12 V साम्पराये तर्तव्याभावात्तथा ह्यन्ये (5 सूत्राणि)

[விஶிஷ்டாத்வைத மதத்தில் ஸாம்பராயாதிகரணமான இதில் அத்வைதத்தின்ஸாம்பராய, கத்யதிகரண, யாவதிகார அதிகரணங்கள் மூன்றும் சேர்ந்து விளக்கப்படுகின்றது. மேலும் அத்வைதத்தின்''அநியம: ஸர்வாஸாம்'' அதிகரணம் யாவதாதிகார அதிகரணத்திற்கும் பின் கூறப்படுகிறது.]

பூர்வபக்ஷம் :- இரண்டு விதமான ஶ்ருதிகள் இருப்பதால் (ஶரீரத்திலிருந்து கிளம்பும் போதே கர்ம த்யாகம், மார்க்க மத்தியில் விரஜா நதியின் தாண்டுதலான பிறகு த்யாகம்) சில கர்மங்களை முன்பு விடுகிறான் (மரணத்திற்கு முன்பு) சிலகர்மங்களை பிறகு விடுகிறான் என்றுகொள்ளவேண்டும்.

ஸித்தாந்தம் :- ஸத்வித்யா, தஹர வித்யா இரண்டிலும்

ப்ரஹ்மவித்திற்கு மரணத்திற்கு முன்பே கர்மாக்கள் அழிவது கூறப்படுவதால் மரணாத் பூர்வமேவ கர்ம த்யாகம் நிச்சயிக்க வேண்டும். கௌஷீதகி ஶ்ருதியானது (கூறிய இடத்திலிருந்து முன்னே எடுத்து சென்று) ஸரிப்படுத்திக் கொள்ளவேண்டும். ஸர்வகர்மத்யாகம் மரணத்தில் நடந்தால் பிறகு எவ்வாறு தேவயானகமனம் ஏற்படும் என்ற ஸந்தேஹம் வேண்டாம்; கர்மக்ஷயம் ஏற்பட்ட பிறகும் தேஹம் இருக்க முடியும். "स एकधा भवति" என்று கூறியிருப்பதால். ஆனால் எந்த ப்ரஹ்ம-வித்துக்களுக்கு உடனே அர்சிராதிகமனம் ஏற்படுகிறதோ, அவர்களுக்கு மட்டும் அஶேஷகர்மத்யாகம் மரணத்தில் என்று கொள்ளவேண்டும். எனவேதான் வஸிஷ்டாதிகளுக்கு அதிகாரம் முடியும் வரை உடலுடன் இருந்து பிறகுதான் முக்தி கூறப்படுகிறது. எனவே ப்ரஹ்மஞானத்தினால் மரணத்திற்கு முன்பே அஶேஷகர்ம த்யாகம் ஏற்படுகிறது. ஆதிகாரிக புருஷர்களுக்கு விஶேஷமாக பிறகும் உடல் தொடரலாம்.

## 3.3.18 D छन्दत उभयाविरोधात् (3 सूत्राणि )

(இங்கு மத்வ மதத்தில், அத்வைதத்தைக் காட்டிலும் வேறான முறையில் அடுத்த அதிகரணமும் சேர்த்து விளக்கப்படுகிறது.)

பூர்வபக்ஷம்:- முன்பு கூறப்பட்ட முக்தர்கள் உபாஸனையைப்போல் கட்டாயம் கர்மாவும் செய்கிறார்களா? இல்லையா? அவர்களைச் செய்விக்கும் ப்ரமாணம் உண்டா? இல்லையா? இவர்கள் ப4க்தர்கள் என்பதுவே அனுஷ்டாபகமா? விதியும் உள்ளதா? என்று விசார வரிசை ஸாதனத்தை அனுஷ்டிப்பதில் பயனை எதிர்பார்ப்பதும் ப4க்தத்வமும் இரண்டும் காரணம். இதில் இவர்களுக்கு பயனில் எதிர்பார்ப்பு இல்லாவிட்டாலும், ஸ்வேச்சையினால் உபாஸனையில் போல் கர்மா செய்வதிலும் ப4க்தியிருப்பதால் கர்மா என்பது பகவத் பூஜையாவதால் கர்மாவும் கட்டாயம் பண்ணுவார்கள்.

ஸித்தாந்தம்:- பகவத் பூஜைரூபமாக கர்மா இருப்பினும், இவர்கள் பக்தர்களாக இருப்பினும், இவை மட்டும் கட்டாயம் அனுஷ்டான -த்திற்குக் காரணம் அல்ல. விதிக்கப்பட்டிருப்பதுதான் முக்கிய காரணம். மேலும் செய்யாவிட்டால் தோஷம், பயனை அடையாத தன்மையும் வேண்டும். இம்மூன்றும் முக்தர்களுக்கு கிடையாது. எனவே முக்தர்கள் நியமேன (கட்டாயமாக) கர்மாக்கள் செய்வதில்லை. ஆனால் பூர்வானுஷ்டான வாஸனாவின் தூண்டுதலால்சில நேரம் கர்மா செய்யலாம். கட்டாயம் கிடையாது.

## 3.3.17 A गतेरर्थवत्त्वमुभयथान्यथा हि विरोधः (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :-நான்காம் அத்யாயத்தில் கூறப்போகின்ற அர்ச்சிராதி மார்கம் உபாஸகனுக்கும் ப்ரஹ்மஞானிக்கும் ஸமமா ? இல்லையா? என்று விசாரித்தால்புண்ணிய பாபங்களைவிடுதல் ஸமமாக இருப்பதுபோல் இந்த மார்கம் இரண்டு பேருக்கும் பொது.

ஸித்தாந்தம்:- உபாஸனையால் அடையவேண்டிய ப்ரஹ்மலோகம் சென்று அடைய வேண்டியதாக இருப்பதால் போவதற்கு மார்கம் தேவை. ஞானிக்கு ரோக நிவ்ருத்தி போல் ப்ரஹ்மஞானத்தினால் அவித்யா நிவ்ருத்தியானது உடனே கிடைக்கும் பயனாகும். ஆகவே உபாஸகனுக்கு மார்கம், ஞானிக்கு கிடையாது.

## 3.3.18 A अनियमः सर्वासामविरोधः शब्दानुमानाभ्याम् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :-சாந்தோக்யத்தில் பஞ்சாக்னி வித்யையிலும் உபகோஸல வித்யையிலும் உத்தர மார்கம் கூறப்படுகிறது.

ஶாண்டில்ய வைஶ்வானர வித்யைகளில் படிக்கப்படவில்லை. எங்கு கூறப்படுகிறதோ அங்கு மட்டுமே உத்தர மார்கம், மற்றதில் உபஸம்ஹாரம் கிடையாது. ஒரு இடத்தில் கூறியதே மற்றதில் உபஸம்ஹாரம் வருமானால் இரண்டு இடத்தில் கூறியது வீணல்லவா?

ஸித்தாந்தம் :- பஞ்சாக்னி வித்யையின் ப்ரகரணத்தில் உத்தர மார்கம் சொல்லப்பட்டப்போதிலும், உபாஸனைகளில் கூறப்பட்ட அர்ச்சிராதி மார்கம் உபாஸனைகள் (தனித்தனி) யாவருக்குமாக கூறப்படுகிறது- "ये चेमे अरण्ये उपासते तेऽर्चिषमभिसंभवन्ति"= உபாஸகர்கள் யாவரும் அர்ச்சிராதி மார்கத்தை அடைகிறார்கள்- என்று கூறப்படுகிறது. எனவே மார்கத்தை கூறும் வாக்யத்தினால் ப்ரகரணம் அடிபட்டுவிடும். எனவே எல்லா உபாஸனைகளுக்கும் உத்தர மார்கம் உண்டு. இரண்டு முறை கூறியது வழியையும் (மார்கத்தையும்) உபாஸனையில் சிந்திப்பதற்காக.

## 3.3.13 V अनियमः सर्वासामविरोधः शब्दानुमानाभ्याम् (1 सूत्रम्)

பூர்வபக்ஷமும் ஸித்தாந்தமும் விஶிஷ்டாத்வைதத்தில் ஸமமே. இந்த ஸூத்ரத்தில் ஸர்வ ஶப்தம் இருப்பதால் ஸகுண நிர்குண ப்ரஹ்மவித்யைகள் யாவற்றிலும் மார்கம் உண்டு என்பது இவர்களது மதம்.

## 3.3.19 D अनियमः सर्वासामविरोधः शब्दानुमानाभ्याम् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- ஞானிகளில் சிலருக்குத்தான் மோக்ஷமா? எல்லோருக்குமா? ஞானிகளுள்உபாஸனையில் யோக்யதா வேறுபாடு உண்டா? இல்லையா? வேறுபாடு இருப்பின்

ப்ரமாணம் உண்டா? இல்லையா? என்று விசார வரிசை. இந்நிலையில் -பூர்வபக்ஷமாவது -ஞானிகளில் சிலருக்குத்தான் மோக்ஷம், யாவருக்கும் கிடையாது. ஞானிகளிலும் சிலர் தகுதியற்றவர்களாக (அயோக்யர்களாக) இருக்கலாம் என்பதால். ஞானிகளில் வேறுபாடு இல்லை என்பதற்கு ப்ரமாணம் இல்லையே.

ஸித்தாந்தம் :- ஞானிகள் யாவருக்கும் மோக்ஷம் உண்டு. சிலருக்குத்தான் என்று நியமம் கிடையாது. உபாஸகர்களில் ஸர்வகுண உபஸம்ஹார யோக்யதையில் விகல்பம் (choice) இருப்பது போல், ஞானிகளில் முக்திநிஷேதவாக்யம் இல்லை. மேலும், न कश्चित् ब्रह्मवित्स्मृतिमनुभवति मुक्तो ह्येव भवति (கௌண்டின்ய) = ஒருவர்கூட ஸம்ஸாரம் அனுபவிப்பதில்லை, யாவரும் முக்தர்கள் - என்று ப்ரமாணம் இருக்கிறது. இவ்வாறு ஸர்வஞானிகளாலும் மோக்ஷம் ப்ராப்யமாவதால், அதற்கு ஸாதனமான உபாஸனம் பண்ணவேண்டும்.

## 3.3.19 A यावदधिकारमवस्थितिराधिकारिकाणाम् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம்:- அபாந்தரதமஸ் என்ற முனிவர் வேதப்ரவர்த்தகர் விஷ்ணுவின் ஆக்ஞையால் வேதவ்யாஸராகப் பிறவியை எடுத்தார். இப்படியே ஸனத்குமாரர் என்ற ஞானி பார்வதி பரமேஶ்வரர்களின் பிள்ளையாக (ஸுப்ரமண்யராக) அவதரித்தார். மேலும் வஸிஷ்டர் போன்ற ஞானிகள் ஶாபத்தினாலோ அல்லது தனது இஷ்டத்தினாலோ பலபிறவிகளை எடுத்தனர். இவ்வாறு இதிஹாஸம் இருப்பதால் தத்வவித்துக்களுக்கு முக்தியானது திண்ணமில்லை. கிடைக்கலாம் என்பதுதான் தெரிகிறது.

ஸித்தாந்தம் :- முன்பு கூறிய முனிவர்கள் ஜகத்தை நிர்வஹிக்கப் பிறந்தவர்கள். இவர்கள் முந்திய கல்பத்தில் மிகப் பெரிய

தவத்தினால் பரமேஶ்வரனை உபாஸித்து, இந்தப் பிறவியில் பல தேஹங்களால் அனுபவிக்கப்படவேண்டிய அதிகாரத்தை (தகுதி -யை) பெற்றவர்கள். இவர்களும் இந்த பெரும் ப்ராரப்தம் பூர்த்தியானதும் முக்தராவார்கள். எனவே ஞானிகளுக்கு முக்தி கட்டாயம் உண்டு.

விஶிஷ்டாத்வைதத்தில் இந்த ஸூத்ரம் தனியான அதிகரணம் அல்ல. ஸாம்பராயதிகரணத்திலேயே சேர்த்து விளக்கப்பட்டு-விட்டது.

## 3.3.20 D यावदधिकारमवस्थितिराधिकारिकाणाम् (2 सूत्रे)

மாத்வமதரீதியாக இந்த அதிகரணத்தில் அடுத்த அதிகரணமும் கலந்து ஒன்றாகவே விளக்கப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- உபாஸகர்கள் யாவரும் ஞானம் என்ற ஒரே விதமாக உள்ள மோக்ஷத்தை அடைவது நியதமானால் அந்த உபாஸகர்கள் யோக்யதையில் தாரதம்யம் உடையவர்களா? இல்லையா? இதற்கு ப்ரமாணம் உண்டா? இல்லையா? மோக்ஷத்தில் ஆனந்தாதிகளின் தாரதம்யம் உபாஸனையில் முயற்சியின் வேறுபாட்டை அனுஸரித்தா? அல்லது யோக்யதையின் தாரதம்யத்தை அனுஸரித்தா? முக்தியிலும். ஆனந்த தாரதம்யத்தில் ஸாதகமான ப்ரமாணமில்லை, பாதக ப்ரமாணமும் இருக்கிறதா? அல்லது நேர்மாறா? என்று விசார வரிசை. वृद्धह्रासभाक्त्वम् என்பதும் ஆனந்த தாரதம்யமும் ஸம்ஸாரிகளை பற்றியது. எனவே மோக்ஷத்தில் தாரதம்யம் இருக்க ப்ரமாணமில்லை. மேலும் தாரதம்யம் இருந்தால் த்வேஷம், அஸூயை போன்றவை ஏற்படும் என்பதால் தாரதம்யம் கூடாது என்று ஆகிறது.

ஸித்தாந்தம் :- "नानाविधा देवसंघा विमुक्तौ" முக்தர்களான தேவக்கூட்டங்கள் பலவிதமானவர்கள்- என்று கூறியுள்ளது. மேலும், नरादिब्रह्मपर्यन्तं विमुक्तानां शतोच्छ्रयः முக்தர்களில் மனிதர்கள் தொடங்கி நூறு நூறு மடங்கு ஆனந்த மேன்மை- என்ற ஸ்ம்ருதியும் உள்ளது. எனவே முக்தி தாரதம்யத்தில் இவை ப்ரமாணங்கள். புலனுணர்ச்சியில் ஈடுபட்டவர்களுக்குத்தான் (அக்ஞானிகளுக்கு) த்வேஷம் அஸூயை எல்லாம் உண்டாகும். ஞானிகளுக்கு இவை வரவே வராது என்பதால் தாரதம்யம் ஏற்பதில் தடையில்லை. இந்த தாரதம்யம் யோக்யதா தாரதம்யம் இல்லாமல் வர முடியாது. ப்ரயத்ன தாரதம்யமும் கூட யோக்யதா தாரதம்யத்தினால்தான் வருகிறது.

## 3.3.20 A अक्षरधियां त्ववरोधः

## सामान्यतद्भावाभ्यामौपसदवत्तदुक्तम् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- ப்ருஹதாரண்யககார்கீப்ராம்ஹணத்தில் ப்ரஹ்மத்தை போதிக்க "अस्थूलमनणु.."(ஸ்தூலமன்று, அணு அன்று) என்று சில நிஷேதங்கள் கூறப்படுகின்றன. இதே போல கட உபநிஷத்தில் "अशब्दमस्पर्शमरूपम्.." என்று (ஶப்த, ஸ்பர்ஶ, ரூபங்கள்) ப்ரஹ்மத்திற்கு வேறு சில விஶேஷங்கள் நிஷேதிக்கப்- படுகின்றன. ஸத்ய, ஆனந்தம் போல இந்த நிஷேதங்களுக்கு ப்ரஹ்மஸ்வரூபத்தில் ஸம்பந்தம் இல்லாததால், இந்த நிஷேதங்களை உபஸம்ஹரிக்க வேண்டாம், இதனால் ப்ரயோகம் இல்லை.

ஸித்தாந்தம் :- அந்தந்த ஶாகைகளில் கூறப்படும் நிஷேதங்களுக்கு ஸ்வரூபத்தில் அன்வயமில்லாவிட்டாலும், எப்படி ஆத்ம உபலக்ஷணத்வம் உண்டோ, அதேபோல் வேறு

ஶாகையில் கூறப்பட்ட நிஷேதங்களுக்கும் உண்டு. ஒன்றினாலேயே உபலக்ஷணம் கிடைத்துவிட்ட பிறகு மற்றொன்று வீண் என்று எண்ண கூடாது; உபஸம்ஹாரம் செய்வதால் தார்ட்யம் (ஸ்திரத்தன்மை) ஏற்படுகிறது. இல்லையேல் ஒரே ஒரு அத்வைதம் என்ற வார்த்தையினாலேயே நிஷேதம் யாவும் கிடைத்துவிடும் ஆனதால் பல நிஷேத ஶப்தங்கள் தேவையில்லாமல் போய் விடும். எனவே நிஷேதங்களுக்கும் உபஸம்ஹாரம் உண்டு.

## 3.3.14 V अक्षरधियां त्ववरोधः सामान्यतद्भावाभ्यामौपसदवत्तदुक्तम्, इयदामननात् (2 सूत्रे)

விஶிஷ்டாத்வைத மதத்தில் அடுத்த அதிகரணமாக அத்வைதிகள் கருதும் அடுத்த ஸூத்ரமும் சேர்த்து ஒரே அதிகரணம். உபாஸ்யமான ப்ரதானமான ப்ரஹ்மமானது எல்லா ஶாகைகளிலும் ஒன்றே ஆனதால் ப்ரதானத்தை அனுஸரித்து குணங்ள் சொல்வது உசிதமானதே. 1) அசேதனத்திலிருந்து பிரித்துக் காட்ட अस्थूलमणु போன்றவை -அமலன் என்று பொருள். 2) ஸம்ஸாரி சேதனனிலிருந்து பிரித்துக் காட்ட ஸ்வபாவ மாறுபாடற்றவர் कूटस्थ என்பது, 3) முக்த சேதனனிடமிருந்து பிரித்துக் காட்ட ஸங்கோச விகாஸமற்றது போன்றவை கூறப்படுகின்றன. 4) நித்ய சேதனனிடமிருந்து பிரித்துக் காட்ட आनन्तत्वम् கூறப்படுகிறது 5) அபரிசின்ன ஆனந்தத்வம் எல்லாவற்றிலும் பிரித்துக் காட்ட தேவை. எனவே இந்த ஐந்தும் எல்லா இடத்திலும் உபஸம்ஹரிக்க வேண்டியவை.

மத்வமதரீதியாக இந்த அதிகரணம் பூர்வத்துடன் சேர்ந்தது.

## 3.3.21 A इयदामननात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- கடோபநிஷத்தில் ऋतं पिबन्तौ सुकृतस्य लोके - ப்ராணிகளின் உடலில் இரண்டுபேர்கள் போக்தாக்கள் என்று கூறப்படுகிறது. ஆனால் முண்டகத்தில் "तयोरन्यः पिप्पलम्" என்று ஒருவர்தான் உண்பவர் மற்றவர் சாக்ஷிதான் என்று கூறப்படுகிறது. இந்த வேறுபாடு உள்ளதால் இவை இரண்டும் தனித்தனி வித்யைகள் உபஸம்ஹாரம் கிடையாது.

ஸித்தாந்தம்:- முதல் அத்யாயத்தில் ऋतं पिबन्तौ என்ற வாக்யத்திலும் ஒருவர்தான் போக்தா, மற்றவர் அல்ல என்று நிர்ணயிக்கப்பட்டுவிட்டது. எனவே இரண்டு வித்யைகளும் ஒன்றுதான். உபஸம்ஹாரம் உண்டு.

விஶிஷ்டாத்வைதிகளுக்கு இது தனி அதிகரணம் அல்ல. போனதில் சேர்ந்தது.

## 3.3.21 D इयदामननात् (3 सूत्राणि)

Very Unique

[அத்வைதிகளின் (மற்றும் விஶிஷ்டாத்வைதிகளின்) அடுத்த அதிகரணமாகிற இரண்டு ஸூத்ரத்தையும் (अन्तरा भूत..., अन्यथा..) சேர்ந்து மத்வமதத்தில் இது ஒரே அதிகரணம். மூன்று ஸூத்ரங்கள் கொண்டது! ]

பூர்வபக்ஷம் :- முன்பு கூறிய யோக்யதா நியமத்திற்கு எல்லையுண்டா இல்லையா என்று விசாரித்து தீர்மானிக்க இந்த அதிகரணம். சாந்தோக்யம் ஏழாம் அத்யாயத்தில் -நாம, வாக், மனம், ஸங்கல்பம், சித்தம் - த்யானம், விஞ்ஞானம், பலம்,

  

அன்னம், ஜலம், நெருப்பு, ஆகாயம், ஸ்மரம், ஆசை, ப்ராணன் என்பதாக கூறப்பட்ட உஷா, ஸ்வாஹா, பர்ஜன்ய, மித்ரன், அக்னி, வருணன், வித்யுத், ப்ரவாஹ, அனிருத்த, அகங்காரிகப்ராண, இந்திர, உமா, ருத்ர, வாணீ, மாருதன்- தேவர்கள் மேன்மேல்சிறந்தவர்களாக கூறப்பட்டுள்ளனர். உபாஸனையில் தகுதிபெற்று முன்பு அதிகாரிகள் என்று குறிப்பிடப்பட்ட இவர்கள் முக்ய ப்ராணனுடன் முடிவு பெறுபவர்களா? இல்லையா? முக்ய ப்ராணனைக் காட்டிலும் மேல் அதிகாரியைக் கூறும் அனுமானமானது प्राणो वाव सर्वेभ्यो भूयान्न हि प्राणात् भूयान्= ப்ராணனை விட சிறந்தவன் கிடையாது - என்ற ஶ்ருதியினால் அடிபடுமா? இல்லையா? மேற்கூறிய ஶ்ருதியில் வரும் "ஸர்வ" என்ற சொல்லானது பரமாத்மான்ய -பரம் போல், வேறு ஒரு அதிகாரியை ஏற்பினும் கூட, சற்று குறுகிய பொருளைக் கூறுவதாகுமா? ஆகாதா? என்று விசார வரிசை. பூர்வபக்ஷம் இவ்வாறு- ஸர்வஶப்தமானது குறுகிய பொருளைக் கூறாமல்முழுமையான பொருளைக் குறிப்பதானால் முக்யப்ராணனுக்கு நிருபசரிதமான ஸர்வோத்த-மத்வம் வந்து விடுமானபடியால், ஸர்வோத்தமான இரண்டு வஸ்துக்கள் பொருந்தாது என்பதால், வேதம் முதலியவை-களாலும் ஸர்வோத்தமனாகத் தீர்மானிக்கப்பட்ட விஷ்ணுவோடு அபேதம் கூறப்பட வேண்டும் என்று ஏற்பட்டால், ப்ராணனுக்கும் பரமாத்மாவிற்கும் பாஷ்யாதி ப்ரமணங்களால் நிரூபிக்கப்பட்ட பேதம் அடிபடும் என்பதால்; ஸர்வஶப்தத்திற்கு ஸங்கோசம் (சுருக்கம்) கட்டாயம் ஏற்கப்பட வேண்டும் என்பது உறுதி. அதுபோலவே, அதிகாரி விஶேஷரைத் தவிர மற்ற எல்லோரையும் குறிப்பதாக ஸங்கோசம் சொல்வதில் இடையூறு இல்லை. எனவே ப்ராணனைக் காட்டிலும் சிறந்த அதிகாரி இருக்கலாம் என்பதால் அதிகாரிகளின் மேல்வரிசை ப்ராணனுடன் பூர்த்தி என்பது கிடையாது.

ஸித்தாந்தம் :- ஸர்வ ஶப்தத்திற்குபல பல ப்ரபல ப்ரமாணத்தின் துணைக்கொண்டு "பகவானைத் தவிர மற்றெல்லாம்" என்று ஸங்கோசம் பண்ணினாலும், उत्तमत्वं हि देवानाम् போன்ற வாக்யங்களால் "அதிகாரிகளுக்கும் ப்ராணன்தான் எல்லோரையும் காட்டிலும் மிகப் பெரியவர்" என்று ஸித்தமாகிறபடியால் இங்கு ஸர்வ ஶப்தத்திற்கு ஸங்கோசம் வரவே வராது. உபாஸகர்கள் யாவரும் ப்ராணனுக்கு கீழ்தான்.

## 3.3.22 A अन्तरा भूतग्रामवत्स्वात्मनः (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :-ப்ருஹதாரண்யகத்தில் உஷஸ்தர் கஹோளர் - என்ற இரண்டு முனிவர்களும் (ரிஷிகளும்) யாக்ஞவல்க்யரிடம் ஒரேமாதிரி ஆத்மாவைப்பற்றி கேட்கின்றனர் - यत्साक्षात् अपरोक्षाद्ब्रह्म य आत्मा सर्वान्तरः என்று - மற்ற ப்ரமாணங்களின் துணையில்லாமல் எப்போதும் ஸ்வதந்த்ரமாக, பரோக்ஷமாக ஆகாதபடி எப்போதும் (ப்ரத்யக்ஷமாக) விளங்கும் ஆத்மா யார்? -என்று கேட்கப்படுவதால் இரண்டும் ஒரே வித்யைதான் எனலாம்; ஆனால் ஒன்றையே இருமுறை கூறுவதால் புனருக்தி தோஷம் வருவதால் வித்யா பேதம்.

ஸித்தாந்தம் :- இரண்டிலும் ஆத்மாவிற்கு ஸர்வாந்தரத்வம் தெரிகிறது. இது உணரப்பட வேண்டிய தத்வம் ஒன்றானால்தான் ஸரியாகும். எனவே வித்யா பேதமில்லை. புனருக்தி தோஷம் இங்கு கிடையாது. விஶேஷ ஸந்தேஹம் போக்குவதற்கு சாந்தோக்யத்தில் तत्वमसि 9 முறை கூறப்படவில்லையா? முதல் உஷஸ்தரின் கேள்வியில் உடலைத்தவிர வேறான ஆத்மா கூறப்படுகிறார். கஹோளரின் கேள்வியில் ஆத்மா ப்ரஹ்மமே என்று உரைக்கப்படுகிறது.

  

## 3.3.15 V अन्तरा भूतग्रामवत्स्वात्मनः(3 सूत्राणि)

வித்யை வேறு என்ற பூர்வபக்ஷமும், ஒன்றுதான் என்ற ஸித்தாந்தமும், தத்வமஸித்ருஷ்டாந்தமும் ஸமமேதான். பரமாத்மாவிற்கு மட்டும் உள்ள ப்ராணனுக்கு ப்ராணனாக இருக்கும் ஶக்தி ப்ரத்யகாத்மாவிற்கும் (ஜீவனுக்கும்) பொருந்தலாம் என்பதால் உஷஸ்த ப்ரஶ்னத்தில் ஒரு ஸந்தேஹம் வருவதால், பசி, தாகம், சோகம், மோஹம், மூப்பு, மரணம் - இல்லாதவராயிருக்கும் தன்மை பரமாத்மாவிற்கு மட்டுமே பொருந்தும் என்பதான விஶேஷம் கஹோள ப்ரஶ்னத்தில் நிர்ணயிக்கப்படுகிறது. இதில் அடுத்த இரு அதிகரணங்களும் இணைக்கப்படுகின்றன.

இந்த அதிகரணம் மத்வ மத ரீதியாக தனியானது அல்ல. சென்ற அதிகரணத்திலேயே சேர்த்து விளக்கப்பட்டுவிட்டது.

## 3.3.23 A व्यतिहारो विशिंषन्ति हीतरवत् (1 सूत्रम्)

ஐதரேயத்தில் கூறப்படுகிறது - तथोऽहं सोऽसौ, योऽसौ सोऽहम् - தேஹேந்த்ரிய ஸாக்ஷியான நான்தான் ஸூர்யன், ஸூர்யன்தான் நான் - என்று இரண்டு தடவை திருப்பி கூறப்பட்டுள்ளது.

பூர்வபக்ஷம் :- "நானே ப்ரஹ்மம், ப்ரஹ்மமே நான்" - என்று கூறப்பட்டது போல், இங்கும் ப்ரஹ்மம் இரண்டு இடத்திலும் ஒன்றானதால், உபாஸனையில் ஒரே விதமாகவே த்யானிக்க வேண்டும், இல்லையேல் திருப்பிக் கூறியிருக்க முடியாது.

ஸித்தாந்தம் :- இந்த ப்ரகரணம் தத்வத்தை கூறுவதில்லை. எனவே ஒன்றுதான் என்று அருதிப் படுத்த முடியாது. இது ஸகுண உபாஸனை ப்ரகரணம். எனவே உபாஸனை கூறிய

படியே செய்ய வேண்டும். எனவே இரண்டு விதமாகத்தான் உபாஸனை பண்ண வேண்டும். ப்ரஹ்மத்தை ஜீவனாக நினைத்தால் ப்ரஹ்மத்திற்கு குறைவு வரும் என்று எண்ண வேண்டாம். ப்ரஹ்மத்திற்கு உண்மையில் உடல் இல்லாததாக இருந்தும் கூட உபாஸகரின் சித்தம் (மனம்) பிடித்துக் கொள்ள உதவியாக சதுர்புஜ, அஷ்டபுஜ ரூபங்களுடன் மூர்த்தி கூறப்பட்டாலும் குறைவு கிடையாது; இதுவே உதாரணம். இம்மாதிரி இரண்டாக த்யானத்தின் மூலமாக ஜீவப்ரஹ்மங்களுக்கு ஒன்றான தன்மை த்ருடப்படுமேயானால், நமக்கு பாக்யம். ஆனால் உபாஸனை இரண்டாகத்தான்.

விஶிஷ்டாத்வைதத்தில் இதுவும் அடுத்த அதிகரணமும் (सैवहि) சென்ற அதிகரணத்திலேயே சேர்க்கப் பட்டுள்ளது.

## 3.3.22 D व्यतिहारो विशिंषन्ति हीतरवत्

(1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- விஷ்ணுவானவர் ப்ராணனைக் காட்டிலும் மேலானவரா? இல்லையா? ப்ராணனைக் காட்டிலும் மேலாக सत्यं त्वेव विजिज्ञासितव्यम् என்று கூறப்பட்ட ஸத்யஸ்வரூபமான நாராயணர் ப்ராணனேதானா? வேறா? ப்ராண ப்ரகரணத்தைக் காட்டிலும் விஷ்ணு (ஸத்ய) ப்ரகரணம் வேறு என்பதற்கு ப்ரமாணம் இருக்கிறதா? இல்லையா? என்று விசார வரிசை. இதற்கு முன்பு நாமாதி ப்ராணாந்தமான பதினைந்து ப்ரகரணங்களிலும் வெவ்வேறு பொருளைக் கேட்டு பதில் கூறுவதாகவே அமைந்துள்ளது. அது போல இங்கு "अस्तिप्राणात् भूयः" என்று கேள்விகேட்டு பதில் கூறுவதான பேதக ப்ரமாணம் இல்லை என்பதால் ப்ராண ஸத்யங்கள் ஒன்று தானே! எனவே

ப்ராணனைக் காட்டிலும் விஷ்ணு உத்தமர் அன்று. ப்ரகரண பேதமான கேள்வி பதில்களைச் சேர்ப்பதற்கு ஸூசகம் இல்லை.

ஸித்தாந்தம் :- स वा एष एवं पश्यन्...अतिवादी भवति - ப்ராணனை உபாஸிப்பவன் மற்றவர்களை காட்டிலும் மேலோங்கி பேசுபவன் என்று கூறிவிட்டு, அதே அதிவாதித்வத்தை ஸத்ய-ப்ரகரணத்திலும் கூறுமிடத்தில் - एष तु वा अतिवदति यः सत्येनातिवदति என்று "तु" என்ற வார்த்தையால் ப்ரகரணத்தை முறித்து சொல்லியிருப்பதால், இந்த ஸூசனையின் மூலம் கேள்வி பதில்களை அத்யாஹாரம் பண்ண வேண்டும். இதனால் ப்ரகரண விச்சேதம் கிடைக்கிறது. மேலும் उत्तमत्वं हि देवानाम् என்று ஸர்வோத்தமத்வம் விஷ்ணுவிற்கு ஸ்ம்ருதியில் கூறப்பட்டுள்ளது. எனவே ப்ராணனைக் காட்டிலும் விஷ்ணு மேம்பட்டவர்.

## 3.3.24 A सैव हि सत्यादयः (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- स यो हैतं महद्यक्षं प्रथमजं वेद सत्यं ब्रह्म -பூஜ்யரான ஹிரண்யகர்பரை ஸத்யர் என்று அறிபவர் -என்பதாக ஸத்ய வித்யையைக் கூறி பிறகு - तद्यत्तत्सत्यमसौ आदित्यः அந்த ஸத்யமானது இந்த ஸூர்யனே என்று ஸத்ய வித்யை இரண்டாம் முறை கூறப்படுகிறது. இவை தனித்தனியானது; ஏனெனில் பயன் வேறுபடுகிறது. முதலில் லோகஜயம் பயன், இரண்டா -வதில் பாபநிவ்ருத்தி.

ஸித்தாந்தம்:- இந்த ஸத்ய வித்யா ஒன்றுதான். "ஸத்யம் ப்ரஹ்ம இதுவே ஸூர்யன்" என்று ஸூர்யனை ஸத்யமாகவே கூறியிருக்கிறது அன்றோ! அர்த்தவாதத்தில் கூறிய பலன் முக்ய

தாத்பர்யமற்றது. அல்லது இங்கு அதிகாரி கூறப்படவில்லை என்பதால் நாம் பயனைக் கொண்டு அதிகாரியை நிர்ணயிக்கும்போது "लोकजयपापपरिहारकामी" என்று பாபக்ஷயம், லோக ஜயம் இரண்டும் பயனாகக் கொள்ளலாம். எப்படியும் இது ஒரே வித்யைதான்.

விஶிஷ்டாத்வைதத்தில் இதுவும் முன்பே சேர்ந்துவிட்டது.

## 3.3.23 D सैव हि सत्यादयः (1 सूत्रम्)

ப்ராணனைக்காட்டிலும் விஷ்ணு மட்டுமே உத்தமரா? வேறு மற்றும் உள்ளனரா? ஸத்யத்தைப் பற்றி கூறிவிட்டு விஞ்ஞானம், மதி, ஶ்ரத்தை, நிஷ்டை, க்ருதி, ஸுக, பூமா, அஹங்கார, ஆத்மா என்று ஒன்பது பொருள்கள் கூறப்படுகின்றன. இவைகள் ஸத்யத்தைக்காட்டிலும், தனக்குள்ளும் வெவ்வேறா? ஒன்றேதானா? ஒன்றுதான் என்பதற்கு ப்ரமாணம் உண்டா இல்லையா? ஸத்யத்தில் ஆரம்பித்து ஒன்பது பொருளுக்கு அபேதமிருப்பதற்கு ப்ரமாணம் இல்லாததால் வேறுதான் என்று கொள்ளவேண்டும். எனவே ப்ராணனைக் காட்டிலும் மேம்பட்டவர்கள் பலர்.

ஸித்தாந்தம் :- விஞ்ஞானம் போன்றவை ஸத்யத்தைக் காட்டிலும் வேறானால் "सत्यं भगवो विजिज्ञासे" என்ற ப்ரார்த்தனையின் கீழ் இவை கூறப்படுகின்றன. வேறாக இருந்தால் இது பொருந்தாது. எனவே "विज्ञानं भगवो विजिज्ञासे" என்ற இடத்தில் ஸத்யாவினாபூதமான (வேறாக ஆகாத) மதி, ஶ்ரத்தை போன்றவை கூறப்படுகின்றன என்று கொள்ளவேண்டும். இவ்வாறு ஸத்யாதி ஒன்பதும் அபின்னம்தான். மேலும் "सत्याद्या अहमान्ता यस्य गुणाः" போன்ற ஸ்ம்ருதியும் ப்ரமாணம். எனவே விஷ்ணு ஒருவரே ப்ராணனை விட உத்தமர்.

## 3.3.25 A कामादीतरत्र तत्र चायतनादिभ्यः

### (1 सूत्रम्)

சாந்தோக்யத்தில் "दहरोऽस्मिन्नन्तराकाशः" என்று ஹ்ருதயாந்தர்கதமாக கூறப்பட்ட தஹராகாஶத்திற்கு ஸத்யகாமத்வம் முதலிய குணங்கள் கூறப்படுகின்றன. ப்ருஹதாரண்யகத்தில் "य एषोऽन्तर्हृदय आकाशः" என்பதாக ஹார்த்தமான ஆகாஶத்திற்கு வஶித்வம் போன்ற குணங்கள் சொல்லப்படுகின்றன.

பூர்வபக்ஷம்:- இங்கு பரஸ்பர உபஸம்ஹாரம் கிடையாது. உபாஸ்யமான தஹராகாஶமும், ஹார்தாகாஶமும் (உபாஸ்யமானது) வேறுபடுவதால்.

ஸித்தாந்தம்:- பரஸ்பரம் உபஸம்ஹாரம் உண்டு. ஏனெனில் தஹராகாஶத்தில் வஶித்வாதிகளின் சேர்க்கை உபாஸனைக்காகவும் ஹார்தாகாஶத்தில் ஸத்யகாமத்வாதிகளின் சேர்க்கை ஸ்துதிக்காகவும் பயன்படுகின்றது. பயன் வேறுபாட்டாலும் வித்யை இரண்டு தானே என்றால்; வித்யை பேதம் கூடியதாயினும் ஆகாஶ ஶப்தத்தின் பொருளான ஆத்மா இரண்டிலும் ஒன்றுதான் அல்லவா? எனவே இரண்டிலும் உபஸம்ஹாரம் உண்டு.

## 3.3.16 V कामादीतरत्र तत्र चायतनादिभ्यः

### (3 सूत्राणि)

[இந்த அதிகரணத்தில் அடுத்த இரண்டு ஸூத்ரம் சேர்ந்தது]

பூர்வபக்ஷம் :- சாந்தோக்ய ப்ருஹதாரண்யகங்களில் கூறப்படும் தஹர வித்யையில் குணங்கள் வேறுபடுவதாலும், சாந்தோக்யத்தில் ஆகாஶம் உபாஸ்யம், ப்ருஹதாரண்யகத்தில் ஆகாஶத்தில் ஶயிப்பவர் உபாஸ்யர் என்னும் பேதம் உள்ளது. எனவே வித்யைகள் வெவ்வேறானது.

ஸித்தாந்தம்:- தஹராதிகரணத்தில் தஹராகாஶத்திற்கு பரமாத்மத்வம் நிர்ணயிக்கப்பட்டுவிட்டது. ப்ருஹதாரண்யகத்தில் ப்ரஸித்தார்த்தத்தை விடுவதற்கு ப்ரமாணம் இல்லாததால் ஹ்ருதயாகாஶம் என்றே வைத்துக்கொண்டு அதில் ஶயானரான பரமாத்மா உபாஸ்யராகிறார். எனவே உபாஸ்யர் ஒன்றுதான். எனவே உபஸம்ஹாரம் உண்டு. இரண்டிலும் ஸகுண நிர்குண ப்ரஹ்மம் உபாஸ்யம் என்று பேதம் வருமே என்று கேட்டால் आदरादलोपः குணங்களில் ஶ்ருதிக்கு ஆதரம் இருப்பதால் லோபம் கிடையாது. எனவே "स एष नेति नेति" என்ற வாக்யத்திற்கு - इति नेति न - இத்தகைய குணவான் இல்லை என்பது இல்லை என்று பொருள் கொள்ள வேண்டும். இல்லயேல் ஒரு इति न வீண். மேலும் ப்ருஹதாரண்யகத்தில் "स वा एष महानन्नादः" என்று உதாரகுணம் விதிக்கப்படுகிறது. இரண்டு வித்யையிலும் பயன் வேறுபாடு தெரிகிறதே என்ற கேள்விக்கு பதிலாக "उपस्थितेऽतस्तद्वचनात्" என்கிற மூன்றாம் ஸூத்ரம் வருகிறது. ப்ரஹ்மானுபவத்தில் ஸர்வபயன்களும் உள்ளடங்கும் என்பதால் இதுவும் தவறில்லை. எனவே ஒரே வித்யைதான். இவ்விதம் இந்த மூன்று ஸூத்ரமும் சேர்த்து ஒன்றுதான்.

## 3.3.24 D कामादीतरत्र तत्र चायतनादिभ्यः

(3 सूत्राणि)

லக்ஷ்மியும் மோக்ஷாதிகாரியாதலால் ப்ராணனைக் காட்டிலும் மேலான அதிகாரியாக லக்ஷ்மியைக் கூறவேண்டும் ஆதலால் அதிகாரிகளின் வரிசை ப்ராணனுடன் எப்படி முடியும் என்ற ஆக்ஷேபத்தின் மேல் இந்த அதிகரணம்.

பூர்வபக்ஷம்:- ப்ராணன் விஷ்ணு இருவரைக் கூறியதால் நினைவுக்கு வரும் ஸ்ரீதேவி (லக்ஷ்மியானவள்) உபாஸனையில்

  

அதிகாரிணியா? இல்லையா? லக்ஷ்மி பத்தாவா (बद्धा) முக்தியடைந்தவளா? ஸீதை முதலிய அவதாரம் பூமியில் பிறப்பு என்பது ஜீவனைப்போல் ஶரீரம் பெறுவதா? அல்லது தோற்றம்தானா? லக்ஷ்மியானவள் விஷ்ணுவை அர்ச்சனை செய்வது மற்றவர்போல் பந்தம் விடுவதற்கு செய்யப்படுவதா? அல்லது முக்தர்கள் போல நிருபாதிக பக்திவிஶேஷத்தினாலா? பக்தி விஶேஷத்தினால் என்று கூற ப்ரமாணம் என்ன? என்று விசார வரிசை.

பூர்வபக்ஷம்:- यदर्चितं ब्रह्मादिभिः सुरैः श्रियाश्च देव्या मुनिभिश्च शाश्वतैः (भा 10.33)- ''ப்ரம்மா, ஶிவன், தேவர்கள், லக்ஷ்மி, முனிவர்களால் பூஜிக்கப்பட்டவர் (விஷ்ணு)'' என்ற வசனப்படி லக்ஷ்மிக்கு பகவத் அர்ச்சனம் கூறப்படுகிறது. இது பகவானை ப்ரீதி பண்ணி மோக்ஷத்திற்காகவே, முக்தியடைந்தபின் தேவையில்லையே! மேம்பட்ட பக்தியினால் ஏற்படலாம் என்பதற்கு ப்ரமாணம் இல்லை. அவ்வாறு இருப்பின் ஸாத்வதர்களுக்கும் இவ்வாறே ஆகலாமே என்று அதிப்ரஸங்கம் வரும். எனவே மற்றவர்கள் போலவே ஸீதை, ருக்மிணி போன்றவர்களும் தேஹம் எடுப்பதும் பகவத் அர்ச்சனையினால் முக்தி பெறுவதும் பொருந்தும் என்பதால் லக்ஷ்மியும் உபாஸனை -யில் அதிகாரிணி.

ஸித்தாந்தம் :- ஸர்வாயதன- என்ற வாக்யத்தில் கூறிய ஶ்ருதியின் பலத்தினால் லக்ஷ்மிக்கு நித்யமே பகவத் ஸன்னிதானம் இருப்பதால், விஷ்ணுவின் விஶேஷமான ப்ரஸாதத்தினால் நித்ய முக்தத்வம் தெரிகிறது. எனவே பூமியில் ஸீதாதி ரூபேண உண்டாவது ஸ்வேச்சாதீனம்தான். மேலும் "यथा श्रीर्नित्यमुक्तापि" என்ற ஸ்ம்ருதியிலும் நித்யமுக்தத்வம் கூறப்படுகிறது. எனவே ஶ்ரீ உபாஸனையில் அதிகாரிணி அல்ல.

## 3.3.26 A आदरदलोप: (2 सूत्रे)

பூர்வபக்ஷம்:- சாந்தோக்யத்தில் வைஶ்வானர வித்யை கூறப்பட்டு ப்ராணாஹுதிகள் சொல்லப்படுகின்றன. ஏதோ ஒரு காரணத்தினால் போஜனம் இல்லாவிடில் இந்த உபாஸகனுக்கு ப்ராணாஹுதி லோபிக்கக் கூடாது. ஏனெனில் ப்ராணாஹுதியில் ஶ்ருதிக்கு மிகுந்த அக்கறைதெரிகிறது. எனவே அனஶன தினத்திலும் ப்ராணாஹுதி உண்டு.

ஸித்தாந்தம் :- இது தவறு. சாப்பிடும் நேரத்தில் இலையில் வைக்கப்பட்ட அன்னத்திலிருந்து ப்ராணாஹுதி விதிக்கப்படுகிறது. ஆகவே போஜனம் இல்லாவிடில், ப்ராணாஹுதிக்கு த்ரவ்யமான அன்னம் இல்லாதபோது எதை ப்ராணாஹுதி செய்வது? எனவே போஜனம் இல்லாத நாளில் ப்ராணாஹுதி கிடையாது.

## 3.3.27 A तन्निर्धारणानियमस्तद्दृष्टेः पृथग्घ्यप्रतिबन्धः फलम् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- உத்கீதம் போன்ற கர்மாங்கமானவைகளில் கூறப்படும் தேவதோபாஸனைகள் கர்மாங்கத்தை சேர்ந்தவை. எனவே கர்மா பண்ணும்போது கட்டாயமாக அங்கங்கள் போல உபாஸித்தே தீரவெண்டும். இங்கு கர்மாவின் ப்ரகரணம் இல்லாவிட்டாலும் வாக்ய ப்ரமாணத்தால் புரஸமரத்திற்கு (உபகரணங்கள் வழியே) யாகத்தின் தொடர்பு தெரிகிறது. எனவே இந்த உபாஸனைகள் கர்மானுஷ்டானத்தில் அனுஷ்டிக்கப்படவேண்டும்.

ஸித்தாந்தம் :- ஜலப்ரணயனத்தில் கோதோஹ பாத்ரம் போல் இந்த உபாஸனைகள் வருகின்றன. எனவே இவைகள் கட்டாயமானவை இல்லை, கோதோஹனம் போலவே புருஷார்த்தம் (விஶேஷ பயனை) விரும்பினால் செய்யலாம்.

ஏனெனில் கர்மபயனைக் காட்டிலும் "वर्षतिहास्मै" என்று மழை போன்றவற்றை தனிப் பயனாக கூறுகிறது வேதம். மேலும் உபாஸனையுடன் அல்லது உபாஸனை இல்லாமல் செய்யலாம், உபாஸனையுடன் கூடினால் விஶேஷ பயன் என்று அதே இடத்தில் கூறப்படுகிறது. "उभौ குருத:" என்று.

## 3.3.17 V तन्निर्धारणानियमस्तद्दृष्टेः पृथग्घ्यप्रतिबन्धः फलम् (1 सूत्रम्)

அத்வைதிகளுக்கும் விஶிஷ்டாத்வைதிகளுக்கும் பூர்வபக்ஷமும் ஸித்தாந்தமும் ஸமமாக இருக்கிறது. உபாஸனையுடன் சேர்த்தால் தடைகள் குறையும் என்பது விஶேஷம்.

## 3.3.25 D तन्निर्धारणानियमस्तद्दृष्टेः पृथग्घ्यप्रतिबन्धः फलम् (1 सूत्रम्)

லக்ஷ்மிக்கு க்ருதார்த்தையானாலும் உபாஸனை விடுவதில்லை என்றால் க்ருதார்த்தர்கள் ஆகாதவர்களுக்கு ஶ்ரவணாதி ஸமஸ்த உபாஸனைகளும் லோபமாகிவிடுமே என்று ஆக்ஷேபணையில் இந்த அதிகரணம். ஶ்ரவணம், மனனம், த்யானம் மூன்றும் தனித் தனியாக பண்ண வேண்டுமா? சேர்த்தா? மூன்றிற்கும் பயன் உண்டா இல்லையா? மூன்றும் பயனின் ஸாதனம் என்பதற்கு ப்ரமாணம், உபயோகம் உண்டா? இல்லையா?

பூர்வபக்ஷம்:- உபாஸனை என்பது பகவத் தர்ஶனத்திற்காகவே. அந்த தர்ஶனம் என்பது ஶ்ரவண மனனங்களாலோ, த்யானத்தினாலோ ஏற்படுமானால் (ஏற்படலாம் என்பதால்) மூன்றும் சேர்த்துத்தான் பண்ண வேண்டும் என்பதில்லை. ஶ்ருதியானது ஸாதனங்களின் விகல்பத்தை ஏற்றாலும் பொருந்தும். மேலும் மூன்றிற்கும் தனித் தனிப்பயன் கூறினால்

தர்ஶனம் என்ற ஒரே பயனுக்காக மூன்றயும் விதித்தது பொருந்தாது. எனவே மூன்றையும் சேர்த்து உபாஸனை தேவையில்லை.

ஸித்தாந்தம்:- தர்ஶனத்தை உத்தேஸித்து ப்ரவண, மனன த்யானங்களைவிதிப்பதால் விகல்பத்திற்கு இடமில்லை. Choice (விகல்பம்) ஏற்பதற்கு வார்த்தை இல்லை. எனவே சேர்த்துத்தான் பண்ண வேண்டும். த்யானம் நேராக தர்ஶனத்திற்கு ஸாதனம் ஆனாலும் அஞ்ஞான, விபர்யய, ஸம்ஶயங்கள் போவதற்கு ப்ரவண மனனங்கள் தேவையானதே.

## 3.3.28 A प्रदानवदेव तदुक्तम् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- சாந்தோக்யம் ஸம்வர்க வித்யையில் (प्राणविद्या) அதிதைவம் வாயுவை உபாஸிக்க கூறி அத்யாத்மம் ப்ராணனை உபாஸ்யமாக சொல்லியுள்ளது. ப்ராணன் வாயுவின் கார்யம் ஆதலால் இரண்டு பேரையும் ஏகீகரணம் பண்ணி சிந்திக்க வேண்டும்.

ஸித்தாந்தம் :- தத்வத்தில் பேதம் இல்லாவிடினும், கார்யம் என்றும் காரணம் என்றும் நிலையில் வேறுபாடு உள்ளதால் தனித்தனியாகத்தான் பிரித்து உபாஸனை பண்ண வேண்டும். கர்ம காண்டத்தில் இந்திரன் தேவதை ஒன்றானாலும் इन्द्राय राज्ञे पुरोडाशमेकादशकपालमिन्द्रायाधिराजायेन्द्रायस्वराज्ञे என்பதாக ராஜத்வ, அதிராஜத்வ, ஸ்வராட்த்வம் என்ற விஶேஷண பேதத்தினால் தனித்தனியாக புரோடாஶ ப்ரதானம் பண்ண வேண்டும் என நிர்ணயிக்கபட்டுள்ளது. அதே போலவே இங்கும் கொள்ள வேண்டும். எனவே வாயுவையும் ப்ராணனையும் தனித்தனியே உபாஸிக்க வேண்டும்.

  

## 3.3.18 V प्रदानवदेव तदुक्तम् (1 सूत्रम्)

விஶிஷ்டாத்வைதத்தில் இந்த அதிகரண விஷயம் முற்றிலும் வேறுபட்டது. தஹர வித்யையில் விஶேஷம் விசாரிக்கப் படுகிறது.

பூர்வபக்ஷம் :- சாந்தோக்ய தஹர வித்யையில் தஹராகாஶ வார்த்தையினால் கூறப்பட்ட பரமாத்மாவிற்கும், அபஹதபாப்மத்வம் முதலிய குணங்களுக்கும் தனியான உபாஸனை விதிக்கப்-பட்டாலும் பரமாத்மாவிற்கு ஸர்வ வித்யையிலும் தொடரக்கூடிய ஸத்யத்வ, ஞானத்வம் போன்றஸ்வரூப நிரூபக தர்மத்துடன் சேர்த்து உபாஸிப்பதால்தான் பரமாத்மாவாகிய தர்மிசிந்தனம் கிடைத்து விடுவதால் அபஹதபாப்மத்வாதி குணங்களுடனும் கூடியவராக சிந்திப்பது தேவையில்லை.

ஸித்தாந்தம் :- இது தவறு. ஸத்யத்வாதி ஸ்வரூப நிரூபக சிந்தனையும், அபஹதபாப்மத்வாதி விஶிஷ்ட சிந்தனமும் தனித்தனியே பண்ண வேண்டும்; விஶிஷ்டமான சிந்தனையும் ஸ்வரூப சிந்தனையும் வேறன்றோ! உதாரணம் இந்திர யாகம் கூறியது போலவேதான். எனவே இரண்டு விதமாகவும் உபாஸனை தேவை.

## 3.3.26 D प्रदानवदेव तदुक्तम् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- முன் கூறிய ஶ்ரவண, மனன, த்யானங்கள் எப்படிச் செய்தாலும் ஞானகாரணமாகுமா? ப்ரீதிபூர்வமாகவும் குரு உபதேஶத்துடனும் சேர்ந்து செய்தால்தானா? குரு உபதேஶத்துடன் கூடியதுதான் பலன்தரும் என்பதற்கு ஸாதக ப்ரமாணமில்லை மேலும் ஶ்ருதி விரோதமென்று பாதகமும் உண்டா? அல்லது ஸாதகமும் உண்டு, பாதகமும் இல்லையா? என்று விசார வரிசை. குரு உபதேஶத்துடன் கூடியதுதான் ஞான

ஸாதகம் என்பதற்கு ப்ரமாணமில்லை. மேலும் த்³ரஷ்டவ்ய: என்பதாக ஞானத்தைக் குறித்து ஶ்ரவணாதி மூன்றை மட்டுமே ஶ்ருதி கூறுவதால் குரு உபதேஶம் தேவை இல்லை என்று தெரிகிறதல்லவா? மேலும் ஞானம் குரு உபதேஶாதீனம் என்றால் ஞானிக்கு மோக்ஷமும் குரு அதீனம் என்று ஆகிவிட்டால் ஒருவேளை குருவின் கோபத்தினால் மோக்ஷம் கிடைக்காமல் ஆகிவிடலாம் என்று ஆகும். இது தவறு. எனவே ஶ்ரவணாதித்ரயம் தனியே ஞான ஸாதனம்.

ஸித்தாந்தம் :- ப்ரீதிபூர்வமாக குரு உபதேஶத்துடன் கூடிய ஶ்ரவணாதிகள்தான் ஞான ஹேது; தனியல்ல. "आचार्यवान् पुरुषो वेद" என்ற வாக்யத்தில் ஞானமானது குருப்ரஸாதாதீனம் என்று தெரிகிறது. இது இல்லாமல் ஶ்ரவணாதிகள் பலிக்காது. மேலும் "सम्यग्लक्षण संपन्नः यद्वद्यात्सुप्रसन्नधीः । शिष्याय सत्यं भवति तत्सर्वं नात्र संशयः ॥ नातीप्रसन्नहृदयः यद्वद्याद्गुरुरप्यसौ । न तत्सत्यं भवेत् तस्मात् अर्चनीयो गुरुः सदा ॥" (ப்ரீதி ஸந்தோஷத்துடன் குரு தருவதுதான் ஸத்யமாக பலிக்கும்; இல்லையேல் குரு கொடுத்தாலும் பயன் ஏற்படாது) என்று ஶ்ருதி உள்ளது. ஶ்ருதி விரோதம் இதனால் கிடையாது. ஶ்ரவணாதிகள் ப்ரதானமான ஸாதனம், குருப்ரதானமும் அதற்கு அங்கம். அங்கமானது ப்ரதானத்துடன் ஒரே நிலையில் விதிக்கப்படாவிடினும் "दृढमुष्टिनिपीडनं" முதலியது போல் சொல்லாமலே கிடைக்கும். அல்லது வேறு வசனத்தினாலும் கிடைக்கலாம். இதன் மூலம் குரு கோபத்தினால் ஞானிக்கு மோக்ஷமும் தடைபடலாம் என்ற ஆக்ஷேபணை ஸரியல்ல. ஞானம் மோக்ஷம் இரண்டுமே ஈஶ்வரனால் தீர்மானிக்கப்படுவதாகும். எனவே ஶ்ரவணாதிகளுக்கு குரு ப்ரதானம் (गुरुप्रदानं) தேவை.

Speciality in अधिकरणरचना - அத்வைத ஸித்தாந்தத்தில் ஒன்பது ஸூத்ரங்கள் சேர்த்து ஒரே அதிகரணம் இது. விஶிஷ்டாத்வைதிகளுக்கு 1+8 என்று இரண்டு அதிகரணம். த்வைதிகளுக்கு 8 அதிகரணம்.

## 3.3.29 A लिङ्गभूयस्त्वातद्धि बलीयस्तदपि (9 सूत्राणि)

விஷயம் :- அக்னிரஹஸ்ய ப்ராம்ஹணத்தில் கூறப்படுகிறது -तत्षट्त्रिंशतंसहस्राण्यपश्यदात्मनोऽग्नीनर्कान्मनोमयान्मनश्चितः- மனிதனின் நூறு வருஷ ஆயுளில் 36000 தினங்கள் வருகின்றன. ஒவ்வொரு தினமும் ஒரு மனோவ்ருத்தியையும் அக்னியாக த்யானித்தால் 36000 அக்னிகள் ஏற்படுகின்றன. இவை ப்ரத்யகாத்மாவாக த்யானிக்கப் படவேண்டும். இவைகள் மனதினால் எண்ணப்படுவதால் "மனஸ்சித்துக்கள்" என்று பெயர் பெறுகின்றன. இதேபோல் ப்ராணசித்துக்கள், வாக்சித்துக்கள், கண்சித்துக்கள் கூறப்படுகின்றன. இவைகள் எல்லாம் கர்மாவிற்கே அங்கமானவை. ஸ்வதந்திரமான வித்யை அல்ல.

கேள்வி :- இங்கு வாக்யத்தின் பின்பகுதியில் இவ்விதம் த்யானம் செய்பவருக்கு, தூங்கும் பொழுதும் அக்னிகள் அனுஷ்டிக்கப்படுகின்றன, இடைவெளியே கிடையாது என்று கூறும் வார்த்தையை பார்த்தால் மனவ்ருத்தியை அக்னியாக பாவிக்க வேண்டும் என்று கிடைக்கிறது (लिङ्गम्). கர்மஶேஷமானால் தொடர்ந்து அக்னிசயனம் ஸம்பவிக்காதன்றோ! எனவே கர்மப்ரகரணத்தை தள்ளி (பொருட்படுத்தாமல்) லிங்க ப்ரமாணத்தினால் இவை ஸ்வதந்திரமான உபாஸனைகள் என்று எண்ண முடியாது. விதியின் அருகில் கூறப்படும் லிங்கம்தான் ப்ரபலமானது. ஆனால் மற்றதிற்காகக் காணப்படும் லிங்கம் ப்ரபலமானது அல்ல. எனவே ப்ரகரணத்தினால் கர்மஶேஷமே.

ஸித்தாந்தம்:- இங்கு ஸ்பஷ்டமாக ஶப்தத்தினால் விதி கூறப்படவில்லை. எனவே பயனைக் கூறும் துதிக்கும் அர்த்த வாதத்தினால் விதியை ஊகிக்க வேண்டும். இவ்விதம் இங்கு பயனைக் கூறுவதான அர்த்தவாதத்தினால் விதியானது ஊகிக்கப்படுகிறது. எனவே இந்த இடத்தில் கூறப்படுவது விதிஶேஷமான லிங்கம்தான். ஆகையால் இது ப்ரபலமானது. மேலும் विद्यया हैवेते एवंविदश्चिता भवन्ति என்ற வாக்யமும் உள்ளது. மேலும் "ते हैतेविचित एव" என்று ஶ்ருதியும் உள்ளது. இவ்விதமாக ஶ்ருதி, லிங்க, வாக்ய ப்ரமாணங்களால் கர்மப்ரகரணத்தைத் தள்ளி (பொருட்படுத்தாமல்) மனஸ்சித்துக்கள் ஸ்வதந்திர உபாஸனைகள்-தான். (மனோவ்ருத்தி போன்றவைகளை அக்னியாக உபாஸிக்க வேண்டும்) கர்மா அல்ல.

## 3.3.19 V लिङ्गभूयस्त्वात्तद्धि बलीयस्तदपि (2 सूत्रे)

பூர்வாதிகரணத்தில் தஹரவித்யை விசாரிக்கப்பட்டது. தொடர்ந்து இந்த அதிகரணத்தில் दहं विपाप्मम् என்ற தஹர வித்யை தொடர்ந்து அடுத்த அனுவாகத்தில் सहस्रशीर्षं देवं विश्वाक्षम् என்பதில் கூறப்படும்நாராயணர் தஹர வித்யையின் ஶேஷமாக, தஹரவித்யோபாஸ்யமாக மட்டும் நாராயணன் கூறப்படுகிறார் என்ற ஸந்தேஹம் சிலருக்கு வருமாதலால், அதை போக்கி ஸகல வித்யா வேத்யரான தன்மை நாராயணனுக்கு இருப்பதை நிர்ணயிக்க இந்த அதிகரணம் தொடங்குகிறது.

பூர்வபக்ஷம்:- दहं विपाप्मम् என்று ஹ்ருதய புண்டரீகத்தில் உள்ள பரமாத்மாவை உபாஸிக்கும்படி தஹரவித்யை கூறிவிட்டு, உபாஸ்ய நிர்ணயத்திற்காக सहस्रशीर्षं देवम् என்று ஆரம்பிக்கும் இந்த அனுவாகம் தஹரவித்யோபாஸ்ய நிர்ணயம் பண்ணுவதற்கே வந்ததாக எண்ண வேண்டும். ததுபாஸிதவ்யம்-

என்று சென்ற அனுவாகத்தில் கூறப்பட்ட உபாஸ்ய நிர்ணயமாயின் सहस्रशीर्षम् என்று இரண்டாம் விபக்தி பொருந்தாது, முதல் விபக்தியல்லவா இருக்க வேண்டும் என்று கேட்க வேண்டும். வேதத்தில் விபக்தி மாறுபாடு ஸஹஜமானதால் இங்கு முதல் விபக்தியாக மாற்றி உணரவேண்டும். முன்பு கூறிய குணாஷ்டகமும் நாராயணருமான ஆத்மா உபாஸ்யர் என்று நாராயண அனுவாகமானது தஹரவித்யாவேத்யரை கூறுகிறது.

ஸித்தாந்தம் :- नारायण परं ब्रह्म तत्वं नारायणः परं । नारायण परो ज्योतिरात्मा नारायणः परः ॥ போன்ற வாக்யங்களாகிற ப்ரமாணத்தினால் இந்த நாராயண அனுவாகம் ஸர்வ பர வித்யைகளினாலும் வேத்யரான நாராயணரைக் கூறத்தான் வந்துள்ளது என்று தெரிகிறது. அந்தந்த வித்யைகளில் ''பரப்ரஹ்ம'' பரஞ்சோதி, பரமாத்மா போன்ற ஶப்தங்களினால் கூறப்பட்ட வஸ்துவை அனுவாதம் பண்ணி ''அந்த வஸ்து நாராயணரே'' என்று விதிக்கப்படுகிறது. பல வாக்யங்களில் நாராயண பதத்தின் ஆவ்ருத்தி வருவதால் அந்தந்த பர வித்யைகளால் வேத்யன் நாராயணன்தான் என்று பொருள். "अन्तर्बहिश्च" என்ற வாக்யத்தில் ஸர்வ நியந்த்ருத்வம் நாராயணனுக்கு சொல்லப் படுவதால் नारायणात्परम् = नारायणपरम् என்று பஞ்சமீ ஸமாஸம் கூடாது என்று தெரிகிறது. எனவே ''நாராயண:'' என்று கூற வேண்டிய இடத்தில் ஸுலோபம் வந்துள்ளது. ஆகையால் இந்த அனுவாகமானது ப்ரகரண ப்ரமாணத்தினால் தஹரவித்யோபாஸ்ய நிர்ணயத்திற்காக என்பது கிடையாது. இதை விட ப்ரபல ப்ரமாணமான வாக்யங்களால் ஸர்வ பரவித்யோபாஸ்யனான-வரையே நாராயணனாக கூறுகிறது.

## 3.3.20 V पूर्वविकल्पः प्रकरणात् स्यात् क्रियामानासवत् (7 सूत्राणि)

(அத்வைதத்தில் இந்த ஸூத்ரங்கள் பூர்வாதிகரணத்திலேயே அடங்கிவிட்டன) பூர்வ-உத்தர பக்ஷம் அது போலவே.

பூர்வபக்ஷம் :- மனஸ்சித்துக்கள் கர்மாங்கங்கள், உபாஸனை அன்று.

ஸித்தாந்தம் :- மனஸ்சித்துக்கள் தனியான ஸ்வதந்திரமான உபாஸனைகளே. ஶ்ருதி லிங்க வாக்யங்கள் என்கிற மூன்ற ப்ரபல ப்ரமாணங்களில் கர்ம ப்ரகரணத்தை பொருட்படுத்தாமல் நிர்ணயம் என்னவென்றால்இவை தனியான உபாஸனைகளே.

மத்வமதரீதியில் இந்த ஒரு அதிகரணம், எட்டு அதிகரணங்களாக பிரிக்கப்படுகின்றது. தனித்தனி விஷயங்களை நிர்ணயிப்பதாக அமைகிறது. அவைகளைப் பார்ப்போம்.

## 3.3.27 D लिङ्गभूयस्त्वातद्धि बलीयस्तदपि (1 सूत्रम्)

பூர்வாதிகரணத்தில் ஶ்ரவணாதிகள் ஸாதனைகள், அதற்கு அங்கம் குருப்ரதானம் என்று நிர்ணயிக்கப்பட்டது. அதில் இரண்டும் ஸமபலமா? (ஸமபலம்) அல்லது ஒன்று அதிக பலமுடையதா? புருஷத்தன்மையானது ஸமமானதால் குருஶிஷ்யயத்னங்களுக்கு ஸமத்வை அளிக்குமா? அளிக்காதா? ஒன்றுதான் மிகுந்த பலம் பொருந்தியதானால் அது என்ன? என்ற விசார வரிசை

பூர்வபக்ஷம் :- ஶ்ரவணாதிகள் ஸாதனம், குரு ப்ரதானம் இதி கர்த்தவ்யம் (செய்முறை) என்று இருப்பதால் ஒரு இடத்திலும்

கரணத்தைவிட இதி கர்த்தவ்யதைக்கு ப்ராபல்யம் காணப்படாததால் குருப்ரதானம் மிகுந்த பலம் பொருந்தியதாக ஆகாது. அப்படியானால் ஶ்ரவணாதிகள் வீண் என்று ஆகிவிடும். இதே போலவே குருஶிஷ்யர்களின் முயற்சியிலும் ஸாம்யம்தான். ஆகவே ஶ்ரவணாதிகள்தான் மிகுந்த பலம் பொருந்தியவை.

ஸித்தாந்தம்:- குருத்வம், ஶிஷ்யத்வம் என்பது உச்ச நீசமானது போல் அவர்களது ப்ரயத்னமும் உச்ச நீச்சத்தன்மையை உடையவைதான். இதே போல ஶ்ரவணாதிகள் குருப்ரதானம் இவைகளில் லிங்கபாஹுள்யம் இருப்பதால் குருப்ரதானம் மிகுந்த வலிமையுள்ளது. கரணத்தைவிட இதிகர்த்தவ்யத்திற்கு ப்ராபல்யம் என்பதில் உதாரணம் -"ஹிம்ஸை என்பது பாப ஸாதனம்" இருப்பினும்கூட ப்ரோக்ஷணம், அஞ்சனம், நியோஜனம், பர்யக்னிகரணம் - போன்ற இதிகர்த்தவ்யங்களின் பலத்தினால் புண்ணிய ஜனகத்வம் ஏற்பது போல் இங்கும் இதிகர்த்தவ்யமான குருப்ரதானம் ப்ரபலமாகும். இதனால் ஶ்ரவணாதி ஸாதனம் வீண் என்பது கிடையாது. அவைகளும் தேவையே.

## 3.3.28 D पूर्वविकल्पः प्रकरणात् स्यात् क्रियामानासवत् (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- முன்கூறிய குருவானவர் முன்பு பரம்பரையால் வந்தவரா? புதிதாக ஏற்கலாமா? பூர்வத்தைவிடுவதற்குக் காரணம் இல்லை, எதிர்மறைக்கு காரணம் உண்டா? அல்லது நேர் மாறுதலா? மற்றவை எடுத்துக்கொள்ளலாம் என்றால் யாரை வேண்டுமானாலும் ஏற்கலாமா? முன்பைவிட குறைவில்லாத பூர்ணானுக்ரஹ கர்த்தாதானா? என்று விசார வரிசை. ஶுபலாபத்திற்காக குரு ஸ்வீகாரம் பண்ணுகிறோம். முன்பு வந்திருக்கும் குருவே ஶுபம் தருவதற்குப் போதுமானதால் அவரை

த்யாகம் பண்ண காரணமில்லை. மேலும் गुरुत्यागे भवेन्मृत्युः मन्त्रत्यागे दरिद्रता । गुरुमन्त्रपरित्यागी रौरवं नरकं व्रजेत् ॥ "குருவை த்யாகம் செய்தவனுக்கு மரணம் வரும், மந்த்ர த்யாகத்தினால் ஏழ்மை வரும், குரு, மந்த்ரங்களை விட்டவன் ரௌரவ நரகம் அடைவான்" என்று ஸ்ம்ருதி கூறுகிறது. மற்றவரை வரிப்பதானால் யாரோ ஒருவரை ஏற்கலாம்.

ஸித்தாந்தம் :- இது தவறு. ஏனெனில், தனக்கு தேவையான எல்லா லாபங்களையும் பெறுவதற்கே குரு ஸ்வீகாரம் என்பதால் இதற்கு லாயக்கில்லாதவரானால் வேறு குருவை ஏற்கலாம், ஆனால் அவர் ஸமக்ர அனுக்ரஹ ஸமர்த்தராக இருத்தல் வேண்டும். ஸமமானவராயின் நம் விருப்பப்படிதான் வருமே தவிர கட்டாயம் ஏற்க தேவையில்லை. மேம்பட்டவரானால் அனுமதி பெறாமலே ஸ்வீகரிக்க வேண்டும். முன் கூறிய நிஷேத வசனம் அதம குருவை ஸ்வீகரிப்பதில் கூறப்பட்டது.

## 3.3.29 D विद्यैव तु निर्धारणात्, दर्शनाच्च (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- முன் கூறிய ஶ்ரவணாதி உபாஸனம் செய்ய வேண்டுமா? வேண்டாமா? அவைகளுக்கு ஞான த்வாரா முக்தி ஹேதுத்வ நிர்ணயம் ஸம்பவிக்குமா? ஸம்பவிக்காதா? கர்மாக்களும் பரம்பரையாக முக்தி ஹேது ஆகலாம் என்பது ஸரியா? இல்லையா? कर्मणैव हि संसिद्धिं - "கர்மாவினாலேயே ஸித்தி உண்டு" என்று மூன்றாம் விபக்தி இருப்பதால் ஸாக்ஷாத் முக்தி காரணத்வம் போதிப்பதற்கு தடை வாக்யம் உண்டா? ஞானத்தின் மூலம் முக்தி ஹேதுத்வம் என்ற பக்ஷத்தில் பரோக்ஷ ஞானத்தின் வழியாகவா? அபரோக்ஷ ஞானத்தின் வழியாகவா? என்று விசார வரிசை. இந்நிலையில் பூர்வபக்ஷம் இவ்வாறு -"कर्मणैव हि" என்ற கீதையின் படி ஸாக்ஷாத் முக்தி காரணத்வம்

த்ரிதீயா விபக்தியால் உணரப்படுவதற்கு बाधकम् (தடை) ப்ரமாணம் இல்லை. तरति शोकमात्मवित् =ஆத்ம ஞானத்திற்கு முக்தி காரணத்வம் மட்டுமே பொருள் என்பதால் கர்மாவிற்கு கிடையாது என்று இதனால் கூறமுடியாது. எனவே भाक्तम् वा என்ற (3.17)ல் கூறிய "கர்மாவிற்கு முக்தி ஹேதுத்வம் கௌணம்" என்பது ஸரியல்ல என்பதால் ஶ்ரவணாதி உபாஸனாதான் ஞானத்வாராமுக்தி ஹேது என்று நிர்ணயிக்க முடியாது. லகுவான உபாயமிருப்பின் பளுவான உபாயத்தை ஸந்தேஹமின்றி அனுஷ்டிப்பது ஸரியல்ல, ஆகையால் உபாஸனம் செய்ய வேண்டும். அல்லது அபரோக்ஷ ஞானம்தான் முக்திஹேது என்பதால் ஶ்ரவணாதிகளாலேயே அபரோக்ஷ-ஞானம்கிட்டும் என்பதால் த்யானம் வீண்.

ஸித்தாந்தம் :- "नान्य: पन्था विद्यतेऽयनाय" என்று "மோக்ஷத்திற்கு ஞானம் தவிர வேறு வழி கிடையாது" என்று அறுதியிட்டு கூறியிருப்பதால், கர்மாக்களுக்கு ஸாக்ஷாத் மோக்ஷ காரணத்வம் நிஷேதிக்கப்படுகிறது. எனவே கீதை வாக்யத்திற்கு பரம்பரையாக முக்திஹேதுத்வம் மட்டுமே பொருள் கொள்ள வேண்டும். ஞானத்வாரா முக்திஹேதுத்வம் என்பது உபாஸனைக்கும் (த்யானத்திற்கும்) வருமாதலால் உபாஸனம் தேவைதான். அந்த ஞானமும் பரோக்ஷமன்று "दृष्ट्वैव तु मुच्यते" (कौशिक) ஶ்ருதியினால் அபரோக்ஷ ஞானத்தினால்தான் முக்தி. ஆகையால் ஶ்ரவணம், மனனம், த்யானம் மூன்றும் தேவை.

## 3.3.30 D श्रुत्यादिबलीयस्त्वाच्च न बाधः (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- ஞானத்தின் பயனான மோக்ஷம் கர்ம ஸாத்யமா? அல்லது ஞான ஸாத்யமா? कर्मणैव என்ற ஸ்ம்ருதியானது नान्यः पन्था என்ற ஶ்ருதியை விட ப்ரபலமா? இல்லையா? கர்மாவினால் மட்டுமே (ஏவ) என்ற அறுதிப்பாடு முழுமையாக நிரவகாஶமா?

ஸாவகாஶமா? ஸாவகாஶம் எனில் ப்ரமாணம் என்ன என்ற விசார வரிசை. பூர்வபக்ஷம் இவ்வாறு- மோக்ஷம் கர்ம ஸாத்யம்தான், கீதை கூறுவதால். ஸ்ம்ருதி துர்பலமானது என்று எண்ண வேண்டாம். அவதாரணத்துடன் உள்ள ஸ்ம்ருதியும் ப்ரபலம்தானே ஆக வேண்டும். கர்மாவும் உண்டு (பரம்பரையில்) என்பதால் ஸாவகாஶம் ஸ்ம்ருதி என்று கூறுவதற்கு ப்ரமாணம் இல்லை. பூர்வமீமாம்ஸா விரோதம் வரும் (ஸ்ம்ருதியை ப்ரபலமென்றால்) என்று எண்ண வேண்டாம். மீமாம்ஸையில் ஶ்ருதிக்கு விரோதமான ஸ்ம்ருதிதான் உபேக்ஷிக்க வேண்டியதாக கூறுவதால் இந்த ஸ்ம்ருதி ஶ்ருதி மூலமானதால் ப்ரமாணம் உண்டு. எனவே வித்யா ஶ்ருதியைத் தள்ளி கர்மாவினாலேயே மோக்ஷம் என்பது ஏற்கவேண்டும்.

ஸித்தாந்தம் :- இது தவறு. மோக்ஷமானது ஞானத்தினால் மட்டுமே கிட்டும். ப்ரபலமான ஶ்ருதி, லிங்கம், உபபத்தி, ஸ்ம்ருதிகளினால் வலுவு பெற்ற. "ஏவ" என்று அறுதி கூறும் ஶ்ருதி மிகவும் ப்ரபலமானது, பல கர்மாக்களின் பயனைப் பெற்ற இந்த்ரன் மோக்ஷத்திற்காக தத்வஞானத்தை ப்ரார்த்தித்து ப்ரஜாபதியை அடைந்தானன்றோ! கர்மாவினால் மோக்ஷம் ஏற்பட்டால் அநித்யமாகிவிடும் என்று உபபத்தியும் உள்ளது. எனவே कर्मणैव என்ற இடத்தில் संसिद्धिमास्थिता एव என்பதாக அன்வயம்கூறி மோக்ஷம் கட்டாயம் வரும் என்றுதான் பொருள். ஆகவே ஸ்ம்ருதியானது மோக்ஷத்திற்கு ஸாக்ஷாத் கர்மா காரணம் என்று கூறவில்லை.

## 3.3.31 D अनुबन्धादिभ्यः (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- ப்ரஹ்மதர்ஶனம் மோக்ஷ ஸாதனம் என்று நிர்ணயிக்கப்பட்டுவிட்டது. அந்த தர்ஶனம் பக்தியில்லாமலே ஶ்ரவணாதி குருப்ரதானத்தினால் மட்டுமே கிடைக்குமா?

இல்லையா? தர்ஶன காரணமான உபாஸனம் பக்தியில்லாமல் வந்தாலும் பயனைத் தருமா? தராதா? என்று விசார வரிசை- பக்தியில்லாமலேயே குருப்ரதான ஸஹித ஶ்ரவணாதிகளால் தர்ஶனம் கிடைக்கும். குருப்ரஸாதத்தால் கிடைக்காதது ஏதுமில்லையன்றோ! பக்தியற்றவனுக்கு உபாஸனை ஸித்திக்காது என்பது ஸரியல்ல. த்வேஷத்தினாலும் உபாஸனை வரலாமே (ஶிஶுபாலன் போல).

ஸித்தாந்தம் :- பக்தி இல்லையேல் தர்ஶனம் கிடைக்கவே கிடைக்காது. பக்தி இல்லாவிடில் புருஷார்த்தம் கிடைக்காது என்று அனுவ்யாக்யானத்தில் பலஶ்ருதிகளைக் காட்டி நிர்ணயிக்கப்பட்டுள்ளது. ஶிஶுபாலன் முதலியவர்கள் ஸ்வாபாவிக பக்தர்கள் ஆவர். குரு ப்ரஸாதம் கூட பக்தியில்லாமல் வராது.

## 3.3.32 D प्रज्ञान्तरपृथक्त्ववद्दृष्टश्च तदुक्तम्

(1 सूत्रम्)

தர்ஶனத்தில் தாரதம்யம் உண்டா? இல்லையா? என்று விசாரிக்கப்படுகிறது. இந்த தர்ஶனம் ஒரே மாதிரியானதா? வேறுபாடு உண்டா? भक्त्या मामभिजानाति என்ற வசனம் யாவருக்கும் ஒரே விதமான ஞானம் வரும் என்பதாக கூறுகிறதா இல்லையா? ஒரே மாதிரியான ஞானம் அல்ல என்பதற்கு ப்ரமாணம் உண்டா? இல்லையா?

பூர்வபக்ஷம் :- முக்திகாரணமான ஞானம் எல்லோருக்கும் ஒரே விதம்தான். ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் இது கூறப்பட்டுள்ளது. दृष्ट्वैव என்ற ஶ்ருதி ஞானவிஶேஷபரம் என்று கூறமுடியாது, ப்ரமாணம் இல்லையன்றோ! உபாஸனையின் தாரதம்யத்தால் ஞான தாரதம்யம் வரலாம் என்று கூறமுடியாது. உழவர்களின்

விதவிதமான தாரதம்யமான உபகரணங்களினால் ஒரே பயன் ஏற்படுவது போல் இங்கும் ஏற்படலாம்.

ஸித்தாந்தம் :- பகவத்தர்ஶனம் பலவிதமானதுதான். தர்ஶன ஸாதனமான உபாஸனைகள் வேறுபட்டதன்றோ! ஸாதனைக்கேற்ப பயனில் தாரதம்யம் தவிர்க்க முடியாது. अन्तर्दृष्टयः बहिर्दृष्टयः என்று ஸ்பஷ்டமாக ஞான வைசித்ரியம் கூறப்படுகிறது. எனவே உழவனின் உதாரணத்தை வைத்து ஆக்ஷேபம் வராது. எனவே भक्त्या मामभिजानाति என்பது அதிகாரி விஶேஷபரம்தான்.

## 3.3.33 D नसामान्यादप्युपलब्धेर्मृत्युवन्न हि लोकापत्तिः (1 सूत्रम्).

பூரவபக்ஷம் :- இங்கு கூறப்படும் பகவத் தர்ஶனம் ஏதோ ஒரு ரூப விஷயமா? அல்லது பிம்பரூபவிஷயமா? ரூபவிஷயமான தர்ஶனத்திற்கே முக்தி காரணத்வம் இருப்பின் न स्थानतोऽपि என்ற இடத்தில் கூறிய நிர்ணீதமான பகவத் ரூபங்களுக்கு ஸாம்யம் கெடுமா? கெடாதா? ஏதோ ஒரு ரூப தர்ஶனத்தினால் முக்தி கிடைத்தால் மற்றொன்றிற்கு பயனற்ற தன்மை வருமா? வராதா? என்று விசார வரிசை. ஏதோ ஒரு ரூபத்திற்கு மோக்ஷம் கொடுக்கிற ஶக்தி, மற்றதற்கு இல்லையென்றால் न स्थानतोऽपि என்று கூறிய ஸ்வரூபங்களுக்கு கூறிய ஸாம்யம் இல்லாமல் ஆகிவிடும். எந்த ஒரு ரூபஞானத்திற்கும் முக்திஹேதுத்வம் உண்டு. மேலும் ஏதோ ஒரு ரூபஞானம் முக்தி காரணம், மற்றது இல்லை என்றால் பிம்பஞானமும் சிலது முக்தி காரணம், சிலது முக்தி காரணம் அல்ல என்று ஏற்பட்டுவிடும்.

ஸித்தாந்தம் :- எவ்வாறு மரணம் என்பது யாவருக்கும் ஸமமானாலும், குறிப்பிட்ட மரணத்திற்கு பிறகே முக்தி என்பது உள்ளதோ அவ்வாறு பகவத் ரூபங்கள் ஸமமானாலும் அவரது ஸங்கல்பானுஸாரம் பிம்பரூப

விஶேஷஞானமே முக்தி காரணம்; ஏதோ ஒரு ரூபஞானமன்று. பகவான் எல்லோருக்கும் ஸமமாக இருப்பினும் தனது பிம்பதர்ஶனம் ஏற்பட்டால்தான் முக்தியடைவிக்கிறார். இவ்வாறானால் ஸாமான்ய தர்ஶனம் வீண் என்று ஆகாது. ஸாமான்ய தர்ஶனத்தினால் புண்ணிய போகங்கள் உண்டு.

## 3.3.34 D परेण शब्दस्य ताद्विध्यं भूयस्त्वात् त्वनुबन्धः (1 सूत्रम्)

பூர்வபக்ஷம்:- ப்ரக்ருதமான பகவத் தர்ஶனம் பக்தி-ஸாமர்த்யத்தினால் கிடைக்கிறதா? ஈஶ்வர ஶக்தியினாலா? பக்தியே இவனுக்குக் காட்டுகிறது भक्तिरेवैनं दर्शयति (माठर) ஶ்ருதி பக்திக்கு ஸ்வாதந்த்ர்யம் கூறுகிறதா? அல்லது பகவான் தர்ஶனம் தருவதற்கு கருவியாவதைக் கூறுகிறதா? பக்திக்கு காரணத்வம் என்ற பக்ஷத்திற்கு ப்ரமாணம் இல்லை, பக்திதான் என்று அறுதியிட்டு கூறுவது பொருந்துமா? அல்லது நேர்மாறுதலா? என்று விசார வரிசை - भक्तिरेवैनं दर्शयति என்பதாக பக்திக்கு காட்டும் வேலையில் கர்த்ருத்வம் கூறப்படுவதால், பக்தி கருவி மட்டுமே என்பதில் ப்ரமாணம் இல்லை. மற்ற ஸாதனங்கள் இருக்கையில் பக்தியை மட்டும் கூறுவதற்கு அடிப்படை இல்லாமல் ஆகிவிடும். எனவே ஈஶ்வர ஶக்தியின் துணை இன்றி பக்தியே தன் வலிமையினால் பகவதாபரோக்ஷயம் (ஸாக்ஷாத்காரம்) தரவல்லது.

ஸித்தாந்தம் :- பக்தி மட்டுமே கர்த்தாவானால் एतैरुपायैर्यतते यस्तु विद्वान् என்ற இடத்தில் மற்ற உபாயங்களை கூறியுள்ளது தவறாகும். இந்த பக்தி போன்ற உபாயங்களால் ப்ரஸன்னரான பகவான் ஆவிர்பவிக்கிறார் என்று கூறியது பொருந்தாது. எனவே பக்திக்கு கரணத்வம்தான் கூற முடியும். மற்ற ஸாதனங்களில் பக்திக்கு சிறப்பு என்பதால் இதை விஶேஷமாக சொல்லியுள்ளது.

ஆகையால் அனாதி பக்தியினால் ப்ரஸன்னரான ஈஶ்வர ஸாமர்த்யத்தினால் அவரது அபரோக்ஷ ஞானம் ஏற்படும்.

## 3.3.30 A एक आत्मनः शरीरे भावात् (2 सूत्रे)

மனஸ் சித் போன்றவைகள் புருஷார்த்தமாக அனுஷ்டாதாவின் பயனுக்காக என்று சென்ற அதிகரணத்தில் நிர்ணயம் செய்யப்பட்டது. இந்த யாக கர்த்தா யார் (புருஷன் யார்) என்று ப்ரஸங்காத் (நினைவு ஏற்பட்டதை விடமுடியாத நிலை)இந்த அதிகரணம். இது பூர்வ-உத்தர மீமாம்ஸைகளுக்கு அங்கமானது. இங்கு ஶரீராதிரிக்தஆத்மா (ஸ்வர்க மோக்ஷங்களை அடைபவனாக) ஸ்தாபிக்கப்படுகிறான்.

பூர்வபக்ஷம் :- பௌத்தர்கள், சார்வாகர்கள் எல்லாம் உடலே ஆத்மா என்று எண்ணுகிறார்கள். சைதன்யம் உணர்வு உடலில்தானே தெரிகிறது. பூதங்களின் சேர்க்கையான உடலில் சைதன்யம் எப்படி வரும் என்றால் வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு மூன்றின் சேர்க்கையினால் மதஶக்தி வருவதுபோல் உடலாக மாறிய பூதங்களின் சேர்க்கையால் உடலில் உணர்வு ஏற்படமுடியும். எனவே உடலே சேதனனான ஆத்மா.

ஸித்தாந்தம் :- பூமி, ஜலம் போன்றவைகளின் அறிவு (நாம் அறிதல்) பூதங்களினின்று வேறுபட்டதாகவேண்டும். உணருபவனாக இருப்பதால் (विषयित्वात्) குடத்தைக்காட்டிலும் அதை அறிவிக்கும் கண் வேறு அன்றோ! அந்த சைதன்யமே ஆத்மதத்துவம் என்பதால் உடல், ஜடசேர்க்கை, சேதனனாக ஆகமுடியாது. உடல் இருந்தும் மரண நிலையில் உணர்வு இல்லையே. எனவே ஶரீரத்தைக் காட்டிலும் வேறானவன் ஆத்மா. இவன்தான் ஸ்வர்காதிகளுக்கு போகிறான், உடல் மண்ணாக ஆகிறது.

## 3.3.21 V एक आत्मनः शरीरे भावात् (2 सूत्रे)

**பூர்வபக்ஷம் :- பரமாத்மாவை உபாஸிப்பது போல் அடையவேண்டிய ஜீவனும் உபாஸ்யன் என்று त्रयाणामेवं என்ற இடத்தில் கூறப்பட்டது. आत्मेति तु என மேலும் கூறப்போகிறது. இந்நிலையில் நமது ப்ரத்யகாத்மா ஞாதா, கர்த்தா, போக்தா என்று எப்படி அறியப்படுகின்றானோ அப்படியே இவனை அனுஸந்தானம் பண்ணினால் மோக்ஷம் கிடைத்துவிடும்.**

**ஸித்தாந்தம் :- ஞாத்ருத்வ கர்த்ருத்வாதிகள் உபாஸிக்கப்பட வேண்டியவை அல்ல. மோக்ஷ நிலையில் எந்த ஒரு அபஹதபாப்மத்வம் போன்றவை வரப்போகின்றனவோ அதை அனுஸந்தானம் பண்ண வேண்டும். அப்போதுதான் அபஹதபாப்மத்வாதிகள் நமக்கு ஸித்திக்கும். இங்கு கர்த்ருத்வாதிகளை அனுஸந்தானம் கூடாது என்று தாத்பர்யம். ஆகவே ஜீவனால் ப்ராப்யனான பரமாத்மாவின் குணங்களே உபாஸிக்கப்பட வேண்டும் என்று கருத்து.**

## 3.3.35 D एक आत्मनः शरीरे भावात् (1 सूत्रम्)

### [व्यतिरेकस्तद्भावाभावित्वान्न तूपलब्धिवत् என்ற ஸூத்ரமே இல்லை]

**பூர்வபக்ஷம் :- உபாஸனையில் அனாதி யோக்யதா தேவையா? இல்லையா? யோக்யதைக்கு அனாதித்வம் வருமா? வராதா? அர்ஜுனன் போன்ற ஈஶ்வராம்ஶங்களுக்கு ஸ்வரூபேண பிறப்பு உண்டா இல்லையா? அம்ஶ அம்ஶிகளுக்கு பேதமா? அபேதமா? அபேத ஸாதகம் இல்லை பாதகம் உள்ளதா? அல்லது நேர் மாறுதலா? என்று விசார வரிசை - பூர்வபக்ஷம் - அம்ஶ அம்ஶிகளுக்கு அபேதம் என்பதற்கு ப்ரமாணம் இல்லை. எனவே பேதம் நிச்சயம் என்பதால், இந்திரன் போன்றவர்**

அனாதியானாலும் இந்த்ராம்ஶமான அர்ஜுனன் ஸ்வரூபேண உத்பத்தி வருவதால் அர்ஜுனாம்ஶம் ஸாதிதான். அவனுடைய தன்மையான யோக்யதையும் ஸாதிதான். எனவே உபாஸனைக்கு அனாதி யோக்யதா அபேக்ஷை இல்லை.

ஸித்தாந்தம் :- அம்ஶத்திற்கு ஸ்வரூப உத்பத்தி என்றால் இந்த ஶரீரம் ஏற்படுவதற்கான பூர்வஜன்மத்தின் கர்மங்கள் இல்லாதபடியால் மோக்ஷம் வராமல் ஆகிவிடும். எனவே கர்ம நிமித்த ஶரீரம் வர முடியாது என்பதால், இந்த்ரனாகிய அம்ஶியின் கர்மாதான் காரணம் என கூறவேண்டும். இந்த்ர கர்மார்ஜித ஶரீரத்தில் அர்ஜுனன் இருப்பது வேறுவிதத்தில் பொருந்தாது என்பதால் அம்ஶ அம்ஶிகளுக்கு அபேதம் கிடைக்கிறது. ஆகவே அனாதியான அபின்னமான அம்ஶத்திற்கு ஸ்வரூப உத்பத்தி வர முடியாது. ஆகையால் அனாதி யோக்யதையும் உண்டு என்ற காரணத்தினால் உபாஸனையில் அனாதி யோக்யதை தேவை.

## 3.3.31 A अङ्गावबद्धास्तु न शाखासु हि प्रतिवेदम् (2 सूत्रे).

பூர்வபக்ஷம் :- கர்மங்களாக உக்த (उक्थ) ஶாஸ்த்ரத்தில் செய்யப் படவேண்டிய உபாஸனைகள் பற்றி விசாரம். ஐதரேயத்தில் உக்தத்தில் பூமி போன்றவைகளை உபாஸிக்க கூறியுள்ளது. ஆனால் உக்தம் என்பது கௌஷீதகியிலும் விதிக்கப்படுகிறது. ஐதரேயத்தில் கூறப்பட்ட பூமி (ப்ருதிவீ) த்ருஷ்டியானது கௌஷீதகியில் தொடருமா (உபஸம்ஹரிக்குமா) இல்லையா என்றால், ஸன்னிதி என்ற ப்ரமாணத்தினால் ஐதரேயத்தில் மட்டும்தான்.

ஸித்தாந்தம்:- "உக்தம்" என்ற பதமானது எல்லா பாகைகளிலும் உள்ள உக்தத்தை (பொதுவாகவே) குறிக்கிறதாகையால் ஶ்ருதி ப்ரமாணத்தினால் எல்லா பாகையிலும் உள்ள உக்தத்தில் ப்ருதிவீ த்ருஷ்டி அனுவர்த்திக்கும். ஏனெனில் ஶ்ருதி ப்ரமாணம் ஸன்னிதானத்தை விட ப்ரபலம்.

## 3.3.22 V अङ्गावबद्धास्तु न शाखासु हि प्रतिवेदम् (2 सूत्रे).

பூர்வபக்ஷம், ஸித்தாந்தங்கள் ஸமமே. பேதமில்லை.

## 3.3.36 D अङ्गावबद्धास्तु न शाखासु हि प्रतिवेदम् (2 सूत्रे).

பூர்வபக்ஷம் :- பகவதுபாஸனம் தனியாகப் பண்ண வேண்டுமா? ப்ரஹ்மாங்க தேவதோபாஸனத்துடன் பண்ண வேண்டுமா? तमेवेकं जानथ, पूजयेन्नान्यदेवताः (அவரை மட்டுமே உணருங்கள், மற்ற தேவதையை பூஜிக்க வேண்டாம்) என்ற வாக்யங்களில் மற்ற உபாஸனைகள் அறவே பூர்ணமாக நிஷேதிக்கிறதா? ப்ரதானமாக மற்றது வேண்டாம் என்று கூறுகிறதா? இதற்கு என்ன ப்ரமாணம்? மற்ற தேவதைகளை உபாஸிப்பதினால் ஓரிடத்தில் கூறப்பட்ட குணங்கள் எல்லோருக்கும் உள்ளதாக த்யானிக்க வேண்டுமா? அந்தந்த தகுதியை பொருத்தா? என்று விசார வரிசை.

பூர்வபக்ஷம் :- பகவதுபாஸனம் மட்டுமே பண்ண வேண்டும் மற்ற தேவதைகளை உபாஸிக்க கூடாது. அந்த வாக்யங்களுக்கு ஸ்வதந்த்ரமாக மற்றவை கூடாது என்று குறுக்கிக் கூற ப்ரமாணம் இல்லை. ஒருவேளை மற்ற தேவதா உபாஸனம் பண்ணுவதானாலும்

கூட அந்தந்த இடத்தில் கூறிய குணங்கள் யாவையும் உடையதாகவே உபாஸிக்க வேண்டும்.

ஸித்தாந்தம்:- आध्यानाय प्रयोजनाभावात् என்பதாக வேதங்களில் கூறுவது உபாஸனைக்காகத்தான் என்பதால், அந்த தேவதோபாஸனம் அறவே நிஷேதிக்கப்பட்டால் வேதங்களில் கூறியது வீணாகும் என்பதாக அர்த்தாபத்தி ப்ரமாணம் இருப்பதால் तमेवैकं என்று உதாஹரித்த வாக்யங்களில் மற்றவர்களுக்கு ப்ராதான்யம் கூடாது என்றுதான் பொருள் கொள்ளவேண்டும். எனவே மற்ற தேவதோபாஸனங்களுடன் சேர்த்துத்தான் பகவதுபாஸனம் செய்யவேண்டும். அதிலும் समत्वाद्वा उत्तमत्वाद्वा (ब्रह्मतर्क) என்று கூறிய உத்தம மத்யமத்வம் இருப்பதால் குணங்கள் கூறப்பட்டவைகளுள் தகுதியை அனுஸரித்து த்யானத்தில் சேர்த்து கொள்ளவேண்டும். இத்தகைய உபாஸனமும் உத்தமாதிகாரிகளால் மட்டுமே செய்யப்பட வேண்டும்; எல்லோராலும் அல்ல.

## 3.3.32 A भूम्नः क्रतुवज्जायस्त्वं तथा च दर्शयति (1 सूत्रम्).

சாந்தோக்யத்தில் வைஶ்வானர வித்யை கூறப்படுகிறது. அங்கு விராட்புருஷனை (cosmic) அந்தந்த உடல் உறுப்புகளை "தலை=த்யுலோகம், கண்= ஸூரியன், ப்ராணன்=வாயு" அந்தந்த லோகங்களாக த்யானம் கூறப்பட்டுள்ளது. அதோடு ஒவ்வொரு உறுப்புகளை மட்டும் த்யானம் செய்தால் தனித்தனி அம்ஶ த்யானமும் கூறப்பட்டுள்ளது. இங்கு தனித்தனி அம்ஶத்யானமும் முழுமையான பூர்ண த்யானமும் செய்யலாமா? பூர்ணம்தானா என்ற ஸந்தேஹம் வருகிறது.

  

பூர்வபக்ஷம் :- தனித்தனி உடல் உறுப்புகளின் த்யானத்திற்கும் தக்க பயன் கூறப்பட்டுள்ளதால் அம்ஶத்யானமும் பண்ணலாம்.

ஸித்தாந்தம் :- இது தவறு. ஸமஸ்தமான பூர்ண உபாஸனம்தான் பண்ண வேண்டும். இந்த உபநிஷத் பாகத்தில் "को न आत्मा, किं ब्रह्म" என்று பூர்ண வஸ்துவையே விசாரிக்க ஆரம்பித்து "वाच ह वै" என்று முடிவிலும் அவரையே நிரூபிக்கிறது. எனவே பூர்ண வஸ்துவாக (விஶ்வரூபமாக) உபாஸித்தல் வேண்டும். அம்ஶங்களை உபாஸிப்பதால் பயன் உண்டாவதாக கூறியது ஸ்துதிக்காக. இல்லையேல் இங்கு வாக்யபேதம் எனும் தோஷம் வரும். அப்படி பல உபாஸனைகளை ஏற்று வாக்ய பேதமும் ஏற்பதானால் அது தவறு. ஏனெனில் தனித்தனியான உபாஸனையை நிந்தித்து உள்ளது. எனவே வைஶ்வானரரை முழுமையாகத்தான் உபாஸிக்க வேண்டும்.

## 3.3.23 V भूम्नः क्रतुवज्जायस्त्वं तथा च दर्शयति (1 सूत्रम्)

இந்த அதிகரணத்தில் நூறு விழுக்காடும் (பூர்ணமாக) பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் ஸமமாகவே உள்ளது. ஸமஸ்த உபாஸனையின் பயனை தனித்தனியே அனுவாதம் பண்ணுகிறது அம்ஶ உபாஸனைகளில்.

## 3.3.37 D भूम्नः क्रतुवज्जायस्त्वं तथा च दर्शयति (1 सूत्रम्)

"यो वै भूमा" என்ற சாந்தோக்ய பூமா வித்யையில் பூமகுணமானது எல்லோராலும் உபாஸ்யமா? இல்லையா? அந்த உபாஸனை பயனுள்ளதா? இல்லையா? என்ற ஸந்தேஹம் தோன்றியதும் -

பூர்வபக்ஷம் :- ஸம்ப்ருத்யாதி குண உபாஸனையின் பயன் எல்லோராலும் அடைய முடியாததால். ஸம்ப்ருதி முதலான குணங்கள் எப்படி ஸர்வோபாஸ்யமில்லையோ, நிரதிஶய பூர்ணத்வமாகிய பூமத்வம் என்பது யாருக்கும் வராதானதால் அடைய விரும்பப்படாதது என்பதால் பூமத்வம் ஸர்வோபாஸ்யமன்று. ஸர்வோபாஸ்யமான ஞான-ஆனந்தத்வத்திற்கு விஶேஷணமானாலும் ப்ரியஶிரஸ்த்வம் போல் பயனில் உபயோகப்படாததால் பூமத்வம் ஸர்வோபாஸ்யம் அல்ல.

ஸித்தாந்தம் :- भूमैव देवः परमोह्युपास्यः என்று (गौपवन) ஶ்ருதியினால் பூமத்வம் ஸர்வோபாஸ்யமே. ஞான - ஆனந்தாதிகளுடன் பூமத்வத்தை விஶேஷணமாக உபாஸித்தால்தான் பயன் கிடைக்கும். ஞானமும் பூமம் (பரிபூர்ணம்) ஆனந்தமும் பூமம் (பரிபூர்ணம்) என்று உபாஸனையானது வேண்டிய பயனைத் தருகிறது என்பதால் இது வீண் அல்ல. எனவே பூமத்வம் ஸர்வோபாஸ்யம்தான்.

## 3.3.33 A नाना शब्दादिभेदात् (1 सूत्रम)

பூர்வபக்ஷம் :- சாந்தோக்யத்தில் ஶாண்டில்ய வித்யை, மது வித்யை போன்ற உபாஸனைகள் கூறப்பட்டுள்ளன. அதே போல வேறு ஶாகைகளிலும் உள்ளன. எல்லாவற்றிலும் உபாஸ்யம் ப்ரஹ்மம் ஒன்றானதால் பூர்வாதிகரணத்தில் கூறியபடி ஸமஸ்தோபாஸனை ஶ்ரேஷ்டமானதால் இவை எல்லாம் ஒரே உபாஸனைதான்.

ஸித்தாந்தம்:- பலபல வித்யைகளின் ஏகீகரணம் (ஒன்று சேர்ப்பது, அனுஷ்டிப்பது) முடியாத கார்யம் என்பதால் தனித்தனி வித்யைகள்தான். உபாஸ்ய ப்ரஹ்மமும் குணங்களின் வேறு-பாட்டினால் வேறுபடுகிறது. ஒரு வித்யையின் அளவு இவ்வளவு என்று எப்படி நிச்சயிப்பது என்று ஸந்தேஹம் வேண்டாம். ஆரம்பம் முடிவு (உபக்ரம உபஸம்ஹாரங்கள்) வித்யையை நிர்ணயிக்க ப்ரமாணமாக உள்ளன. எனவே இங்கு வித்யைகள் வெவ்வேறுதான்.

## 3.3.24 V नाना शब्दादिभेदात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் ஸித்தாந்தம் யாவும் ஸமமே. ஸத்வித்யா, ஆனந்தமய வித்யா, உபகோஸல வித்யா என்று நிர்குண வித்யையையும் சேர்த்து நிர்ணயம் கூறப்பட்டுள்ளது விஶேஷம்.

## 3.3.38 D नाना शब्दादिभेदात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம்:- முன்கூறிய பூமத்வம் அதிகாரிகளுக்கு ஒரே மாதிரி ஏற்கப்படுகிறதா? வெவ்வேறாகவா? வெவ்வேறாக இருக்குமாயின் அது ப்ரமமா? இல்லையா? பூமத்வம் ஒரே மாதிரிதான் இருக்க முடியுமா? வெவ்வேறாக இருக்கலாமா? என்று ஸந்தேஹத்திற்கு பிறகு நிரதிஶய பூர்ணத்வம் என்கிற பூமத்வத்தில் தாரதம்யம் வர முடியாது. எனவே பூமத்வம் ஒரே மாதிரிதான். இருப்பினும் ஶ்ரவண, மனன, அபரோக்ஷ ஞானங்களில் தாரதம்யத்தோடு தெரிந்தால் ஶ்ரவணாதிகள் பொய்யாகிவிடும். எனவே பூமம் ஒரே ரூபம்தான்.

ஸித்தாந்தம்:- கடந்ததான வருஷம், மாஸம், பக்ஷம், நாள், மணி முதலியவைகளில் (ஆனந்த்யம் இருப்பினும்) தாரதம்யம் உள்ளது போல் இங்கும் பூமத்வத்தில் தாரதம்யம் ஸம்பவிக்கும். பகவத் குணங்களிலும், பகவானிடத்திலும், ஆனந்த்யங்கள் பல உள்ளன, என்பதால் அதிகாரிகளின் அனுஸாரத்தினால் அத்தனை அத்தனை ஆனந்த்யம் ஶ்ரவணாதி ஞானத்தில் தெரியுமாதலால் பூமத்வத்தில் தாரதம்யம் உண்டு. "அத்தனை அளவு மட்டுமே" என்று தோன்றாததால் ப்ரமத்தன்மை இல்லை. எனவே அவரவருக்கு ப்ராப்யமான பயனை அனுஸரித்து பூமத்வம் நானாரூபம் என்று உபாஸிக்க வேண்டும்.

# 3.3.34 A विकल्पोऽविशिष्टफलत्वात् (1 सूत्रम्)

உபாஸனைகள் இரண்டு விதமானவை 1) அவரே நான் என்றும் 2) ஒரு இடத்தில் அவராக த்யானிப்பதும் ஆகும். தன்னிடத்தில் தன்னையே ஸகுணப்ரஹ்மமாக எண்ணுவது முதலாவது. தன்னைத் தவிர வேறொன்றில் தேவதைகளை த்யானிப்பது இரண்டாவது. இந்நிலையில் அஹங்க்ரஹஉபாஸனை (1) ஶாண்டில்யாதி உபாஸனைகள் பலவற்றில் நம் இஷ்டப்படி ஒன்றோ பலவோ உபாஸிக்கலாமா? அல்லது ஒன்று தானா? என்று ஸந்தேஹம் ஏற்படுகிறது.

பூர்வபக்ஷம்:- ஏதோ ஒன்றுதான் என்று கூறுவதற்கு தக்க ப்ரமாணம் இல்லாததால், தன் இச்சைப்படி ஒன்றோ, பலவோ உபாஸிக்கலாம்.

ஸித்தாந்தம் :- ஒன்றினால் பயன் ஏற்படுமாயின் பலது வீண். மேலும் ஈஶ்வரஸாக்ஷாத்காரம் (நேரில் காண்பது) உபாஸனையின் பயன். அது ஒன்றினால் கிடைத்துவிடும். மேலும் உபாஸனைகளில் ஸாக்ஷாத்காரமானது ப்ரமாணத்தினால் வருவது இல்லை. தொடர்ந்து எண்ணியதால் (பாவனையின் விஶேஷத்தால்) அதுவாகத் தன்னை அபிமானிப்பதுதான். இத்தகைய அபிமானம் பல உபாஸனைகளைக் கைக்கொண்டால் எவ்வாறு நிலைக்கும். எனவே ஒன்றுதான் பண்ண வேண்டும்.

# 3.3.25 V विकल्पोऽविशिष्टफलत्वात्, काम्यास्तु (2 सूत्रे)

(இங்கு விஶிஷ்டாத்வைதப்படி இந்த அதிகரணமும் அடுத்ததாக அத்வைதிகள் கூறும் அதிகரணமும் ஒன்றாகவே வர்ணிக்கப்படுகிறது.)

பூர்வபக்ஷம் :- ஸ்வர்காதி பயனுக்காக யாகங்கள் பல உள்ளதில் தன் விருப்பப்படி ஒன்றோ பலவோ எவ்வாறு செய்கிறார்களோ, அதேபோல் ப்ரஹ்மவித்யைகளிலும் (ஶாண்டில்யாதி) ஒன்றோ பலவோ விருப்பப்படி பண்ணலாம்.

ஸித்தாந்தம் :- உதாரணத்தில் ஸ்வர்கத்தில் தாரதம்யமான பிரிவுகள் உள்ளதால், அதிகமான பயனைக் கருதி பல யாகங்கள் விருப்பப்படி பண்ண முடியும்/பண்ணலாம். ஆனால் எல்லா ப்ரஹ்மவித்யைகளுக்கும் ஸர்வப்ரதிபந்தக கர்மாக்கள் அழிந்து ஸகுண ப்ரஹ்மானுபவம் ஏற்படுவது என்ற ஒரே பலன்தான் கூறப்படுகிறது. கர்மக்ஷயம் மட்டும் கூறிய இடத்தில் ப்ரஹ்மானுபவம் கூறாமல் கிடைக்கிறது. ப்ரஹ்மானுபவம் கூறிய இடத்தில் ஸகல ப்ரதிபந்தக கர்மக்ஷயம் கிடைக்கிறது. எனவே ஒரே பயன்தான் என்பதால் ஏதோ ஒரு ப்ரஹ்மவித்யாதான் பண்ண வேண்டும். யாகங்களில் கர்மபயன் வேறுபாட்டால் ஒன்று அல்லது பலது செய்யலாம்.

## 3.3.39 D विकल्पोऽविशिष्टफलत्वात् (1 सूत्रम्)

பகவதுபாஸனம் பிம்பாதிரிக்த ரூப விஷயமாக செய்யவே கூடாதா? அல்லது விருப்பப்படி செய்யலாமா? செய்யாமல் இருக்கலாமா? அந்த அதிரிக்த உபாஸனத்திற்கு பயனுண்டா? இல்லையா? அதற்கு பயன் மோக்ஷமா? வேறா? என்ற விசாரத்தில்

பூர்வபக்ஷம் :- முமுக்ஷுக்கள் செய்யும் உபாஸனைக்கு மோக்ஷாதிரிக்த பயன் பொருந்தாது. மோக்ஷமோ பிம்ப உபாஸனையினால் மட்டுமே ஸாத்யம் என்பதால் அதிரிக்த உபாஸனம் வீண். மேலும் மோக்ஷ ஸாதனமான பிம்போபாஸனைக்கு இடையூறு என்பதால் பிம்பாதிரிக்தமான ந்ருஸிம்ஹாதிகளை உபாஸிப்பது கூடாது.

ஸித்தாந்தம் :- உபாஸகர் மோக்ஷகாமியாக இருந்தாலும் மோக்ஷ ஹேது பிம்ப உபாஸனைக்கு உதவியாக உள்ள பாப க்ஷயத்திற்கு மற்ற உபாஸனைகள் பயன் படுவதால் அவை வீணாகாது. தீவிரமான ஸ்வபிம்ப உபாஸனையினாலேயே பாபங்கள் விலக ஸமர்த்தரான உபாஸகர்கள் செய்ய. வேண்டாம். எனவே ஷோடஶீக்ரஹனம், அக்ரஹணம் போல விகல்பம்.

## 3.3.35 A काम्यास्तु यथाकामं समुच्चीयेरन्न वा पूर्वहेत्वभावात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- ஆத்மாவை (தன்னைத்தவிர) மற்ற பொருட்களில் தேவதாத்யுபாஸனங்களிலும் ஒன்றினாலேயே பயன் ஏற்பட்டால் மற்றவை தேவையில்லை. சென்ற அதிகரணத்தில் அஹங்க்ரஹ உபாஸனை போல்.

ஸித்தாந்தம் :- உதாரணம் தவறானது. சென்ற அதிகரணத்தில் தேவதாஸாக்ஷாத்காரம் பயன், அதுபோல் இங்கு பயன் கிடையாது. எனவே இவைகள் வெவ்வேறு பயனுக்காக செய்யப்படுகின்றன. எனவே தன் விருப்பம் போல் ஒன்று அல்லது பல செய்யலாம்.

இந்த அதிகரணம் விஶிஷ்டாத்வைதப்படி சென்ற அதிகரணத்தில் அடங்கிவிட்டது.

## 3.3.40 D काम्यास्तु यथाकामं समुच्चीयेरन्न वा पूर्वहेत्वभावात् (1 सूत्रम्)

மோக்ஷத்திற்கு உபயோகமான பாபக்ஷய பயனுக்காக ந்ருஸிம்ஹ உபாஸனை பண்ணலாம் என்றால் அதே உபயோகத்திற்காக (பயனுக்காக) காம்ய உபாஸனைகளும் செய்யலாமா? காம்ய

ஸாதனமான பகவத் ரூப உபாஸனமும் கட்டாயமா? விருப்பமா? கட்டாயமெனில் மோக்ஷ உபயோகத்வத்தில் ப்ரமாணம் உண்டா? இல்லையா?-

பூர்வபக்ஷம் :- செல்வம் போன்றவை இல்லாமல் ஞானம் வராது என்பதால் (குரு தக்ஷிணை போன்றவற்றிற்கு பொருள் தேவை என்பதால்) பொருளைத்தரும் பகவத் ரூப உபாஸனை, அவர் குணங்களின் உபாஸனையும் ஜீவனத்வாரா ஞானத்திற்குப் பயன் படுவதால் பொருளாசையும் நிறைவேற காம்ய பகவத் ரூப உபாஸனை தேவை.

ஸித்தாந்தம் :- பொருள், வீடு, தோட்டம், வயல் இல்லாதவர்களாலும் ஞானம் ஸம்பாதிக்கப் படுவதால் (பெறப்படுவதால்) பொருளால்தான் ஞானம் என்பது கிடையாது. எனவே பொருளுக்கு மோக்ஷஹேதுவான உபாஸனையில் உபயோகமில்லை. மேலும் அதிகாரிகள் முமுக்ஷுக்கள் ஆனபடியால் இவர்களுக்கு பொருளாசை இராது. எனவே முமுக்ஷுக்களுக்கு மற்ற உபாஸனை வேண்டுமானால் பண்ணலாம். எனவே கட்டாயம் இல்லை.

## 3.3.36 A अङ्गेषु यथाश्रयभावः (6 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- ப்ரதீக உபாஸனம் (தன் தவிர வேறு பொருளில் தேவதாதி த்யானம்) இரண்டு விதமாகிறது. 1) லௌகீக ஆதாரங்கள் 2) கர்மாங்க விஷயங்கள். இவைகளுள் லௌகீக உபாஸனைகளை விருப்பம் போல சேர்த்தோ தனித்தனியாகவோ பண்ணலாம் என்று கூறியாகிவிட்டது. இப்போது கர்மாங்கமான உத்கீதாதி உபாஸனைகள் பற்றி விசாரம்.

பூர்வபக்ஷம்:- கர்மாக்களும் (ப்ரதானமானவை) அதன் அங்கங்களும் சேர்த்துக் கட்டாயம் பண்ண வேண்டும் என்பதில் ஐயமில்லை.

அங்கங்களை தொடர்ந்து அவைகளில் பண்ணும் உபாஸனையும் உள்ளதால் இவைகளும் (உபாஸனைகள்) அங்கானுஷ்டானத்துடன் கட்டாயம் பண்ணப்பட வேண்டும்.

ஸித்தாந்தம்:- கட்டாயமில்லை. அங்கங்களுக்கு எப்படி முறையாகப் பண்ண வேண்டும் என்று க்ரமம் கூறப்படுகிறதோ அப்படி உபாஸனைகளுக்கு நியமம் கூறப்படவில்லை. எனவே நமது விருப்பப்படி செய்யலாம், அல்லது விடலாம்.

## 3.3.26 V अङ्गेषु यथाश्रयभावः (6 सूत्राणि)

இந்த அதிகரணத்தின் ஸாரம் விஶிஷ்டாத்வைத மதத்திலும் அத்வைதத்திற்கு ஸமமே. ஸித்தாந்த யுக்தியில் ஒரு விஶேஷம் அதிகம் கூறப்படுகிறது – ஒரு செயல் புருஷார்த்தமா? க்ரத்வர்த்தமா? என்பதற்கு அடிப்படையான யுக்தியாவது - பயனும் ஸாதனைத் தன்மையும் இரண்டும் தாமதமாக புரிந்தால் க்ரத்வர்த்தம். இரண்டுமோ, ஏதோ ஒன்றோ விலம்பம் (தாமதம்) இல்லாமல் உடனே புரிந்தால் புருஷார்த்தம் என்பதுதான். எனவே இங்கு உபாஸனைகள் புருஷார்த்தமானவைகள்தான். எனவே நம் விருப்பம் போல் அனுஷ்டானத்தில் சேர்த்தோ இல்லாமலோ பண்ணலாம்.

## 3.3.41 D अङ्गेषु यथाश्रयभावः (4 सूत्राणि)

இந்த அதிகரணம் மாத்வ மதத்தில் இரண்டாக விவரிக்கப் படுகிறது. ப்ரஹ்மாதி தேவதா உபாஸனம் செய்ய கூடாதா? செய்யலாமா?

ஶ்ருதியில் தேவதைகளுக்கு பகவதங்காஶ்ரிதத்வம் கூறுவது, உபாஸனை விதிப்பது உபாஸனையை செய்வதற்காகவே

உள்ளதா? இல்லையா? அந்த உபாஸனைகள் அதிகாரிகளுடன் கூடியவையா? இல்லையா? அதிகாரிகளை கற்பிக்க ப்ரமாணம் உண்டா? இல்லையா? என்ற விசார வரிசையில் -

பூர்வபக்ஷம் :- ப்ரஹ்மாதி அங்க-உபாஸனம் தேவையற்றது. "ब्रह्मा शिरसि ललाटे रुद्रः" என்று கூறியுள்ளதால் உபாஸனை தோன்றுகிறதே என்று ஸந்தேஹம் வேண்டாம். அப்படியானால் இந்த உபாஸனை ஸர்வ ஜனங்களுக்குமானால், ஆனந்தாதி சதுர்குண உபாஸனா நியமம் தளர்ந்துவிடும். இவை தேவதைகளுக்கு மட்டும்தான் (தேவர்கள் உபாஸனை பண்ணினால் மட்டும்) என்பதற்கு ப்ரமாணமில்லை. எனவே இந்த உபாஸனைக்கு அதிகாரி இல்லாததால் ஶ்ருதியில் கூறியிருப்பினும் தள்ளத் தக்கதே.

ஸித்தாந்தம்:- இது தவறு. இவைகளும் பண்ண வேண்டியவைதான். இல்லாவிடில் வேதத்தில் கூறியது வீணாகிவிடும். மேற்கூறிய உபாஸனைக்கு பரம ஸ்தான ப்ராப்தியைப் பயனாக கூறப்பட்டுள்ளது. அந்தப் பயன் தேவதைகளால் மட்டுமே அடையத் தக்கது என்பதால் மதுவித்யை போல இந்த உபாஸனை தேவதைகளையே அதிகாரியாக கொண்டது.

## 3.3.42 D न वा तत्सहभाव आश्रुतेः (2 सूत्रे)

முன் கூறிய உபாஸனம் ஸர்வ ஶாகைகளிலும் கூறப்படாதது என்பது செய்யப்பட வேண்டாம் என்றால்தான் பொருந்துமா? வேறுகாரணத்தாலும் பொருந்துமா? அர்த்தாபத்திக்கு ப்ரமாணம் உண்டா? இல்லையா? என்று விசார வரிசையில் -

பூர்வபக்ஷம் :- இந்த உபாஸனை செய்யவே கூடாது. இல்லையேல் ஸர்வ ஶாகோபாஸனைகளுடன் சேர்ந்ததாக

ஆகிவிடுமே. எனவே ஸர்வத்திலும் கூறாமை என்பது, கூடாது என்பதற்காகவேதான்.

ஸித்தாந்தம்:- ஒரேயடியாக தள்ளத்தக்கதானால் ஓரிடத்திலும் கூறக்கூடாது என்பதால், ஒரே ஒரு இடத்தில் கூறியிருப்பதால், சதுர் குண உபாஸனை நியமம் மனிதர்களுக்கு மட்டுமே. இந்த மாதிரி உபாஸனைகள் தேவர்களுக்காக ஏற்பட்டது என்பதால் எல்லா இடத்திலும் கூறப்படவில்லை. எனவே இந்த உபாஸனை முழுமையாகத் தள்ளத்தக்கது அன்று.



## நான்காம் பாதம்

## 3.4.1 A पुरुषार्थोऽतः शब्दादिति बादरायणः

(17 सूत्राणि)

பூர்வபக்ஷம் : ஆத்மதத்வ ஞானம் ஸ்வதந்திரமாக மோக்ஷ ஸாதனமா? கர்மாங்கமா? என்று விசாரிக்கப் படுகிறது. தேஹாதிகளைக் காட்டிலும் ஆத்மா வேறு என்ற நிர்ணயம் இல்லாவிடில் ஸ்வர்கத்திற்காக ஸோமயாகங்களில் மக்கள் ஈடுபடமாட்டார்கள் என்பதால், யாகங்களில் ப்ரவ்ருத்தி காணப்படுவதால் இந்த ஆத்ம ஞானம் கர்மாக்களுக்கு அங்கம். ஸ்வதந்திரமில்லை.

ஸித்தாந்தம்:- ஆத்மஞானம் இரண்டுவிதம்
1) பரலோகங்களுக்கு செல்லும் ஶரீராதிரிக்த ஆத்மஞானம் 2) நானே ப்ரஹ்மம் அகர்த்தா, அபோக்தா பூர்ணன் என்பது இரண்டாவது. இதில் நான் கர்த்தா, விண்ணுலகம் போய் நல்ல போக்தாவாக ஆக வேண்டும் என்ற ஆத்மஞானம்தான் கர்மாங்கம், தூண்டி விடுவது. அத்வைத ஆத்மஞானம் அகர்த்தா அபோக்தா என்ற ஞானம் ப்ரவர்த்தகம் ஆகாதது மட்டுமில்லாமல் க்ரியை, செய்பவன், பயன் - என்ற வேறுபாட்டையே வேரோடு களைந்து எடுத்து விடுவதால் இந்த உபநிஷத்தில் கூறும் ஆத்மஞானம் நிவர்த்தகமே. தத்வவித்தான ஜனகர் போன்றவர்கள் கர்மாவில் ப்ரவ்ருத்திக்கும் ஆசாரம் உள்ளதே என்று யோசிக்க வேண்டாம். உலகம் தன்னைப் பார்த்து கர்மாவை விட்டு தவறான வழியில் போவதைத் தடுப்பதற்காக இந்த ஆசாரம் இருக்கிறது. தத்வவித்துக்கும் மோக்ஷம் ஏற்பட கர்மங்கள் தேவையானால் "किं प्रजया करिष्यामः" ப்ரஜை முதலியவைகளின் தேவையற்ற (பயனற்ற) தன்மையை கூறியிருக்காது. மேலும் किमर्थावयं अध्येष्यामहे किमर्थावयं यक्ष्यामहे என்பதாக ஞானிகளுக்கு

அத்யயனாதிகளை பயனற்றதாக வேதம் கூறுகிறதன்றோ! எனவே ஆத்மதத்வஞானம் ஸ்வதந்திரமாக மோக்ஷ ஸாதனம்.

## 3.4.1 V पुरुषार्थोऽतः शब्दादिति बादरायणः (20 सूत्राणि)

இங்கு விஸிஷ்டாத்வைத மதரீதியில், அத்வைதிகளின்அடுத்த அதிகரணமான மூன்று ஸூத்ரங்களும் சேர்த்து 20 ஸூத்ரங்கள் கொண்டது இந்த அதிகரணம்.

பூர்வபக்ஷம் :- கர்மாக்களின் கர்த்தாவான ஜீவனின் வழியாக வேதார்த்த ஜன்ய ஆத்மஞானம் கர்மாங்கம். வ்ரீஹி ப்ரோக்ஷணம் கர்மாங்கம் ஆவதுபோல். மேலும் शतं समाः कुर्वन्नेव कर्माणि जिजीविषेत् - என்று ஆயுள் பூராவும் கர்மாவை விதித்திருப்பதால் ஞானம் கர்மாவின் அங்கமே.

ஸித்தாந்தம்:- अधिकोपदेशात् = ஜீவனைக்காட்டிலும் வேறான ப்ரஹ்மத்தை உபாஸிக்க வேண்டும் என்று ப்ரஹ்மவித்யையில் கூறியிருப்பதால், अतः = இந்த வித்யையால்மட்டுமே மோக்ஷம் என்று பாதராயணரின் மதம். உபாஸனை விதிக்கும் வாக்யங்களில் ஜீவனைக் காட்டிலும் வேறான ப்ரஹ்மத்தின் உபாஸனை விதி இருப்பதால். உபாஸகர்கள் சிலருக்கு கர்மானுஷ்டானம் ஜனகாதிகளுக்கு இருப்பினும் பலருக்கு த்யாகமும் கூறப்படுகிறது. யாவஜ்ஜீவ ஶ்ருதியானது வித்யாங்க கர்மங்களையே கட்டாயம் செய்யுமாறு கூறுவதால் வித்யைக்கு கர்மாங்கத்வம் கூறவில்லை. மேலும் किं प्रजया करिष्यामः என்ற ஶ்ருதியானது விரக்தனுக்கு ப்ரஜா= என்று கூறப்பட்ட க்ருஹஸ்தாஶ்ரம த்யாகத்தை விதிப்பதால், கர்மத்யாகமும் கூறப்படுகிறது. எனவே கர்மா அங்கியானால் அதன் த்யாகம் கூறுவது பொருந்தாது அன்றோ! மேலும் ब्रह्मसंस्थोऽमृतत्वमेति என்ற ஶ்ருதியில் நான்கு ஆஶ்ரமங்களில்

எவனொருவன் ப்ரஹ்ம நிஷ்டையிலேயே உள்ளானோ, அவனுக்கு - ஸன்யாஸிக்கும் உள்பட - அம்ருதத்வம் என்ற மோக்ஷம் கூறப்படுவதால், ஸன்யாஸிக்கு யக்ஞாதி கர்மா கிடையாது என்பதால் அங்கியில்லாமல் அங்கம் அனுஷ்டிப்பது எப்படி? இவ்விதம் பலகாரணங்களால் ப்ரஹ்மவித்யை கர்மாங்கம் ஆகாது என்று ஸித்தம். त्रयो धर्मस्कन्धाः என்ற இடத்தில் ஸன்யாஸத்திற்கு விதி இல்லாவிடினும் மற்ற ஆச்ரமங்களின் விதிபோலவே ஸன்யாஸமும் விதிக்கப் படுகிறது என்றே கொள்ள வேண்டும். எனவே ப்ரஹ்ம வித்யை கர்மாவிற்கு அங்கம் ஆகாது.

[இந்த அதிகரணமானது மத்வமதப்படி மூன்று அதிகரணங்களாக கருதி 9+3+1=13 ஸூத்ரங்களில் பிரித்து உரைத்து அத்வைத கணக்குப்படி (17&13=) 4 ஸூத்ரங்களை நான்காவது அதிகரணமாக ஏற்று, அந்த நான்காவது அதிகரணத்தை 20 ஸூத்ரங்களாக ஏற்று, அத்வைத கணக்குப்படி 2-8 ஏழு அதிகரணங்களை ஒன்றாக்கி விளக்கப்படுகிறது. இது ஒரு தனியான அலாதி விசேஷம். ]

## 3.4.1 D पुरुषार्थोऽतः शब्दादिति बादरायणः

(9 सूत्राणि)

பூர்வபாதத்தில் கூறிய ஞானத்தின் மாஹாத்ம்யம் இங்கு கூறப்படுகிறது. ஞானம் மோக்ஷத்திற்கு மட்டுமே காரணமா? ஸ்வர்காதிகளுக்கும் காரணமா? இதற்கான ப்ரமாணம் உண்டா? இல்லையா? என்ற விசாரத்தில் -

பூர்வபக்ஷம் :- ஞானமானது மோக்ஷம் தவிர ஸர்வ புருஷார்த்த ஹேதுவாக ஆகாது. முமுக்ஷுவிற்கு அவைகளில் ஆசை கிடையாதன்றோ! ஞானமே ஸர்வபுருஷார்த்தமும் தர வல்லது

என்றால், கர்மாக்கள் ஸ்வர்காதி காரணம் என்கிற ஶ்ருதிகளுக்கு விரோதம் வரும். மேலும் கர்மாக்கள் மோக்ஷேதர பயன்களுக்கு காரணம் என்றும் கூறப்பட்டுள்ளது. இதே போல ஞானியினால் அனுஷ்டிக்கப்படும் கர்மாவிற்கு விஶேஷ பயன் கூறும் ஶ்ருதிகள் மூலம் ஞானமானது கர்மாவிற்கு ஶேஷம் என்றும் கூறப்படுகிறது. ஞானிகளான தேவர்களும் यज्ञेन यज्ञमयजन्त देवाः என்று யாகம் பண்ணுவதாக கூறுகிறபடியால் ஞானமே ஸர்வபுருஷார்த்தம் தராது என்று ஸூசிக்கப்படுகிறது. மேலும் ஞானிகளுக்கு கர்மாவை ज्ञानी च कर्माणि कुर्यात् என்ற ஶ்ருதி விதிக்கிறது. மேலும் एवं त्वयि नान्यथेतोऽस्ति न कर्म लिप्यते नरे என்ற மந்த்ரத்தில் -एवं=कर्मकरणे- கர்மாவை செய்தால் त्वयि = உன்னிடத்தில் கர்மா ஒட்டாது. इतो अन्यथा = கர்மா செய்யாவிட்டால் ஞானியான நரனான உன்னிடத்தில் पापकर्म = பாபமானது न लिप्यते इति न = ஒட்டுவதில்லை என்பதில்லை. ஞானிக்கும் கர்மா செய்யாவிட்டால் ப்ரத்யவாயம் கூறப்படுகிறது! எனவே "यं यं लोके मनसा" என்பதாக ஞானத்தினால் ஸர்வமும் கிடைக்கும் என்ற ஶ்ருதி ஸ்துதியாகவே கூறப்பட்டது, ஸ்வர்காதி புருஷார்த்தத்தின் காரணமான= ஶேஷமான பணத்தை பெருமையாக கூறுவதைப்போல கர்ம ஶேஷமான ஞானத்தின் பெருமையை துதிப்பதாகும். கர்மாக்கள் ஸ்வர்காதி காரணம் என்று கூறும் வாக்யங்கள் ஸர்வ புருஷார்த்த ஹேதுவான ஞானத்தின் ஶேஷம் கர்மா என்று பொருள் கொள்ளமுடியாது. ஞானம் ஸ்வதந்த்ரமாக மோக்ஷம் தரவல்லது என்பதால் ஞானத்தில் கர்மாவினால் ஏற்படும் அதிசயம் கூறமுடியாது ஆனபடியால் ஞானஶேஷமாக கர்மா ஆகாது.

ஸித்தாந்தம் :- கர்மாவிற்கு அதிசயத்தைக் கொடுத்து ஞானத்தின் அங்கமாக ஆக முடியாது என்றாலும் "ज्ञानादेव स्वर्गः ज्ञानादेवापवर्गः" ஶ்ருதியின் மூலம் ஞானம் ஸர்வ புருஷார்த்தம் என்பது தெரிகிறது. ஆகையால் ஞானஜன்யபலனில் அதிசயத்தை

கர்மாவானது பண்ணுகிறது, அதன் மூலம் ஞானஶேஷமாக ஆகிறது என்று ஏற்கவேண்டும். எனவே கர்மாக்கள் அந்தந்த பயனைத் தருபவை என்ற வாக்யங்களுக்கு கர்மாக்கள் ஞானத்திற்கு ஶேஷமாகிப் பயன் தருவதாகப் பொருள் கொள்ளவேண்டும். இதுவே பாதராயணரின் மதம். ஜைமினி பாதராயண மதங்கள் தேவ-மனுஷ்யரூபமான அதிகாரி பேதத்தை முன்னிட்டுக் கூறுவதால் பரஸ்பர விரோதமில்லை. ஆகவே ஞானம் ஸர்வ புருஷார்த்த ஸாதனம்.

## 3.4.2 D असार्वत्रिकी (3 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- ஸர்வபுருஷார்த்த ஸாதனமான ஞானத்தில் எல்லோருக்கும் அதிகாரம் உண்டா? இல்லையா? மனிதர்களில் பிரிவு பண்ணுவது ஸரியா? தவறா? பயன் விரும்புவது மட்டுமே அதிகாரத்திற்குக் காரணமா? வேறு ஏதேனும் உண்டா? பயனில் விருப்பமானது அதிகாரத்தை நிர்ணயிப்பதற்கு காரணமா? இல்லையா? என்று விசார வரிசை - பயனில் விருப்பம் இருப்பது அந்தந்த கர்மாவில் தகுதிக்கு மிகவும் தேவை என்பது திண்ணம். எனவே மற்றவை கட்டாயமில்லை. துக்கமற்ற சுகரூபமான மோக்ஷத்தில் யாவருக்கும் விருப்பம் கட்டாயம் இருக்கிறது. ஞானத்தைப் பெறும் ஶ்ரவணாதிகளில் ஸாமர்த்யமும் உண்டு. மேலும் வைதுஷ்யமும் கிடைத்துவிடுவதால் எல்லோருக்கும் ஞானத்தில் அதிகாரம் தவிர்க்க முடியாது. எனவே ஞானம்பெற சிலருக்குத்தான் தகுதி சிலருக்கு இல்லை என்று வேறுபாடு ஏற்பது ஆதாரமற்றது. மேலும் இவ்வாறு கூறினால் யாருக்குமே அதிகாரம் இல்லை என்றும் அதிப்ரஸங்கம் ஏற்பட்டு ஞானத்திற்கு யாருமே இல்லாமல் ஆகிவிடும் என்பதால் ஞானத்தில் எல்லோருக்கும் அதிகாரம் உண்டு.

ஸித்தாந்தம் :- ஸாங்க ஸபல (सफल) யதாஶக்தி க்ருத்ஸ்ன அத்யயனவத்வம் என்பதும் ஞானத்திற்கு ப்ரயோஜகம் (காரணமாகத் தேவை) என்பதால், பயனை விரும்புவது மட்டும் அதிகாரத்திற்குப் போதாது. இதற்கு ஶ்ருதி ஸ்ம்ருதி ப்ரமாணம் உள்ளது -पठेद्वेदान् अथार्थानद्यीयीत अथ विचार्य ब्रह्म विन्देत= வேதம் கற்று பொருள் தெரிந்து, விசாரித்து பிறகு ப்ரஹ்மத்தை அறியவும் - अवैष्णवस्य वेदेऽपि ह्यधिकारो न विद्यते (ब्रह्मतर्क) = வைஷ்ணவர்கள் அல்லாதவருக்கு வேதத்திலும் அதிகாரம் கிடையாது. எனவே புருஷர்களின் விபாகம் செய்வது ஸரியே.

## 3.4.3 D नाविशेषात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- இந்த ஞானாதிகாரமானது தேவர்களுக்கு ஒரே மாதிரியா? வெவ்வேறா? வெவ்வேறாக ஆவதற்கு த்ருஷ்டி தாரதம்யமானது அதிகாரிகளின் ஶக்தியின் வேறுபாடு இல்லாமலேயே வரலாமா? முடியாதா? என்று விசாரித்ததில்- அதிகாரிகளின் ஏற்றதாழ்வான ஶக்தியின் வேறுபாட்டினாலேயே ஞானதாரதம்யம் வரலாம் என்பதால் அதிகாரிகளின் வேறுபாட்டிற்கு ப்ரமாணம் இல்லை.

ஸித்தாந்தம் :- ஶக்தியின் தாரதம்யமானது அதிகாரியின் வேறுபாட்டினால்தான் வரமுடியும் என்பதால், அதிகாரிகளின் வேறுபாடு இல்லாமல் எப்படி ஶக்தி தாரதம்யம் வரும்? எனவே உபஜீவ்யமான அதிகாரி தாரதம்யத்தினாலேயேதான் ஞான தாரதம்யம் வரமுடியும். ஆகவே அதிகாரம் என்பது பலவிதமாகத் -தான் இருக்கவேண்டும் என்பதால் தேவோத்தமர்களுக்குத்தான் ஸம்பூர்ணாதிகாரம், மற்றவருக்கு கிடையாது.

## 3.4.2 A परामर्शं जैमिनिरचोदना चापवदति हि (3 सूत्राणि) முதல் वर्णकम्। (1 பொருள்)

ஆத்மஞானம் ஸ்வதந்த்ரமாக மோக்ஷ ஸாதனம் என்று நிர்ணயிக்கப்பட்டது. இந்த ஆத்மஞானநிஷ்டையானது ஸன்யாஸ (ஊர்த்வரேதஸ்) ஆஶ்ரமத்தில்தான் ஸுலபம் என்பதால் அந்த ஆஶ்ரமம் உண்டா இல்லையா என்று விசாரிக்கப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- ஸன்யாஸத்திற்கு விதி அமைப்பு இல்லாததால் அந்த ஆஶ்ரமம் கிடையாது. त्रयोधर्मस्कन्धाः என்ற சாந்தோக்ய வாக்யத்தில் நைஷ்டிகப்ரஹ்மசர்யம், கார்ஹஸ்த்யம், வானப்ரஸ்தம் என்று மூன்று ஆஶ்ரமங்களுக்கு மட்டுமே கோட்பாடு (reference) உள்ளது, விதி இல்லை. விஷயம் புதியதானதால் விதியை கல்பிப்போம் என்று கூறமுடியாது. க்ருஹஸ்த கர்மாக்களை விட்டால் வீரஹத்தி என்ற தோஷம் கூறப்படுகிறதே! நான்கு ஆஶ்ரமங்கள் என்று ஸ்ம்ருதி இருப்பதற்கு இதுதான் பொருள் - "க்ருஹஸ்தாஶ்ரமத்திற்கு தகுதி இல்லாத குருடன், செவிடன், ஊமை போன்றவர்-களுக்கு ஸன்யாஸம்" (என்று பொருள்). எனவே முழுத்தகுதி (அங்க ஊனம் இல்லாத) உள்ளவனுக்கு ஸன்யாஸம் கிடையாதென்று தெரிகிறது.

ஸித்தாந்தம் :- இங்கு விதி இல்லாவிடினும் கூட தெரியாத புது விஷயம் ஆதலால் ஸன்யாஸத்திற்கு இங்கு விதி அமைப்பு இருப்பதாக கொள்ள வேண்டும். வீரஹத்தி தோஷம் ஏற்படுமே என்று எண்ண வேண்டாம், க்ருஹஸ்தனாகவே இருந்து அக்னிகர்மாவை விட்டவனுக்குத்தான் அந்த தோஷம் வரும். குருடன் போன்றவர்களுக்குத்தான் ஸன்யாஸம் என்பது தவறு. இம்மாதிரி அனதிகாரிகளுக்கு தனியாக ஒரு ஸன்யாஸம் உள்ளது. நல்ல தெம்பான மனிதனுக்கு ஸன்யாஸ விதியை கல்பிக்க வேண்டிய அவசியமில்லை. ஜாபால ஶ்ருதியில் ब्रह्मचर्यं समाप्य गृही

भवेत्, गृहात् वनी भूत्वा प्रव्रजेत्, यदहरेव विरजेत् तदहरेव प्रव्रजेत् என்று ஸ்பஷ்டமாக ஸன்யாஸத்திற்கு விதி கூறப்பட்டுள்ளது. அந்த வாக்யத்தை மறந்து (மறைத்து) இந்த விசாரம் செய்யப்படுகிறது.

2வது விளக்கம் - (2 वर्णकम्)

இதே அதிகரணத்தின் இரண்டாவது வ்யாக்யானம்

பூர்வபக்ஷம்:- त्रयोधर्मस्कन्धाः என்ற சாந்தோக்யத்தின் வாக்யத்தில் ஆஶ்ரமங்களைக் கூறிவிட்டு सर्व एते पुण्यलोका भवन्ति என்பதாக ஆஶ்ரம அனுஷ்டானங்களுக்கு புண்ணியலோக பயனைக் கூறி, ब्रह्मसंस्थोऽमृतत्वमेति என்று மோக்ஷ ஸாதனமாக ப்ரஹ்மநிஷ்டை கூறப்படுகிறது. இந்த ப்ரஹ்மநிஷ்டை (அதிலேயே ஸ்திதி) புண்ணியலோகம் விரும்பும் க்ருஹஸ்தாதிகளுக்கும் வர முடியும், அனுஷ்டான விராம காலங்களில் நேரத்திற்குத் தக்க ப்ரஹ்ம நிஷ்டையை அடையலாம் அல்லவா? எனவே எல்லா ஆஶ்ரமங்களுக்கும் ப்ரஹ்ம நிஷ்டை வரலாம்.

ஸித்தாந்தம் :- ப்ரஹ்ம நிஷ்டை என்பது- “எல்லாவிதமான செயல்கள், முயற்சிகள் யாவற்றையும் விட்டு வேறொன்றையும் நினைக்காமல் ஸ்வாத்ம ஸ்திதியில் நிஷ்டித்திருத்தல்”. இந்நிலை ஸன்யாஸி தவிர மற்றவருக்கு மிக மிக கடினம். கர்மானுஷ்டானம் கர்மத்யாகம் இரண்டும் ஒரே ஸமயத்தில் பொருந்தாதன்றோ! எனவே கர்மத்யாகிதான் (கர்ம கர்த்ருத்வத்தை விட்டவன்) ப்ரஹ்ம நிஷ்டன்.

இந்த அதிகரணம் விஶிஷ்டாத்வைதத்தில் சென்ற அதிகரணத்துடன் சேர்த்து விளக்கப்பட்டுவிட்டது.

மத்வமதரீதியில் இந்த அதிகரணத்தில் 20 ஸூத்ரங்கள் உள்ளன. அத்வைத மதப்படி 3-8 அதிகரணங்களாகக் கணக்கிடப்படுகின்றன. ஆசார்யர்களின் அபிப்ராய பேதம் விசித்ரமானது!

## 3.4.4 D कामकारेण चैके (20 सूत्राणि)

ஞானத்தில் அதிகாரி பேதம் நிர்ணயித்த பிறகு மூன்று விதமான அதிகாரிகளின் வேறுபாட்டினால், மூன்று விதமான முரண்பாடு உள்ள ஶ்ருதிகளின் ஸமன்வயம் கூறப்படுகிறது. முன் கூறிய ஞானம் ஏற்பட்டவருக்கு ஸதாசார துராசாரங்களினால் விஶேஷம் உண்டா இல்லையா?

स ब्राह्मणः केन स्यात्.. என்ற வாக்யமானது ஞானிகள் யாவருக்கும் யதேஷ்டமாகச் செயல்படுவதை விதிக்கிறதா? அல்லது எல்லாவித ஸதாசாரானுஷ்டானபரமா? ஞானிக்கு ஸத்ப்ரவ்ருத்தியினால் விஶேஷமிருப்பின் ஞானம் கட்டாயம் முக்தியைத் தரும் என்பது அடிபடுவதோடு ஞான-கர்ம-ஸமுச்சயரூபமான பாதகமும் (बाधकम्) உண்டா இல்லையா? ஞானிக்கு கெடுதலில் ப்ரவ்ருத்தியானது மோக்ஷ ப்ரதிபந்தகம் ஆகுமா? அல்லது மோக்ஷத்தில் ஏற்படும் ஸுகாதிக்யத்திற்கு (सुखाधिक्यम्) மட்டும் தடையாகுமா? இவ்வாறு தடையாகுமானால் கெடுதலான அன்னம் சாப்பிட்டாலும் தோஷமில்லை என்ற ஶ்ருதிக்கு என்ன கதி? என்ற விசார வரிசையில் -

பூர்வபக்ஷம்:- ஞானிக்கு ஸத்-அஸத்ப்ரவ்ருத்தியினால் விஶேஷம் இல்லை. ஏனெனில் "स ब्राह्मणः केन स्यात्येन स्यात्" என்று ஶ்ருதியில் ஞானிகள் யாவருக்கும் யதேஷ்டமிருப்பது “स्यात्= என்ற विधिलिङ्ग= விதிக்கும் வினையால் (potential mood verb) விதிக்கப்பட்டுள்ளது. ஞானிக்கு ஸத்-அஸத் ப்ரவ்ருத்திகளில்

விஶேஷ விதியும் இல்லையென்றால் ஞானிக்கு ஸர்வ விதிகளையும் தாண்டிய ஈஶனுடைய லக்ஷணம் ஏற்பட்டுவிடும். மேற்படி வாக்யம் சில ஞானிகளுக்கு மட்டுமே யதேஷ்டாசாரம் விதிக்கிறது என்று கூற முடியாது, பொதுவாக கூறப்பட்டதை குறுக்கி பொருள் கூறுவதற்கு ப்ரமாணமில்லை. மேலும் ஞானிகளுக்குள் யாவரும் ஸமம் என்பதற்கு கூறப்படும் - "तेनैदृश एव" = ஸ்வேச்சாசரணம் பொதுவானதாக சொல்லப்-படுகிறதும் ப்ரமாணம் ஆகும். மேற்படி வாக்யத்திற்கு விதிக்கப்பட்டவைகளுள் தன்னிஷ்டப்படி செய்யலாம் என்று பொருள் கொண்டு ஞானி ஸாமான்யர்களுக்கு ஸாம்யம் கூறலாமே, ஏன் இவ்வாறு நிஷேதாதிக்ரமணம் கூறவேண்டும் என்று கூறுவது ஸரியன்று. இம்மாதிரி கூறினால் இந்த வாக்யமானது வெறும்கதை கூறுவதாக ஆகி ப்ராமாண்யம் போய்விடும். ஞானிகளில் விஶேஷம் ஏற்றால் அஸத் ப்ரவ்ருத்தியுள்ளவருக்கு ஞானமானது மோக்ஷம் தர வலு(ஶக்தி) இழந்துவிடும் ஆதலால் யாவருக்கும் மோக்ஷம் என்ற கொள்கை அடிபடும். மேலும் ஞானிக்கு ஸர்வான்னத்தையும் சாப்பிடலாம் என்று கூறும் ஶ்ருதிக்கு விரோதம் வரும். அந்த ஶ்ருதிக்கு வேறு கருத்து என்பதில் ப்ரமாணம் இல்லை. எனவே ஞானிக்கு ஸத்-அஸத் ப்ரவ்ருத்தியால் விஶேஷம் கிடையாது.

ஸித்தாந்தம் :- இது தவறு. ஞானிக்கும் கூட ஸத்-அஸத் ப்ரவ்ருத்தியினால் விஶேஷம் உண்டு. केन स्यात्येन स्यात् என்ற விதியானது ஞானிஸாமான்யர் விஷயம்தான் என்றாலும் ஞானத்தின் ஸ்துதியாக மட்டுமே தாத்பர்யம். அப்போதுதான் ஈஶலக்ஷணத்திற்கு அதிவ்யாப்தி வராது. மேலும் அந்த வாக்யம் விதிபரம் என்றாலும் விஹிதமான ஸர்வ கர்மங்களை தன்னிச்சைப்படி செய்தாலும் வேறுபாடு கிடையாது என்று மட்டுமேதான் பொருள் என்பதுதான் ஜைமினி பாதராயணர்களின் மதம். மேலும் विधिनियता

मनुष्याः, अनियताः देवाः, परमात्मैव स्वेच्छानियतः என்று மூன்று விதமாக கூறப்-பட்டுள்ளதால் விசேஷம் கட்டாயம் உண்டு. எனவே ஞானிகள் யாவருக்கும் ஸ்வேச்சாசாரத்தை केन स्यात्येन स्यात् என்ற விதி கூறவில்லை. மேலும் ஸன்யாஸிக்கு மட்டுமே ஞான உபதேசம் பண்ண வேண்டும் என்று கூறுவதால், ஞானிக்கு அஸத் ப்ரவ்ருத்தியானது மோக்ஷத்திற்கு இடையூறு தரும் என்று ஸூசனையாகத் தெரிகிறது. இவ்வாறு கூறுவதால் ஞான கர்ம ஸமுச்சயம் ஏற்றதாக ஆகாது. ஏனெனில் மோக்ஷத்தில் ஸுக தாரதம்யத்திற்கு மட்டுமே இந்த ஸத் - அஸத் ப்ரவ்ருத்தி பயன் படுகிறது. ஸர்வான்னமும் சாப்பிடலாம் என்ற ஶ்ருதியானது ப்ராண உபாஸனையின் துதியாக பாஷ்யம் கூறுகிறது, அனுமதியல்ல. ஆகையால் ஸத்-அஸத் ப்ரவ்ருத்தியினால் முக்தியின் ஆனந்தத்தில் தாரதம்யம் கட்டாயம் உண்டு.

## 3.4.3 A स्तुतिमात्रमुपादानादिति चेन्नापूर्वत्वात् (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- உத்கீதாவயவமான ஓங்காரத்திற்கு ரஸதமத்வம் போன்ற குணங்கள் கூறப்பட்டுள்ளன. இவை ஓங்காரத்திற்கு ஸ்துதி மட்டுமாதலால் த்யானிக்க தக்கவை அல்ல. इयमेव जुहूः आदित्यः, कूर्मः स्वर्लोकः ஜுஹூ என்ற ஹோம ஸாதனமான (மரத்தினாலான spoon) = ஸூர்யன், ஆமை= ஸ்வர்லோகம் என்பவை ஜுஹூ போன்றவற்றிற்கு வெறும் துதிமட்டும் என்பது இதற்கு உதாரணம்.

ஸித்தாந்தம் :- உதாரணம் ஸரியல்ல. ஜுஹூவை விதிக்கும் ப்ரகரணத்தில் அந்த வாக்யம் கூறப்படுகிறது. எனவே அது ஸ்துதியாகும். ரஸதமத்வம் போன்ற குணங்கள் உபநிஷத்தில் கூறப்படுவதால் கர்ம (உத்கீத) விதி ப்ரகரணத்தில்

சொல்லப்படவில்லை. எனவே இது துதிக்காக அல்ல. ரஸதமத்வம் போன்ற குணங்கள் த்யானிக்கப் படவேண்டும்.

## 3.4.2 V स्तुतिमात्रमुपादानादिति चेन्नापूर्वत्वात् (2 सूत्रे).

விஶிஷ்டாத்வைத மதத்தில் பூர்வபக்ஷம் ஸித்தாந்தங்கள் ஸமமே.

மத்வ மதத்தில் இது தனியல்ல. 3.4.4 என்ற அதிகரணத்திலேயே சேர்ந்தது.

## 3.4.4 A पारिप्लवार्था इति चेन्न विशेषितत्वात् (2 सूत्रे)

ப்ருஹதாரண்யகத்தில் अथ ह याज्ञवल्क्यस्य द्वे भार्ये बभूवतुः போன்றதான யாக்ஞவல்க்யரின் கதை பாரிப்லவத்திற்காகப் பயன்படுவதாகும். அஶ்வமேதயாகத்தில் ஒழிந்த நேரத்தில் யஜமானனுக்கு சில கதைகள் கூறவேண்டும் என்று விதித்துள்ளது. அதற்கு பாரிப்லவம் என்று பெயர். पारिप्लवमाचक्षीत என்று விதிக்கப்படுகிறது. இவ்வாறு உபநிஷத்தின் கதைகள் அனுஷ்டானத்திற்கு உபயோகப்படும். வெறும் துதியானால் பயனில்லை. எனவே பாரிப்லவத்திற்காக இந்த மாதிரி உபாக்யானங்கள்.

ஸித்தாந்தம் :- இது தவறு. அஶ்வமேதத்தின் நடுவே நாளைக் குறிபிட்டு (1,2,3) வெவ்வேறு உபாக்யானங்கள்தான் கூறப்பட வேண்டும் என்று விதிக்கப்பட்டுள்ளன. எனவே அதற்கு இந்த உபநிஷத் கதைகள் பயன்படாது. ஆகையால் அருகில் உள்ள ப்ரஹ்மவித்யையை துதிப்பதற்காகப் பயன்படுகின்றன. எனவே வித்யா ஸ்தாவகம் இது.

## 3.4.3 V पारिप्लवार्था इति चेन्न विशेषितत्वात् (2 सूत्रे)

பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் ஸமமே. श्वेतकेतुर्ह आरुणेय आस என்று கூறும் ஶ்வேதகேதுவின் கதையை உதாரணமாக காட்டியுள்ளது விஶேஷம்.

## 3.4.5 A अत एव चाग्नीन्धनाद्यनपेक्षा (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- ப்ரஹ்மஞானமானது தன் பயனான மோக்ஷம் தருவதற்கு கர்மாபேக்ஷை உடையதா இல்லையா? என்று விசாரிக்கப்படுகிறது. வித்யைக்கு கர்மாங்கத்வம் கிடையாது என்று முதல் அதிகரணத்தில் கூறியிருந்தாலும், ஆத்மவித்யைக்கு அங்கீத்வம் வரலாமே என்று ஸந்தேஹம் ஏற்பட இந்த அதிகரணம் கூறப்படுகிறது. அங்கியான ப்ரதான யாகம் அங்கங்களை எதிர்பார்க்கிறது அன்றோ! எனவே தத்வஞானம் கர்மாவை எதிர்பாக்கிறது.

ஸித்தாந்தம் :- ப்ரஹ்மஞானம் தன் விரோதியான அஞ்ஞானத்தைப் போக்குவதற்கு வேறு அபேக்ஷை அற்றது, விளக்கொளி இருட்டை போக்குவதற்கு மற்றதை எதிர்பார்க்குமா? ஞானம் என்பது அங்கியாகும் என்றுகூறி அங்கமான யாகத்தை எதிர்பார்க்க வேண்டும் என்று கூறியது தவறு. கர்மாவிற்கு அங்கித்வம் என்பது என்ன? 1) ப்ரயோகம் போல் பயனை உண்டாக்குவதில் துணை புரிவதா? 2) நெல்குத்தல் போல் ஞான ஸ்வரூபத்தில் துணை புரிவதா? கர்மாவின் பயன் ஜன்யமானால் 1) முக்தி அநித்யமாகி- விடும். ஞான ஸ்வரூபத்தில் கர்மாவிற்கு அங்கத்வம் என்பது தவறு, அத்வைத ஞானத்திற்கு கர்மா எவ்வாறு ஸ்வரூபத்தில் பயன்பட- முடியும்? எனவே ப்ரஹ்மவித்யை ஏற்பட்டுவிட்டால் மோக்ஷத்திற்காக அதையும் எதிர்பாராது.

## 3.4.4 V अत एव चाग्नीन्धनाद्यनपेक्षा (1 सूत्रम्)

ஸன்யாஸிகளுக்கு ப்ரஹ்ம வித்யையில் விஶேஷ ஸம்பந்தம் கூறியிருப்பதால், ஸன்யாஸிக்கு அக்ன்யாதானம் போன்ற கர்மாக்கள் இல்லாமலேயே ஸன்யாஸத்திற்காக விதிக்கப்பட்ட கர்மாக்களே ஞானத்திற்கு உதவி புரியும் என்பதால் அக்னி ஸம்பந்தமான கர்மாக்கள் தேவையில்லை - என்று விஶிஷ்டாத்வைத மதப்படி பொருள்.

## 3.4.6 A सर्वापेक्षा च यज्ञादिश्रुतेरश्ववत् (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- ஞானம் உண்டான பிறகு மோக்ஷ பயனுக்கு கர்மாபேக்ஷை எப்படி கிடையாதோ அதேபோல் தத்வஞானம் உண்டாவதற்கும் எந்த அபேக்ஷையும் வேண்டியதில்லை. இல்லையேல் சிலதில் கர்மாவை எதிர்பார்த்தல், வேறு சிலதில் எதிர்பார்க்காமை என்று எப்படி பொருந்தும்.

ஸித்தாந்தம் :- தகுதிக்குத் தக்கவாறு சிலதில் எதிர்பார்ப்பது, மற்றதில் எதிர்பார்க்காமை பொருந்தலாம். குதிரையானது உழவிற்கு பயன்படாவிட்டாலும் (எதிர்பார்ப்பதாக இல்லா-விட்டாலும்) தேரில் போக பயன்படுத்தப் படுகிறதன்றோ! வித்யையானது தனது உத்பத்தியில் கர்மாவை அபேக்ஷிக்கிறது என்று வேதமே கூறுகிறது - तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन दानेन तपसानाशकेन - என்று யாகாதிகளினால் மன ஶுத்தி ஏற்பட்டு தத்வ ஞானம் உண்டாக முடியும் என்பதால் ஞான உத்பத்திக்கு கர்மாபேக்ஷை உண்டு. யாகாதிகள் ஞானத்திற்கு பஹிரங்க ஸாதனம். ஶமதமாதிகள் அந்தரங்க ஸாதனம் என்று உணரவும்.

## 3.4.5 V सर्वापेक्षा च यज्ञादिश्रुतेरश्ववत् (1 सूत्रम्)

இந்த அதிகரணம் இரண்டாக கருதப்படுகிறது விஶிஷ்டாத்வை -தத்தில். இந்த அதிகரணத்தில் ஸன்யாஸிக்கு போல

க்ருஹஸ்தர்களுக்கும் யாகாதிகளின் அபேக்ஷை ஞானத்திற்கு இல்லை என்று பூர்வபக்ஷம் பண்ணி, க்ருஹஸ்தர்கள் கர்மாதிகாரிகள் ஆனதால் இவர்களுக்கு ஞானமானது யாகாதிகளை கட்டாயம் எதிர்பார்க்கிறது. செல்வதற்கு ஸாதனமான குதிரை எவ்வாறு மற்ற பரிகரங்களை எதிர்பார்க்கிறதோ அப்படி க்ருஹஸ்தர்களின் ஞானம் யாகாதிகளை அபேக்ஷிக்கிறது - என்று ஸித்தாந்தம் செய்யப்படுகிறது.

## 3.4.6 V शमदमाद्यु उपेतः ...(1 सूत्रम्)

ப்ரவ்ருத்தி ரூபமான யாகாதிகளை க்ருஹஸ்தர்களின் ஞானம் எதிபார்த்தாலும், நிவ்ருத்தி ரூபமான ஶமதமாதிகளை எதிர்பார்க்கிறதா இல்லையா என்ற ஸந்தேஹத்தை போக்க இந்த அதிகரணம். ஶமதமாதிகள் இந்த்ரிய வ்யாபாரத்தை தடுப்பதானாலும் (அந்தரங்கமாக) விதிக்கப்பட்டுள்ளதால் க்ருஹஸ்தன் கட்டாயம் கடைபிடிக்கவேண்டும் समाहितो भूत्वा என்று "க்த்வா" ப்ரத்யயத்தால் ஶமாதிகளுக்கு அங்கத்வம் தெரிகிறது.

## 3.4.7 A सर्वान्नानुमतिश्च प्राणात्यये तद्दर्शनात् (4 सूत्राणि).

ப்ராண வித்யையில் ப்ராணோபாஸகனுக்கு ஒரு ஆபத்தான நேரத்தில் (ப்ராண நாசம் வரும் தருவாயில்) நிஷித்த அன்ன போஜனம் கூறப்படுகிறது. அதனால் இவருக்கு தோஷமில்லை என்றும் கூறப்படுகிறது न ह वा एवं विद्धि किञ्चन अनन्नं भवति எதையும் சாப்பிட்டலாம், கூடாதது இல்லை.

பூர்வபக்ஷம் :- ஸர்வான்னபோஜனம் இதுவரை அறியப்படாததால் अपूर्वत्वात् ப்ராணோபாஸகனுக்கு இது விதிக்கப்படுகிறது.

ஸித்தாந்தம் :- அங்கு நாய், கிருமிகள் யாவும் உண்ணும் உணவும் ப்ராணனுக்கு அன்னம்- என்று வாக்யம் வருகிறது -यदिदं किञ्च आश्वभ्यः... तत्तेऽन्नम् என்று. இதனால் ப்ராணோபாஸகன் இவைகளை போஜ்யமாக கொள்ள முடியுமா? மேலும் பக்ஷ்யம், அபக்ஷ்யம் என்ற பாகுபாடு ஶாஸ்த்ரங்களில் கூறப்படுகின்றன, அவை பாதிக்கப்படும். எனவே ப்ராண ஆபத்து காலத்தில் எத்தனை உண்டால் ப்ராணன் ரக்ஷிக்கப்படுமோ அத்தனை அன்னம் விஶேஷமாக அனுமதிக்கப்படுகிறது. ஆகையால்தான் இந்த உபநிஷத் பாகத்தில் சாக்ராயணர் என்ற ப்ராணோபாஸகர் தனது உயிருக்கு ஆபத்து வந்தபோது பழைய, உச்சிஷ்டமான கடலையை சாப்பிட்டார் என்றும் ஆனால் உடனே தண்ணீரைக் குடிக்க மறுத்தார் என்றும் கூறப்படுகிறது. எனவே ப்ராண உபாஸகனைத் தவிர யாரும் இம்மாதிரி உணவை உண்டால் தோஷம் எப்படியோ அதேபோல ப்ராண உபாஸகனுக்கும் அனாபத்து நேரத்தில் அபக்ஷ்யம் சாப்பிட்டால் தோஷம் கட்டாயம் வரும். ஆபத்தில் ப்ராண உபாஸகனுக்கு மட்டும் விதி விலக்கு.

## 3.4.7 V सर्वान्नानुमतिश्च प्राणात्यये तद्दर्शनात् (4 सूत्राणि)

இங்கு விஶிஷ்டாத்வைதிகளுக்கு பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் முழுமையாக ஸமமே.

## 3.4.8 A विहितत्वाच्चाश्रमकर्मापि (4 सूत्राणि).

பூர்வபக்ஷம்:- யாகாதிகள் ஞான உத்பத்திக்காக உபயோகப்படுவதாக கூறியதானவைகள் ஆஶ்ரமதர்மமாகவும் விதிக்கப்பட்டுள்ளதால் இரண்டுமுறை பண்ணவேண்டும்.

ஸித்தாந்தம் :- ப்ஸ்ராத்தார்த்தமான போஜனத்தில் எவ்வாறு த்ருப்தியானது இன்றியமையாமல் ஏற்படுகிறதோ அவ்வாறே வித்யை அல்லது விவிதிஷைக்காக பண்ணும் கர்மாக்கள் ஆஸ்ரம தர்மமாகவும் கணக்கிடப்படுகின்றன என்பதால் ஒருமுறை பண்ணினால் போதும். ஆஸ்ரமதர்மங்களான கர்மாக்கள் நித்ய கர்மாக்கள், வித்யா ஹேது கர்மாக்கள் காம்ய கர்மாக்களாக ஆகி விடுகின்றனவே? எவ்வாறு இரண்டும் சேரும்?- என்று எண்ண வேண்டாம். வேதத்தில் இரண்டு விதமாகவும் விதிக்கப்-பட்டுள்ளதால் தவறில்லை. கருங்காலி மரத்தினாலான யூபமானது யாகத்தில் நித்யமானாலும் கூட வீர்யகாமன் கருங்காலி யூபம் பண்ணவும் என்று அதையே காம்யமாகவும் ஏற்றுக் கொண்டுள்ளது பூர்வ மீமாம்ஸை. இதுவே இதற்கு உதாரணம். எனவே ஒரு முறைதான் அனுஷ்டானம்.

## 3.4.8 V विहितत्वाच्चाश्रमकर्मापि (4 सूत्राणि)

பூர்வபக்ஷம் ஸித்தாந்தம் விஸிஷ்டாத்வைத மதத்திலும் ஸமமே. முமுக்ஷா இல்லாத க்ருஹஸ்தனானாலும் அவன் நித்யமான கர்மாக்களை செய்யத்தான் வேண்டும். மோக்ஷம் விரும்புபவன் ஆஸ்ரம கர்மாவை ஒரு முறை செய்தாலே போதும். இரண்டுவிதமான விதிகளால் அக்னிஹோத்திரம் நித்யமாகவும் காம்யமாகவும் கருதப்படுவதைஇங்கு உதாரணம் கூறப்பட்டுள்ளது.

## 3.4.5 D सर्वथापि त एवोभयलिंगात्

(7 सूत्राणि).

மற்ற இரு மதங்களிலும் சென்ற அதிகரணத்தின் ஸேஷமான सर्वथापि...अनभिभवं... என்ற இரண்டு ஸூத்ரங்களையும், அத்வைத மதப்படி அடுத்ததான இரண்டு அதிகரணங்களையும் (4+1=5

ஸூத்ரங்களை கொண்டவைகளையும்) சேர்த்து 7 ஸூத்ரங்களை கொண்டதான ஒரே அதிகரணமாக மத்வ மதத்தில் விளக்கப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- ஞானமானது தகுதியற்றவர்களால் (अयोग्यैः) ப்ராப்யமா? அல்லது ப்ரக்ருத யோக்யர்களால்தான் ப்ராப்யமா? யோக்யர்களால்தான் (குறிப்பிட்டவர்கள்) ப்ராப்யம் என்பதற்கு ப்ரமாணம் உண்டா? இல்லையா? யோக்ய ப்ராப்யத்வ பக்ஷத்திலும், மஹா முயற்சி எடுத்து அயோக்யர்களும் யோக்யதையை அடைய முடியுமா? முடியாதா? அயோக்யதா என்பது இவர்களின் ஸ்வபாவமா? வேறா? அது ஸ்வபாவம் எனவே மாறாது என்பதற்கு அடையாளம் (ज्ञापकम्) என்ன? என்று விசார வரிசை -

பூர்வபக்ஷம்:- யோக்யர்களுக்குதான் என்பதில் ப்ரமாணம் இல்லை. வேதாயோக்யர்களுக்கு ப்ரயத்னத்தால் வேதப்ராப்தி போல், யத்னத்தினால் ஞானப்ராப்தி வரலாம். ஞானம் யோக்யர்களுக்குத்-தான் என்றாலும், அயோக்யர்கள்கூட தனது அயோக்யதையை போக்க முயன்று யோக்யதையை பெறலாம். விஶ்வாமித்ரருக்கு மஹா ப்ரயத்னத்தினால் க்ஷத்ரியத்வம் அடங்கி, ப்ராம்ஹணத்வம் ஏற்பட்டதல்லவா? க்ஷத்ரியத்வம் அஸ்வாபாவிகம், அயோக்யத்வம் ஸ்வாபாவிகம் என்பதில் என்ன ப்ரமாணம் உள்ளது. ஸ்வபாவமாயின் நெல், கோதுமை போல் ஞானம் ஸ்வபாவத்தை அனுஸரித்தப் பயனாகிவிடுமே?

ஸித்தாந்தம் :- யோக்யதையற்றவனுக்கு குருபஸத்தி தேஶகாலங்கள் யாவுமிருந்தும் ஞானம் வருவது கிடையாது. யோக்யர்களுக்குதான் வரும். இந்த்ரன் விரோசனர்களுக்கு குருபதேஶம் ஸமமாக இருந்தும் ஞானம் வராமல் ப்ரஹ்மம் தானே ஏற்பட்டது. பிறகு இந்த்ரனுக்கு ஞானம் உண்டானதென்றாலும் அவ்வித ஞானம் வருவதற்கு ஹேதுவான ப்ரஸாதம் என்பது முக்தி யோக்யர்களுக்குத்தான் ஏற்படும். மிகுந்த யத்னத்தினாலும்கூட

அயோக்யர்கள் யோக்யதை அடைய முடியாது. ஸ்வபாவம் மாறுமோ? தைவஸம்பத் அஸுரஸம்பத் என்பது ஸ்வபாவம் என்பதற்கும், அயோக்யதை ஸ்வபாவம் என்பதற்கும், ப்ரமாணங்கள் உள்ளன. எனவே யோக்யர்களுக்கு மட்டுமே ஞானம் ஏற்படும்.

## 3.4.9 A अन्तरा चापि तु तद्दृष्टेः (4 सूत्राणि)

ஆஶ்ரம கர்மாக்கள் ஞானத்திற்கு பயன்படுகின்றன என்று கூறியதும் எதோ காரணவஶத்தால் ஸ்நாதகன் க்ருஹஸ்தாஶ்ரமம் போகாமல் இருந்தாலும், க்ருஹஸ்தன் மனைவி இறந்த பிறகு மேல் ஆஶ்ரமம் போக முடியாமலோ (நிராஶ்ரமியாக) இருந்தால், இவர்களுக்கு தத்வஞானம் வருமா வராதா? என்ற விசாரம் இந்த அதிகரணத்தில் செய்யப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- மனதின் ஶுத்திக்கு தேவையான ஆஶ்ரம கர்மாக்கள் இல்லாததால் ஸ்நாதகன், விதுரன் இவர்களுக்கு ஞானம் ஏற்பட முடியாது.

ஸித்தாந்தம் :- இது தவறு. அனாஶ்ரமிக்கும் ஞானம் ஸம்பவிக்கும். ஆஶ்ரமத்தைச்சாராத (தனியான) ஜபம் போன்ற புண்ய கர்மாக்கள் உள்ளதால் அவைகளின் வழியாக மன ஶுத்தி ஏற்பட முடியும். இதற்காக ஆஶ்ரமமே வேண்டாம் என்பதும் தவறு. ஆஶ்ரம கர்மங்களால் ஶுத்தியில் மேன்மை ஏற்படுகிறது. ஆகவே அனாஶ்ரமிக்கும் ஞானம் வர முடியும்.

## 3.4.9 V अन्तरा चापि तु तद्दृष्टेः (4 सूत्राणि)

விஶிஷ்டாத்வைதத்தில் இந்த அதிகரணம் அத்வைதம் போலவேதான். விஶேஷம் இல்லை. ரைக்வர், பீஷ்மர் என இரு உதாரணங்கள் கூறியுள்ளார். அனாஶ்ரமியும் ஞானம் பெற

முடியும் என்றாலும் பக்தனாக உள்ளவன் ஆஶ்ரமியாகத்தான் இருக்க வேண்டும். அதற்கு விஶேஷம் உண்டு.

## 3.4.10 A तद्भूतस्य तु नातद्भावो जैमिनेरपि नियमाद्रूपाभावेभ्यः (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- ப்ரஹ்மசர்யம், கார்ஹஸ்த்யம், வானப்ரஸ்தம், ஸன்யாஸம் என்று அவரவர்களுடைய விருப்பப்படி ஏற்கலாம் என்பது போல், ஸன்யாஸத்திலிருந்து இறங்குவதும் விருப்பப்படி உண்டா இல்லையா என்று விசாரம்.

பூர்வபக்ஷம் :- தனது ஆசைக்காகவும், பூர்வாஶ்ரம தர்மத்தில் ஶ்ரத்தையாலும் இறங்கவும் செய்யலாம்.

ஸித்தாந்தம் :- விருப்பம் (रागः) என்பது ப்ரமத்தை மூலமாகக் கொண்டதால் மிகவும் தள்ளத்தக்கது. மேல் ஆஶ்ரமம் போனவனுக்கு பூர்வாஶ்ரம தர்ம ஶ்ரத்தா ஸரியல்ல. தன் ஶ்ரத்தை அல்லது விருப்பத்தினால் செய்வது எப்படி தர்மம் ஆகும்? யாருக்கு எது விதிக்கப்பட்டதோ அவர்களுக்குத்தான் அதுதான் தர்மம். மேலும் மேலே போனவன் கீழ் ஆஶ்ரமத்திற்கு வரக்கூடாது என்று வசனம் உள்ளது. அவரோஹம் கிடையாது.

## 3.4.10 V तद्भूतस्य नातद्भावो, न चाधिकारिकमपि, उपपूर्वमपि त्वेके, बहिस्तूभयथापि (4 सूत्राणि)

விஶிஷ்டாத்வைதத்தில் இந்த அதிகரணத்திற்குள்ளேயே அடுத்த இரண்டு அதிகரணங்களாக அத்வைதிகள் கூறுவதும் இணைத்து விளக்கப்பட்டுள்ளது ஒரே அதிகரணமாக.

ஸாரம் :-1) நைஷ்டிக ப்ரஹ்மசாரி 2) வானப்ரஸ்தன் 3)

  

ஸன்யாஸி மூவருக்கும் நைஷ்டிக ப்ரஹ்மசாரி அதிலேயே உயிர் உள்ளவரைக்கும் இருக்க வேண்டும் என்றும்; மற்றவர் இருவரும் அவரது ஆஶ்ரமத்திலிருந்து திரும்பக்கூடாது என்று நிஷேதம் இருப்பதால், இந்த மூவர்களும் தன் ஆஶ்ரமத்திலிருந்து நழுவினால் அஶுத்தமாகிறார்கள் என்பதால், ப்ரஹ்மவித்யையில் இவர்களுக்கு அதிகாரம் கிடையாது. ப்ராயஶ்சித்தம் பண்ணினால் ஶுத்தி வரலாம் என்பதால் ப்ரஹ்மவித்யையில் அதிகாரம் வரலாம் என்று கூறமுடியாது. "आरूढो नैष्ठिकं...प्रायश्चित्तं न पश्यामि" என்பதாக ப்ராயஶ்சித்தம் மூவர்களுக்கும் கிடையாது என்று கூறப்பட்டுள்ளது. சிலர் ப்ராயஶ்சித்தம் உண்டு என்று வைத்துக்கொண்டு இது உபபாதகம்தான் என்று கூறினாலும்கூட அது ஸ்ம்ருதி விருத்தம் என்பதாலும், ஶிஷ்டர்கள் இவர்களுக்கு ப்ரஹ்மவித்யையை கூறுவதில்லை என்பதால், பதிதர்களுக்கு ப்ரஹ்மவித்யையை பெறத்தகுதி கிடையாது.

## 3.4.11 A न चाधिकारिकमपि (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- நைஷ்டிகப்ரஹ்மசாரி, ஸன்யாஸி- இருவருக்கும் தன் (தீவிர ப்ரஹ்மசர்யம்) நிலையிலிருந்து ஸ்த்ரீ ப்ரஸங்கத்தால் ப்ரஷ்டனானால் ப்ராயஶ்சித்தம் கிடையாது. ஏனெனில் "आरूढो नैष्ठिकं धर्मं यस्तु प्रच्यते पुनः । प्रायश्चित्तं न पश्यामि येन शस्त्र्येत् स आत्महा ॥" (நைஷ்டிகபரம்ஹசாரி அல்லது ஸன்யாஸி நழுவினால் அவன் ஆத்மஹாவாகிறான். ப்ராயஶ்சித்தம் கிடையாது) என்று ஸ்ம்ருதி கூறுகிறது. கர்தப (गर्दभ) பஶு ப்ராயஶ்சித்தமானது ஸாதாரண ப்ரஹ்மசாரிக்கு மட்டுமே.

ஸித்தாந்தம்:- உபகுர்வாணன் என்கிற ஸாதாரண ப்ரஹ்மசாரிக்கு மதுபானம் போன்ற தவறுகளுக்கும் உபபாதகமாகக்கொண்டு ப்ராயஶ்சித்தம் இருக்கிறதுபோல இவர்களுக்கு குருபத்னி

விஷயம் தவிர மற்ற இடத்தில் உபபாதகம் என்று கொண்டு ப்ராயஶ்சித்தத்தால் ஶுத்தி உண்டு. ப்ராயஶ்சித்தம் இல்லை என்ற வசனம் அதிகமாக ஜாக்ரதை தேவை என்பதைக் குறிக்கிறது. வானப்ரஸ்த, ஸன்யாஸிகளுக்கு 12 நாள் க்ருச்ரம் பண்ணினால் ப்ராயஶ்சித்தம் என்ற வசனமும் உள்ளது.

## 3.4.6 D न चाधिकारिकमपि (3 सूत्राणि).

அத்வைத ரீதியான அடுத்த அதிகரணமும் சேர்ந்து மத்வ மதத்தில் ஒரே அதிகரணமாகிறது.

பூர்வபக்ஷம் :- தேவத்வம் (பதவியானது) மற்றவர்களால் அடைய முடியுமா? முடியாதா? தேவத்தன்மையை பெறுவதற்கு ஆசை, முயற்சி, செயல் செய்யக்கூடாது என்று நிஷேதம் இருக்கிறதா இல்லையா? என்று விசார வரிசை. स्वधर्मनिष्ठः शतजन्मभिः पुमान् विरिञ्चतां एति (भा. 4.24.25) தன் தர்மானுஷ்டான நிஷ்டன் நூறு ஜன்மாக்களில் சதுர்முகத்தன்மை பெறுகிறான் என்று கூறப்பட்டுள்ளது. எனவே மனித யத்ன ஸாத்யம்தான் தேவத்வ ப்ராப்தி. சேதனத்வம் போல் தேவத்வம் ஸ்வாபாவிகம் அன்று. எனவே தேவத்தன்மையை பெறுவதற்கு முயல்வது தவறன்று. மேலும் பகவத் ஐஶ்வர்யம் கூட முயற்சியால் பெறலாம்.

ஸித்தாந்தம் :- இவை இரண்டும் (தேவத்வம், பகவத் ஐஶ்வர்யம்) அடைய முடியாதது. அதற்கான விருப்பம் முயற்சியே வரமுடியாது. "ப்ரம்மபதம் விரும்புபவன் தேவர்களால் வீழ்த்தப்படுகிறான், முடியாததை விரும்புவதால், ராஜபதவியை விரும்புபவன் போல்" என்று அனுமானம் ப்ரமாணம் ஆகிறது. மேலும் தேவத்தன்மை ஸ்வாபாவிகம் என்று கூறப்பட்டுள்ளது - देवासुरनरत्वाद्या जीवानां तु निसर्गतः என்று. எனவே மனித முயற்சியால் ப்ரஹ்மத்வம் தேவத்வம் வராது.

## 3.4.12 A बहिस्तूभयथापि (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- முன் கூறிய பதிதர்கள் ப்ராயஶ்சித்தத்தினால் ஶுத்தி பெற்றுவிட்டால் ஶிஷ்டர்களுடன் பழகுவதும் ஸம்மதிக்கப்படுகிறதா இல்லையா என்றால் ஸம்மதிக்க வேண்டும்.

ஸித்தாந்தம்:- ஶிஷ்டர்கள் இவர்களுடன் வ்யவஹரிக்க மாட்டார்கள். பரலோகத்திற்காக ஶுத்தி பயன்படுமே ஒழிய ஐஹிக ஶுத்தி வராது. ஏனெனில் ப்ராயஶ்சித்தம் கிடையாது என்று ஸ்ம்ருதி கூறுகிறது. மற்றவர்களுடன், ஶிஷ்டர்களுடன் இந்த பதிதர்கள் பழக முடியாது.

## 3.4.13 A स्वामिनः फलश्रुतेरित्यात्रेयः (3 सूत्राणि)

பூர்வபக்ஷம்:- யாகாங்கமான உத்கீத உபாஸனைகளில் யஜமானன்தான் பண்ணும் கர்த்தாவா? மற்றவருமா? என்ற ஸந்தேஹம். யாகபலன் போல் த்யானபலனும் யஜமானனுக்குத்தான் என்பதால் யஜமானன்தான் உபாஸனையின் கர்த்தா.

ஸித்தாந்தம் :- அந்த உபாஸனை விதிக்கும் வாக்யத்தில் "एवं विदुद्गाता ब्रूयात्" என்பதாக உத்காதா என்ற ரித்விக் பண்ணுவதாகச் சொல்லப்படுகிறது. இது உசிதமே, ஏனெனில் யஜமானன் தனது எல்லா வேலைகளுக்காகவும்தான் ரித்விக்குகளை வரித்து தக்ஷிணை மூலம் வாங்குகிறான். எனவே ரித்விக்குகள் செய்வது என்பது யஜமானன் செய்வதாகவே ஆகிறது.

## 3.4.11 V स्वामिनः फलश्रुतेरित्यात्रेयः (2 सूत्रे)

(ஶ்ருதேஶ்ச என்ற மூன்றாவது ஸூத்ரம் இல்லை)

பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் இரண்டும் அத்வைதத்திற்கு ஸமமே.

பூர்வபக்ஷம் :- தஹரோபாஸனம் போல் உத்கீதோபாஸனமும் பயனடையும் யஜமானனால் பண்ணப் படவேண்டும். கோதோஹனம் ரித்விக்குகள் பண்ணுவது போல் இதுவும் ரித்விக் பண்ணலாம் என்று கூறமுடியாது. யஜமானனால் ரித்விக்கின் ப்ரணயன நேரத்தில் கோதோஹனம் பண்ண இயலாது என்பதால் ரித்விக்கே பண்ணுகிறான். இங்கு உத்கீதகானம் ரித்விக் பண்ணும்போது யஜமானன் ரஸதமத்வம் த்யானம் பண்ண முடியும்.

ஸித்தாந்தம் :- யஜமானனின் எல்லா வேலைகளுக்காகவும் ரித்விக் தக்ஷிணையினால் வரிக்கப்பட்டு வஶப்படுத்தப் படுகிறார். எனவே இவர்தான் (ரித்விக்தான்) பண்ண வேண்டும். யஜமானனால் முடியும் முடியாது என்பது பொருட்டு (criteria) அல்ல என்று விஶேஷம் கூறப்படுகிறது. எனவே உத்கீதோபாஸனை ரித்விக் பண்ணவேண்டும்.

## 3.4.7 D स्वामिनः फलश्रुतेरित्यात्रेयः (3 सूत्राणि)

(இவர்களுக்கும் ஶ்ருதேஶ்ச இதில் இல்லை. ஆனால் அடுத்த அதிகரணமான "ஸஹகார்ய" இதில் சேர்த்து மூன்று ஸூத்ரங்கள்)

பூர்வபக்ஷம் :- ப்ரக்ருதமான ஞானம் தத்வாபிமானியான தேவதைகளுக்கு மட்டும் பயன் தருவதா? மனிதர்களுக்கும் தருமா? வேலைகளின் பயன் ஏற்பட தூண்டிவிடுபவரின் கர்த்ருத்வம் மட்டும் காரணமா? தனது கர்த்ருத்வமும் காரணமா? கர்த்ருத்வமும் கூட பயன் தரும் என்பதற்கு காரணம் உள்ளதா? இல்லையா? கர்த்ருத்வமும் ப்ரயோஜனம் என்றால் ப்ரயோக கர்த்தாவிற்கு ஸமமான பயன் என்பது தேவையா இல்லையா? என்று விசார வரிசை- கர்த்ருத்வம் கூட பயனுக்குக் காரணமானால் ஸ்வாமி (யஜமானன்) பயனுக்கு ஸமமான பயன்

என்று அவசியம் கூறவேண்டும். அப்படியானால் "स्वामी हि फलमश्नुते न स्वामी कर्मकुर्वाणः" யஜமானன்தான் பயன் அடைகிறான், ரித்விக் கர்மாசெய்தாலும் அந்த பயன் கிடையாது என்ற ஶ்ருதிக்கு விரோதம். ஸ்வாமிக்கு மட்டுமே பயன் என்ற ஆத்ரேயரின் மதத்தில் விரோதம் வரும். உலகில் தச்சன் போன்ற தூண்டிவிடப் பட்டவர்களின் வேலையின் பயன் யஜமானனிடமே ஏற்படுவதை காண்கிறோம். தச்சனிடம் இல்லை. எனவே கர்த்ருத்வம் பயன் ஏற்படுத்த காரணம் இல்லை. ப்ரயோக கர்த்ருத்வம்தான் காரணம். எனவே இந்திரியங்களை தூண்டிவிடும் தேவதைகளுக்குத்தான் ஶ்ரவண, மனனாதிகளின் பயன்.

ஸித்தாந்தம் :- தத்வாபிமானி தேவதைகள் மக்களின் ஶ்ரவணாதி கார்யங்களில் ப்ரயோக கர்த்தாவானதால், ஶ்ரவணாதி க்ரியா-பலனானது ஆத்ரேயமதப்படி ஸ்வாமியான யஜமானனுக்குத்தான் என்றாலும் "தேவானாம்" என்று விதிக்கப்பட்ட ஞானதானாதி-கர்மங்களில், ப்ரஜைகளுக்கு ஞானம் ஏற்படும் பொருட்டு தேவர்கள் ஸஹகாரிகளாக ஏற்கப்படுகிறார்கள். ஸத்ரயாகத்தில் யாகஸ்வாமியான யஜமானனுடன் கூட ரித்விக்கானவர்களுக்கு க்ருஹ்ய த்யாகம் இல்லாவிடினும் பயன் ஏற்படுவதால், ப்ரஜைகளுக்கு கர்த்ருத்வத்திற்கு காரணமான ஞானம் அடைய பயன் உண்டு.

## 3.4.14 A सहकार्यन्तरविधिः पक्षेण तृतीयं तद्वतो विध्यादिवत् (3 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் கஹோள ப்ராம்ஹணத்தில் "तस्माद्ब्राह्मणः पाण्डित्यं मुनिः=" ப்ரஹ்மத்தன்மை பரமபுருஷார்த்தமாதலால், அந்த நிலை பெறுவதற்கு விரும்புபவன் உபநிஷத் தாத்பர்யம் நிச்சயமான பாண்டித்யம் பெற்று சிறுவன் போல் ராக த்வேஷாதிகள் இல்லாமல் இருந்து, ப்ரஹ்மத்வம்

பொருந்தும் என்பதற்கான யுக்திகளை அனுஸந்தானம் பண்ணிக்-கொண்டு இருக்க வேண்டும். பிறகு முனியாகிறான்'' என்ற வாக்யத்தில் भवेत् என்று கட்டளை சேர்த்துக்கொண்டு முனியாக இருத்தல் வேண்டும் என்று பொருள். 'முனி' 'பாண்டித்யம்' இரண்டு வார்த்தைகளும் ஞானத்தையே கூறுவதால் பாண்டித்யம் அடைந்தவனுக்கு மறுபடி முனித்வம் வரிக்கத்தேவையில்லை. மன= ஞானே என்றுதானே வினைச்சொல்.

ஸித்தாந்தம் :- பாண்டித்யம் என்பதனால் அறிவு பெறக் கூறிய பிறகு முனி என்று கூறுவதால் பயனில்லை என்பதால் தொடர்ந்து ஞான நிஷ்டாவில் இருக்கும் புதிய பொருளை முனி என்ற சொல் கூறுகிறது. எனவே "तिष्ठासेत्" என்று கூறிய வினைச்சொல் இங்கும் சேர்த்துக்கொள்ள வேண்டும். ஞானம் இடைவிடாமல் தொடர்வதால் பயனுண்டு. ப்ரபலமான பேதவாஸனை நிரம்பிய மனிதனுக்கு அந்த வாஸனையை விலக்க நிதித்யாஸனம் விதிக்கப் படுகிறது = முனியாக இரு.

## 3.4.12 V सहकार्यन्तरविधिः पक्षेण तृतीयं तद्वतो विध्यादिवत् (3 सूत्राणि)

பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் இரண்டுமே பெரும்பாலும் அத்வைதத்திற்கு ஸமானம்தான். ஶமதமாதிகள் போலும், ஶ்ரவண-மனன-நிதித்யாஸனங்கள் போலும் உபாஸனாங்கமாக பாண்டித்ய, பால்ய, மௌனங்கள் விதிக்கப்படுகின்றன. ப்ரஹ்மஸ்வரூப அறிவு, கள்ளம்கபடமற்றதன்மை, சுபாலம்பன பரிஶீலனம் (என்ற) மௌனம் மூன்றும் விதிக்கப்படுகிறது. பராசரர் போன்ற ஆலம்பன ஸம்சின்னம் (அதே தொடர்ந்து அனுஸந்தானம்) உள்ளவர்களை தானே முனிவர் என்கிறோம். எனவே அத்தகைய மௌனம் இங்கு விதிக்கப்படுகிறது.

# 3.4.8 D कृत्स्नभावात्तु गृहिणोपसंहारः (2 सूत्रे)

ஆஶ்ரமபேதங்கள் கொண்ட ஞானிமனிதர்களில் க்ருஹஸ்தன் சிறந்தவனா? யதியா? ஸர்வகர்ம அனுஷ்டான யோக்யத்வம்தான் முக்தியில் மேன்மைக்கு காரணமா? வெகு காலம் ஸாதனானுஷ்டானம் காரணமா? முக்தி பெற யதிக்குத்தான் உயர்ந்த தகுதி என்றால் சாந்தோக்யத்தில் கடைசியில் க்ருஹஸ்தருடன் பூர்த்தி பண்ணுகிறது விரோதமாகாதா? ஆகுமா? அந்த சாந்தோக்யம் மனிதர்களுக்கா? தேவர்களுக்கா? தேவர்கள் விஷயம்தான் என்பதற்கு தடையுள்ளது, ப்ரமாணம் இல்லையா? மாறுதலா? என்று விசார வரிசையில் –

பூர்வபக்ஷம் :- க்ருஹஸ்தன் தவிர மற்றவர்களுக்கு ஸர்வ-கர்மாக்களில் அதிகாரம் இல்லாததால், அத்தகைய அதிகாரமுள்ள க்ருஹஸ்தன்தான் மிகச் சிறந்தவன். ஸன்யாஸி அல்ல. இல்லாவிடில் சாந்தோக்யத்தில் (8.15.1) ''எல்லா கர்மாவும் பண்ணி வரும் க்ருஹஸ்தன் ப்ரஹ்மலோகம் சென்று திரும்பி வராத முக்தியை பெறுகிறான்'' என்று கூறியதற்கு விரோதம் வரும். இந்த வாக்யம் தேவர்களுக்கானது என்பதில் ப்ரமாணம் இல்லை. எனவே க்ருஹஸ்தன்தான் சிறந்தவன்.

ஸித்தாந்தம் :- க்ருஹஸ்தனுக்கு ஸர்வகர்ம அதிகாரம் இருப்பினும், அவை யாவையும் செய்யும் கட்டாயம் இல்லை என்பதால் "இவன் அடையும் மோக்ஷம் சீக்கிரம் ஏற்படுகிறது. த்வரா = அவஸரம் இல்லாமல் யதிகள் அடைகின்றனர்'' என்ற வாக்யப்படி க்ருஹஸ்த மோக்ஷம் விரைவான ஸாதனைகளால் (அசிரகாலம் செய்யும் கர்மங்களால்) ஏற்படுவதால் வெகுகாலம் நீண்டு செய்யும் செயல்களால் யதிகள் பெறும் மோக்ஷத்தைக் காட்டிலும் தாழ்மை (அல்லது) க்ருஹஸ்த மோக்ஷத்தைக் காட்டிலும் யதி மோக்ஷம் சிறந்தது என்கிறது. ஆகவே யதிதான் மோக்ஷத்திற்கு மிகச் சிறந்த அதிகாரி. சாந்தோக்ய ஶ்ருதியானது தேவர்கள் பற்றியே

கூறுகிறது என்பதற்கு ப்ரமாணம் உள்ளது - कृत्स्ना ह्यते गृहिणः - அப்படியானால் மனித யதிகளைக் காட்டிலும் தேவர்களுக்கு முக்தியில் ஆதிக்யம் இல்லாமல் போய்விடும் என்று எண்ண வேண்டாம், தேவர்களுக்கு மிகச்சிறந்த யதித்வம் கூறப்படுகிறது- कृत्स्ना ह्यतेयतयः என்று. எனவே யதிகள்தான் முக்தியில் மிகச்சிறந்தவர்.

## 3.4.15 A अनाविष्कुर्वन्नन्वयात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- சென்ற அதிகரணத்தில் கூறிய ஸாதனங்களில் பால்யம் என்றால் என்ன என்று விசாரிக்கப்படுகிறது. சிறு வயதுத் தன்மை என்பதுதான் ப்ரஸித்தம். அதை எப்படி விதிக்க முடியும் என்றால் बालस्य कर्म = बाल्यम्= சிறுவனின் செயல் என்று கொண்டு தன்னிஷ்டப்படி விதிநிஷேதங்களுக்குக் கட்டுப்படாமல் இருப்பது என்று பொருள் கொள்ளவேண்டும். எப்படியானாலும் ராகத்வேஷமற்ற ஶுத்தமனம் என்று பொருள் இல்லை.

ஸித்தாந்தம் :- முன்னால் பாண்டித்யம் என்ற ஶ்ரவணமும் பின்னால் மௌனம் என்ற நிதித்யாஸனமும் கூறியிருப்பதால் பால்ய பதத்தினால் மனனம் கருதப்படுகிறது. மனனத்திற்கு எண்ணங்களின் தூய்மை (ஶுத்தி) தேவைப்படுகிறது. ராகத்வேஷ, மானாபமானங்களால் மனம் வெளியே ஓடும். எனவே மனனம் தடைபடும். ஆகவே சிறு வயது, குழந்தையின் சேஷ்டை என்ற பொருள் இங்கு பொருந்தாது. எண்ணத் தூய்மைதான் பால்யம்.

## 3.4.13 V अनाविष्कुर्वन्नन्वयात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் அத்வைதம் போலவேதான். பால்யம் எனில் தன் மகிமையை வெளிப்படுத்தாத தன்மைதான் குறிப்பிடப்படுகிறது.

  

## 3.4.9 D अनाविष्कुर्वन्नन्वयात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- அபரோக்ஷஞான ஸாதனமான பரோக்ஷஞான உபதேஶமானது வெளிப்படையாகத்தான் (public) பண்ணவேண்டுமா? மாறுதலா? வெளிப்படையாக உபதேஶத்தில் ப்ரமாணம் உண்டு, தடையில்லையா? மாறுதலா? ஸபை, நான்கு சாலைகள் சந்திக்கும் இடத்திலிருந்து உபதேஶம் பண்ணினால் தத்வஞான யோக்யர்களுக்கு பலருக்கும் ஞானோதயம் ஏற்படும் என்பதால், அதன் மூலம் பயன் அதிகமாவதால் வெளிப்படையாகத்தான் உபதேஶம் பண்ணவேண்டும்.

ஸித்தாந்தம் :- ஸபை போன்ற பொது இடத்தில் வெளிப்படையாக உபதேஶம் செய்தால் அயோக்யர்களுக்கும் உபதேஶம் போகும், அது பயன்படாததால் கூடாது என்ற நிஷேதம் உள்ளதால் தனியாக ரஹஸ்யமாகத்தான் யோக்யர்களுக்கு மட்டுமே ஏகாந்தத்தில் உபதேஶம் செய்யவேண்டும்.

## 3.4.16 A ऐहिकमप्यप्रस्तुतप्रतिबन्धे तद्दर्शनात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- ஶ்ரவண, மனன, நிதித்யாஸனங்களை பயிற்சி செய்யும் ஸாதகர்கள் இந்த ஜன்மாவிலேயே ஸாக்ஷாத்கார ஞானம் வேண்டுமென்றே விரும்புவதால் (மழைக்காக செய்யும் காரீரிஷ்டி போல்). இவர்களுக்கு தத்வஞானம் இந்த பிறவியிலேயே ஏற்பட வேண்டும். யாகாதிகளும் ஞானத்திற்கு ஸாதனம் ஆவதால் ஸ்வர்கம் போல் மறுபிறவிகளிலும் வரலாம் என்று கூறமுடியாது. யாகாதிகள் யாவும் ஶ்ரவண மனனாதிகள் அனுஷ்டிக்கும் முன்பே ஜிக்ஞாஸையை ஏற்படுத்தி முடிந்துவிட்டன அன்றோ! எனவே ஞானோத்பத்தி இந்தப் பிறவியிலேயேதான்.

ஸித்தாந்தம் :- இடையூறு இல்லாவிடில் இப்பிறவியிலேயே ஞானம் ஏற்படும். ஆனால் இடையூறு பலமாக இருப்பின் ஶ்ரவணாதிகள் மறுபிறவியில் ஞானத்தைக் கொடுக்கும் என்று கொள்ள வேண்டும். பலவிதமான இடையூறுகள் உபநிஷத்தில் கூறப்படுகின்றன - "श्रवणायापि बहुभिर्यो न लभ्यः शृण्वन्तोपि बहवो यं न विद्युः । आश्चर्योस्य वक्ता कुशलोस्य लब्धाश्चर्यो ज्ञाता कुशलानुशिष्टः"- "ஶ்ரவணத்திற்கு வருவதே மிகக் கடினம், ஶ்ரவணம் செய்தாலும் புரிவது மிக மிகக் கடினம், ஏனெனில் ப்ரதிபந்தம் (இடையூறு) அதிகம் உண்டு". இந்த ஜன்மாவில் செய்த ஶ்ரவணாதிகள் மறுபிறவிகளில் பயன் தரலாம் என்பதற்கு வாமதேவர் உதாரணம். இவருக்கு தாயின் கர்பத்திலேயே ஞானம் உண்டாயிற்றன்றோ!

## 3.4.14 V ऐहिकमप्यप्रस्तुतप्रतिबन्धे तद्दर्शनात्

(1 सूत्रम्)

பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் இரண்டும் அத்வைதம் போலவேதான்.

## 3.4.10 D ऐहिकमप्यप्रस्तुतप्रतिबन्धे तद्दर्शनात्

(1 सूत्रम)

பூர்வபக்ஷம் :- பரோக்ஷஞானத்தினால் வரும் அபரோக்ஷஞானம் என்பது ஸாதனங்கள் ஸம்பூர்த்தியானதும் உடனே இந்த ஜன்மாவில் உண்டாகும் என்று நிபந்தனை உள்ளதா? மறுபிறவியிலும் வரலாமா? இந்த ஜன்மாவில் வராவிட்டால் எப்போதும் வர முடியாது என்று ஆகுமா? ஆகாதா? எப்பவும் வரலாம் என்பதற்கு ப்ரமாணம் உண்டா? இல்லையா? என்று விசார வரிசை - ஸ்வர்கமானது யாகத்தினால் இந்த ஜன்மாவில் வரமுடியாது, அந்த சரீரமானது தற்போது இல்லாததால் - என்பது போல இந்த ஜன்மாவில் ஞானம் வராததற்கு காரணம் இங்கு

இல்லை என்பதால் இந்த ஜன்மாவில் ஞானம் வராவிடில் எந்த ஜன்மாவிலும் வர முடியாது என்றுதான் ஏற்படும். ஆகவே ஶ்ரவணாதி செய்யும் ஜன்மாவிலேயேதான் அபரோக்ஷ ஞானம் ஏற்பட வேண்டும்.

ஸித்தாந்தம் :- யாகத்தினால் இந்த ஜன்மாவில் ஸ்வர்கம் ஏற்பட தடையாக இந்த மானிட உடல் இருப்பது போல் இங்கும் அப்ரோக்ஷ ஞானத்தைத் தடை செய்யும் ப்ராரப்த கர்மா இருந்தால் இந்த ஜன்மாவில் ஏற்படாது. அந்த தடை இல்லையென்றால் இந்த ஜன்மாவில் ஏற்படும். (बहूनां जन्मनामन्ते ज्ञानवान् என்று கீதை இதற்கு ப்ரமாணம்) எனவே ஶ்ரவணாதிகள் இந்த ஜன்மத்திலேயே அபரோக்ஷஞானம் கொடுத்தாக வேண்டும் என்று நிர்பந்தமில்லை.

## 3.4.17 A एवं मुक्तिफलानियमः

### तदवस्थावधृतेस्तदवस्थावधृतेः (1 सूत्रम्)

இந்த அத்யாயத்தின் கடைசி அதிகரணம்.

பூர்வபக்ஷம் :- எவ்வாறு ப்ரஹ்மலோகம் என்ற பயன் பெறுவதில் ஸாலோக்யம், ஸாரூப்யம், ஸாமீப்யம், ஸாயுஜ்யம் என்று பலவாக உள்ளதோ, அவ்வாறே ஞானத்தினால் வரும் இந்த முக்தியும் பலவிதம்.

ஸித்தாந்தம் :- அத்வைத மதத்தில் முக்தி (மோக்ஷம்) என்றால் எப்போதும் ஸித்தமான நிலையை உணர்வது தான். ஸ்வர்கம், ப்ரஹ்மலோகம் போல புதியதாக கிடைக்க வேண்டிய பொருள் அல்ல. அத்தகைய ப்ரஹ்மமமானது "प्रज्ञान घन एव" "एकधैवानुद्रष्टव्यम्" என்று மிகவும் திடமாக ஊர்ஜிதமாக அகண்டபரிபூர்ண அத்வைதமான

பூர்ணநிலைதான் என்று பற்பலமுறை உபநிஷத்துக்கள் போதிக்கின்றன. எனவே இந்த முக்தி ஒரேவிதம்தான்.

## 3.4.15 V एवं मुक्तिफलानियमस्तद-वस्थावधृतेस्तदवस्थावधृतेः (1 सूत्रम्)

இந்த அதிகரணத்தில் விஶிஷ்டாத்வைதப்படி மோக்ஷ-ஸாதனமான ப்ரஹ்ம உபாஸனை என்பது இந்த ஜன்மாவிலேயே கிட்டும் என்று நிர்பந்தம் கூறமுடியாது, அதன் காலத்தில்தான் அது ஏற்படும் என்று நிர்ணயிக்கப்படுவதாக அதிகரணம் விளக்கப்படுகிறது. இந்த விசாரமானது உத்கீத உபாஸனம் இல்லாத க்ரத்வங்க உபாஸனைகளைப் பற்றியது என்றும் நிர்ணயிக்கப்படுகிறது.

## 3.4.11 D एवं मुक्तिफलानियमस्तद-वस्थावधृतेस्तदवस्थावधृतेः (1 सूत्रम्)

முந்தைய அதிகரணத்தில் ஞானமானது இந்த ஜன்மாவிலேயே வரும் என்று கிடையாது என்று ஸித்தாந்தம் போல, ஞானம் ஏற்பட்டாலும் இந்த ஜன்மாவிலேயே மோக்ஷம். என்றும் நிர்பந்தமில்லை, என்று நிர்ணயிக்கப்படுகிறது. பூர்வ, உத்தரபக்ஷ யுக்திகள் ஸமமே.



# நான்காவது அத்யாயம்

## முதல் பாதம்

## 4.1.1 A आवृत्तिरसकृदुपदेशात् (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- ஶ்ரவணம், மனனம், நிதித்யாஸனம் இவை ஒரு முறை செய்தால் போதுமா? திரும்பத்திரும்ப பண்ணவேண்டுமா? யாகாங்கமான ப்ரயாஜங்கள் ஒருமுறை செய்யப்படுவதுபோல ஞானாங்கமான ஶ்ரவணாதிகளும் ஒருமுறை செய்தாலே போதும், ஶாஸ்த்ரம் அனுஷ்டிக்கப்பட்டதாகிவிடுகிறது.

ஸித்தாந்தம்:- ப்ரயாஜங்கள் உதாரணம் தவறு. அது அத்ருஷ்ட-மாகப் பயன்படுகிறது. ஶ்ரவணாதிகள் நெல்லைக் குத்துவது-போல் நேரிடையான, கண்கூடான பயனைத் தருவது. ப்ரஹ்ம-ஸாக்ஷாத்காரம் கண்கூடான பயனன்றோ! எனவே உமிகள் விலகும்வரை குத்துதல் தொடர்வதுபோல ஸாக்ஷாத்காரஉத்பத்தி வரை ஶ்ரவணாதிகளும் ஆவ்ருத்திக்கப்படவேண்டும்.

## 4.1.1. V आवृत्तिरसकृदुपदेशात् (2 सूत्रे)

பூர்வபக்ஷம்:- பகவத்சிந்தனரூப வேதனத்திற்கு ஒருமுறை செய்ததாலேயே மோக்ஷம் கிடைக்கும். ஜ்யோதிஷ்டோமத்தை ஒருமுறைதானே ஸ்வர்கத்திற்காக பண்ணுகிறோம். எனவே பகவத்சிந்தனம் ஒருமுறை போதும்.

ஸித்தாந்தம் :- ஸ்ம்ருதியாகிற வேதனம், ஸ்ம்ருதி ஸந்ததியாகிற உபாஸனம், அவிச்சின்ன தைலதாரா போன்ற ஸ்ம்ருதி ஸந்ததி-யாகிற த்யானம், ஸாக்ஷாத்காரம், பக்தி என்று முக்தி-

ஹேதுக்களின் வரிசை உள்ளது. नायमात्माप्रवचनेन... என்ற மந்த்ரத்தில் மற்ற ஸாதனையிருந்தாலும் போதாது, பகவானால் வரிக்கப்படும்தன்மையை உடையவன்தான், ஸாக்ஷாத்காரம் பகவானால் ப்ரகாஶப்படுத்தப்பட்டு பெறுகிறான் என்று கூறுகிறது. பக்தன் வரிக்கப்படுவது என்பது நிரதிஶயப்ரீதி பெறுவதுதான். எனவே ஶ்ரவணாதிகள் நிரதிஶய ப்ரீதித்-தன்மையை உண்டுபண்ணி பகவத்-ப்ராப்தி ஹேதுத்வத்தைப் பெறுகின்றன. இந்நிலையில் நிரதிஶய ப்ரீதித்தன்மையை அடைந்த தைலதாராபோல் இடைவிடாத ஸ்ம்ருதிஸந்ததிதான் மோக்ஷகாரணம். இதற்காக ஶ்ரவணாதிகள் ஆவ்ருத்தி தேவை.

## 4.1.1. D आवृत्तिरसकृदुपदेशात् (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- ஶ்ரவணாதிஸாதனம் அக்னிஹோத்ரம்போல் ஒருமுறை செய்தால் போதும்; இதனாலேயே ஞானோதயம் ஏற்படும். நெல்குத்துதல்போல் பலமுறை செய்வது தேவை-யானால் ஞானம் ஸுஶகம் (सुशकम्) = பெறுவது ஸுலபம் என்ற ப்ரஸித்தி போய்விடும். ஞானம் துஶ்ஶகம் (दुःशकम्) என்று ஏற்பதற்கு ப்ரமாணம் இல்லை.

ஸித்தாந்தம் :- நெல் குத்துவது ஒருமுறை பண்ணினால் பயன் (உமி விலகுதல்) வருவதில்லை. அதேபோல ஶ்ரவணாதிகள் ஒருமுறை அனுஷ்டித்தால் ஞானம் ஏற்படுவது இல்லை. எனவே ஆவர்த்தனம் தேவை. ஞானம் ஸுஶகம் (ஸுலபம்) என்று கூறுவது பொருந்தாது என்பது இல்லை; பெரும்பயன் தருவதான ஞானத்தில் துர்லபத்வம் என்பதே குணமாகும். இதற்கு ப்ரமாணம் சாந்தோக்யத்தில் ஒன்பதுமுறை தத்வமஸி கூறப்படுகிறது. எனவே ஆவ்ருத்தி கட்டாயம் தேவை.

## 4.1.2 A आत्मेति तूपगच्छन्ति ग्राहयन्ति च

(1 ஸூத்ரம்)

பூர்வபக்ஷம் :- ஶாஸ்த்ரத்தில் உணர்த்தும் ப்ரஹ்மத்தை "நான் ப்ரஹ்மம்" என்று உணரவேண்டுமா? தனக்கு வேறாக உணர-வேண்டுமா? என்றால் வேறாகத்தான் உணரவேண்டும். ஏனெனில் அல்பஞுத்வம்-ஸர்வஞுத்வம், துக்கம்-துக்கமின்மை போன்ற முரண்பாடான குணங்கள் இருவரிடமும் உள்ளது.

ஸித்தாந்தம் :- உண்மையில் ப்ரஹ்மஸ்வரூபமாகவே உள்ள ஜீவன், மனம் என்கிற உபாதியினால் துக்கம், வருத்தம் போன்றவற்றைத் தன்னிடம் தவறாக எண்ணுகிறான். சிவப்பான பூவாகிற உபாதியினால் ஸ்படிகம் சிவப்பாகத் தெரிவதுபோல் "நான் துக்கப்படுபவன்" என்று நினைப்பது தவறான அறிவு (ப்ரமம்). எனவே உண்மையான நிலையில் ப்ரஹ்மத்திற்கும் ஜீவனுக்கும் தன்மையில் விரோதம் கிடையாது. எனவே "நானே ப்ரஹ்மம்" என்றே உணரவேண்டும். "अहं ब्रह्मास्मि" "तत्त्वमसि" என்றெல்லாம் வாக்யங்கள் உபதேஶிக்கின்றன அல்லவா?

## 4.1.2 V आत्मेति तूपगच्छन्ति ग्राहयन्ति च

(1 ஸூத்ரம்)

பூர்வபக்ஷம்:- உபாஸ்யரான ப்ரஹ்மத்தைக் குறித்து உபாஸகரான ஜீவன் வேறானவன் என்பதாலும், "पृथगात्मानं प्रेरितारं च मत्वा" என்று தன்னையும் பரமாத்மாவையும் வேறாக உபாஸனை விதிக்கப்பட்டுள்ளதாலும் பரமாத்மாவை "நான் பரமாத்மா" என்று உபாஸிக்கக்கூடாது.

ஸித்தாந்தம் :- உபாஸகன் பரமாத்மாவை "தான்" என்றுதான் உபாஸிக்கவேண்டும். வேறு என்று உபாஸிக்கக்கூடாது. வேறாக

உபாஸிப்பதை "न स वेद" என்று நிந்தித்துள்ளது. தன்னைத்தவிர வேறானாலும், ஶாஸ்த்ரங்கள் கூறியுள்ளதால் ப்ரஹ்மத்தை, தான் என்றே வைத்து த்யானம் (உபாஸனை) பண்ணுவது தவறில்லை. உதாரணம்:- ''நான் மனுஷ்யன்'' என்பது எவ்வாறு தவறு இல்லையோ; தன் உடலைத் தானாக பாவித்துக் கூறுவதன்றோ. ஶரீரஶரீரிபாவம் உள்ளதால் அபேதமும் விரோதமில்லை. எனவே அந்தர்யாமியான பரமாத்மாவிற்கு நாம் ஶரீரமாகிறோம் என்பதால் ''நான் பரமாத்மா'' என்று எண்ணுவது தவறு இல்லை.

## 4.1.2 D आत्मेति तूपगच्छन्ति ग्राहयन्ति च

(1 सूत्रम्)

"எவருடைய ஞானத்திற்கு ஶ்ரவணாதி ஆவ்ருத்தி கூறினோமோ அவருக்கு ஆத்மத்வம் என்கிற ஸ்வாமித்வத்தை த்யானம் செய்வது தேவையா? இல்லையா? ஆத்மத்வேன (ஸ்வாமித்வேன) உபாஸனையும் உபதேஶமும் எப்போதும் செய்யவேண்டுமா? வேண்டாமா? ஆத்மத்வம் என்றே ஸ்வாமித்வம் அதிப்ரஸித்தமானதால் இது உபாஸனைக்கு தடையா? இல்லையா? தடையில்லை என்பதற்கு என்ன ப்ரமாணம்?" என்று விசாரவரிசை.

பூர்வபக்ஷம்:- எப்போதும் ப்ரஸித்தமானதால், ஆத்மத்வத்தை த்யானிப்பதும் உபதேஶிப்பதும் எப்போதும் செய்யவேண்டாம். நன்கு ப்ரஸித்தமான ஒரு விஷயம், நம் மனதில் எப்போதும் சுற்றிவருமானதால் த்யான-உபதேஶங்கள் வீண். ப்ரஸித்த-மானாலும் செய்யவேண்டும் என்பதற்கு ப்ரமாணம் இல்லையே.

ஸித்தாந்தம் :- आत्मेत्युपासनं कार्यं सर्वथैव मुमुक्षुभिः முமுக்ஷுக்கள் எப்போதும் ஆத்மா என்று (ஸ்வாமி) உபாஸிக்கவேண்டும் என்று

கூறியுள்ளது. "விஷ்ணு ஆத்மா" என்ற உபாஸனை உப-தேஶங்களுக்கு மோக்ஷஹேதுத்வம் தெரிகிறது. மோக்ஷத்திற்கான உபாஸனை விஷயத்தில் ப்ரஸித்தி- அப்ரஸித்தி என்று பேச்சே இல்லை.

## 4.1.3 A न प्रतीके न हि सः (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- मनो ब्रह्मेत्युपासीत போன்ற வாக்யங்களில் மனதை ப்ரஹ்மமாக உபாஸித்தல் கூறியிருப்பதால், அங்கும் மனதை ப்ரஹ்மமாக த்யானித்து "நான்" என்ற எண்ணத்தையும் சேர்க்க வேண்டும். மனம் என்ற ப்ரதீகம் ப்ரஹ்மத்தின் (effect) கார்ய-மாதலால், ப்ரஹ்மம்தவிர வேறல்ல, ஜீவனும் ப்ரஹ்மம்தவிர வேறல்ல. எனவே "நான் மனம்" என்று எண்ணுவதில் தவறில்லை.

ஸித்தாந்தம் :- ப்ரஹ்மகார்யமான மனதிற்கு ப்ரஹ்மத்வம் என்று ஆலோசித்தால், அப்போது ப்ரதீகமானதின் (மனம்) ஸ்வரூபமே மறைந்துவிடும். குடத்தை மண் என்ற நோக்கில் ஒன்றாகக் கொண்டால் குடம் இராது. இப்படியே ஜீவனை ப்ரஹ்மமாக எண்ணினால் ஜீவத்தன்மை போய் உபாஸகனும் இருக்க மாட்டான். உபாஸ்யம்-உபாஸகன் என்ற பேதத்திற்கு முக்யத்வம் கொடுத்தால் அப்போது மனம் உபாஸ்யம், உபாஸகன் ஜீவன் என்று இருவரும் பசு, எருமை போல் தனித்தனியானதால் "நான்" என்று எண்ணவேமுடியாது. எனவே ப்ரதீக உபாஸனையில் அஹங்க்ரஹம் கிடையாது.

## 4.1.3 V न प्रतीके न हि सः (2 सूत्रे)

அடுத்த அதிகரணம் சேர்த்து ஒன்று.

பூர்வபக்ஷம் ;- "मनो ब्रह्मेत्युपासीत" "नाम ब्रह्मेत्युपासीत" என்று கூறும் உபாஸனைகளும் ப்ரஹ்ம-உபாஸனமானதால் உபாஸ்யவஸ்துவை ஆத்மா என்றே உபாஸிக்கவேண்டும்.

ஸித்தாந்தம் :- மனம் ப்ரஹ்மம் என்ற உபாஸனையில் ப்ரஹ்மம் மனம் என்று மாறுதலான உபாஸனை கிடையாது. உயர்ந்ததான ராஜாவை ஸேவகனாக நினைப்பது உண்டோ? எனவே மனம் போன்றவற்றை ப்ரஹ்மமாக உபாஸிக்கவேண்டும், அந்த மனம் போன்றவை உபாஸகனைக் காட்டிலும் முற்றிலும் வேறானது. எனவே அஹம் என்ற எண்ணம் ப்ரதீக உபாஸனத்தில் கிடையாது.

## 4.1.3 D न प्रतीके न हि सः (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- नाम ब्रह्मेत्युपासीत वाचं ब्रह्मेत्युपासीत என்ற இடங்களில் நாமத்தை ப்ரஹ்மமாகவே உபாஸிக்கவேண்டுமா? நாமத்தில் ப்ரஹ்மம் உள்ளது என்று உபாஸிக்கவேண்டுமா? இந்த ஶ்ருதி ஐக்யத்தில் தாத்பர்யமா? இல்லையா? பொய்யான உபாஸனமும் ப்ரயோஜனம் தருமா? உண்மை உபாஸனம்தான் தருமா? என்று விசாரவரிசை - நாமம் போன்றவைகளை ப்ரஹ்மமாகவே கூறப்படும் ஸாமானாதிகரண்யத்தால் ஐக்யோபாஸனம் தெரிகிறது. இந்த ஐக்யம் தவறானது, இரண்டும் வேறானதால் என்று கொள்ளவேண்டாம். சென்ற அதிகரணத்திலும் ப்ரஸித்தி அப்ரஸித்தியைப் பற்றி கவலையில்லை என்று கூறியதுபோல் உபாஸ்யவஸ்துவின் ஸத்ய மித்யாத்வம் உபாஸனைக்குப் பார்க்கவேண்டியதில்லை. இந்த உபாஸனைக்கு பயனும் கூறப்பட்டுள்ளது.

ஸித்தாந்தம்:- अचेतन असत्य अयोग्यानि अनुपास्यानि आफलत्वविपर्ययाभ्याम् (संकसू. 2.3.8)ஜடம், அஸத்யம், அயோக்யங்களை உபாஸிக்கவேண்டாம் பயன்வராது" என்ற ஸூத்ரத்திலும் அனுவ்யாக்யானத்தில் கூறிய ஶ்ருதிகளிலும் பொய்யான உபாஸனை பயனற்றது என்றும் விபரீதபயன் என்றும் கூறப்பட்டுள்ளது. எனவே நாமம் போன்றவற்றில் ப்ரஹ்மம் இருப்பதாக மட்டுமே உபாஸனை பண்ணவேண்டும், ஐக்யமாக அல்ல.

## 4.1.4 A ब्रह्मदृष्टिरुत्कर्षात् (1 सूत्रम)

பூர்வபக்ஷம் :- "मनो ब्रह्म" என்ற உபாஸனையில் ப்ரஹ்மத்தை மனதாகக் கொண்டு உபாஸனை பண்ணவேண்டும். அப்போது தான் ப்ரஹ்மம் உபாஸித்ததாக ஆகும். ப்ரஹ்மம், தானே பயன் தருவது என்பதால் உபாஸிக்கப்படவேண்டும். எனவே ப்ரஹ்மத்தில் மனம் என்பதாக எண்ணல் வேண்டும்.

ஸித்தாந்தம் :- இது தவறு. உயர்ந்ததான ப்ரஹ்மமாக தாழ்ந்த மனதை உபாஸித்தல்தான் உசிதம். ஸேவகனை ராஜாவாக பாவித்து எண்ணலாம், பூஜிக்கலாம். ராஜாவை சேவகனாக உபாஸிப்பது ஸரியல்ல. இதே போல் மேலும் வாக்யத்தில் "ब्रह्मेति" என்பதாக "இதி = என்று" என்ற வார்த்தை அதிகமாக உள்ளதால் அது எண்ணத்தைக் குறிப்பதாகும் ப்ரஹ்மத்தை கூறுவது அல்ல. உதாரணம் "स्थाणुं चोर इति जानाति" தூணைத் திருடனாக நினைக்கிறான் என்றால் திருடனுக்கு முக்யத்வம் இல்லை. திருடன் என்ற சொல் அவ்வாறு நினைத்தல் என்பதை குறிக்கிறது அன்றோ. மனதை உபாஸித்தால் ப்ரஹ்மம் எவ்வாறு பயன் தரும் என்றால், அதிதியானவன் (விருந்தினர்) அப்ரஹ்மமாக இருப்பினும் உபாஸித்தால் ப்ரஹ்மம்தானே பயன்

அளிக்கிறது. எனவே ப்ரதீகத்தில் (நாம முதலியவை) ப்ரஹ்ம த்ருஷ்டி செய்யவேண்டும்.

விஶிஷ்டாத்வைதத்தில் இந்த அதிகரணம் போனதில் சேர்ந்து கூறப்பட்டுவிட்டது.

## 4.1.4 D ब्रह्मदृष्टिरुत्कर्षात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- முன்கூறிய நாம ப்ரஹ்மத்ருஷ்டியைப் பண்ணுவது என்பதை ஊர்ஜிதம் பண்ண இந்த அதிகரணம். இதில் ப்ரக்ருதமான ப்ரஹ்மத்வம் எப்போதும் எல்லோரும் உபாஸிப்பது தேவையா இல்லையா? அவ்விதம் உபாஸிப்பதற்குக் காரணம் இருக்கிறதா? இல்லையா? என்று விசாரித்தால்- ப்ரஹ்மத்வ ஶப்தத்தினால் கூறப்பட்டதை எப்போதும் உபாஸிக்கத் தேவையில்லை.

ஸித்தாந்தம் :- ப்ரஹ்மத்வத்தினுள் ஸர்வகுணமும் அடங்கு-மாதலால் பகவதுத்க்ருஷ்டத்வமாக இருப்பதால் மற்ற குணங்களைவிட சிறந்ததாக உள்ளதால், இந்த குணத்தினால் உபாஸிப்பது பகவானுக்கு ப்ரீதி விஶேஷத்திற்குக் காரணமாதலால் ஆத்மத்வ-உபாஸ்தி போல் இந்த உபாஸ்தி இல்லாமல் மோக்ஷம் வராது என்பதால் எப்படியும், எப்போதும் ப்ரஹ்மத்வம் உபாஸ்யம்.

## 4.1.5 A आदित्यादिमतयश्चाङ्ग उपपत्ते: (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- "य एवासौ तपति तमुद्गीथमुपासीत" என்ற இடத்தில் ஸூர்ய தேவதையை ப்ரதீகமாக வைத்து அதில் கர்மாங்கமான உத்கீதம் என்று த்யானிக்கவேண்டும். அல்லது கர்மாங்கத்தில்

ஆதித்ய த்ருஷ்டி வைத்து உபாஸிக்கலாம். சென்ற அதிகரணத்தில் கூறிய யுக்தி இங்கு பொருந்தாது. ஏனெனில் இரண்டுமே (ஆதித்யன், உத்கீதம்) ப்ரஹ்மகார்யமானதால் உத்கர்ஷ-நிகர்ஷம் இல்லை.

ஸித்தாந்தம் :- கர்மாங்கமானது ஆதித்ய உபாஸனையால் (ஸூர்யனை நினைப்பதால்) ஸம்ஸ்கரிக்கப்படுகிறது. இதனால் இந்த கர்மாவின் பயனில் விஶேஷம் ஏற்படும். மாற்றி உபாஸித்தால் பயனில்லை. எனவே கர்மாங்கத்தில்தான் ஆதித்ய த்ருஷ்டி செய்யவேண்டும்.

## 4.1.4 V आदित्यादिमतयश्चाङ्ग उपपत्ते:

(1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- "य एवासौ तपति तमुद्गीथमुपासीत" என்று கூறிய உபாஸைனையில் ''य:'' என்று ஸூர்யனை முதலில் உத்தேசித்து உத்கீதத்ருஷ்டி விதிக்கப்படுவதாலும், தேவதோபாஸனமான கர்மாவானது ப்ரதானமானதாலும் ஆதித்யனிடத்தில் உத்கீத த்ருஷ்டி பண்ணவேண்டும்.

ஸித்தாந்தம்:- ஸாமமானது தேவதாராதனமாவதால் தேவதை-தான் ப்ரதானம். மேலும் ஆராதிததேவதா ப்ரஸாதம்தான் பயன் தருவது என்பதால், தேவதாதான் உத்க்ருஷ்டமானவர். உத்க்ருஷ்ட த்ருஷ்டிதான் நிக்ருஷ்டத்தில் பண்ணவேண்டும் என்று சென்ற அதிகரண ஸித்தாந்தப்படி உத்கீதத்தில் ஆதித்ய த்ருஷ்டி பண்ண வேண்டும். இவ்விதம் இந்த அதிகரணம் பூர்வபக்ஷ ஸித்தாந்தங்கள் ஒன்றானாலும் யுக்திகள் வேறானவை.

## 4.1.5 D आदित्यादिमतयश्चाङ्ग उपपत्तेः

(1 सूत्रम्)

ஸூர்யன்போன்ற தேவதைகள் ஈஶ்வரனின் கண்போன்ற அங்கத்திலிருந்து பிறந்ததால் அங்காஶ்ரிதர்களாக இருக்கி-றார்கள். அந்த தேவதைகள் அந்தந்த அங்காஶ்ரிதத்வேன எப்போதும் அவர்களால் உபாஸிக்கப்படவேண்டுமா? வேண்டாமா? அவ்வாறு செய்வதற்கு ஹேது உண்டா? இல்லையா? என்று விசாரவரிசை.

பூர்வபக்ஷம்:- பல குணங்கள் இருக்கும்போது ஸ்வஸ்வ-அங்காஶ்ரிதத்வேன உபாஸனை எப்போதும் செய்ய- வேண்டும் என்பதற்கு விஶேஷகாரணம் இல்லை. மேலும் ஸூர்யன் போன்றவர்கள் உலகப்ரகாஶத்திற்காக வெவ்வேறு இடங்களில் ஸஞ்சரிப்பதால் பகவதங்காஶ்ரிதத்வேன உபாஸனம் என்பது மித்யோபாஸனம் (தவறானது) என்பதால் விபரீதபயன் வரும்; அவ்வாறு உபாஸனம் கூடாது.

ஸித்தாந்தம் :- "स्वोत्पत्त्यङ्गं च देवानां विष्णोश्चिन्त्यं सदैव तु" (नारायणतन्त्रम्) (தேவர்கள் தாங்கள் உபாஸனை பண்ணும்போது தன்தன் உத்பத்தி காரணமான அங்கத்தை உபாஸித்தல் வேண்டும்) என்ற ஸ்ம்ருதியினால் தேவதைகளின் முக்தியில் பகவதங்க-ப்ரவேஶம் கட்டாயம் ஏற்படுவதால் இந்த நிலை அத்தகைய குண உபாஸனை இல்லையேல் வராது. எனவே "அங்காஶ்ரிதத்வேன" உபாஸனை பண்ணவேண்டும். ஸூர்யன் போன்ற தேவதைகள் வேறுவடிவத்தில் எப்போதும் பகவானின் உறுப்புகளில்தான் வஸிக்கின்றனர் என்பதால் இது தவறான உபாஸனம் ஆகாது. எனவே ஸூர்யன் உபாஸனை

பண்ணும்போது "தன் ஆஶ்ரயமான கண்ணை உடையவராக பகவானை" உபாஸனை பண்ணவேண்டும்.

## 4.1.6 A आसीन: सम्भवात् (4 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- உபாஸனை பண்ணுவதற்கு உட்கார்ந்துதான் பண்ணவேண்டும் என்று விதி இல்லாததால், மானஸமான வேலைக்கு உடலின் நிலைக்கு (position) ஸம்பந்தமில்லாததால் தன் விருப்பப்படி உடலை வைத்துக்கொண்டும் (any position) உபாஸிக்கலாம்.

ஸித்தாந்தம்:- படுத்துக்கொண்டு உபாஸனை செய்தால், தூக்கம் வந்து உபாஸனை கெடும். நின்றோ, நடந்து கொண்டோ உபாஸனை பண்ணினால் தேஹதாரணம், மார்க்க-நிச்சயம் போன்றவற்றில் மனம் சிதறும் என்பதால் உட்கார்ந்துதான் பண்ண வேண்டும்; அப்போதுதான் முடியும்.

## 4.1.5 V आसीन: सम्भवात् (5 सूत्राणि)

இவர்களுக்கு ஒரு ஸூத்ரமுள்ள அடுத்த அதிகரணமும் சேர்ந்தது. விஶிஷ்டாத்வைத மதத்தில் பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் ஸமமே.

## 4.1.6 D आसीन: सम्भवात् (5 सूत्राणि)

ஒரு ஸூத்ரம் கொண்ட அடுத்த அதிகரணமும் சேர்ந்தது.

பூர்வபக்ஷம் :- उपविश्यासने- ஆஸனத்தில் உட்கார்ந்து என்று கீதையில் கூறிய ஆஸனாதிகள் த்யானத்திற்கு அங்கமாக கட்டாயமா? வேண்டியதில்லையா? ஆஸனமில்லாமலேயே

ஹரியினிடத்தில் மனோநிவேசம் ஸரியா? தவறா? பகவானை தரிசிப்பதற்குக் காரணமான பகவானிடம் மனதை நிறுத்துவது என்கிற உபாஸனத்திற்கு ஆஸனம் எதற்குத் தேவை? ஆஸனமின்றி மனோநிவேசம் ஸரியில்லை என்பது தவறு, ப்ரத்யாஹாரத்தினால் (withdrawal) மனோநிவேசம் வரலாம். இல்லையேல் "ஸ்மர்தவ்ய: ஸததம் விஷ்ணு:" என்று கூறியது தவறாகிவிடும். யோகத்தில் ஆஸனம் கூறியிருப்பதனால் தேவை (அவைகளுக்கு வேறிடத்தில் பயனில்லாததால்) என்றால், ब्राह्मे मुहूर्ते उत्थाय என்றெல்லாம் கூறிய கால-தேஶ-நியமங்களும் தேவை ஆகிவிடும் என்பதால் உட்காருவது அவசியமில்லை.

ஸித்தாந்தம் :- மனம் அங்குமிங்கும் அலையாமல் ஹரியினிடம் நிலைப்பது ப்ரத்யாஹாரத்தினால் ஸம்பவித்தாலும் - अचलं चेत् शरीरं स्यात् मनसश्चाप्यचालनम् (ब्रह्माण्ड)- உடல் அசையாமல் இருந்தால் மனதும் அசையாமல் இருக்கும் - என்ற வசனத்தால் உடல் நிலையாயிருந்தால் மனநிறுத்தல் ஏற்படும் என்பதால் உட்காருதல் தேவை. समं काय शिरोग्रीवम्- தலை, கழுத்து, உடல் நேராகயிருத்தல் (straight) தேவை என்று கீதை கூறுகிறது. நியமங்கள் இருந்தால் ஸததம் ஸ்மரணம் பண்ணக்கூறும் வசனம் இடிக்குமே என்றால், உபாஸனம் இருவிதம் உள்ளது. ஸ்மரணம், த்யானம். ஸ்மரணத்தில் நியமம் கிடையாது, த்யானத்தில் நியமம் உண்டு. தேஶாதி நியமங்கள் த்யானத்திற்கு நேரடியாக தொடர்பற்றவை. எனவேதான் "यत्रैकाग्रता" என்பதாக மனம் எந்த இடத்தில் உட்கார்ந்தால் நிலைக்குமோ, அதுவே ஸ்தானம் என்று கூறப்பட்டுள்ளது.

## 4.1.7 A यत्रैकाग्रता तत्राविशेषात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- கர்மாக்களில் திக்கு, தேஶம், காலம் இவைகளின் நியமம் உள்ளதுபோல உபாஸனத்திற்கும் (த்யானத்திற்கும்) தேவை.

ஸித்தாந்தம்:- மன ஒருமைப்பாடுதான் த்யானத்திற்குத் தேவை. மன ஒருமைப்பாட்டிற்கு திக்கு போன்றவைகளின் தொடர்பு நேரடியாக கிடையாது. ஶாஸ்த்ரத்தினால் இடம் இதுதான் என்று நியமிக்கப்படவில்லை. மனதிற்கு இனிய இடம் தேவை. கற்கள், பொதிமணல் இல்லாத இடம் என்று கூறியுள்ளதின் தாத்பர்யம் இடையூறு, விழுதல் போன்றவற்றை தவிர்ப்பதற்காகத்தான். எனவே திக்குபோன்ற நியமம் இல்லை.

இந்த அதிகரணம் த்வைத-விஶிஷ்டாத்வைத மதங்களில் சென்ற அதிகரணத்துள் அடங்கியது.

## 4.1.8 A आ प्रायणात्तत्रापि हि दृष्टम् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- மற்ற நினைவுகள் குறுக்கிடாமல் தொடர்ந்து ஒரே நினைவு நிரந்தரமாக இருப்பது த்யானம். இது இத்தனை நேரம் பண்ணவேண்டும் என்பது வேண்டியதில்லை. குறுகிய-நீண்ட காலங்கள் எப்படியும் வரலாம்.

ஸித்தாந்தம் :- அடுத்த பிறவியின் காரணமான மரணக்ஷணத்தில் வரும் எண்ணமானது தொடர்ந்து வாழ்நாள் முழுவதும் த்யானம் தொடர்ந்தால்தான் முடியும். கீதையில் "सदा तद्भावभावित:" எப்போதும் அதே நினைவில் தோய்ந்து இரு - என்று கூறப்பட்டுள்ளது. கர்மாக்களில் என்றால், அபூர்வ விஶேஷத்தால் கடைசி நினைவு வரலாம். அதேபோல உபாஸனாபூர்வம் இருக்கலாம் என்றாலும் தொடர்ந்து உபாஸிப்பதைக் கைவிடக்-கூடாது. எனவே த்ருஷ்டாதிகமான உபாயத்தை விடல் ஆகாது.

# 4.1.6 V आ प्रायणात्तत्रापि हि दृष्टम् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம்:- ஸாக்ஷாத்காராவஸ்தையாக மாறிய தைலதாரா (तैलधारा)போல் தொடர்ந்து நினைப்பதன் வரிசையாகிற த்யானமானது எத்தனை நேரத்தில் கிட்டுமோ, அத்தனை நேரம் உபாஸனை போதும்.

ஸித்தாந்தம் :- स खल्वेवं वर्तयन् यावदायुषम् என்பதாக யாவஜ்ஜீவம் உபாஸனையை பண்ணுவது விதித்துள்ளது. இல்லையேல் ஶாஸ்த்ரத்தை மீறியதாகும்.

# 4.1.7 D आ प्रायणात्तत्रापि हि दृष्टम् (1 सूत्रम्)

"ध्यानाच्च" என்று கூறப்பட்ட த்யானம் ஞானம் வரும்வரை மட்டுமா? பிறகும் முக்திவரும்வரை அனுவர்த்திக்கவேண்டுமா? ஞானத்திற்காக விதிக்கப்பட்ட த்யானத்தை முக்திவரை அனுஷ்டிக்க காரணம் உண்டா? கிடையாதா? முக்தியில் ஆனந்தாதிஶயம் த்யானத்தைக் காட்டிலும் வேறொன்றினாலும் வருமா? த்யானத்தினால் மட்டும் வருமா?

பூர்வபக்ஷம் :- முக்தியில் ஆனந்தாதிஶயமானது த்யானத்தைத் தவிர வேறான ப்ரவணாதி ஸாதனங்களாலும் வரமுடியும் என்பதால், ஞானத்திற்காக விதிக்கப்பட்ட த்யானத்தை முக்திவரை செய்யக் காரணமில்லை.

ஸித்தாந்தம் :- योगारूढस्य तस्यैव शमः कारणमुच्यते- யோகாரூடரான அபரோக்ஷஞானிக்கும் ஶமம் என்கிற த்யானம் பரமஸுககாரணம் என்று கீதையில் கூறியுள்ளதால் ப்ரதானமாக த்யானத்திற்கு ஆனந்தபெருக்கிற்குக் காரணம் எனத் தெரிகிறது. प्रायणान्तमोङ्कारं अभिध्यायीत - மரணம் வரை ஓங்காரத்தை உபாஸிக்கவும் என்று ஶ்ருதி கூறுகிறது. மேலும் मुक्ता हयपि हयेनमुपासते என்பதால்

கைமுதிக ந்யாயப்படி எனவே முக்திவரை ஞானத்திற்கு பிறகும் த்யானம் பண்ணவேண்டும்.

## 4.1.9. A तदधिगम उत्तरपूर्वाघयो: अश्लेषविनाशौ तद्व्यपदेशात् - (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- ஞானிக்கும்கூட செய்யப்படும் பாபத்தின் பயன் கட்டாயம் வந்தே தீரும். பயனளிக்காமல் கர்மங்கள் அழியாது என்று கூறியுள்ளதல்லவா?

ஸித்தாந்தம்:- "நிர்குணப்ரஹ்மமே நான்" என்று ஸாக்ஷாத்கரித்தவனுக்கு பாபலேஶம் உண்டு என்ற ஸந்தேஹமே கிடையாது. "நான் முன்பும் செய்யவில்லை, இப்பவும் செய்யவில்லை, பின்னாலும் செய்யப்போவதில்லை" என்பதாக அகர்த்தாவான ப்ரஹ்ம-ஸ்வரூபமாகத் தன்னை நிச்சயித்துவிட்டானல்லவா? ஸகுணப்ரஹ்ம ஞானிக்குக்கூட பாபங்கள் அழிகின்றன ஒட்டுவது இல்லை என்று ஶ்ருதி உள்ளது - तद्यथा पुष्करपलाश आपो न श्लिष्यन्ते- தாமரை இலையில் தண்ணீர்போல் உபாஸகனிடம் பாபம் ஒட்டுவதில்லை. ஸாக்ஷாத்காரத்திற்கு முன்பு பண்ணிய பாபங்கள் அழிந்துவிடுவதாகக் கூறப்பட்டுள்ளது. तद्यथा इषीकातूलमग्नौ प्रोतम्... - நாணல் நுணியில் உள்ள பஞ்சுபோல் உபாஸகனுடைய பழைய பாபங்கள் எரிந்துவிடுகின்றன என்று ஶ்ருதி. பயன்தராமல் அழியாது என்பது ஸாதாரண ஜனங்களைப் பற்றியது. ஆகையால் ஞானிக்கு பாபஸம்பந்தம் கிடையாது.

## 4.1.7 V तदधिगम उत्तरपूर्वाघयो: अश्लेषविनाशौ तद्व्यपदेशात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் ஸித்தாந்தம் இரண்டும் அத்வைதத்திற்கு ஸமமே.

ஸாரம் :- பொதுவான வாக்யமாகிய नाभुक्तं क्षीयते कर्म என்பது ஞானி வ்யதிரிக்த விஷயம். மேலும் கர்மாக்கள் பயன்தருவது ஈஶ்வரப்ரஸாதம், அவரது ஸங்கல்பத்தால்தான் ஏற்படுவதால் ஞானியானவனுடைய பூர்வகர்மங்களுக்கு பகவத்ஸங்கல்ப விநாஶகத்வமும், உத்தரகர்மாக்களின் பலதான ஸங்கல்பத்தை உண்டாகாமலும் செய்யும் திறனும் பகவானின் ப்ரஸாத விஶேஷத்தால் ஏற்படுகிறது.

## 4.1.8 D तदधिगम उत्तरपूर्वाघयो: अश्लेषविनाशौ तद्व्यपदेशात् (7 सूत्राणि)

மத்வமதத்தின்படி இந்த அதிகரணத்தில் 7 ஸூத்ரங்கள். இத்துடன் இந்த பாதம் பூர்த்தியாகிறது. அத்வைதக் கணக்குப்படி 6 அதிகரணங்கள், விஶிஷ்டாத்வைதப்படி 5 அதிகரணங்களும் சேர்த்து இந்த அதிகரணம் ஒன்றாகவே கணக்கிடப்படுகிறது என்பது விஶேஷம்.

பூர்வபக்ஷம்:- ஞானத்தினால் முக்தி என்பது வரமுடியாது. முக்தியைத் தடுக்கக்கூடிய, ஞானம் வருவதற்கு முன்பு செய்த-பின்பு அனுஷ்டிக்கப்படும் கர்மங்களுக்கு ஞானத்தினால் நாசம் வருமா (பொருந்துமா?) பொருந்தாதா? ஞானத்தினால் நாசம் ஏற்படுகிறது என்று கொண்டால் அதற்கு बाधकम् (தடை அல்லது விரோதம்) இருக்கிறதா? இல்லையா? என்று விசார வரிசையில் - முன்பு एवं मुक्तिफलानियम: என்ற ஸூத்ரத்தில் ப்ரதிபந்தம் இல்லாமலிருந்தால் ஞானத்தினால் முக்தி கட்டாயம் ஏற்படும் என்று கூறியது தவறு. ஏனெனில் ஞானம் உண்டாவதற்கு முன்பும் பின்பும் செய்யப்பட்ட கர்மாக்களாகிற ப்ரதிபந்தம் போக முடியாதே! நிவ்ருத்தி என்பது 1) அனுபவித்து முடிப்பதாலா? 2) அல்லது முன் கர்மாக்களுக்கு அழிவு நெருப்பினால் பஞ்சுக்கு ஏற்படுவதுபோலா? 3) பின்னால் உண்டான கர்மங்களுக்கு

ஒட்டாத தன்மையா? 1) அனுபவித்து முடிப்பது நடக்காத கார்யம், கர்மாக்கள் அனந்தமாக உள்ளன. அவைகளுக்குப் பின் பற்பல துன்பங்கள் அனுபவிக்க நேரிட்டால், ரொம்பவும் பழமையான விதையிலிருந்து பயிர்வராததுபோல் மிகவும் பழையதாக ஆன ஞானத்திலிருந்து மோக்ஷமாகிற பயன்கிட்டாது. 2) பஞ்சுக்கு நெருப்பினால் அழிவு போல் ஞானத்தினால் கர்மதாஹம் வராது "பயன் தராமல் கர்மாக்கள் அழியாது = नाभुक्तं क्षीयते कर्म" என்று கூறியுள்ளதன்றோ! ஞானத்தினால் கர்மாக்கள் அழிந்தால் ஞானஸமகாலமே ஞானியின் உடல் உயிரற்றதாக ஆகி सद्यो मुक्ति = உடன் முக்தி ஏற்படவேண்டுமே! எனவே ஞானம் மோக்ஷஸாதனம் அல்ல.

ஸித்தாந்தம் :- ஞானமகிமையினால் ப்ராரப்த கர்மாவைத் தவிர மற்றவைதான் அழியும், ஒட்டாது என்று ஏற்றுகொள்வதால் ஞானிக்கு உடனே முக்தி என்று தோஷம் கிடையாது. பூர்வகர்மாக்களில் காம்ய கர்மாக்கள்தான் அழியும், நித்யகர்மா ஞானம் உண்டாக பயன்படும் என்பதால் புண்ணியங்களுக்கு ஞான உபயோகம் வருவது தவறில்லை. ஞானத்திற்கு பிறகு செய்யும் பாபங்கள் மட்டும் அஶுசித்வம் (अशुचित्वम्) ஒட்டாத தன்மை அடைகின்றன, பின்பு செய்யும் அகாம்ய புண்ணியங்கள் ஞானத்தினால் வரும் மோக்ஷத்தில் விஶேஷத்தைத் தரலாம் என்பதால் எந்த விதமான ஆக்ஷேபணையும் இல்லாமல் ஞானமானது கர்மாவை அழிக்கும் என்பதில் ஸந்தேஹம் இல்லை.

## 4.1.10 A इतरस्याप्येवमसंश्लेष: पाते तु (1 सूत्रम्)

பூர்வபக்ஷம்:- ஞானிக்கு பாபங்கள் ஒட்டவேண்டாம். புண்ணியங்கள் ஒட்டலாமே. ப்ரஹ்மஞானத்திற்கு புண்ணியத்துடன் விரோதம் இல்லையே!

ஸித்தாந்தம்:- ப்ரஹ்மஞானிக்குத் "தான் அகர்த்தாவான ப்ரஹ்மமே" என்று உணர்வு ஏற்பட்டுவிட்டதால் பாபம்போல் புண்ணியத்திலும் கர்த்ருத்வம் அற்றுவிட்டது. எனவே ஒட்டாது. ஸகுண ஞானிக்கு உபாஸனைதவிர மற்ற காம்ய புண்ணியங்கள் (அதம अधम ஜன்மாவைத்தருமானதால்) ஒட்டாது. மேலும் ஞானிக்கு "उभे उ हैवैष एते तरति" என்பதாக ஸ்பஷ்டமாக புண்ணிய-பாபங்கள் கிடையாது என்று கூறுகிறது. ஆகவே புண்ணியமும் ஒட்டாது.

## 4.1.8 V इतरस्याप्येवमसंश्लेषः पाते तु (1 सूत्रम्)

பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் இரண்டும் அத்வைதத்திற்கு பூர்ணமாக ஸமமே.

மத்வமதத்தில் இந்த அதிகரணம் போனதில் சேர்ந்துவிட்டது.

## 4.1.11 A अनारब्धकार्ये एव तु पूर्वे तदवधेः (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- ஞானத்திற்கு முன்பு செய்யப்பட்ட கர்மாக்கள் இருவிதமானவை - 1) प्रारब्ध = பயன் தருவதற்கு ஆரம்பிக்கப்-பட்டவை 2) सञ्चित = பயன்தர ஆரம்பிக்கப்படாதவை. இந்த இரண்டுவிதமான கர்மாக்களிலும் ஞானிக்கு அகர்த்ருத்வம் ஸமமானதால் எவ்வாறு பயன்தர ஆரம்பிக்காத सञ्चित கர்மாக்கள் அழிகின்றனவோ அவ்வாறே பயன்தர ஆரம்பித்த प्रारब्ध கர்மாக்களும் ஞானோதயத்தால் அழியவேண்டும்.

ஸித்தாந்தம் :- ஶ்ருதி , அனுபவம், யுக்தி - மூன்றினாலும் प्रारब्ध கர்மாக்கள் ஞானிக்கும் அழிவதில்லை என்று அறியவேண்டும். ஏனெனில் "तस्य तावदेव चिरं" என்ற ஶ்ருதியில் ஞானிக்கும்

உடலைவிட்டு உயிர் அடங்கும்வரை முக்திக்குத் தாமதம், மரித்த உடன் மோக்ஷம் என்று தெளிவாகக் கூறியுள்ளது. மேலும் ஶ்ருதி கூறியது போலவே வித்வான்களான ஞானிகளின் அனுபவமும் அப்படியே உள்ளது. எனவேதான் கீதையில் ஸ்தித ப்ரக்ஞ லக்ஷணம் ஞானிக்கு பொருந்துகிறது. மேலும் யுக்தியும் உள்ளது. பாணமானது விடப்படாமல் வில்லில் தொடுக்கும் தருணத்தில் தடுக்கப்படமுடியும். ஆனால் தொடுத்து விடப்பட்டபின் அதைத் தடுக்கமுடியாமல் (லக்ஷ்யத்தை அடைந்த பின்னால்கூட) வேகம் உள்ளவரை (velocity) போய்தான் விழும் என்பதுபோல் இங்கும் सञ्चित = பயன்தருவதற்கு ஆரம்பிக்காத கர்மாக்கள் ஞானத்தினால் அழியமுடியுமே தவிர, தொடுக்கப்பட்ட பாணம் போன்ற ப்ராரப்த கர்மாக்கள் அழிய வழிகிடையாது. மேலும் இவ்வாறு ஏற்காவிட்டால் உபதேஶம் செய்யக்கூடிய ஞானியே (ஞான ஸமகாலம் மரித்து விட்டால்) இல்லாமல் ஆகிவிடும் என்பதால் ஞானோபதேஶமே அற்றுவிடும். ஞான பரம்பரை இல்லாமல் ஆகிவிடும். ஆகவே ப்ராரப்தம் தவிர மற்றவை மட்டுமே அழியும்.

## 4.1.9 V अनारब्धकार्ये एव तु पूर्वे तदवधेः

(1 सूत्रम्)

பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் யாவும் அத்வைதத்திற்கு ஸமமே. இந்த அதிகரணம் முன்பே மத்வ மதத்தில் முடிந்துவிட்டது.

## 4.1.12 A अग्निहोत्रादि तु तत्कार्यायैव तद्दर्शनात्

(2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- இந்த ஜன்மாவில் ஞானத்திற்குமுன் செய்த அக்னிஹோத்ரம் போன்ற நித்ய, நிஷ்காம கர்மங்கள்,

பூர்வஜன்மங்களில் செய்தவைகள் யாவும் காம்ய கர்மம் போல் அழியும்.

ஸித்தாந்தம் :- நித்ய கர்மங்களுக்கு இரண்டுவிதமான பலன்கள் உண்டு. 1) மனதின் ஶுத்தி 2) ஸ்வர்காதி உண்டுபண்ணுதல். இவைகளில் ஸ்வர்காதி பயனைத்தரும் பகுதி அழியுமே தவிர மனதின் ஶுத்தி தரும் பகுதி மனஶுத்தி வழியே ஞானம், மோக்ஷம்வரை பரம்பரா காரணமாகிறபடியால் எப்படி அழிய முடியும்? பயன்பட்டு விட்டதை அழிந்ததாகக் கூறமுடியுமா? ஞானத்திற்குப் பிறகு ஒருவேளை அக்னிஹோத்ரம் பண்ணினால் அது ஒட்டாது, காம்யம் போலவே.

## 4.1.10 V अग्निहोत्रादि तु तत्कार्यायैव तद्दर्शनात्

## (3 सूत्राणि)

விஶிஷ்டாத்வைத மதத்தில் இந்த அதிகரணம் மூன்று ஸூத்ரங்கள் கொண்டது, அத்வைத மதப்படி அடுத்த அதிகரணம் ஆனதும் இத்துடன் சேர்த்தே கணக்கிடப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- ஞானத்திற்குப்பின் கர்மாக்கள் ஒட்டாதானால் அவைகளைச் செய்வது வீண் என்றதாகும் என்பதால் ஞானத்திற்கு பிறகு பண்ணவேண்டாம்.

ஸித்தாந்தம்:- ஞானத்தை தினஸரி ஆவ்ருத்தி பண்ணாமல் ஸித்திக்காது; ஆவ்ருத்தியும் ப்ரதிபந்தகம் போகாமல் கிடைக்காது. ப்ரதிபந்தகங்கள் நித்யநைமித்திககர்மங்களால்தான் போகும் என்பதால், நித்ய நைமித்திக கர்மங்கள் ஞானத்திற்கு பிறகும் செய்யாவிட்டால் ப்ரதிபந்தகம் விலகாது என்பதால் தினஸரி நித்ய நைமித்திகம் பண்ணவேண்டும்.

மத்வ மதப்படி இந்த அதிகரணம் தனியல்ல.

## 4.1.13 A यदेव विद्ययेति हि (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- வித்யைக்கு ஸாதனமான நித்யகர்மங்கள் உபாஸனையுடன் கூடியவை, தனியானவை என்று இரண்டு விதமானவை. இவைகளில் உபாஸனையுடன் கூடிய நித்யகர்மா மட்டுமே ஞானஸாதனமாகும்.

ஸித்தாந்தம் :- இது தவறு. உபாஸனையுடன் கூடியிருந்தால் விஶேஷபயன் என்பதாக वीर्यवत्तरम् கூறியுள்ளபடியால் உபாஸனையில்லாத வெறும் கர்மாவும் ஞான ஸாதனமாவதில் தோஷமில்லை. எனவே இரண்டுமே தாரதம்யமான முறையில் வித்யாஸாதனம் ஆகின்றன.

இந்த அதிகரணம் விஶிஷ்டாத்வைதத்தில் போனதுடன் சேர்ந்து விட்டது. மத்வ மதத்திலும் முன்பே சேர்ந்துவிட்டது.

## 4.1.14 A भोगेनत्वितरे क्षपयित्वा संपद्यते (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- ஆதிகாரிக புருஷர்கள் (आधिकारिका:) அல்லது ஈஶனால், விஶேஷமாக நியமிக்கப்பட்ட புருஷர்கள், இவர்களுக்கு ஞானிகளான பிறகும் விஶேஷ ப்ராரப்தத்தினால் மோக்ஷம் கிடையாது. மறுபிறவிகளில் வித்யை மறைந்துபோய்விடுமாதலால் (लुप्ता भवति) மறுபிறவிகளில் செய்யும் கர்மங்களால் தொடர்ந்து பிறவி தொடர் வரும் என்பதால் மோக்ஷம் எப்படி கிட்டும்?

ஸித்தாந்தம்:- ப்ராரப்த கர்மாக்கள் ஸுகதுக்கங்களை மட்டுமே தருபவை. ஞானத்தை அழிக்க ஶக்தியற்றவை. எனவே உண்டானதான ஞானம் குறைவோ, அழிவோ ஏற்படாமல், மங்காமல் ப்ரகாஶிக்கும். ப்ராரப்தம் பூர்த்தியானதும் உடனடியாக முக்தி ஏற்படுவது நிச்சயம்.

## 4.1.11 V भोगेनत्वितरे क्षपयित्वा संपद्यते

(1 सूत्रम्)

விஶிஷ்டாத்வைதத்தில் பூர்வபக்ஷம் ஸித்தாந்தம் பூர்ணமாக அத்வைதத்திற்கு ஸமமே.

த்வைத மதத்தில் இந்த அதிகரணம் முன்பே கூறப்பட்டுவிட்டது.



## இரண்டாம் பாதம்

## 4.2.1 A वाङ्मनसि दर्शनात् शब्दाच्च (2 सूत्रे).

பூர்வபக்ஷம் :- மனிதர்களின் உயிர்பிரிதல் (செல்லுதல்) பற்றி சாந்தோக்யத்தில் கூறப்படுகிறது - "अस्य सोम्य पुरुषस्य प्रयतोवाङ्मनसि संपद्यते मनः प्राणे प्राणः तेजसि तेजः परस्यां देवतायाम्" - "இறக்கும் மனிதனுக்கு வாக்கு மனதிலும், மனம் ப்ராணனிலும், ப்ராணன் தேஜஸ்ஸிலும் ஒடுங்குகிறது. தேஜஸ் பரமாத்மாவில் ஒடுங்குகிறது" என்று கூறப்பட்டுள்ளது. இந்த ஒடுக்கம் அல்லது லயம் ஸ்வரூபத்திற்கா? அல்லது அதன் செயலுக்கா? என்றால், செயல் என்ற வார்த்தை இல்லாததால் ஸ்வரூபலயம்தான்.

ஸித்தாந்தம்:- வாக்குபோன்றவற்றிற்கு மனம்போன்றது உபாதான காரணமல்லாததால் ஸ்வரூபலயம் வரமுடியாது என்பதால், செயல்(வ்ருத்தி)மட்டும் லயிக்கிறது. நெருப்புத் தனலை நீரில் போட்டால் சூடு, ப்ரகாஶம் போன்ற செயல் ஒடுங்குவதாக ஏற்படுகிறது. எனவே ஶ்ருதியில் வாக்கு, மனம் போன்ற வார்த்தைகளுக்கு, அதன் வ்ருத்தி என்று பொருள். வ்ருத்திகள் லயிக்கின்றன.

## 4.2.1 V वाङ्मनसि दर्शनात् शब्दाच्च (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- வாக்கு முதலியவைகள் மனம் போன்றவற்றில் லயிப்பது என்பது பொருந்தாது, ஏனெனில் மனம் வாக்கிற்குக் காரணமல்ல. எனவே வ்ருத்தி லயம்தான் என்று கொள்ள வேண்டும்.

ஸித்தாந்தம் :- வ்ருத்திகளுக்கு மனம் காரணமாகாததால், வ்ருத்தி லயமும் பொருந்தாது. ஆகையால் "வாக்" பதத்திற்கு "வ்ருத்தி" என்று லக்ஷணை கூறியும் பயனில்லை. सम्पद्यते என்பதற்கு மட்டும் சேருகிறது என்று பொருள்கொண்டு வாக்கு எனும் இந்த இந்திரியம் மனதோடு சேருகிறது, மனம் ப்ராணனோடு சேருகிறது என்றவாறு பொருள் கூறுவதுதான் ஸரி. இல்லையேல், இரண்டு வார்த்தைகளுக்கும் (வாக்கு, ஸம்பத்யதே = வ்ருத்தி, சேருதல் என்று) லக்ஷணை கூற நேரிடும்.

## 4.2.1 D वाङ्मनसि दर्शनात् शब्दाच्च (2 सूत्रे)

ஞானிகளின் தேஹக்ஷயம் இரண்டுவிதம் - தேவர்களுக்கு தன்னைக்காட்டிலும் மேலானவர்களிடமும், மற்றவர்களுக்கு ப்ரஹ்மநாடியின் வழியாகக் கிளம்பி மேலே போவது என்பதுமாகும். அவைகளுள் தேவர்களின் தேஹமோக்ஷத்தைப் பற்றி ஏழு அதிகரணங்களில் (ஸூ- "अविभागो".. ஸூ 4.2.15) கூறப்படுகிறது. வாக்தேவதை பகவத்ப்ராப்தியாகிய மோக்ஷத்தை அடைவதற்காக மனோதேவதையில் லயிப்பது நிர்ணயிக்க முடியுமா? முடியாதா? மனோ தேவதையானவன் சிறந்தவன் என்பது தீர்மானிக்க முடியுமா? முடியாதா? वाक्पूर्वरूपं मन उत्तर रूपं, मनः पूर्व रूपं वागुत्तररूपम् என்று பரஸ்பரம் இவைகளை ஸம்ப்ரதானமாகக் கூறுவது ஸரியா? தவறா?

பூர்வபக்ஷம் :- ஶ்ருதியில் பரஸ்பரம் மாற்றித் தன்மை கூறப்பட்டுள்ளதால் மனோதேவதைக்கு உத்தமத்வ நிர்ணயம் பண்ணமுடியாது.

ஸித்தாந்தம்:- வாக்கானது மனதிற்கு வஶமானது என்பது கண்கூடாக உள்ளது. மேலும் "मनसा वाग्रे संकल्पयति सा वाग्वदति" என்று, மனதினால் நினைத்ததை மட்டுமே வாக்கு கூறமுடியும் என்பதாக கூறியுள்ளது. ஆகையால் மனதிற்கு உத்தமத்வம் நிர்ணயிக்க முடியும். அந்த ஶ்ருதியானது மனதும் வாக்கும் ஸம்ஹிதையில் (சேர்த்து கூறும் வாக்யம்) முன்பின் எழுத்துக்களில் த்யானம்பண்ணும் பொருட்டு, மாண்டூகேயரும் அவரது மூத்தமகனும் வாதம்செய்யும் ஸமயம் கூறப்பட்டுள்ளதால் - ஸமத்வத்தைக் கூறவரவில்லை. எனவே வாக்தேவி மனோதேவதையில் லயிக்கிறாள்.

## 4.2.2 A तन्मनः प्राण उत्तरात् (1 सूत्रम)

பூர்வபக்ஷம் :- மனமானது அன்னமயம் என்று கூறப்பட்டுள்ளது; ப்ராணன் ஆபோமயன் என்றும் கூறியுள்ளதால், மனம் என்பதால் அன்னத்தையும் (பூமியையும்) ப்ராணன் என்பதால் ஜலத்தையும் எடுத்துக்கொண்டால் பூமிக்கு (ப்ருதிவிக்கு) ஜலத்தில் லயம் நேரிடையாகவே வரும் ஆனபடியால், मनः प्राणे என்றால் पृथिवी अप्सु என்று கொண்டு மனதிற்கு ப்ராணனில் ஸ்வரூபலயம் வரட்டும்.

ஸித்தாந்தம்:- உபாதான காரணம் நேரிடையானது, பரம்பரையாக வருவது, (மற்றவர் வழியாக) என்று இரண்டு விதம் உள்ளது. அதில் நேரிடையான உபாதான காரணத்தில்தான் ஸ்வரூபலயம் வரமுடியும். ஆகவே மனமும் ப்ராணனில் வ்ருத்திலயம்தான் அடைகிறது (ப்ராணன் சுற்றிவளைத்து (பரம்பரை வழி) காரணமன்றோ!)

## 4.2.2 V तन्मन: प्राण उत्तरात् (1 सूत्रम्)

பெரும்பாலும் பூர்வபக்ஷமும் ஸித்தாந்தமும் அத்வைதத்திற்கு ஸமமே. ஸமாதானத்தில் விஶேஷம் - अन्नमयं हि सोम्य मन: आपोमय: प्राण: என்ற வாக்யங்களில் மன-அன்னங்களுக்கும், ப்ராண - ஜலங்களுக்கும் கார்யகாரணத்தன்மை கூறப்பட-வில்லை. அன்னம் மனதின் தெம்புக்குக் காரணம், ஜலம் ப்ராணனின் தெம்புக்கு ஹேது என்று மட்டுமே பொருள். எனவே மனமானது ப்ராணனோடு சேருகிறது என்றே பொருள்.

## 4.2.2 D तन्मन: प्राण उत्तरात् (1 सूत्रम्)

மனோதேவனுக்கு ப்ராணதேவனிடமிருந்து உத்பத்தி உண்டா இல்லையா என்று விசாரித்தால் -

பூர்வபக்ஷம் :- ப்ராணதேவனானவன் சதுர்முகனே. மனோதேவன் ஶேஷனே என்பதால் இருவருக்கும் ப்ரவ்ருத்தி காரணத்வம் ஸமமானதால் (ஸமபலமுள்ளதால்) மனோதேவன் ப்ராண-தேவனிடத்தில் லயிப்பது இல்லை. அதிகமான பலமுடையதில்-தான் ந்யூனபலம் உடையது லயிக்க முடியுமன்றோ! எனவே மனதிற்கு மோக்ஷம் கிடையாது.

ஸித்தாந்தம்:- वाङ्मनसि सम्पद्यते मन: प्राणे என்று வாக்கிற்கு மனதிலும், மனதிற்கு ப்ராணனிலும் லயம் கூறப்பட்டுள்ளது. மனோதேவன் ப்ராணதேவனில், அல்லது வாணீத்வாரா சதுர்முகனிலோ மோக்ஷம் உண்டு (லயம் உண்டு). மேலும் மனோதேவனைக் காட்டிலும் ப்ராணதேவனுக்கு ப்ராபல்யம் உண்டு. எனவே மனதிற்கு மோக்ஷம் உண்டு.

  

## 4.2.3 A सोऽध्यक्षे तदुपगमादिभ्यः (3 सूत्राणि)

பூர்வபக்ஷம்:- தனக்குள் அடங்கிய பதினோரு இந்திரியங்களுடன் கூட அக்னி, ஜலம், ப்ருதிவீ ஆகிய பூதங்களின் வ்ருத்திலயம், ஜீவனிடத்தில் அல்ல. ஏனெனில் "प्राणस्तेजसि" என்று கூறப்பட்டுள்ளது.

ஸித்தாந்தம் :- "एवमेवेममात्मानमन्तकाले सर्वे प्राणा अभिसमायन्ति" - இந்த ஆத்மாவில் மரணத்தின்போது எல்லா இந்திரியங்களும் ப்ராணனும் ஒடுங்குகிறது - என்பதாக ஶ்ருதி கூறுகிறது. அரசனை ஒட்டி மற்ற கர்மசரர்கள் பின்தொடர்வதுபோல் ஜீவனைப்ராணன்கள் பின்தொடர்கின்றன. प्राणस्तेजसि என்ற ஶ்ருதியானது ப்ராணன்களுக்கு ஆத்மாவில் லயத்திற்குப் பிறகு தேஜஸ்ஸில் ஒடுக்கம் என்று பொருள் கொண்டது. எனவே ப்ராணன் தேஜஸ்ஸில் லயிக்கிறது.

## 4.2.3 V सोऽध्यक्षे तदुपगमादिभ्यः (1 सूत्रम्)

விஶிஷ்டாத்வைதப்படி இந்த அதிகரணத்தில் ஒரு ஸூத்ரம்தான். மற்ற இரண்டு ஸூத்ரங்கள் அடுத்த தனியான அதிகரணமாக கொள்ளப்பட்டுள்ளது.

பூர்வபக்ஷம் :- வாக்கு, மனம் இரண்டும் ப்ராணனில் ஸம்பந்தப்பட்டு அந்த ப்ராணன் தேஜஸ்ஸுடன் சேருகிறது.

ஸித்தாந்தம் :- அப்படி அல்ல. வேறு ஶ்ருதியில் तमुत्क्रामन्तं प्राणो अनुत्क्रामन्ति என்று ஜீவனுடன் சேர்ந்து ப்ராணனுக்குக் கிளம்புதல் கூறப்படுவதால், ப்ராணன் ஆத்மாவுடன்தான் சேர்ந்துபோகிறது. யமுனையானது கங்கையில் சேர்ந்து கடலுக்குள் சேர்ந்தாலும்- கூட யமுனை ஸமுத்ரத்தில் சேருகிறது என்று கூறுவதுபோல்

ப்ராணன் ஆத்மாவுடன் சேர்ந்த பிறகு தேஜஸ்ஸில் சேருவதால் प्राणस्तेजसि என்று கூறுவதில் தவறில்லை.

## 4.2.4 V भूतेषु तच्छ्रुतेः (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- ஜீவனுடன் சேர்ந்த மனமானது ப்ராணனுடன் தேஜஸ்ஸில் மட்டுமே சேரும் பஞ்சபூத ஸூக்ஷ்மங்களில் சேர்க்கை கிடையாது.

ஸித்தாந்தம்:- ப்ருஹதாரண்யகத்தில் पृथिवीमय आपोमयः என்று, பரலோகம் போகும் ஜீவனுக்கு ஒரேடியாக ஸர்வபூதஸம்ஸர்கம் கூறப்படுகிறது. மேலும் சரீராந்தரம் உண்டாக பஞ்சபூத-ஸூக்ஷ்மங்களும் தேவை. எனவே தேஜஸ் என்பதற்கு பஞ்சீக்ருதமான தேஜஸ் என்று பொருள்கொண்டு பூத- ஸூக்ஷ்மங்களில் ப்ராணன் சேருகிறான்.

## 4.2.3 D सोऽध्यक्षे तदुपगमादिभ्यः (1 सूत्रम्)

(மத்வமதத்தில் இந்த அதிகரணத்தில் ஒரு ஸூத்ரம்தான். அடுத்த 2 ஸூத்ரங்களும் கூட தனித்தனியான இரண்டு அதிகரணங்கள் ஆகின்றன. அத்வைதப்படி ஒரு அதிகரணம் மூன்றாகக் கொள்ளப்படுகிறது.)

"ப்ராணன் என்று கூறப்பட்ட ப்ரஹ்மா விஷ்ணுவிடம் லயிக்கிறாரா இல்லையா? ப்ரஹ்மாவிற்கு ஈஶாதீனத்வம் உண்டா? இல்லையா? ப்ராணனை ஸ்வதந்த்ரமாகக் கூறும் ஶ்ருதிவாக்யங்கள் நிரவகாஶமா? ஸாவகாஶமா?" என்று விசார வரிசையில்,

பூர்வபக்ஷம்:- न प्राणः किञ्चिदाश्रितः போன்றதான ஶ்ருதிகளில் ப்ராணன் யாரையும் ஆஶ்ரயித்ததல்ல, ஸ்வதந்த்ரமானது என்று

தெரிகிறது. ஈஶாதீனத்வம் ப்ராணனுக்கு நிச்சயமாகவில்லை என்பதால், ஈஶனில் ப்ராணலயம் (ப்ரஹ்மாவின் லயம்) கிடையாது. மேலும், "अनघमानः என்று ப்ராணனுக்கு லயம் இல்லை" என்றும் கூறப்படுகிறது.

ஸித்தாந்தம்:- ப்ராணன் எனப்படும் ப்ரஹ்மாவிற்கு (விரிஞ்சனுக்கு) விஷ்ணுவில் லயம் உண்டு. ப்ராணனுக்கு ஸ்வாதந்த்ர்யம் பல ஶ்ருதிகள் கூறுவதுபோல "प्राणः परस्यां देवतायाम्" ப்ராணன் பரதேவதையில் லயிக்கிறது - போன்ற பல ஶ்ருதிகள் ஈஶாதீனத்வம் கூறுகின்றன. அப்படியானால் பரஸ்பர விரோதமென்று எண்ணவேண்டாம். ருத்ரன் போன்ற மற்ற தேவர்களுக்கு வஶமாக ப்ராணன் ஆகமாட்டான் என்று அவைகளுக்குக் கருத்து. प्राणस्तेजसि என்று ப்ராணனுக்கு தேஜஸாகிற ஶரீதத்வத்தில் லயம் கூறியது, ஸ்வரூபலயமல்ல, ஸம்ஸர்கம் மட்டுமே. எனவே ப்ராணன் = விரிஞ்சன் விஷ்ணுவில் லயமாகிறது.

## 4.2.4 D भूतेषु तच्छ्रुतेः (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- "वाङ्मनसि என்று கூறப்பட்டவர்களைத் தவிர மற்ற தேவர்கள் பகவானை அடைய (மோக்ஷம் பெற) ஒரு பூதாபிமானியில் லயிக்கின்றரா? மற்ற பூதாபிமானியில் லயிக்கின்றனரா? अग्नौ सर्वे देवालीयन्ते என்ற ஶ்ருதி இந்த ஸந்தேஹத்தை விலக்குவதாக அமைந்ததா? இல்லையா? பூதாந்தரங்களில் லயிப்பது" என்ற விஷயத்தில், "ப்ரமாணம் உண்டா? இல்லையா?" என்ற விசார வரிசையில் - வேறு பூதாபிமானிகளில் லயிப்பதற்கான ப்ரமாணம் இல்லை. எனவே தன்தன் நியாமகனிடத்தில்தான் லயம் என்பது தவறு.

ஸித்தாந்தம் :- भूतेषु देवा लीयन्ते என்ற பாஷ்யத்தில் கூறிய ஶ்ருதி பலத்தால் ஐந்து பூதமானிகளிலும் எவ்வாறு தன்தன் நியாமகனிடத்தில் தேவர்கள் லயிக்கின்றார்களோ, அதேபோல் தேவர்களும் अग्निरिन्द्रे, इन्द्र उमायां, उमारुद्रे என்று கூறியபடி லயிக்கின்றனர்.

## 4.2.5 D नैकस्मिन् दर्शयतो हि (1 सूत्रम्).

பூர்வபக்ஷம் :- "முன்கூறிய தேவர்கள் பகவத் ப்ராப்தியாகிற மோக்ஷத்தை அடைய அக்னியில்தான் லயிக்கிறார்களா? ஐம்பூதங்களிலுமா? भूतेषु देवा लीयन्ते பூதங்களில் தேவர்கள் லயிக்கிறார்கள் என்று கூறும் ஶ்ருதி ஸாவகாஶமா? நிரவகாஶமா? अग्नौ सर्वे देवा: என்று கூறும் விஷயம் வேறுவிதமாக பொருந்துமா? பொருந்தாதா? ஐம்பூதங்களில் லயிப்பதாகக் கூறும் விஷயத்தில் விஶேஷ ப்ரமாணம் உண்டா? இல்லையா?" என்று விசாரவரிசை.

ஐம்பூதங்களில் லயம் என்பதற்கு ப்ரமாணம் இல்லாததால், अग्नौ= அக்னியில் லயிப்பதாக கூறும் ஶ்ருதியின் பொருள் வேறுவிதமாக பொருந்தாது என்பதால் भूतेषु= ஐம்பூதங்களில் என்ற பன்மையானது அக்னியின் வாயிலாக வாயு, ஆகாஶம் இவைகளிலும் பரம்பரையாய் லயிப்பதால் பொருந்தும். எனவே அக்னியில்தான் லயம்.

## 4.2.4 A समाना चासृत्युपक्रमादमृतत्वं चानुपोष्य (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- நிர்குணப்ரஹ்மஞானிக்கு ப்ராணன் வெளிக்கிளம்புவதே கிடையாது, இங்கேயே ஒடுங்குகிறது -

என்று கூறப்படப்போகிறது. "ஸகுணப்ரஹ்ம உபாஸகனுக்கும் ஸாதாரண அக்ஞானிக்கும் கிளம்பும் முறையில் வித்தியாஸம் இருக்கிறதா? இல்லையா?" என்று ஆராய்ந்தால் வித்தியாஸம் இருக்கத்தான்வேண்டும், ஏனெனில் ப்ரஹ்மலோகம் போகின்ற ஸகுணஉபாஸகனுடன் ஸம்ஸாரத்தில் உழலப்போகும் அஞ்ஞானிக்குக் கிளம்புதல் ஒன்றாக எப்படி இருக்க முடியும்?

ஸித்தாந்தம் :- ஸகுண உபாஸகனுக்கு உச்சித்தலையில் உள்ள ஒட்டையைமுட்டும் நாடியான ஸுஷும்னாவில் நுழைவதுதான் உத்தரமார்கத்தின் ஆரம்பம். ஸாதாரண அஞ்ஞானிகளுக்கு வேறு நாடிகளில் நுழைவது வேறுமார்கத்தின் ஆரம்பம், எனவே நுழைவிற்கு முன்பு ப்ராணன் கிளம்புதல் என்பது யாவருக்கும் ஒன்றேதான். பிறகு உபாஸகர், ஸாதாரண மனிதர்களுக்கு வழி வேறு, மார்காரம்பம்வரை ஒன்றேதான்.

## 4.2.5 V समाना चासृत्युपक्रमादमृतत्वं चानुपोष्य (7 सूत्राणि)

அத்வைதப்படி மூன்று அதிகரணங்களாக கொண்டுள்ள (1+4+3) ஸூத்ரங்களை ஏழு ஸூத்ரங்களாகக் கொண்டு ஒரே அதிகரண-மாக விஶிஷ்டாத்வைதத்தில் விளக்கம் கூறப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- यदा सर्वे प्रमुच्यन्ते कामा येऽस्य हृदि श्रिता: अथ मर्त्योमृतो भवत्यत्र ब्रह्म समश्नुते - என்று ப்ரஹ்மஞானிக்கு இங்கேயே அம்ருதத்வம் என்ற ப்ரஹ்மப்ராப்தி கூறியிருப்பதால் ப்ரஹ்மவித்திற்கு ப்ராணன் கிளம்புவது கிடையாது.

ஸித்தாந்தம் :- அதே கடோபநிஷத்தில் ப்ரஹ்மவித்திற்கு शतं चैका च என்ற மந்த்ரத்தில் மூர்த்தன்யநாடி வழியாகப்போய் அம்ருத-த்வம் கூறப்படுவதால் ஞானிக்கு ப்ராணன் கிளம்பி உத்தர

மார்கத்தில் போகிறான் என்பது உண்டு. இங்கேயே ப்ரஹ்ம-ப்ராப்தி அம்ருதத்வம் என்ற ஶ்ருதிக்கு பூர்வோத்தர கர்மாக்களின் அழிவும் ஒட்டாமையும் ஏற்படுகிறது என்று பொருள் கொள்ள-வேண்டும். न तस्य प्राणा उत्क्रामन्ति- அவனுக்கு ப்ராணன்கள் கிளம்புவதில்லை என்ற வாக்யத்திற்கு உடலிலிருந்து கிளம்புவ-தில்லை என்று பொருள் இல்லை. ஆனால் அவனது (ஞானியின்) ப்ராணன் ஆத்மாவிலிருந்து பிரிந்து கிளம்புவது இல்லை என்று பொருள் ஏற்கவேண்டும். ஏனெனில் ப்ரஹ்மவித்திற்கு உத்தரமார்கம் கூறப்பட்டுள்ளதே! எனவே ஞானிக்கு ப்ரஹ்மலோகம் போய்தான் முக்தி ஏற்படுகிறது என்பதால் ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் உயிர் கிளம்புவது ஸமமே.

## 4.2.6 D समाना चासृत्युपक्रमादमृतत्वं चानुपोष्य (8 सूत्राणि)

விஶிஷ்டாத்வைதம் போலவே, அத்வைதப்படி மூன்று அதிகரணங்களாக கணக்கிடப்பட்டவைகளை (1+4+3) - ஒரே அதிகரணமாக ஏற்றுள்ளது த்வைதமதம்.

பூர்வபக்ஷம்:- எல்லாம் விஷ்ணுவிற்கு அதீனம் என்ற யுக்தி, "तेजः परस्यां देवतायाम्" என்ற ஶ்ருதி இரண்டினாலும் தேஜஸ் என்கிற லக்ஷ்மித்வம் விஷ்ணுவிடம் லயிக்குமா? லயிக்காதா? என்ற ஸந்தேஹத்தில் - ப்ராணனைக்காட்டிலும் சிறந்ததாக அறியப்-பட்ட சித் ப்ரக்ருதியானது பகவானிடத்தில் லயிக்கிறதா? இல்லையா? முன் கூறிய யுக்தி ஶ்ருதி இரண்டும் நிரவகாஶமா? ஸாவகாஶமா? कामादीतरत्र (3.3.40) என்ற ஸூத்ரத்தில் கூறப்பட்ட அஸம்ஸாரித்வம் ப்ரக்ருதிக்கு (லக்ஷ்மிக்கு) தகுமா? தகாதா?

ப்ரக்ருதிக்கு முக்தத்வம் ஸ்வாபாவிகமா? புதிதாக உண்டாவதா? என்று விசாரவரிசையில்-

பூர்வபக்ஷம் :- எல்லாம் பகவத் அதீனம் என்ற யுக்தி, तेज: परस्यां देवतायाम् என்ற ஶ்ருதி இரண்டினாலும் சித்ப்ரக்ருதியான லக்ஷ்மீ ஹரியினிடத்தில் லயிக்கிறாள். இல்லையேல் வாக் போன்றவைகளுக்கு, மனம் போன்றவையில் லயம் ஏற்றதும் தவறாகும். லக்ஷ்மிக்கு அஸம்ஸாரித்வம் உள்ளதால் லயம் கிடையாது என்று கூறமுடியாது. முக்தத்வம் இருப்பதால் அஸம்ஸாரித்வம் என்பதும் கிடையாது. இந்த முக்தத்வம் புதிதாக உண்டாவதாகும். முக்தத்வம் இயல்பாக எப்போதும் இருந்தால் பகவானுடன் ஸர்வ ஸாம்யம் ஏற்க நேரிடும். மேலும் எப்போதும் ஸம்ஸாரம் கிடையாது என்றால் ஹரியின் வேறு குணங்கள் யாவும் இருப்பதாக ஏற்படும். எனவே சித்ப்ரக்ருதிக்கும் ஹரியிடம் லயம் உண்டு.

ஸித்தாந்தம்:- द्वौ वाव सृत्यनुपक्रमौ प्रकृतिश्च परमश्च என்று பாஷ்யத்தில் கூறிய ஶ்ருதியில் பரமபுருஷனான ஹரியைப்போல ஸர்வகதத்வ, நித்யத்வ என்ற இருயுக்திகளால் நித்யமுக்தத்வம் ப்ரக்ருதிக்கும் ஸ்வாபாவிகம் என்பதால், அத்தகைய முக்தியுடைய தேவிக்கு ஹரியைப்போலவே தேஹத்யாகம் ஆகிற லயம் வரவேமுடியாது என்பதால், ப்ரக்ருதி லயிப்பது கிடையாது. வாக்கு முதலியது போல் தனக்கு மேலானவரிடம் லயம் ப்ரக்ருதிக்கும் வரும் என்ற அனுமானம் தவறு. ப்ரக்ருதிக்கு வாக்குபோல் ஸம்ஸாரித்வம் இல்லாததால் விஷமத்ருஷ்டாந்தம் (உபாதியுள்ளது) तेज: परस्यां देवतायाम् என்ற ஶ்ருதியானது हरेरत्यन्तसामीप्यं लयो लक्ष्म्या: प्रकीर्तित: என்ற வாக்யப்படி ஹரிக்கு மிகமிக அருகில் போகிறாள் என்றுதான் பொருள். ப்ரக்ருதிக்கு ஈஶனோடு ஸர்வ ஸாம்யம் வரட்டும் என்று கேட்பது

தவறு. ஏனெனில் तदपीते:...सूक्ष्मं...अस्यैव च என்கின்ற மூன்று ஸூத்ரங்களில் கூறியுள்ளபடி விஷ்ணுவிற்கும் லக்ஷ்மிக்கும் மோசகத்வம் அமோசகத்வம், பரம ஸூக்ஷ்மத்வம் ஸூக்ஷ்மத்வம், ஞானானந்தாதிகளின் அபரிமிதத்தன்மை, பரிமிதத்தன்மை, ஊஷ்மா உடைய தன்மை, ஊஷ்மா இல்லாத தன்மை - என்ற வேறுபாடுகள் ஸ்தாபிக்கப்படுகின்றன. எனவே லக்ஷ்மிக்கு ஹரியிடம் லயம் கிடையாது.

## 4.2.5 A तदापीते: संसारव्यपदेशात् (4 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- तेज: परस्यां देवतायाम् என்று கூறப்படும் வாக்கு, ப்ராணன், தேஜஸ் இவைகளின் லயம் பரமாத்மாவிடத்தில் ஸ்வரூபேண (முழுமையான முடிவு) லயம் என்றுதான் கொள்ளவேண்டும். பரமாத்மா பூதங்களின் உபாதானம் ஆன-படியால்.

ஸித்தாந்தம் :- ஆத்மதத்வஞானிக்கு இது உண்மை. ஆனால் உபாஸகர்கள், கர்மிகள் இவர்களுக்கு முழு லயம் கிடையாது. மறு பிறவி உள்ளதால். எனவே வ்ருத்திலயம் மட்டும்தான்.

## 4.2.6 A प्रतिषेधादिति चेन्न शारीरात् (3 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- न तस्य प्राणा उत्क्रामन्ति என்பதாக தத்வஞானிக்கு ப்ராணன்கள் கிளம்புவதில்லை என்று கூறப்பட்டது. ஆனால் அது ஸரியல்ல. ஏனெனில் அந்த நிஷேதத்திற்கு ஞானியிடமிருந்து கிளம்புவதில்லை என்றுதான் பொருள் கொள்ளவேண்டும். உடலிலிருந்து கிளம்புவதில்லை என்று பொருள் கொள்ளக்கூடாது. உடலில் இருந்து ப்ராணன் கிளம்பாவிட்டால் மரணமே ஏற்படாதன்றோ!

ஸித்தாந்தம் :- கொதிக்கும் இரும்பில்/ கல்லில் தெளித்த ஜலம் உடனே எவ்வாறு வற்றுகிறதோ/அழிகிறதோ அதேபோல் தத்வஞானியின் ப்ராணன்கள் உடலிலேயே லயமாகின்றன, தங்குவதில்லை, புனர்ஜன்மப்ராப்தி இல்லாததால். எனவே உடல் இறந்துவிட்டது என்று கூறமுடியும். மேலும் உடலில் ப்ராணன் இல்லை என்பதற்கு அந்த உடல் பருமனாவது அடையாளம். ஜீவனுடன் சேர்ந்து சென்றால் மறுபிறவி அவசியமாகிவிடுமாதலால் மோக்ஷம்கிட்டாது. மேலும் ஶகாந்தரத்தில் न तस्मात् प्राणा उत्क्रामन्ति என்று ஸ்பஷ்டமாக உடலிலிருந்து ப்ராணன்கள் கிளம்புவதில்லை என்று கூறப்படுகிறது.

## 4.2.7 A तानि परे तथा ह्याह (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- தத்வஞானியின் வாக்கு முதலிய இந்திரியங்கள் லயிக்கும்போது தனிப்பட்ட அக்னி முதலிய இடங்களில் (ஆதாரத்தில்) லயிக்கின்றன, பரமாத்மாவில் அல்ல. गता: कला: पञ्चदश प्रतिष्ठा: என்ற மந்த்ரத்தில் அந்தந்த இந்திரியங்கள் தன்தன் காரணத்தில் ஒடுங்குவதாகக் கூறப்பட்டுள்ளது. மேலும் यत्रास्य पुरुषस्याग्निं वागप्येति चक्षुरादित्यम्.. என்றபடி காரணத்தில் லயம் சொல்கிறது.

ஸித்தாந்தம்:- தத்வஞானியின் நோக்கிலிருந்து, இவருக்கு புனர்ஜன்மா இல்லாததால், ப்ராணன்கள் நிஶ்ஶேஷமாக (பூர்ணமாக) ப்ரஹ்மத்தில்தான் அழிகின்றன. "परात्परं पुरुषमुपैति दिव्यम्" என்று ஸ்பஷ்டமாக சொல்லப்பட்டுள்ளது. பூர்வபக்ஷத்தில் கூறிய ஶ்ருதியானது தடஸ்தரான நமது நோக்கில் கூறப்பட்டது. எனவே ஶ்ருதிகளுக்கு விரோதமில்லை.

# 4.2.6 V तानि परे तथा ह्याह (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- ஜீவனுடன்கூடிய பூதஸூக்ஷ்மங்களுக்கு பரமாத்மாவில் லயிப்பதால் ப்ரயோஜனம் கிடையாது என்பதால் परस्यां देवतायाम् என்றால் போகவேண்டிய இடத்தில் உள்ள (வ்யாபித்துள்ள) பரமாத்மாவை அடைகின்றன என்று கொள்ளவேண்டும். எனவே கர்மா, உபாஸனைக்குத் தக்கவாறு அந்தந்த இடத்திற்கு போகின்றனர் ஜீவன்கள்.

ஸித்தாந்தம் :- தூக்கநிலையில் இந்திரியங்களின் ஆயாஸம் தணிவதற்கு பரமாத்மாவில் லயம் ஏற்படுவதுபோல் மரண தசையில் த்ரிஸ்தூணங்களால் ஏற்பட்ட ஆயாஸத்திலிருந்து ஓய்வு பெறுவதற்கு பூதஸூக்ஷ்மங்களுடன் ஜீவன் பரமாத்மாவை அடைகிறான்.

# 4.2.7 D तानि परे तथा ह्याह (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- भूतेषु देवा विलीयन्ते என்று கூறப்பட்ட தேவர்களின் லயம் பகவானிடத்தில் உண்டா? இல்லையா? இந்த தேவர்கள் ப்ராண பதத்தினால் கூறப்பட்ட சதுர்முக ப்ரதிபிம்பர்களா? பகவானின் ப்ரதிபிம்பர்களா? ப்ரதிபிம்பம் பிம்பத்தில்தானே லயிக்கும். ப்ராணன்மட்டுமே பகவானின் ப்ரதிபிம்பம், மற்றவைகள் ப்ராணனின் ப்ரதிபிம்பம், "प्रतिबिम्बो ही प्राण: प्राणस्यान्ये कला:क्रमात्" என்று கூறப்பட்டுள்ளது. எனவே ப்ராணனுக்கு மட்டுமே பகவத்லயமாகிற மோக்ஷம், மற்றவருக்கு கிடையாது, என்பதால் अनियम: सर्वेषां என்று முன்புகூறிய ஸித்தாந்தம் தவறு.

ஸித்தாந்தம்:- தேவர்கள் ப்ராணனின் ப்ரதிபிம்பம்தான் என்றாலும் ப்ராணத்வாரா தேவர்களும் முக்தர்களாக ஆவதில்

தடையில்லை. பகவத்ப்ரதிபிம்பமான விரிஞ்சரிடத்தில் லயித்தவர்கள், விரிஞ்சரும் ஈஶ்வரனிடத்தில் லயிக்கும்போது பரமாத்மப்ரவேஶம் கட்டாயம் உண்டுதானே.

## 4.2.8 A अविभागो वचनात् (1 सूत्रम्).

பூர்வபக்ஷம் :- சென்ற அதிகரணத்தில் கூறப்பட்ட லயமானது முழுமையானது அல்ல, மறுபடி ஜன்மாந்தரத்திற்கான ஸாவஶேஷம்தான். அஞ்ஞானி லயம்போல என்று கேள்வி.

ஸித்தாந்தம்:- भिद्येते तासां नामरूपे - ஜீவனுடைய ப்ராணாதி பதினைந்து கலைகள் ஸம்ஸார காரணங்கள் என்பதால் அவை தத்வஞானத்தினால் அஞ்ஞானம் அழிந்து வேருடன் லயித்துவிடுகின்றன. எனவேதான், भिद्येते नामरूपे என்று சொல்லப்படுகிறது. தத்வஞானம் ஏற்படாதவர்களுக்கு ஜன்மாந்திரம் ஏற்படுவதற்கான ஶக்தி ஶேஷத்துடன் ஒடுங்குகின்றன நாமரூபங்கள் என்பது பொருந்தும், தத்வஞானிக்கு பொருந்தாது.

## 4.2.7 V अविभागो वचनात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- பரமாத்மா உபாதான காரணமானபடியால் பூதஸூக்ஷமத்துடன்கூடிய ஜீவனின் லயமானது காரணத்தில் கார்யம் லயிப்பது போல் பூர்ண ஸ்வரூபலயம்.

ஸித்தாந்தம் :- वाङ्मनसि संपद्यते என்ற பூர்வவாக்யத்திலிருந்து ஸம்பத்யதே என்ற வார்த்தை அனுவ்ருத்திக்கிறது. அந்த வார்த்தைக்கு அங்கு காரணலய வாசித்வம் (முழுமையான அழிவு) கிடையாது. எனவே பிரிக்கமுடியாதபடிக்கு ஏற்படும்

விஶேஷ சேர்க்கை(संबन्धविशेष:)தான் तेज: परस्यां देवतायाम् என்ற இடத்தில் கொள்ளவேண்டும். எனவே மரண தசையில் ஜீவன் பூதஸூக்ஷ்மங்களுடன் பரமாத்மாவில் விஶ்ராந்திக்காக விஶேஷமான ஸம்பந்தத்துடன் சேருகிறான் என்பதுதான் ஸம்பத்தி.

## 4.2.8 D अविभागो वचनात् (1 सूत्रम्).

பூர்வபக்ஷம் :- சென்ற அதிகரணத்தில் மோக்ஷம் பெற்றதாகக் கூறப்பட்ட தேவர்கள் ஸ்வதந்த்ரர்களா? ஈஶாதீனர்களா? ஈஶாதீனமானால் பரதந்த்ர துக்கம் (ஸம்ஸார துக்கம்) வந்து சேருமா? சேராதா? பராதீனமானால் एते देवा एतमात्मानमनुविश्य सत्या: सत्यकामा: (गोपवन) என்ற ஸத்யகாமத்வாதிகளை கூறும் ஶ்ருதி பொருந்தாதே! எனவே இந்த தேவர்கள் முக்தர்களானதும் பராதீனர்கள் அல்ல என்பதால் முன்புகூறிய ஈஶாதீனத்வம் ஆகிற ப்ரதிபிம்பத்வம் எப்படி பொருந்தும்?

ஸித்தாந்தம்:- "कामेन मे काम आगात्" "मुक्तानां सत्यकामत्वं" என்கிற ஶ்ருதி ஸ்ம்ருதிகளுக்கு முக்தர்களின் ஸத்யகாமத்வம் என்பது ஈஶனின் விருப்பத்தை அனுஸரித்துத்தான், தானாக இல்லை - என்று பொருள் அங்கீகரிக்கவேண்டும். ஈஶனின் விருப்பத்தினால் உண்டாவதால் (ஸத்யகாமத்வம்) பராதீனமானாலும் ஸம்ஸாரதுக்கம் தொடரும் என்ற கேள்விக்கு இடமில்லை. எனவே முக்தர்களும் கூட (ஞானிகளும் கூட) ஈஶாதீனர்கள்தான் என்பதால் ஸர்வம் ஈஶாதீனம் என்ற ஸித்தாந்தத்தில் தோஷமில்லை.

  

## 4.2.9 A तदोकोऽग्रज्वलनं तत्प्रकाशितद्वारो विद्यासामर्थ्यात्तच्छेषगत्यनुस्मृतियोगाच्च हार्दानुगृहीत: शताधिकया (1 सूत्रम्)

பூர்வபக்ஷம்:- சாதாரண ஜனங்கள் உபாஸகர்கள் இருவிதமானவர்களுக்கும் மார்கம் ஆரம்பிக்கும்வரையில் உடலிலிருந்து கிளம்புதல் ஸமமானது என்று கூறப்பட்டது. மார்கம் ஆரம்பித்தலிலும், ஸமமானதாக இருத்தல்வேண்டும். "இறப்பவனுடைய கடைசி நொடியில் லிங்க ஶரீரத்தில் (மனதில்) பிற்பாடு வரப்போகும் ஜன்மாவின் தோற்றம் மின்னல்போல் தோன்றும். உடனே கிளம்புகிறான்" என்று கூறப்பட்டுள்ளது. எனவே உபாஸகர்களுக்கும் மற்றவர்களுக்கும் மார்கமும் ஆரம்பமும் ஸமம் ஆகும்.

ஸித்தாந்தம்:- இது தவறு. உபாஸகர்கள் உச்சிநாடியின் வழியே (தலை நுணியில் பிளந்து) மேலே கிளம்புகிறார்கள். ஆனால் மற்றவர்கள் அவ்வாறு அல்ல. எந்த நாடியின் வழியாகவும் கிளம்புகிறார்கள். உபாஸகன் மூர்த்தன்ய (தலையில் உள்ள) நாடியையும் சேர்த்து த்யானம் பண்ணியுள்ளான். மேலும் ஸகுணப்ரஹ்ம வித்யையின் ஸாமர்த்யமும் உள்ளது. இந்த விஷயம் शतं चैका च हृदयस्य नाड्य: என்ற கடோபநிஷத்தில் கூறப்பட்டுள்ளது. எனவே உபாஸகனுக்கு தனி விஶேஷம் உண்டு. மேலே சென்று க்ரமமுக்தியும் பெறுவதற்கு வாய்ப்பு உண்டு.

## 4.2.8 V तदोकोऽग्रज्वलनं तत्प्रकाशितद्वारो विद्यासामर्थ्यात्तच्छेषगत्यनुस्मृतियोगाच्च हार्दानुगृहीतः शताधिकया (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- உடலில் உள்ள நாடிகள் அதிஸூக்ஷமங்கள் ஆனபடியால், பிரித்து தனித்தனியே உணரமுடியாதானதால், ஸுஷும்னா நாடி எது என்று கண்டுபிடித்து அதன்வழியே போவது என்பது உபாஸகருக்கும் யதேச்சையாகத்தான் நிகழும் என்பதை வைத்து ஶ்ருதி तयोर्ध्वमायन् என்று கூறுகிறதேதவிர நியமம் கிடையாது.

ஸித்தாந்தம் :- மனிதன் தானாகவே ஸுஷும்னா நாடியைக் கண்டுபிடிக்க முடியாவிடினும் ப்ரஹ்மவித்தின் சிறந்த பக்தி-யினால், மிகுந்த அன்பினால், அவன் தினஸரி செய்த நாடி த்யானத்தினால் ப்ரஸன்னரான பகவான் அருளினால் ஒரு வெளிச்சம் ஏற்பட்டு அதன் மூலம் அறிந்து, அந்த நாடி வழியாகத்தான் ஞானி போகிறார். மற்றவர் அப்படி அல்ல.

## 4.2.9 D तदोकोऽग्रज्वलनं तत्प्रकाशितद्वारो विद्यासामर्थ्यात्तच्छेषगत्यनुस्मृतियोगाच्च हार्दानुगृहीतः शताधिकया (5 सूत्राणि)

(அத்வைதப்படி மூன்று அதிகரணங்களாக கணக்கிடப்படும் 1+2+1= 4ஐ ஐந்து ஸூத்ரங்களாகவும் கொண்டு, மூன்றாவதான அதிகரணத்தில் இரண்டு ஸூத்ரங்களில் ஒன்றை மட்டும் இங்கு சேர்த்து இரண்டாம் ஸூத்ரத்தைத் தனியான அதிகரணமாக (4.2.10 D) வைத்து விளக்கப்பட்டுள்ளது )

பூர்வபக்ஷம் :- இது வரை ஏழு அதிகரணங்களில் தேவர்களின் முக்தி கூறப்பட்டது. இதில் மனிதர்களின் மரணத்திற்குப் பிறகு பகவத்ப்ராப்தியாகிற மோக்ஷம் கூறப்படுகிறது. "ஞானிகளின் மரணம் (புறப்பாடு) அஞ்ஞானிகளோடு ஸமமானதா? ஞானஶக்தியினால் வேறுபட்டதா? அந்த ஞானமானது இந்த வேறுபாட்டைத் தரவல்லதா? இல்லையா? ப்ராரப்தகர்மாவின் ஶேஷம் ஞானஶக்திக்கு ப்ரதிபந்தகமா? இல்லையா? ஞானம் தன் உதயத்தினாலேயே பலன் அளிக்கவல்லதா? அல்லது கர்மாக்களின் முடிவின் பிறகுதான் பலன் தருமா?" என்று விசாரவரிசை.

ஞானமானது, தான் உண்டானதினாலேயே அஞ்ஞானிகளின் மரணத்தைவிட வேறுபாட்டைத் தருவதற்கு வல்லதானால் ஞானியின் ஆதி ஞானமும் உண்டான உடனேயே அக்ஞானத்திலிருந்து பிரித்துக் காட்டமுடியும் என்று ஏற்படும் ஆதலால் ப்ராரப்தத்தின் முடிவில்தான் ஞானம் அந்த ஶக்தியைப் பெறும் என்று கூறவேண்டும். எனவே ப்ராரப்தத்தினால் தடைப்பட்ட ஶக்தியையுடைய ஞானமானது, அக்ஞானியின் மரணத்தைக் காட்டிலும் வேறுபாடு உடையதாகமுடியாது. எனவே, स्वोदयात् फलदं ज्ञानम् என்ற வாக்யமானது வேறு பலனைக் குறிக்கிறதாகும். எனவே ஞானி, அக்ஞானிகளின் மரணம் ஒரே போன்றதுதான்.

ஸித்தாந்தம்:- ஞானம் மட்டுமே அக்ஞானி மரணத்திலிருந்து வேறு-பாட்டைத் தருவதாக நாங்கள் கூறினால் பூர்வபக்ஷ தோஷம் வரும். ஆனால் நாங்கள் அவ்வாறு கூறவில்லை. தன் ஹ்ருதயம் ஆரம்பித்து பகவானை அடையும் வரை உள்ள மார்க ஸ்ம்ருதியுடன் கூடியதும், வித்யையினால் ப்ரஸன்னமான பகவானின் அனுக்ரஹத்துடன் கூடியதுமான ஞானத்திற்கே அந்த ஶக்தியைக் கூறுகிறோம். அந்த

இரண்டின் சேர்க்கை ப்ராரப்த முடிவில்தான் வரும். அத்தகைய ஞானியின் மரணம் தனித்ததுதான்.

## 4.2.10 A रश्म्यनुसारी (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- अथैतैरेव रश्मिभि: ऊर्ध्वं आक्रमते என்பதாக "ஸூர்ய-கிரணங்கள் வழியாக உபாஸகர் ப்ரஹ்மலோகம் (உத்தர-மார்கத்தில்) போகிறார்" என கூறப்பட்டுள்ளதால், இது பகலில் மரித்தால்தான் முடியும். ஆதலால் உபாஸகர் இரவில் மரித்தால் ரஶ்மி ஸம்பந்தம் வராது.

ஸித்தாந்தம் :- உடல் உள்ள வரை ஸூர்யகிரணங்களுக்கும் உடலுக்கும் தொடர்பு உண்டு. இரவிலும் ஸூர்யகிரணங்கள் உள்ளன, எனவேதான் கோடைகால இரவில் தஹிக்கிறது என்று கூறுகிறோம். மற்றகாலத்தில் ஸூக்ஷ்மமாயிருப்பதால் உணரப்-படவில்லை. மேலும் ஶ்ருதி கூறுகிறது - अमुष्मादादित्यात्प्रतायन्ते ता आसु नाडीषु सृप्ता आभ्यो नाडीभ्य: प्रतायन्ते तेऽमुष्मिन्नादित्ये सृप्ता: என்று, எப்போதும் நாடி ஸூர்ய ஸம்பந்தமும் உண்டு. எனவே இரவில் மரணமானாலும் ஸூரியனை அடைவது திண்ணம்.

## 4.2.9 V रश्म्यनुसारी (1 सूत्रम्)

(விஶிஷ்டாத்வைதத்தில் இந்த தனி ஸூத்ரம் ஒரு அதிகரணம். அடுத்த ஸூத்ரம் தனி அதிகரணம்.)

பூர்வபக்ஷம் :- இரவில் ஞானி மரித்தால் ஸூர்ய ஸம்பந்தம் வர-முடியாதாகையால் ஞானி ஸூர்ய வழியே போவது எப்படி?

ஸித்தாந்தம்:- இரவிலும் கோடையில் நமக்கு ஸூர்ய கிரணங்களின் சூடு தெரிகிறது. இரவிலும் ஸூர்யநாடி ஸம்பந்தம்

உண்டு. எனவே எப்போதும் ஞானிக்கு மரணமானதும் ஸூர்ய ஸம்பந்தம் ஏற்படுவது ஊர்ஜிதம்.

## 4.2.10 V निशि नेति चेन्न संबन्धस्य यावद्देहभावित्वात् दर्शयति (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- இரவில் மரித்த ஞானிக்கு ப்ரஹ்ம ப்ராப்தி கிடையாது. ஸூர்யகிரண ஸம்பந்தம் வரலாமானாலும், "दिवा च शुक्लपक्षश्च उत्तरायणमेव च मुमूर्षतां प्रशस्तानि विपरीतं तु गर्हितम्" என்று இரவு மரணத்தை தாழ்த்திக் கூறியுள்ளது. (பகல், ஶுக்லபக்ஷம், உத்தராயணம் இவை மரிப்பவர்களுக்கு சிறந்தவை. மற்றவை நிந்திக்கபட்டது) நிந்திக்கபட்டதால் அதம கதிதானே இவர்களுக்கு வரும். எனவே இரவில் மரித்தவர் ப்ரஹ்மலோகம் போவதில்லை.

ஸித்தாந்தம் :- ப்ரஹ்மஞானிக்கு ஸஞ்சித கர்மாக்கள் அழிந்து விட்டன, ஆகாமி கர்மாக்கள் ஒட்டுவதில்லை, ப்ராரப்தம் அனுபவித்தாகிவிட்டது என்பதால் மறுபிறவி கிடையாது. ஞானிக்கு ப்ரஹ்மத்தை அடைய தாமதம், மரணம் ஏற்படுவது மட்டுமே என்று ஶ்ருதியும் கூறுகிறது. இரவு மரணத்தின் நிந்தனை அக்ஞானிகளுக்கு மட்டுமே பொருந்தும்.

## 4.2.11 A अतश्चायनेऽपि दक्षिणे (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- தக்ஷிணாயனத்தில் மரித்த உபாஸகனுக்கு வித்யா-பயனான ப்ரஹ்மலோக ப்ராப்தி கிடையாது. ஏனெனில் ப்ரஹ்மலோக மார்கத்தில் உத்தராயணம் கூறப்பட்டுள்ளது. இல்லாவிடில் தக்ஷிணாயனத்தில் பாணப்படுக்கையில் விழுந்த பீஷ்மர் உத்தராயணம் பிறப்பதை ஏன் எதிர்பார்க்க வேண்டும்?

ஸித்தாந்தம்:- ப்ரஹ்மலோக மார்கத்தில் கூறப்பட்ட உத்தரா-யணம் என்ற வார்த்தைக்கு காலம் பொருளல்ல. உத்தராயண தேவதை என்றுதான் பொருள் என்று (4.3.4ல்) கூறப்போகிறோம். பீஷ்மர் காத்திருந்தது என்பது தனது ஸ்வதந்த்ர மரணப் பெருமையைக் காட்டுவதற்காக நிகழ்ந்தது. மரணகாலம் யாருக்கும் நியதமில்லை. உபாஸனாமகிமையினால் தக்ஷிணாயனமானாலும் உபாஸகர் ப்ரஹ்ம லோகம் போவது ஊர்ஜிதம்.

## 4.2.11 V अतश्चायनेऽपि दक्षिणे (2 सूत्रे)

பூர்வபக்ஷம் :- தைத்திரீயத்தில் अथयो दक्षिणे प्रमीयते என்பதாக தக்ஷிணாயனத்தில் மரிப்பவர்கள் பித்ருலோகம் போவதாக கூறப் -படுகிறது. மேலும் பீஷ்மர் உத்தராயணத்திற்காக காத்திருந்தார் என்று கூறப்படுகிறது. கீதையிலும் தக்ஷிணாயன மரணத்தில் சந்த்ரமண்டலம் போவதாயும் புனராவ்ருத்தியும் கூறப்படுகிறது. எனவே ஞானிக்கு தக்ஷிணாயன-மரணம் ஏற்பட்டால் ப்ரஹ்மப்ராப்தி கிடையாது.

ஸித்தாந்தம்:- சென்ற அதிகரணத்தில் கூறியபடி ஞானிக்கு ப்ரஹ்மப்ராப்தியில் தாமதம் ஏற்பட காரணமில்லை. தைத்திரீ-யத்தில் முதலில் இவ்வாறு கூறினாலும் तस्माद्ब्रह्मणो महिमानमाप्नोति என்று முடிவில் ப்ரஹ்மப்ராப்தி கூறப்பட்டுள்ளதால் சந்த்ரமண்டலம் போவது, நடுவழியில் ஓய்வு பெறுவதற்காக என்று கொள்ளவேண்டும்; கீதையிலும் காலத்தை த்யானத்திற்காக கூறியுள்ளார் பகவான். பீஷ்மர் தனது தனித்த மகிமையை உணர்த்துவதற்காக (ஸ்வதந்த்ர மரணம்) தாமதித்-தார். கீதையிலும் காலம் இரண்டையும் த்யான காலத்தில் அனுஸந்திப்பதற்காகத்தான் கூறினார்; காலபேக்ஷத்திற்கு நிர்பந்தமில்லை. எனவே தக்ஷிணாயனமானாலும் ஞானிக்கு ப்ரஹ்மலோகம் உண்டு.

## 4.2.10 D योगिन: प्रति स्मर्येते स्मार्ते चैते

(1 सूत्रम्)

(இந்த ஸூத்ரம் மற்ற இரு மதத்திலும் अतश्चायनेऽपि दक्षिणे என்று சென்ற அதிகரணத்தில் சேர்ந்தது. )

பூர்வபக்ஷம் :- முன்பு கூறப்பட்ட வித்யா (உபாஸனை) கதிஸ்மரணம் (கதியை நினைத்தல்) இரண்டும் ஞானியின் கதிக்கு (செல்கைக்கு)த் தேவையா? இல்லையா? अग्निर्ज्योतिरह: शुक्ल: षण्मासा उत्तरायणम् என்ற ஸ்ம்ருதியானது ஞானியின் கதியானது காலாதீனமானது என்று கொண்டு यं यं वाऽपि स्मरन् என்ற வாக்யம் ஸ்தோத்ரம் செய்வதற்காக வந்தது என்று கூறவேண்டுமா? அல்லது अग्निर्ज्योति என்ற வாக்யம் ஞானியின் கதியானது வித்யாதீனம்தான் என்று கொள்ளவேண்டுமா? என்று விசாரவரிசை. கீதையில் - தக்ஷிணாயண-உத்தராயண காலங்களுக்கு சந்த்ரமண்டலம் ப்ரஹ்மலோகம், புனராவ்ருத்தி அபுனராவ்ருத்தி என்ற பயன் கூறப்பட்டுள்ளதால் அந்த கதியின் ஸ்ம்ருதி த்யானத்தில் தேவையில்லை. எனவே ப்ரஹ்மப்ராப்திக்கு கதி ஸ்மரணமும் வித்யையும் இரண்டும் தேவையில்லை, அஹஸ் போன்ற காலஸ்ம்ருதி போதும்.

ஸித்தாந்தம் :- ब्रह्मविदोगच्छन्ति என்பதாக अग्निर्ज्योति: என்ற வாக்யத்தில் கூறப்பட்டுள்ளது. எனவே ப்ரஹ்மஞானம்தான் ப்ரஹ்மப்ராப்தி ஸாதனமேதவிர காலஸ்ம்ருதி ஸாதனமல்ல. எனவே வித்யா என்பது கட்டாயம் தேவை. மேலும் உத்தராயண, தக்ஷிணாயன என்ற வார்த்தைகள் காலத்தை கூறவில்லை. காலாபிமானி தேவதைகளைக் கூறுகின்றன. எனவே यं यं वाऽपि என்றபடி இந்த வித்யையுடன் கதியின் ஸ்மரணமும் தேவை.

## மூன்றாம் பாதம்

## 4.3.1 A अर्चिरादिना तत्प्रथिते: (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் : ப்ரஹ்மலோக கமன மார்கமானது சாந்தோக்ய ப்ருஹதாரண்யக, பஞ்சாக்னி வித்யைகளில் அர்சிஸ் முதலாவதாக கூறப்பட்டுள்ளது "तेऽर्चिषमेवाभिसम्भवन्ति" என்று. மற்றொரு வித்யையில் "स वायुमभिगच्छति" என்று வாயு முதலாகக் கூறப்பட்டுள்ளது. கௌஷீதகிகள் பர்யங்க வித்யையில் அக்னி முதலாகக் கூறுகின்றனர். எனவே ப்ரஹ்மலோக மார்கம் பலவிதம்.

ஸித்தாந்தம் :- இது தவறு. அர்ச்சிராதி மார்கம் ஒன்றுதான். ஏனெனில் பஞ்சாக்னிவித்யா வாக்யத்தின் கடைசியில் பஞ்சாக்னிவித்யை, மற்ற உபாஸனைகள் யாவும் கூறி இவர்களுக்கு மார்கம் அர்ச்சிராதியை கூறுகிறது- "य इत्थं विदु: ये चेमेऽरण्येतेऽर्चिषमेवाभिसम्भवन्ति" என்று மற்ற ஶ்ருதிகளில் கூறிய வாயு போன்றவை அர்ச்சிராதி வழியின் ஆரம்பத்தில் சேருகின்றன. எனவே ஒரே அர்ச்சிராதி மார்கம் மட்டுமே.

## 4.3.1 V अर्चिरादिना तत्प्रथिते: (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- பல ஶ்ருதிகளில் ப்ரஹ்மலோக மார்கமானது வரிசையிலும், வஸ்துவிலும் வேறுப்பட்டதாக கூறப்படுவதால் அந்தந்த வித்யைக்காரர்கள் அந்தந்தமார்கத்தில் ப்ரஹ்மலோகம் போகலாம். ஒரே வழிதான் என்பதில்லை.

ஸித்தாந்தம் :- அந்தந்த ப்ரகரணங்களில் கூறிய வெவ்வேறு வரிசையும், வஸ்துவும் இருப்பினும் கூட ஆதித்யன் போன்ற சில

வஸ்துக்கள் பொதுவாக இருப்பதால் ஒரே மார்கம் என்ற அபிப்ராயம் ஏற்படுகிறது. எல்லா க்ரமங்களையும் சேர்த்து ஒரே மார்கம்தான் அர்ச்சிராதி மார்கம் என்பதுதான் உசிதம்.

## 4.3.1 D अर्चिरादिना तत्प्रथितेः (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- முன்பு கதிஸ்மரணமும் தேவை என்று கூறப்பட்டது. அந்த கதியானது அர்ச்சிராதியா? வாய்வாதியா? (அர்ச்சிதொடங்கியா? வாயு தொடங்கியா?) இரண்டு விதமான ஶ்ருதியும் நிரவகாஶமா? ஸாவகாஶமா? கதியில் இரண்டுவிதமும் விரோதம் உள்ளதா? இல்லையா? அந்த அர்ச்சி- வாயு தனித் தனியா? ஒன்றின் உட்பிரிவா? ஏகப்ராதமிகமா? உபயப்ராதமிகமா? (ஒன்றுதான் முதல் ஆரம்பமா? இரண்டும் முதல் ஆரம்பமா?)

பூர்வபக்ஷம் :- இரண்டும் முதலாக ஆரம்பம்.

ஸித்தாந்தம் :- द्वावेव प्रथितौ मार्गौ अर्चिरादि विपश्चितां धूमादिः कर्मिणाम् என்பதாக கர்மிகளுக்கு தூமாதி மார்கம், ஞானிகளுக்கு அர்ச்சிராதி மார்கம் என்று வரையறுத்திக் கூறியுள்ளது. எனவே ப்ரஹ்மவித்திற்கு அர்ச்சிராதிகமான ஒரே மார்கம்தான். ते वायुमागच्छन्ति என்ற ஶ்ருதிக்கு அர்ச்சிக்கு வந்து பிறகு வாயுவை அடைகிறான் என்று பொருள்.

## 4.3.2 A वायुमब्दादविशेषविशेषाभ्याम् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம்:- 1.அர்ச்சி 2. பகல் 3. ஶுக்லபக்ஷம் 4. உத்தராயணம் 5. வருஷம் 6. ஆதித்யன் 7. சந்த்ரன் 8. மின்னல், அங்கிருந்து இவரை ப்ரஹ்ம லோகத்தைச் சேர்ந்த ஒருவர் வந்து, 9. ப்ரஹ்மலோகத்திற்கு அழைத்துப்போவதாக ப்ரஹ்மலோக மார்கம் கூறப்பட்டுள்ளது, இவ்விதமிருக்கையில் வாயுவை இந்த வழியில்

எங்கு சேர்ப்பது என்று தெரியவில்லையே? என்ன செய்வது? ப்ரமாணம் இல்லையே!

ஸித்தாந்தம் :- இது தவறு. வேறு ஒரு ஃச்ருதி ப்ரமாணமாகிறது. स वायुमागच्छति...स आदित्यमागच्छति என்பதாக ஃச்ருதி வாயுவிலிருந்து ஆதித்யனை அடைகிறான் என்று கூறுகிறது. எனவே வாயு என்பது ஆதித்யனுக்கு முன்பு வருகிறது. ஆகையால் வருஷம் வந்த பிறகு வாயு வந்து, பிறகு ஆதித்யன் என்று வரிசை அமைகிறது. (5 மற்றும் 6க்கு இடையில் வாயு வருகிறார்) வாயுலோகத்திற்கும் முன்பு தேவலோகம் என்பதையும் சேர்க்கவேண்டும். ஸம்வத்ஸரம் + தேவலோகம் + ஆதித்யலோகம் என்ற வரிசை.

## 4.3.2 V वायुमब्दादविशेषविशेषाभ्याम् (1 सूत्रम्).

பெரும்பாலும் பூர்வபக்ஷம் ஸித்தாந்தம் அத்வைதத்திற்கு ஸமமே. ஸித்தாந்தத்தில்- தேவலோகம் என்ற வார்த்தைகூட (ஒரு உபநிஷத்தில் உள்ளது) ''வாயு'' என்றே பொருள், ஏனெனில் வாயுவே லோகம் = வாயுலோகம் என்று ஸமாஸம் கொள்ளவேண்டும். வாயு என்பது விஶேஷச்சொல், தேவ என்பது பொதுச்சொல் என்பதால் இரண்டையும் கலந்து தேவரான வாயுவாகிய லோகம் வருஷம் ஆதித்யனுக்கு நடுவே சேர்க்கப்படவேண்டும் - என்ற விஶேஷம் கூறப்பட்டுள்ளது.

## 4.3.2 D वायुशब्दादविशेषविशेषाभ्याम् (1 सूत्रम्)

இங்கு ஸூத்ரத்தின் பாடத்தில் அத்வைதம், விஶிஷ்டாத்வதம் இரண்டிலும் "वायुमब्दात्" என்று உள்ளது. அதன்படி விளக்கம். மத்வ மதத்தில் वायुशब्दात् என்று பாடம் எடுத்துக்கொண்டு விளக்கம் கூறப்படுகிறது.

முன் அதிகரணத்தில் ஞானியினால் முதலில் அடையவேண்டிய தேவதாநிர்ணயம் செய்யப்பட்டது. இப்போது இரண்டாவதாக அடையப்படவேண்டிய தேவதையின் நிர்ணயம் செய்யப்படுகிறது. "அர்ச்சிராதி மார்கத்தில் வாயுதேவதா, அஹர்தேவதை என்ற இரண்டும் இரண்டாவதாக அடையப்படவேண்டியவர்களா? அல்லது வாயுதேவதை மட்டுமே இரண்டாவதா? "स वायुमभिसंपद्यते" "अर्चिषोऽहः" என்ற இரண்டு வாக்யங்களும் இரண்டு பேருக்கும் இரண்டாவதாக அடைய வேண்டியதன்மையைக் கூறுகிறதா? இல்லையா? இந்த மார்கமே ஒன்றா? இரண்டா?" என்று விசாரவிஷயம்.

பூர்வபக்ஷம் :- முன்பு அர்ச்சிராதி, தூமாதி - என்று இரண்டு மார்கங்கள்தான் எனக் கூறப்பட்டதுபோல் இங்கு வாயுதான் இரண்டாவது அடையப்படவேண்டியவர் என்று விஶேஷ வசனமில்லை. எனவே स वायुमभिसंपद्यते, अर्चिषोऽहः என்றுதான் இரண்டு வாக்யங்களுக்கும் ப்ராமாண்யம் தருவதன் பொருட்டு அஹஸ், வாயு இரண்டுமே இரண்டாவதாக அடையப்படவேண்டியவர்கள்.

ஸித்தாந்தம்:- स वायुमागच्छति என்பதாக வாயுவிற்கு ஞானியால் அடையப்படவேண்டியவர்களுள் முதல் ஸ்தானம் தெரிய-வருகிறது. ஆனால் அர்ச்சிராதி, தூமாதி - என்று இரண்டுதான் மார்கங்கள் என்று வரையறுத்ததனால், ப்ராதம்யம் (முதன்மை) ஏற்காவிடினும் இரண்டாம் ஸ்தானம் கட்டாயம் தரவேண்டும். எனவே வாயுவிற்குப் பிறகு அஹர்தேவதை அடையப்படுகிறார். மேலும் "स इतो गतः द्वितीयां गतिं वायुमागच्छति" என்று விஶேஷமாகக் கூறப்பட்டுள்ளது.

## 4.3.3 A तडितोऽधि वरुण: सम्बन्धात् (1 सूत्रम्)

**பூர்வபக்ஷம் :-** கௌஷீதகிகள் स वरुणलोकं, स इन्द्रलोकं, स प्रजापतिलोकम् என்று கூறுகின்றன. இந்த மூன்று பேர்களும் வாயு -வைப்போல் அர்ச்சிராதிமார்கத்தில் நுழைக்க முடியாதவர்கள். ஏனெனில் இடம் நிர்ணயிக்க காரணமில்லையே!

**ஸித்தாந்தம் :-** வித்யுல்லோகத்திற்கு பிறகு வருணலோகம் என்று வருணனுக்கும், மின்னலுக்கும் தொடர்பு உள்ளதால் நிர்ணயிக்கப்படும். இந்திர, ப்ரஜாபதிகளுக்கு நிர்ணயகாரணம் கிடைக்காததால் "பிறகு வருபவர்களுக்குக் கடைசியில் இடம்" = आगन्तुकानां अन्ते निवेशम् என்ற ந்யாயப்படி, வருண லோகத்திற்குப் பிறகு இடம் என்று தீர்மானிக்கிறோம். இவ்விதம் அர்ச்சிராதிமார்கம் ஸ்திரமாக முழுமைபெறுகிறது.

## 4.3.3 V तडितोऽधि वरुण: सम्बन्धात् (1 सूत्रम्)

**பூர்வபக்ஷம் :-** பெரும்பாலும் அத்வைததிற்கு ஸமமே. வாஜஸனேயகத்தில் "वायुलोकात् आदित्यम् (देवलोकादादित्यम्)" என்று பஞ்சமி விபக்தியினால் வாயுவிற்குப்பின் உடனே ஆதித்ய லோகம் கூறியுள்ளது. எனவே கௌஷீதகியில் கூறிய வருணனுக்கு இடமே இல்லாமல் போவதால், வாஜஸனேய பஞ்சமி விபக்தியை பொருட்படுத்தாமல், கௌஷீதகி பாட-க்ரமத்தால் வாயுவிற்குபிறகு வருணன் தீர்மானிக்கப்படுகிறான். இந்திர-ப்ரஜாபதிகள் இருவரும் வருணனுக்குப் பிறகு வருகிறார்கள்.

**ஸித்தாந்தம்:-** "வைத்யுத புருஷனுக்கும் (மின்னல்) வருண-னுக்கும் தொடர்பு உள்ளதால் அர்த்தக்ரமத்தினால் பாடக்ரமத்தை

ஒதுக்கிவிட்டு வருணன் வித்யுத்திற்குப் பிறகு சேர்க்கப்படுகிறார். இந்திர-ப்ரஜாபதி இருவரும் வருணனுக்குப் பிறகு, ஏனெனில் கடைசியில் வந்தபடியால்" என்று ஸித்தாந்தம் அத்வைதமதம் போலவே.

## 4.3.3 D तडितोऽधि वरुण: सम्बन्धात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம்:- ஸம்வத்ஸர லோகத்திற்குப் பிறகு ப்ரஜாபதி லோகம் போவதற்கு தடித் (மின்னல் = வித்யுத்) வருண லோகங்கள் இரண்டும் மார்கவேறுபாட்டின் மூலம் கொள்ளவேண்டுமா? அல்லது வித்யுத், பிறகு வருணலோகமா? "सम्वत्सरात्वरुणलोकम्" "संवत्सरात्तटितम्" என்ற வாக்யங்கள் இரண்டையும் கூறி சேர்க்கின்றனவா? இல்லையா? முன்பு வாயுவானவர் இரண்டாவதுதான் என்பதற்கு ப்ரமாணம் இருந்ததுபோல் இங்கு இரண்டின் வரிசைக்கு ப்ரமாணம் இல்லாததால், அதிகாரியின் வேறுபாட்டால் இரண்டு தனி மார்கம் என்று கூறவேண்டும்.

ஸித்தாந்தம் :- तटितो वरुणं गच्छति तटिता ह्यूहयतेवरुणलोक: என்ற விஶேஷ ஶ்ருதியாலும், வித்யுத்-வருண ஸம்பந்தம் உள்ளது என்ற யுக்தியினாலும் தடித் (மின்னல்) ஆனவுடன் வருண லோகம் என்று நிர்ணயம் ஏற்படுவதால் அதிகாரிபேதத்தினால் மார்கபேதம் கூறத்தேவையில்லை. ஒரே மார்கம்தான்.

## 4.3.4 A आतिवाहिकास्तल्लिङ्गात् (3 सूत्राणि)

முன்பு இத்தனை அதிகரணங்களில் கூறிய அர்ச்சி, அஹஸ் - போன்றவைகள் மார்கத்தின் அடையாளங்களா? போகபூமிகளா?

அல்லது அந்தந்த தேவதைகளா (அழைத்துப் போகும் மனிதர்களா?) என்று ஸந்தேஹம்.

பூர்வபக்ஷம்: உலகின் வழியைக் கூறும்போது அடையாளங்களை கூறுவது வழக்கம் என்பதால், இவைகள் வழியின் அடையாளங்கள் - க்ராமத்திலிருந்து, நதிக்குப்போ, பிறகு மலை, பிறகு குடிசை என்பது போல். அல்லது ப்ரஹ்மலோகம் போகும் மனிதனுக்கு ஓய்வுபெறும் ஸ்தானங்கள் என்று கொள்ளலாம்.

ஸித்தாந்தம் :- "तत्पुरुषोऽमानवः स एनान् ब्रह्म गमयति" என்பதாக கடைசியில் வித்யுத் லோகத்திலிருந்து போகிறவனை வேறு ஒருவர் ப்ரஹ்மலோகத்திலிருந்து வந்து எதிர்கொண்டு அழைத்து போவதாக ஸ்பஷ்டமாக கூறப்பட்டுள்ளது. அதுபோலவே மற்ற இடங்களிலும் அழைத்துச்செல்லும் தேவதைகள்தான் அர்ச்சிஸ், அஹஸ், ஶுக்லபக்ஷம்- என்றெல்லாம் கூறப்படுகின்றனர். உலகில் இவ்விதமும் கூறப்படுகிறது -"பலவர்மாவிடம் போ, பிறகு ஜயகுப்தர், பிறகு தேவதத்தர்". லோக என்ற வார்த்தை ஞானியாகச் செல்லும் மனிதர்களுக்கு அது போக-பூமியாகாவிடினும் அந்தந்த தேவதைகளுக்கு அது போக-பூமியாதலால் பொருந்தும். எனவே அர்ச்சிராதி பதங்கள் அழைத்து செல்லும் தேவதைகளை கூறுகின்றன.

## 4.3.4 V आतिवाहिकास्तल्लिङ्गात् (2 सूत्रे)

இங்கு அதிகரணத்தில் மற்ற இரண்டு மதத்திலும் உள்ளதான उदयव्यामोहात् तत्सिद्धेः என்றதான இரண்டாவது ஸூத்ரம் இல்லை. மூன்றாவதாக वैद्युतेनैव ततस्तच्छ्रुतेः என்று உள்ளதால் இரண்டே ஸூத்ரங்கள்.

பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் அத்வைதத்திற்கு ஸமமே. அர்ச்சிராதிகள் அழைத்துப்போகும் மனிதர்கள்/தேவதைகள் என்றுதான் ஸூத்ரார்த்தம்.

# 4.3.4. D आतिवाहिकास्तल्लिङ्गात् (2 सूत्रे).

இங்கு த்வைத மதப்படி 1,2 என்பதாக இரண்டே ஸூத்ரங்கள்-தான். மூன்றாவது ஸூத்ரமான वैद्युतेनैव ततस्तच्छ्रुतेः என்பது வேறு தனி அதிகரணமாகிறது. ஆக இது இரண்டு அதிகரணங்களா-கின்றன.

பூர்வபக்ஷம் :- ஞானியானவன் இரண்டாவது கதியாக வாயுவை அடைகிறான் என்று கூறப்பட்ட வாயுவானவர் அழைத்துச் செல்லும் ஆதிவாஹிகரா? அல்லது முக்கிய ப்ராணனா? இவர் ஆதிவாஹிகரானால் முக்யனுக்கு ப்ராப்யத்வம் (அடையப்படும் தன்மை) வருமா? வராதா? द्यौर्वाव विद्युत् तत्पतिं वायुमुपगम्य तेनैव ब्रह्म गच्छति என்று கூறப்பட்ட வாயு ஆதிவாஹிகரா? முக்யனா? என்ற ஸந்தேஹம்வருவதால் முன்புவரும் வாயுவிலும் ஸந்தேஹமா? முக்யன்தான் என்ற நிச்சயமா? முன்பு வித்யுத் வருணன்களில் யுக்தியினால் வரிசை நிர்ணயமானாலும், இங்கு முதல் வாயு ஆதிவாஹிகர் கடைசியில் கூறப்படுபவர் முக்யர் என்றோ, மாறுதலாகவோ (பூர்வர் முக்யர், கடைசியில் ஆதிவாஹிகர்) என்ற நிர்ணயம் வரமுடியாததால், முக்ய ப்ராணன்தான் ப்ராப்யன் என்ற முடிவு வரமுடியாது.

ஸித்தாந்தம் :- இது தவறு. பூர்வப்ராப்யத்வம் (முதலில் அடையப்-படும் தன்மை) வித்யுத் என்கிற வாணீபதித்வம் என்ற லிங்கம் (அடையாளம்) இரண்டினாலும் கடைசியில் கூறிய வாயு முக்ய ப்ராணர் என்று நிர்ணயம் வரமுடியும். எனவே முதலில் கூறிய வாயு ஆதிவாஹிகர், கடைசியில் கூறியவர் முக்ய வாயுவே.

## 4.3.5 D वैद्युतेनैव ततस्तच्छ्रुते: (1 सूत्रम्)

பூர்வபக்ஷம்:- இந்த ப்ரஹ்மப்ராப்தி மார்கத்தில் முக்ய வாயு-விற்குப் பிறகு ப்ரஹ்மத்திற்கு முன்னால் வேறு ப்ராப்யர் உண்டா? இல்லையா? அப்படி இருந்தால் கூடாது என்பதற்கு ப்ரமாணம் (बाधकम्) இருக்கிறதா? இல்லையா? வாணீ பதித்வம் பொருந்தாது என்பதால் சென்ற அதிகரணத்தில் கடைசி வாயுவிற்கு ஆதி-வாஹிகத்வம் வரமுடியாது என்று நிர்ணயித்தாலும், இங்கு மற்றொரு ப்ராப்யர் ஏற்றால் பாதகம் (இடையூறு) இல்லையே. எனவே முக்கிய வாயுவானவர் தன்னைத்தவிர வேறு ஒரு ப்ராப்யருடன்கூட ப்ரஹ்மலோகம் அழைத்துப் போகலாம். அதிகாரியில் மிகச் சிறந்தவர் முக்கிய வாயுவானபடியால் இவருக்குமேல் வேறு ஒரு ப்ராப்யர் இருக்கக் கூடாது என்று நினைக்கவேண்டாம். ஏனெனில் இந்த வரிசையில் இந்திரனுக்கு பிறகு (உத்தமாதிகாரிக்குப் பிறகு) த்ருவன் கூறப்படுகிறான் - सोमं वैश्वानरं चेन्द्रं ध्रुवम् எனவே வாயுவிற்குப் பிறகும் ப்ரஹ்மத்திற்கு நடுவே வேறு ஒரு ப்ராப்யர் இருக்கிறார்.

ஸித்தாந்தம்:- இது ஸரியல்ல. ஏனெனில் तत्पुरुषोऽमानव: स एनान् ब्रह्म गमयति= "முக்கிய வாயுவானவர் ஞானியை ப்ரஹ்மலோகம் அழைத்துப் போகிறார்" என்று ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டுள்ளது. எனவே முக்கியவாயுதான் சரமப்ராப்யமானவர், இவருக்கு பிறகு ப்ரஹ்மம்தான். வேறு ப்ராப்யர் இல்லை.

## 4.3.5 A कार्यं बादरिरस्य गत्युपपत्ते: (8 सूत्राणि)

स एनान् ब्रह्म गमयति என்று கூறப்பட்ட (உபாஸகரால் அடையப்படும்) சேர்க்கப்படும் ப்ரஹ்மம் பரம் ப்ரஹ்மமா? அபர ப்ரஹ்மமா? என்ற ஸந்தேஹம்

பூர்வபக்ஷம் :- ப்ரஹ்மஶப்தமானது நேரடியான பொருளில் பரப்ரஹ்மத்தைத்தான் குறிக்கும் என்பதால் பரப்ரஹ்மமே அடையப்படுகிறது. மேலும் "अमृतत्वमेति" = அம்ருதத்தன்மையை அடைகிறான் என்று கூறப்பட்டுள்ளது.

ஸித்தாந்தம் :- ஸத்யலோகம் என்று கூறப்படும் கார்ய ப்ரஹ்மம்-தான் உபாஸகரைத் தவிர வேறானதாலும், பரிசின்னராக இருப்பதாலும் சென்று அடையப்படமுடியும். பரம்ப்ரஹ்மம் அப்படி அன்று, அவர் எல்லா இடத்திலும் எல்லாமாயும் இருப்பதால். அவரே உபாஸகராகவும் உண்மையில் இருக்கிறார் அன்றோ! "तत्वमसि" என்றல்லவா ஸித்தாந்தம். முக்யார்த்தம் பரப்ரஹ்மமமானாலும் பொருந்தாதபடியால், அதற்கு மிக நெருங்கியுள்ள ஸத்யலோகம் என்பது ப்ரஹ்மஶப்தத்திற்கு லக்ஷணையினால் கிடைக்கிறது. ஸத்யலோகம் போனவர்கள் மறுபிறவி எடுக்காமல் அங்கேயே தத்வஞானம் பெற்று முக்தி பெறுகின்றனர் அன்றோ. ब्रह्मणा सह ते सर्वे... என்று அல்லவா கூறப்பட்டுள்ளது. எனவே அம்ருதத்வம் என்பது க்ரமமுக்தியைக் குறிக்கிறது. எனவே இங்கு ப்ராப்யம் கார்யப்ரஹ்மமே.

## 4.3.5 V कार्यं बादरिरस्य गत्युपपत्तेः

## (10 सूत्राणि)

இங்கு அத்வைதத்தின்படி இரண்டு அதிகரணங்களாக கணக்-கிடப்படுவது (10=8+2) ஒன்றாகவேகொண்டு விளக்கப்படுகிறது.

பூர்வபக்ஷம் :- இந்த ஸூத்ரத்தில் "உபாஸீனர்களை" என்று சேர்த்துக்கொள்ளவேண்டும். பின்பு வரும் ஸூத்ரத்தில் உள்ள நயதி என்ற வார்த்தையும் சேர்க்கவேண்டும்.

எனவே இங்கு அடையப்படவேண்டியதாகக் கூறப்படும்

ப்ரஹ்மம் ஹிரண்யகர்பர்தான். கார்யப்ரஹ்மமாகிற இவரை உபாஸிப்பவர்களை அர்ச்சிராதிமார்கத்தின் வழியே அழைத்துப் போகிறார்கள் என்று பாதரி என்ற ஆசார்யர் பொருள் கூறுகிறார். ஏனெனில் ஸத்யலோகத்திலுள்ள ஹிரண்யகர்பரைத்தான் போய் அடையமுடியும்.

மேலும் ब्रह्मलोकान् गमयति तेषु என்பதாக பஞ்சாக்னி வித்யையில் ப்ருஹதாரண்யகத்தில் வருவதாலும் ப்ரஹ்மஶப்தமானது ஹிரண்யகர்பரைக் குறிப்பதாக ஆகிறது. மேலும் "प्रजापतेः सभां वेश्म" என்று கூறப்படுவதால் ப்ரஜாபதிஶப்தம் ஹிரண்ய-கர்பரையே குறிக்கிறதாலும் இந்த நிர்ணயம். எனவே இந்த ஶ்ருதி க்ரமமுக்தியைக் கூறுகிறது. எனவே ஹிரண்யகர்ப உபாஸகர்களை ஆதிவாஹிகர்கள் அழைத்துப் போகின்றனர் என்று பூர்வபக்ஷம்.

இவ்விதம் பூர்வபக்ஷமானது ஏற்பட்டதும் ஜைமினியின் எண்ணப் -படி ஒரு ஸமாதானம் / ஸித்தாந்தம் கூறப்படுகிறது - மூன்று ஸூத்ரங்களில் "परं जैमिनिर्मुख्यत्वात्"

ஐந்து ஸூத்ரங்கள் பூர்வபக்ஷம். பாதரி என்ற ரிஷி ஞானிகள் அடையும் ப்ரஹ்மமமானது பரமாத்மா என்ற பரப்ரஹ்மம்தான். ப்ரஹ்மஶப்தத்திற்கு நேரடியான பொருள் பரமாத்மாதானே! மேலும் நபும்ஸகலிங்கத்திலுள்ள ப்ரஹ்மஶப்தம் ஹிரண்ய-கர்பரைக் குறிக்காதன்றோ. ஸர்வகதமாயினும் தேஶ-விஶேஷத்துடன் கூடிய அந்த ப்ரஹ்மத்தை அடையமுடியும். தேஶவிஶேஷத்தில் உள்ள அவரை அடைய விரும்புவது (அபேக்ஷையானது) தேஶவிஶேஷத்தில் ப்ரஹ்மத்திடம் சென்ற பிறகு நிஶ்ஶேஷமான (மீதமில்லாமல்) அவித்யா நிவ்ருத்தியைக் கூறும் ஶ்ருதியினால் கிடைக்கிறது - अस्माच्छरीरात् समुत्थाय परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेण अभिनिष्पद्यते - என்று உடலிலிருந்து

கிளம்பி ஸூரியலோகத்தின் வழியாக ப்ரஹ்மத்தை அடைந்து தன் ஸ்வரூபமானது ஆவிர்பவிப்பதாக அல்லவா ஶ்ருதி கூறுகிறது; ஆகவே தேஹத்திலிருந்து கிளம்பியவனுக்கு அர்ச்சிராதிமார்கம் கூறப்படுகிறது; பரப்ரஹ்மத்தை அடைவதற்காகவே.

இதன் பிறகு अप्रतीकालम्बनात् ... இரண்டு ஸூத்ரங்களில் பகவான் பாதராயணர் கூறும் ஸித்தாந்தம்:-

ப்ரதீகம் என்றால் ப்ரஹ்மகார்யமான சேதனாசேதன ரூபமான பொருள். அதை உபாஸிப்பவர்கள் ப்ரதீகாலம்பனர்கள். அதைத் தவிர மற்றவர்கள் அப்ரதீகாலம்பனர்கள். இவர்களைத்தான் ஆதிவாஹிகர்கள் அழைத்துப் போகிறார்கள் என்று பாதராயணர் (ஸூத்ரகாரர்) எண்ணுகிறார். ஏனெனில் முன்புகூறிய கார்ய ப்ரஹ்மம், பரப்ரஹ்மம் என்ற இரண்டு பக்ஷங்களிலும் தோஷம் வருகிறது = उभयथा च दोषात् - அதாவது - பாதரி மதப்படி ஹிரண்யகர்ப-உபாஸகர்களை இந்த வழியே போவதாக எடுத்துக்கொண்டால் அர்ச்சிராதி மார்கமானது பரமாத்மாவை அடைவிக்கும் என்ற தீர்மானம் இருக்கும் தோஷம் ஏற்படுகிறது. ஹிரண்யகர்ப உபாஸகர்களுக்கு பரப்ரஹ்ம ப்ராப்தி வரமுடியாது. பரப்ரஹ்மத்தை த்யானிக்கவில்லையே! यथोपासते तदेव भवति என்றல்லவா ஸித்தாந்தம்.

ஜைமினி மதப்படி பரப்ரஹ்ம உபாஸகர்களை ஆதிவாஹிகர்கள் அழைத்துப் போகிறார்கள் என்று கொண்டால், இதே மார்கமானது பஞ்சாக்னிவித்யை செய்தவர்களுக்கும் கூறப்படுவது இடிக்கும். இவ்விதம் இரண்டு பக்ஷமும் தோஷமுள்ளதாகிறது. ப்ரதீக வ்யதிரிக்த உபாஸகர்களைத்தான் அர்ச்சிராதிகள் (ஆதிவாஹி-கர்கள்) அழைத்து போகிறார்கள் என்பதே (பாதராயணரின் கொள்கையே) ஸரியானது.

# 4.3.6 D कार्यं बादरिरस्य गत्युपपत्तेः

(10 सूत्राणि)

“स एनान् ब्रह्म गमयति என்று கூறப்படும் ப்ரஹ்மம் சதுர்முகம் உள்ள ப்ரம்மாவா? பரமாத்மாவா? அல்லது இரண்டுமா?” என்ற விசாரத்தில், இரண்டும் எனும் பக்ஷத்தில், ஒவ்வொரு பக்ஷத்தின் ஸாதகபாதகயுக்திகள் ஸரிசெய்யமுடியுமா, முடியாதா? மேலும் இரண்டையும் அடையும் பக்ஷத்தில் ஒரேநேரத்தில் இது முடியாதது என்பதால் வரிசையாக (ஒவ்வொன்றாக அடைய வேண்டும்) என்பதால் அந்த க்ரமத்தில் (1 அல்லது 2) ப்ரமாணம் உண்டா? இல்லையா? என்று விசாரவரிசை.

பூர்வபக்ஷம் :- இங்கு கூறப்பட்ட ப்ரஹ்ம என்பவர் சதுர்முக ப்ரஹ்மாதான். "प्राप्नोति ब्रह्माणम् चतुर्मुखम् (कौषारव)" ஶ்ருதியினாலும் ब्रह्मणा सह ते என்ற ஸ்ம்ருதியினாலும், சதுர்முக ப்ரஹ்மாவின் முக்திவரையில் இவருக்கும் விளம்பம் தொடரும் என்பதால் அதுவரை இவர் சதுர்முகனைத்தான் நேரில் கண்டுகளிக்க வேண்டும் என்ற காரணத்தினால், சதுர்முகனை அடைவதுதான் பொருந்தும் என்ற யுக்தியினாலும், இந்த உபாஸகன் அடைவது சதுர்முக ப்ரஹ்மாவைத்தான். இவ்விதம் பல ப்ரமாணங்களின் பலத்தினால் ப்ரஹ்மஶப்தத்திற்கு முக்யார்த்தமான பரமாத்மாவைக் கொள்ளாமல் அமுக்யார்த்தமான சதுர்முகனைக் கொள்வது தவறில்லை. “ப்ரஹ்மவிதாப்னோதி பரம்” என்ற ஶ்ருதிக்கு விரோதம் வருமே என்று ஆக்ஷேபம் வேண்டாம். இவரை அடைந்து, பிறகு வெகுகாலம் கழிந்து, சதுர்முகனுடன் பரமாத்மாவை அடைவான் என்று பொருள்கொள்ளலாம் என்பது ஒரு பூர்வபக்ஷம்.

இரண்டாவது பூர்வபக்ஷம் - முக்யார்த்தமான பரப்ரஹ்மத்-தைத்தான் அடைகிறான். ஏனெனில் ஶ்ரவண, மனனாதிகளில் பரப்ரஹ்மத்தைத்தான் த்யானித்தானல்லவா? மேலும் சதுர்-முகனை அடையவேண்டும் என்ற விருப்பம் முன்பு கிடையாது. ஒவ்வொன்றாக இரண்டையும் அடையும் க்ரமமுக்தி பக்ஷத்திற்கு ப்ரமாணம் கிடையாது.

ஸித்தாந்தம் :- சதுர்முகர்தான் பரப்ரஹ்மம்தான் என்று அடித்துக்-கூற (மற்றது இல்லை என்று கூற) விஶேஷ காரணம் இல்லை என்பதால் இங்கு இரண்டும்தான் ஏற்கவேண்டும். (சதுர்முகன் + பரப்ரஹ்மம்). ஶ்ரவணாதிகளில் சதுர்முகன் நினைக்கப் -படவில்லையே என்ற ஆக்ஷேபம் தேவையில்லை. ஏனெனில் உபாஸகர்கள் யாவருக்கும் பரப்ரஹ்ம ப்ராப்தி சொல்லப்-படவில்லை. பரப்ரஹ்மத்தை நேரடியாக உபாஸிப்பவர்களுக்கு நேரடியாகவே பரப்ரஹ்ம ப்ராப்தி உண்டு என்று अमृत इह भवति என்று கூறப்படுவதால் அதிகாரியின் (தகுதியின்) அடிப்படையில் இரண்டுவிதமான ப்ரஹ்மத்தை அவரவர் தகுதிக்குத் தக்கவாறு அடையமுடியும்.

## 4.3.6 A अप्रतीकालंवनान् नयतीति बादरायण: उभयथा अदोषात् तत्क्रतुश्च - (2 सूत्रे)

பூர்வபக்ஷம் : स एनान् ब्रह्म गमयति என்று கூறப்படுகிற வித்யுத்-லோகத்திலிருந்து ப்ரஹ்ம-உபாஸகனை அழைத்துச் செல்வதுபோல் ப்ரதீக-உபாஸகனையும் ஸத்யலோகம் என்கிற ப்ரஹ்மலோகத்திற்கு அழைத்துச் செல்லுகிறான். ஏனெனில் ப்ரஹ்மோபாஸகன்தான் என்று தனித்துக் கூறப்படவில்லை.

ஸித்தாந்தம் : "யார் இவரை எவ்வாறு உபாஸிக்கிறானோ அவ்வாறே பலனடைகிறான்" என்ற ஶ்ருதியில் 'நானே ப்ரஹ்மம்' என்று எண்ணுபவன்தான் ப்ரஹ்மலோகத்தை அடைகிறான் என்பதாகக் கொள்ளவேண்டும். ப்ரதீகோபாஸகர்கள் இவ்வாறு உபாஸனை செய்யாததால் ஸத்யலோகம் செல்லமாட்டார்கள். மேலும் வெவ்வேறு ப்ரதீகங்களில் உபாஸிப்பவர்களுக்கு வெவ்வேறு பலன்கள் கூறப்படுகின்றன. ஆனால் பஞ்சாக்னி வித்யைக்கு மட்டும் இந்த நியமம் பொருந்தாது. வேதத்தின் விசேஷ வாக்யத்தால் பஞ்சாக்னி உபாஸகர்கள் ஸத்யலோகம் அடைகிறார்கள்.



## நான்காம் பாதம்

# 4.4.1 A संपद्याविर्भावः स्वेन शब्दात् (3 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- "एष सम्प्रसादः अस्माच्छरीरात् समुत्थाय परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेण अभिनिष्पद्यते" என்ற சாந்தோக்ய உபநிஷத்தில் - ஜீவன் உடலிலிருந்து கிளம்பி பரஞ்ஜோதியை அடைந்து தன் ஸ்வரூப நிலையைப் பெறுகிறான்- என்று கூறப்பட்ட இடத்தில், ஜீவனின் முக்தியானது ஜீவனுக்கு முன்பே கிடைத்ததான ஒன்று என்பது தவறு; ஸ்வர்கம்போல் புதிதாக அடையப்படுவதுதான்; ஏனெனில் சென்று பெறுகிறான் என்று கூறியிருப்பதால். எனவே ஸ்வர்கம்போல் இதுவும் (முக்தியும்) நூதனம்தான்.

ஸித்தாந்தம் :- இங்கு ஸ்வேன ரூபேண என்பதால் "ஸ்வம்" தன்னுடையதான ரூபத்தைப் பெறுகிறான் எனக்கூறப்படுகிறது. ஸ்வம் என்பதற்கு தன்னைச் சேர்ந்த (ஸ்வீய) என்று பொருள் கொள்ளமுடியாது. அடையப்போகும் வடிவம் தன்னைச் சார்ந்தது என்பது கூறாமலேயே கிடைக்குமே. அடையப்படும் ஸ்வர்க்கம் தன்னைச் சார்ந்ததுதானே! தானாகவுள்ள என்ற பொருள் என்று கூறினால்தான், தன்னுடைய வேறு பொருள் என்ற எண்ணத்தை விலக்குவதற்காக "ஸ்வ" ஶப்தம் தேவையாகும். அபிநிஷ்பத்தி என்றால் உற்பத்தி என்று பொருளல்ல. முன்பே உள்ளதற்கு பிறப்பாகிற உற்பத்தி அஸம்பாவிதம். "அபிநிஷ்பத்தி" என்றால் தத்வஞானத்தினால் தனது ப்ரஹ்மத்தன்மை வெளிப்படுவது என்று பொருள். முக்தி முன்பே தன் ஸ்வரூபமானால் பயன் என்று எவ்வாறு கூறமுடியும் என்றால், ப்ரஹ்மத்தன்மை அஞ்ஞானம் விலகி உணரப்பட்டதாக, முன்பு தெரியாததால் பயன் எனக்கூறப்படுகிறது.

## 4.4.1 V संपद्याविर्भाव: स्वेन शब्दात्

## (3 सूत्राणि)

பூர்வபக்ஷம் :- தினஸரி தூக்கத்தில் தன்நிலையில் ஒடுங்கி-னாலும் ஜீவர்களுக்கு அந்த நிலையில் ஒரு புருஷார்த்தமில்லை (ப்ரயோஜனம் = போக்யம் இல்லை) என்று இந்திரன் கூறுகிறான் - நாஹமத்ர போ⁴க்³யம் பஶ்யாமி என்று. எனவே தன் ஸ்வரூபத்தையே முக்தியிலும் அடைவதாக இருப்பின், அது புருஷார்த்தமாக ஆகாது. எனவே புதியதாகத்தான் ஒன்று உண்டாகின்றது. உண்டாகும் பொருள் தன்னைச் சார்ந்ததுதான் என்பது கூறாமல் கிடைத்தாலும் தெளிவாக விளக்குவதற்காக "ஸ்வம்" என்று கூறப்படுவது தவறில்லை.

ஸித்தாந்தம் :- பரமாத்மாவை அடையும் ஜீவனுக்கு ஏற்படும் முக்தியானது தனியான ஒரு புதியது என்று கூறினால், "ஸ்வம்" என்ற ஶப்தம் வீண்தான். தெளிவாக்குவதற்காக கூறுவது தேவையில்லாதது என்றே முடியும். ஆகவே ஸம்ஸார தசையில் கர்மங்களால் மூடப்பட்ட, விளங்காமல் இருந்த, அபஹதபாப்மத்வம், ஸத்யகாமத்வம் போன்ற எட்டு குணங்கள், வைகுண்டமாகிற அப்ராக்ருதமான லோகத்திற்குப் போனதும், ஸ்ரீநிவாஸனை அடைந்ததால், கர்மாக்களினால் ஏற்பட்ட மறைவு விலகுகிறது என்று இங்கு பொருள் கொள்ளவேண்டும். இதே கருத்தை சௌனகர் விளக்குகிறார் -

यथा न क्रियते ज्योत्स्ना मलप्रक्षालनान्मणे:।
दोषप्रहाणान्न ज्ञानमात्मन: क्रियते तथा ॥
यदोतपानकरणात् क्रियते न जलाम्बरम् ।
सदेव नीयते व्यक्तिमसत: संभव: कुत: ॥
तथा हेयगुणध्वंसादवबोधादयो गुणा: ।
प्रकाश्यन्ते न जन्यन्ते नित्या एवात्मनो हि ते ॥

மணியின் ஒளியானது அழுக்கை அலம்புவதால் வெளிப்-படுகிறது, உண்டாவது இல்லை. கிணறு வெட்டுவதால் தண்ணீருக்குள் உள்ள ஆகாயம் உண்டாக்கப்படுவதில்லை. இதேபோல் ஜீவனிடமிருந்து மறைந்து வெளிப்படாத குணங்கள் வெளிப்படுகின்றன.

## 4.4.1 D संपद्याविहाय स्वेन शब्दात् (1 सूत्रम्)

(த்வைதமதத்தின்படி இங்கு மூன்று ஸூத்ரங்கள் மூன்று அதி-கரணங்களாக கருதப்படுகின்றன).

ஸந்தேஹம் :- முக்தனானவன் அடைந்த பரப்ரஹ்மத்தையும் தாண்டிச்சென்று போகங்களைப் பெறுகிறானா? அல்லது ப்ரஹ்ம-த்தை அடைந்ததாலேயே போகப்ராப்தியா? ஏனெனில் மற்றொரு ஶ்ருதி एवं सेतुं तीर्त्वाऽन्धः सन्ननन्धो भवति என்று கூறுகிறதே! "தீர்த்வா" என்பதற்கு தாண்டுவது என்றுதானே பொருள்? வேறு பொருள் சொல்லுவதானால் என்ன ப்ரமாணம்?

பூர்வபக்ஷம் :- வேறு பொருள்கொள்ள ப்ரமாணம் இல்லாததால், ஸேது என்று கூறப்பட்ட ப்ரஹ்மத்தைக் கடந்து (தாண்டி) பிறகுதான், ஸ்வரூபாவிர்பாவமான முக்தியைப் பெற்று போகங்களை அனுபவிக்கிறான்.

ஸித்தாந்தம்:- "பரம் ஜ்யோதிருபஸம்பத்ய" என்பதாக ப்ரஹ்மத்தை அடைந்ததும் ஸ்வரூபாவிர்பாவமான முக்தத்வம் கூறப்படுவ-தாலும்; "इमां घोरां अशिवां नदीं तीर्त्वैतं सेतुमाप्यै" (मौद्गल्य) ஶ்ருதியின்படி இந்த ஸேதுவை அடைவதற்கு மற்றதைத் தாண்டி வருகிறான் என்பதுதான் "ஏதம் ஸேதும் தீர்த்வா" என்ற ஶ்ருதிக்கும் பொருள் கொள்ளவேண்டும். எனவே ஞானியானவன்

ப்ரஹ்மத்தை அடைந்து, அதைவிடாமலேயே அதோடு போகங்களை அனுபவிக்கிறான்.

## 4.4.2 D मुक्त: प्रतिज्ञानात् (1 सूत्रम्)

"பரம் ஜ்யோதிருபஸம்பத்ய" என்று கூறிவிட்டு, "स: तत्र पर्येति" என்று கூறப்படுகிறது. "இங்கு, "ஸ:" என்ற வார்த்தை முக்தனைக் குறிக்கின்றதா? அமுக்தனைக் குறிக்கின்றதா? "ஸ:" என்ற வார்த்தை அருகில் கூறப்பட்டதைக் (முந்தியதை) குறிக்குமா? தள்ளி கூறப்பட்டதைக் குறிக்குமா? அருகில் கூறப்பட்டதைக் குறிக்குமானால் "ஸ: பர்யேதி" என்பதாக கூறப்படும் க்ரியையுடைய தன்மை இருக்குமா? இருக்காதா?" என்று விசாரவரிசை.

பூர்வபக்ஷம் :- அருகில் கூறப்பட்ட ஆவிர்பூதஸ்வரூபனான முக்தனைத்தான் குறிக்கும் என்பதாக ஈசனைத் தாண்டாமல் அவனோடு போகானுபவம் என்று ஸித்தாந்தம் கூறியது தவறு. ஏனெனில் பூர்வவாக்யத்தில் (பரம்ஜ்யோதி:) நிர்குண உபாஸகனுக்கு ஸ்வரூபாவிர்பாவம் கூறப்படுகின்றது. இந்த இரண்டாம் வாக்யத்தில் தஹரோபாஸகனுக்கு "ஸ தத்ர பர்யேதி" என்று கூறப்படுகிறது. ஏனெனில் நிர்குண உபாஸகனுக்கு பர்யடனம் என்ற சுற்றுதல் என்ற க்ரியை பொருந்தாது. எனவேதான் இந்த இரண்டுவாக்யங்கள் தனித்தனி நபர்களுக்கு கூறப்பட்டன என்று ப்ரகரண பேதம் ஏற்றுப் பொருள் கூறுகிறோம்.

ஸித்தாந்தம்:- "தூக்கத்தில் ப்ரஹ்மப்ராப்தியை அடைந்தவர்களுக்கும் கூட அமுக்தனானதால் போகங்கள் கிடையாது" என்று கூறி, முக்தனுக்குத்தான் ப்ரஹ்மப்ராப்தியினால் போகங்கள்

கூறப்படுகிறது. முக்தனுக்கு முயற்சியுடையதன்மை என்பதான க்ரியாவத்வம் பொருந்தும். எனவே "ஸ:" என்ற வார்த்தை முக்தனைத்தான் (அருகில் கூறப்பட்ட) குறிக்கிறது.

## 4.4.3 D आत्मा प्रकरणात् (1 सूत्रम्)

"'பரம்ஜ்யோதி'' என்ற வாக்யத்தில் உள்ள ஜ்யோதி என்ற பதத்திற்கு ஸூர்யன் என்று பொருளா? ப்ரஹ்மமா? स तेजसि सूर्ये सम्पन्नः என்ற ஸமாக்யா (யௌகிகமான சொல் அல்லது பெயர்) ப்ரபலமானதா? ப்ரகரணம் ப்ரபலமானதா? ஸமாக்யா என்பதற்கு ஸாவகாஶத்வமா? நிரவகாஶத்வமா?" என்ற விசாரவரிசையில் -

பூர்வபக்ஷம் :- ஜ்யோதி என்ற வார்த்தையானது (ஸமாக்யா) सूर्यं अगन्म ज्योतिरुत्तमम् என்று ஸூர்யனைக் குறிப்பதாக உபயோகப்படுத்தப்பட்டாலும், ज्योतिश्चरणाभिधानात् என்ற ஸூத்ரத்தில் கூறியபடி ப்ரஹ்மத்தையும் குறிப்பதாக ப்ரயோகம் இருந்தாலும்கூட, स तेजसि सूर्ये सम्पन्नः என்பதாக இங்கு கூறப்படுவதால், ஸூர்யன் என்ற ஸமாக்யா நிரவகாஶமாகிவிடும் என்பதால் விஷ்ணுவின் ப்ரகரணம் ப்ரபலமானாலும் அதை ஸமாக்யா நிராகரிக்கும்.

ஸித்தாந்தம் :- "அபஹதபாப்மா" என்பதாக, ப்ரஹ்மத்திற்கு மட்டுமே பொருந்தும் பாபரஹிதத்வம், ஸத்யகாமத்வம் போன்ற அடையாளங்களினால் பரப்ரஹ்மத்தையே சொல்ல ஆரம்பித்துக் கூறிவரும் இந்த ப்ரஹ்ம ப்ரகரணத்தில், பரம் ஜ்யோதி: என்பது வருவதால் ஜ்யோதி என்ற வார்த்தை ப்ரஹ்மத்தையே குறிக்கும். ப்ரபல ப்ரமாணமன்றோ ப்ரகரணம்!

ஸமாக்யா ஆகிற ஜ்யோதி என்ற வார்த்தைக்கு முழுமையாக வ்யர்த்தத்வம் கிடையாது. ஏனெனில் ப்ரஹ்மப்ராப்தி மார்கத்தில் நடுவே ஸூர்யனையும் அடைகிறானன்றோ?

## 4.4.2 A अविभागेन दृष्टत्वात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம்:- முன் அதிகரணத்தில் கூறப்பட்ட முக்த ஸ்வரூபமானது பரப்ரஹ்மத்தினின்று வேறுபட்டதாகும். ஏனெனில், அடையப்படுவது, அடைபவன் என்று த்வைதம் (subject object தொடர்பு) கூறப்படுகிறதே. ஜீவன் கர்த்தாவாயும், ஜ்யோதிஸ் கர்மாவாகவுமன்றோ கூறுகிறது? எனவே முக்தஸ்வரூபம் ப்ரமஹத்தினின்று வேறுபட்டது.

ஸித்தாந்தம் :- ஜ்யோதிருபஸம்பத்ய என்ற வாக்யம் தத் பதார்த்தத்தை அலசும் வாக்யம். எனவே அந்நிலையில் பேதம் இருக்கலாம். ஆனால் "ஸ்வேன ரூபேண அபிநிஷ்பத்யதே" என்று வாக்யார்த்தமான ஐக்யத்தைக் கூறுகிறது அல்லது முக்தஸ்வரூபத்தைக் கூறுகிறது. இந்த நிலையில் முக்தனுக்கும் ப்ரஹ்மத்திற்கும் பேதம் கிடையாது. மேலும் 'ஸ உத்தம: புருஷ:' - என்று முக்தனை ப்ரஹ்மமமாகவே கூறுகிறது. எனவே முக்தஸ்வரூபம் ப்ரஹ்மாபின்னம்தான், பின்னம் அல்ல.

## 4.4.2 V अविभागेन दृष्टत्वात् (1 सूत्रम्)

பூர்வபக்ஷம் :- सोऽश्नुते... सह ब्रम्हणा என்று ப்ரஹ்மத்துடன் இருந்து போகானுபவம் முக்தனுக்குக் கூறப்படுகிறது. निरञ्जनः परमं साम्यमुपैति என்று முக்தனுக்கு ப்ரஹ்மஸாம்யம் கூறப் -படுகிறது. இந்த ஸாஹித்யம் ஸாம்யம் இரண்டும், முக்தன் ப்ரஹ்மமாகவே இருந்தால் பொருந்தாது. எனவே முக்தன் தன் ஆத்மாவை ப்ரஹ்மத்திலிருந்து வேறாகவேதான் அனுபவிக்

-கிறான். எனவே முக்திதசையில் ஶரீரஶரீரிபாவம் கிடையாது.

ஸித்தாந்தம்:- "ப்ரஹ்மணா ஸஹ" என்ற இடத்தில் போக்யத்துடன் ஸாஹித்யம் கூறப்படுகிறது, போக்தாவுடன் அல்ல. எனவே "ப்ரஹ்மத்தையும், குணங்களையும் அனுபவிக்கிறான்" என்று ஶ்ருதிக்கு அர்த்தம். ப்ரஹ்மத்தைக்காட்டிலும் குணங்களுக்கு போக்யாதிஶயம் குறிக்கப்படுகிறது. "பரம ஸாம்யம்" என்று கூறும் ஶ்ருதி முக்திநிலையில் பரப்ரஹ்மானுபவத்தில் பரம ஸாம்யத்தைக் கூறுகிறது. ஆகவே ஶ்ருதி இரண்டிலும் கூறிய ஸாஹித்ய, ஸாம்யங்களுக்கும் ய आत्मनि तिष्ठन् என்று கூறிய ஶரீரஶரீரி பாவத்திற்கும் விரோதமில்லை. எனவே முக்தி தசையிலும்கூட முக்தன் தன்னை "அஹம் ப்ரஹ்மாஸ்மி" என்று ப்ரஹ்மஶரீரமாகத்தான் அனுபவிக்கிறான்.

## 4.4.4 D अविभागेन दृष्टत्वात् (1 सूत्रम्)

மூன்று அதிகரணங்களில், ஜீவன் ப்ரஹ்மத்தை அடைந்து போகங்களை அனுபவிக்கிறான் என்று ஸித்தித்தது. அந்த போகம் எத்தகையது என்று இப்போது விசாரிக்கப்படுகிறது. "முக்தனுக்கு (ஸாயுஜ்யம் பெற்றவருக்கு) போகமானது பகவானால் அனுபவிக்கப்படாத போகமா? அனுபவித்து ஶேஷமுள்ள போகமா? புக்தஸேஷ போகமானால் முக்தியானது பரம புருஷார்த்தம் என்ற நிலை குறையுமா? குறையாதா?" என்று விசார பரம்பரை.

பூர்வபக்ஷம் :- "பரமபுருஷார்த்தமான முக்தியில் பகவானுக்கும் கிட்டாத (அனுபவிக்கப்படாத) போகங்களை அனுபவிக்கிறான்" என்று கொள்ளவேண்டும். ஏனெனில் புக்தஶேஷபோகம்தான் என்ற நியமம் இருப்பின், முக்தனுக்கு ஒருவேளை அவர் அனுபவிக்காத சில போக இச்சையிருப்பின், அதுகிடைக்காமல்

